# திருவாசகம்

## தெளிவுரை



இரா. இராசகோபாலன்

# திருவாசகம்

## தெளிவுரை

□

பேரின்ப அன்பின் வடிவாய்ப் பொலிந்த
பெருமான் மாணிக்க வாசகர் அருளிய
ஈடுஇணை யற்ற அருட்பே ரிலக்கியம்
தேமது ரத்திரு வாசகக் கனிகள்
திருப்பதிகங்கள் 51—
திருப்பாக்கள் 656க்கும்
மக்கள் மகிழும் இனிய **தெளிவுரை.**

□

டாக்டர் **இரா. இராசகோபாலன்**

THIRU VACHAKAM - THELIVORAI (TAMIL)
A Lucid commentary on the sacred songs of St. Manickavachakar

□

Dr. R. RAJAGOPALAN,
Tiruppattur. P.M.Dt 623211. T.N.

□

First Edition, August, 1994.

□

This book is published with the Financial assistance of
**TIRUMALI TIRUPATI DEVASTHANAMS**
under their scheme :
**AID TO PUBLISH RELIGIOUS BOOKS**

□

**திருவாசகம் தெளிவுரை**

□

பக்கம் XII + 396 : 408
ரூ. 65 / —

கிடைக்கும் இடம் :
**இரா. இராசகோபாலன்** எம்.ஏ;எம்.ஏ;பிஎச்.டி;
அண்ணாநகர், மதுரைச் சாலை,
**திருப்பத்தூர்** (பசும்பொன்) 623211

---

கோனார் பிரிண்டர்ஸ்,
35/4F, அருப்புக் கோட்டை மெயின் ரோடு, மதுரை—12.

## பணிவுரை

பத்தி வெள்ளம் பாய்ந்து சுழிக்கச்
சித்தம் விளைந்து சிவமே ஆகிய
வாதவூர் அண்ணலின் வாசகத் தேனை
ஓதிப் பருகி உரைசெய அருளி,
நினைக்கும் தோறும் நெஞ்சம் கனிந்து
நினைப்ப தற்குமேல் நீள்கரம் உயர்த்தும்
தேனமர் சோலைத் திருமலை திருப்பதி
வானவர் கோமான் வண்கழல் பணிவோம்;
தேவதே வன்அவன் திருப்பணி ஆற்றும்
தேவத் தானம், அலுவலர் தமக்கும்,
உத்தம 'சப்த கிரி' ஆசிரியர்,
புத்தம் புதுமை நூல்கள் தேரும்
வித்தகச் சான்றோர், பெரியோர் தமக்கும்
நித்தம் நன்றி கூர்வோம் மிகவே!



## படையல்

கண்ணீர் பெருகச் செய்யும், கன்னல்
உண்ணீர் மைத்தீந் திருவா சகத்தை
ஆனந் தம்மிக இலண்டன் நகரில்
ஆயும் தாம் தமது எண்பதாம் வயதில்
ஆயிர த்துத்தொள் ளாயிரம் ஆண்டில் (1900)
ஆங்கில மொழியில் வரைந்த சீலர்,
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
ஜீ.யு. போப் பென்னும் 'தமிழ்மாணவர்க்கு'!

# திருவாசகப் பெருமை

அருள்வாத வூரர்சொல அம்பலவர் தாம் எழுதும்
திருவா சகத்தைத் தெளிந்தால் — கருவாம்
பவகதியும் நீங்கிப் பரமர்அரு ளாலே
சிவகதியும் உண்டாம் சிவம்.

□

கற்பாந்த காலம் கடவாக் கடல்கடக்கத்
தெப்பமாய் வந்தெனக்குச் சேர்ந்ததே — அப்பன்
உருவா சகம்கொண் டுரைத்த தமிழ்மாலைத்
திருவா சகம் என்னும் தேன்.

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே — எல்லை
மருவா நெறிஅளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகம் என்னும் தேன்.

□

போதுஅலர்ந்து தேன்சொரியும் பொன்னம் பலத்தில் உறை
வாதவூர் எங்கோமான் வாசகத்தை — ஓதிப்
பிறவிப் பிணிநீக்கிப் பேரின்ப வெள்ளச்
செறிவுக்குள் செல்வர் சிறந்து.

□

வாதவூரர்-மாணிக்கவாசக சுவாமிகள்; அம்பலவர்-சிவபெருமான்; கருவாம் பவகதி-தாயின் வயிற்றில் தோன்றுதல். சிவகதி-பேரின்ப நிலை; கற்பம் - மிகப் பெருங்காலம்; கடவாக் கடல்-பிறவிக் கடல்; தொல்லை-பழமை, இரும்-பெரிய, நெடிய; தளை-கட்டு: பிணிப்பு; எல்லை மருவா நெறி-வீடுபேறு; செறிவு-நிறைவு.

# உள்ளுறை



□

## திருவாசக அழகு

அன்பு பொதிந்த இதன் செய்யுள்களை ஓதுந்தோறும் நினைக்குந்தோறும் நெஞ்சம் நெக் குருகக் கண்ணீர் பெருக நாவுரை குழற மெய்ம்மயிர் சிலிர்ப்பப் பேரின்ப வெள்ளம் கிளர்ந்து எழுதல் யாவர் மாட்டும் காணப் படுதலானும், தொடர்பு பட்டு நிகழும் இத்தகைய பேரின்ப நிகழ்ச்சி மற்றை நூல்களை ஓதுவார் நினைப்பாரிடத்துக் காணப் படாமை யானும் இத் திருவாசகம் ஒன்றே ஏனை நூல்களுக்கு இல்லாத அழகினை உடைத்து என்பது தெளியப்படும்,

— **மறைமலை யடிகள்**

□

## திருவாசக அனுபவம்

Prophetic Bard! Bharat Matha's Gem!
The pulses of my being beat anew
When I did taste thy honey sweet;
...............
Oh, Manikkavachaka!
I journeyed through thy goodly domain,
And listened to thy liquid notes divine,
More hypnotic than ariel's floating strain
Dazed and speechless, I traced my trail
Soul and body rapt in expectant thrill,
To the magic call of eternal bliss!

— **Ratna Navaratna**

# அணிந்துரை

**டாக்டர் ஆ. ஆனந்தராசன்,**
இணைப் பேராசிரியர், சைவ சித்தாந்தத் துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை–21

சிவநெறிக்குரிய நூல்களாகச் சிறந்தெடுத்துக் கூறப் பெறுபவை பன்னிரு திருமுறைகளாகும். அவைகளுள் மூவர் முதலிகள் எனப் போற்றப்பெறும் திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் சுந்தரரும் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் முதல் ஏழு திருமுறைகளாய் அமையும். அடுத்துள்ள எட்டாம் திருமுறையாக அமைந்திருப்பது மாணிக்க வாசகரது திருமொழியாகும்.

விளைந்த அன்பென்னும் நாரிலே, நெகிழ்ந்த செந்தமிழ்ச் சொற்களாகிய பூக்களை, இறையருள் என்னும் இன்பத்தேன் ததும்பி வழியுமாறு தொடுத்தமைத்த பதிகப் பாமாலையே திருவாசகம் எனலாம்.

**காலம்:**

வாதவூரடிகள் வாழ்ந்த காலம் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் வெளிவந்துள்ளன. அவற்றையெல்லாம் இரண்டனுள் அடக்கிக் கூறலாம். அவர் தேவார ஆசிரியர் மூவர்க்கும் முற்பட்டவர் என்பது ஒரு கருத்து. தேவார ஆசிரியர்களுக்குப் பிற்பட்டவர் என்பது மற்றொரு கருத்து. இவ்விரண்டனுள் பிந்திய கருத்தேபொருத்தமுடையதாகவும்,வலியுடையதாகவும்தெரிகிறது.

தேவார ஆசிரியர்களை முன்னே வைத்து மாணிக்க வாசகரை நாலாமவராகக் குறிப்பிடும் மரபை நூல்வழக்கிலும் உலக வழக்கிலும் நெடுகக் காணலாம். சான்றாக, பட்டினத்தடிகள் தமது திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில்,

'' வித்தகப் பாடல் முத்திறத்து அடியரும்
திருந்திய அன்பின் பெருந்துறைப் பிள்ளையும்''

என முன்னே தேவார ஆசிரியர்களைக் குறிப்பிட்டுப் பின்னே மாணிக்கவாசகரைக் குறித்திருத்தலைச் சுட்டலாம். இவ்வாறு சைவ நூல்கள் எல்லாவற்றிலும் மாணிக்கவாசகரை நாலாமவராக வைத்துப் போற்றும் முறையே உள்ளது.

மாணிக்க வாசகர் தேவார அருளாசிரியர்களுக்குப் பின்வந்த வராயின் கண்ணப்பர், சண்டேசர் ஆகிய அடியார்களைக் குறிப் பிட்டது போல அப் பெருமக்களையும் எடுத்துக் கூறிப் போற்றி யிருப்பார் அல்லவா? அவ்வாறு அவர்களைக் குறிப்பிட்டதாகத் தெரியவில்லையே என்று ஐயுறலாம். அவர்களது பெயர்களைக் கிளந்தெடுத்துக் கூறவில்லை என்பது உண்மைதான். அதே நேரத்தில் அவர்கள் அருளிச்செய்த இசைநயம் கனிந்த திருப் பதிகங்களைப் 'பண்சுமந்த பாடல்' என மணிவாசகர் போற்றி யிருப்பது உண்மையே யன்றோ?

"பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன்" (திரு அம்மானை)

பண்சுமந்த பாடல் என்பது தேவார ஆசிரியர்களின் பதிகங் களைக் குறிக்கும் சிறப்புத் தொடர் எனக் கொள்ளாமல், பொது வாக அடியார்கள் பாடும் இசைப்பாடலையே அத் தொடர் குறிக்கும் எனக்கொண்டு, இசைப்பாடலால் பாடுவோர்க்கு இம்மை, மறுமை, வீடு என்னும் பரிசில்களை வழங்குகின்றவன் எனப் பொருள் கூறினாரும் உளர். அவர்கள் பரிசு என்ற சொல்லுக்கு வெகுமதி எனப் பொருள் கண்டனர். மாணிக்க வாசகர் பரிசு என்ற சொல்லைத் தன்மை, பெருமை என்ற பொருளிலேயே பலவிடங்களிலும் பயன்படுத்தியுள்ளார். இவ் விடத்தில் மட்டும் வெகுமதி என்ற வேறுபட்ட பொருளில் அச் சொல்லைப் பயன்படுத்தினார் எனல் பொருந்துமோ? மேலும் பரிசு என்ற சொல் பரிசுப் பொருளைக் குறிக்கத் தொடங்கியது பிற்காலத்தில் என்பதையும் கருதிப் பார்க்க வேண்டும்.

இனி, இவ்வுரையாசிரியராகிய நம் பேராசிரியர் 'பண்க ளால் ஏத்தப் பெற்ற பாடல்களைப் பாடும் ஆற்றலை உண்டாக்கி யருளிய பெருமான்' என இப்பகுதிக்கு உரை காணுகிறார். மாணிக்கவாசகர் தமக்கு இசைப் பாடலைப் பாடும் ஆற்றலை உண்டாக்கிக் கொடுத்த இறைவனது கருணையை இங்ஙனம் குறிப்பிடுகிறார் என்ற கருத்தில் இவ்வாறு உரை செய்கிறார் போலும். ஆயின் இவ்வாறு பொருள் கொள்வதற்கு ஒரு தடை யுள்ளது. திருவாசகப் பாடல்கள் இயற்றமிழ்ப் பாடல்களேயன்றி இசைப் பாடல்கள் அல்ல என்பதே அத்தடை. அது பற்றியே முன்னோர் திருவாசகப் பாடல்களுக்குப் பண் வகுக்கவில்லை என்பது கருதுதற்குரியது.

இதுகாறும் கூறியவற்றால், பண் சுமந்த பாடல் என்பது பொதுவாக அடியார்கள் பலரும் பாடிய இசைப்பாடல்களையோ, திருவாசகப் பாடல்களையோ குறிக்கவில்லை என்பதும், மூவர் பாடிய தேவாரப் பாடல்களையே குறிக்கும் என்பதும், அதனால் மாணிக்க வாசகர் அம் மூவருக்குப் பின்னே வந்தவர் என்பதும் தெளிவாகும்.

**எட்டாம் திருமுறையும் எட்டாம் நூற்பாவும் :**

சைவசித்தாந்தத்தை முறைப்படுத்திக் கூறும் முதல் நூல் சிவஞான போதம். அதிலுள்ள எட்டாம் நூற்பா ஞானத்தைப் பெறுதற்குரிய வழியை உணர்த்துவது. இறைவனை உள்ளவாறு உணர்வதே ஞானம். அதுவே மெய்யறிவு எனப்படும்.

மெய்யறிவாகிய ஞானம் வெறும் நூற்படிப்பால் வருவதன்று. நூலறிவால் கல்விச் செருக்கே உண்டாகும். செருக்குடையோர் தாம் பெற்ற நூலறிவைத் தமக்குப் பேரும் செல்வமும் செல்வாக்கும் கிடைத்தற்கே பயன்படுத்துவர். அவர்க்கு ஞானத்தைப் பெறுதலில் நாட்டம் செல்லாது.

அத்தகைய செருக்கும் அறியாமையும் நீங்கிய போதே ஞானத்தைப் பெறுதலில் வேட்கை உண்டாகும். இதுவே பக்குவ நிலை என்பது. உயிர்க்குயிராய் உள்ளே மறைந்து நின்று உணர்த்தி வரும் சிவபெருமானே இப் பக்குவ நிலையையும், ஞானத்தைப் பெறுதலில் உள்ள வேட்கையையும் பார்த்தருளி, ஞானாசிரியராகத் தோன்றி உண்மை ஞானத்தை உணர்த்துவார். இதனையே சிவஞானபோத எட்டாம் நூற்பா 'தம் முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்த' எனக் குறிக்கின்றது.

ஆசிரியர் மெய்கண்டார் இறைவன் குருவாக எழுந்தருளி ஞானத்தை உணர்த்துவான் என்னும் இக் கோட்பாட்டினை எட்டாம் நூற்பாவில் வைத்து உணர்த்தியதற்குக் காரணம் என்ன? பன்னிரு திருமுறையில் எட்டாம் திருமுறையை அருளிச் செய்த மாணிக்க வாசகருக்கு இறைவனே குருவாகத் தோன்றி உபதேசித்து ஞானத்தை உணர்த்தினார் அல்லவா? இந் நிகழ்ச்சியை மணிவாசகரே திருவாசகத்துள் பலவிடங்களிலும் குறிப்பிட்டுள்ளார். மணிவாசகர் வாழ்வில் நிகழ்ந்த இச் சிறப்பு நிகழ்ச்சியையே ஆசிரியர் மெய்கண்டார் பொதுமைப்படுத்தி 'உயிரின் பக்குவநிலையை யறிந்து இறைவனே குருவாய் வந்து உணர்த்து

வான்' என அதனை ஒரு சிந்தாந்தக் கோட்பாடாக்கி, அதனை அமைப்பதற்கு அடிப்படை வகுத்துக் கொடுத்த எட்டாம் திருமுறையை நினைப்பிக்கும் வண்ணம் சிவஞான போதத்தில் எட்டாம் நூற்பாவில் அக்கோட்பாட்டினை இசைவுபெற அமைத்துச் சென்றார் எனலாம்.

**திருவாசகப் பாடல்களின் நீர்மை :**

திருவாசகப் பாடல்களனைத்தும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானிடத்துச் செல்லும் முறுகிய பேரன்புப் பாடல்கள்; 'கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை வெள்ளத்தழுத்தி' என்றும், 'பலமாமுனிவர் நனிவாடப் பாவியேனைப் பணி கொண்டாய்' என்றும் 'பொற்றவிசு நாய்க்கிடுமாறு அன்றே நின்பொன்னருளே' என்றும் இறைவன் தமக்குச் செய்த கருணையை நினைந்து கசிந்துருகும் பாடல்கள்; இறைவன் தம்மை எளிவந்து ஆண்டானாயினும் இப்பொழுது கைவிட்டுப் போயினனோ என்னும் கலக்கத்தால் 'புன்மையேனை ஆண்டு ஐயா புறமே போக விடுவாயோ? என்னை நோக்குவார் யாரே?' 'வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய், வருக என்று அருள்புரியாயே' என்று முறையீடு செய்யும் பாடல்கள்; 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே', 'ஆயக்கடவேன் நானோ தான் என்னதோ இங்கு அதிகாரம்? காயத்திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே' என்று தன் முனைப்பின்றி அருள்வழி நிற்றலைப் புலப்படுத்தும் பாடல்கள்.

**திருவாசக உரைகள் :**

இத்தகு திருவாசகத்திற்குச் சென்ற நூற்றாண்டு தொடங்கி இன்றுவரை பல உரைகள் தோன்றியுள்ளன. பழைமையான உரை சீகாழித் தாண்டவராயர் எழுதிய திருவாசக வியாக்கியானம் என்னும் பேருரையாகும். அது திருவாசகச் சொற்களுக்குத் தத்துவப் பொருள் கூறிச் செல்லுகின்ற சிறந்த அனுபூதி உரையாகத் திகழ்கின்றது.

அடுத்து அச்சில் வந்த உரை நூல்களுள் முற்பட்டது என்று சொல்லுதற்குரியது வாசுதேவ முதலியார் செய்த உரையாகும். சுந்தரமாணிக்க யோகீஸ்வரர் என்பார் அட்டாங்க யோக முறையில் எழுதிய உரை பின்னர் வெளிவந்தது ஆகும்.

சிவ. அருணகிரி முதலியார் அவர்களது திருவாசகப்பதிப்பு குறிப்பிடத்தக்கது. அவர் எல்லாப் பாடல்களுக்கும் வேண்டிய அளவுக்குக் குறிப்புரைகள் எழுதியுள்ளார்; மேலும், திருவாசக விஷய சூசனம் அறுபது என்ற தலைப்பில் சில பகுதிகளுக்கு விரிவான விளக்கம் எழுதி இணைத்துள்ளார்; ஆங்காங்கே வேத உபநிடதங்களைப் பிரமாணமாகக் காட்டியுள்ளார்.

பின்னர் வெளிவந்த கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களது உரை பொழிப்புரையாகும். அது பாடலின் பொருளை யாவரும் எளிதில் உணரும் வண்ணம் அமைந்துள்ளது.

மறைமலையடிகள் முதல் நான்கு பாடல்களுக்கு மட்டும் சீரிய, கூரிய உரையொன்று எழுதினார். அது திருவாசக விரிவுரை என்னும் பெயரோடு வெளிவந்தது. பின்னர் பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் அடுத்துள்ள திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை ஆகிய பகுதிகளுக்கு உரையெழுதித் தனித்தனி நூல்களாக வெளியிட்டார். அவரது உரை சொற்சுவையும் பொருட்சுவையும் சாத்திர நுட்பங்களும் பொதிந்த நயவுரை என்று குறிப்பிடுதல் தகும்.

யாழ்ப்பாணத்து நவநீதகிருஷ்ண பாரதியார் எழுதிய ஆராய்ச்சிப் பேருரை புதிய போக்கினையுடையது; நாயக நாயகி பாவமாக ஐந்திணைப் பொருள் கூறிச் செல்வது.

திருவாசகத்திற்கு உரையெழுதும் பணியில் சைவத் திரு மடங்களும் ஈடுபட்டன. திருவாவடுதுறை ஆதீனம் மகாவித்து வான் ச. தண்டபாணி தேசிகர் அவர்களைக் கொண்டு விருத்தி யுரையொன்று எழுதச் செய்து வெளியிட்டது. ‘குருவருள் விளக்கம்’ என்னும் பெயரைத் தாங்கிய அவ்வுரை விரிந்து பரந்து செல்லும் அகலவுரையாக அமைந்து திகழ்கிறது. தருமை யாதீனம் மகாவித்துவான் சி. அருணை வடிவேல் முதலியார் அவர்களைக்கொண்டு குறிப்புரை எழுதுவித்து வெளியிட்டுள்ளது. குறிப்புரையாயினும் ஆழ்ந்த பொருள்களைத் தேர்ந்து சொல்லும் தெரிப்புரையாக அது திகழ்கிறது.

**இவ்வுரை :**

இப்பொழுது உங்கள் கைகளில் திகழும் இத் தெள்ளுரை மேலே சொல்லிய உரைகளின் பொருள் வளங்களையெல்லாம்

கருத்திற் கொண்டு எழுதிய நல்லுரையாக - எளியவருக்கும் விளங்கும் மெல்லுரையாக மிளிர்கின்றது.

இதனை எழுதிய பேராசிரியர் திருவாசகத் தேனில் ஊறித் திளைத்தவர், திருவாசகத்தில் அவருக்குள்ள ஈடுபாட்டினை அவர் எழுதியுள்ள முன்னுரை முழுமையகக் காட்டும். அவ் அருளிக்கியத்தின் பொருள் நலம் அனைவரையும் சென்றடையு மாறு அதற்கு எளிய முறையில் உரை வரைய வேண்டும் என்ற வேட்கை நெடுங்காலமாக அவருள்ளத்தில் கிடந்தது. அவ் வேட்கை இந் நூலால் நிறைவுறுகின்றது.

உரை பற்றிச் சில சொல்லல் வேண்டும். திருவாசகத்தில் 51 பகுதிகள் உள்ளன. ஒவ்வொரு பகுதிக்கும் நுழைவாயில் போல அழகான முன்னுரையை அமைத்துள்ளார். அம் முன்னுரை அப்பகுதியின் அமைப்பு முறையையும், அதன்கண் அமைந்து கிடக்கும் பொருட் பெற்றியையும், அதன் உட்கிடையையும் சுருங்கிய சொற்களில் உணர்த்துவதாக உள்ளது.

ஒவ்வொரு பாட்டுக்கும் நேராக அதன் எதிர்ப் பக்கத்தில் அப் பாட்டின் பொருள் விரிந்து செல்லாமலும், சுருங்கி நில்லா மலும் அளவாக அமையும்படி கொடுத்துள்ள நேர்த்தியைக் காணலாம்.

மூலத்தை விட்டு விலகாமல் பொருள் கூறிச் செல்லும் பாங்கு, பயில்வோரின் அறிவு நிலையைக் கருத்திற் கொண்டு அதற்கேற்ப எழுதிச் செல்லும் எளிமை, தெளிந்த நீரோட்டம் போன்ற நடை, உணர்ச்சி மயமான இனிய சொல்லாட்சி- இவையே இத் தெளிவுரையின் சிறப்பு.

மணிவாசகப் பெருமானது மலர் வாய்ப் பிறந்த வாசகத் தைப் பொருளுணர்ந்து சொல்வதற்கு இத்தெளிவுரை வழி செய்கிறது.

**ஆ. ஆனந்தராசன்**

# திருவாசகம் தெளிவுரை

## முன்னுரை

இறைவனைக் கண்டு கேட்டு உற்றுணர்ந்து ஆற்றின்ப வெள்ளமாகப் பாடிப் பரவிய பக்திப்பெருக்கு திருவாசகம். அது உயரிய தோத்திரமாலை; சாத்திர நுண்மைகள் பொதிந்த புனித நூல்; தெய்விக அனுபவ ஓவியக் களஞ்சியம்; செந்தமிழ் பெற்ற அருமந்த செல்வம்; வையகம் சடைத்தேறக் கிடைத்த வானமுதப் பெருங்கொடை.

சிவபெருமானால் 'சித்த மலம் அறுவித்துச் சிவம் ஆக்கி' ஆட்கொள்ளப்பட்ட **மாணிக்கவாசகப் பெருந்தகையின்** ''பாலும் தேனும் கன்னலும்'' போன்ற சுவை மலிந்த திருவாசகம் ஓதுவார்தமை உள்ளுருகச் செய்வது, உள்ளொளி பெறச்செய்வது, உலப்பிலா ஆனந்தம் துய்க்கச் செய்வது, அருளார் அமுதப் பெருங்கடலில் அழுந்தச் செய்வது.

அடியார் அனைவரையும் மயங்க வைக்கும் ஆற்றல் சான்ற இத்தெய்வப் பனுவல் பற்றி அனுபூதிக் கவிஞர் **துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்,**

''திருவா சகம்இங்கு ஒருகால் ஓதில்
கருங்கல் மனமும் கரைந்துஉகக், கண்கள்
தொடுமணல் கேணியில் சுரந்துநீர் பாய,
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பு எய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகின் மற்றையர் இலரே

என்று அனுபவித்தறிந்து தெரிவித்தார். திருவாசகத்தைப் பயின்றால் அது ''விளங்குறு முத்தி மெய்ப்பயன் தருமே'' என்றார்.

''தானே முத்தி தருகுவன் சிவன், அவன்
அடியன் வாதவூரனைக்
கடிவின் மனத்தாற் கட்ட வல்லார்க்கே

என்று அவர் உறுதிமொழி தந்தார்.

இவ்வாறே பிறமொழி வல்லுநரும் பலதுறை வித்தகரும் ஆகிய பெருமக்களும் திருவாசகம் பற்றிப் புகன்றுள்ளனர். **அறிஞர் சர் சி.பி. இராமசாமி அய்யர்.**

"It is indubitable that Manickavasagars" Thiruvachakam is one of the supreme classics of the world's devotional poetry, the outpourings taking every form from despair at the non-attainment of God's presence to ecstasy over the ultimate revelation.

The Thiruvachakam is the Saint's spiritual biography and a personal record of the various phases of his spiritual experience. A European author has thus commented on Thiruvachakam; "In no literature with which I am acquainted has individual religious life, its struggle and dejection, its hopes and fears and its confidence and triumph, received a delineation more frank and pronounced". Dr. G.U. pope has translated Manickavasagar's hymns in a rhythmic form" என்று குறிப்பிட்டார்.

இத்தகைய அருள் இலக்கியத்திற்கு ஆன்மிகச் செல்வரும் புலமைச் செல்வரும் ஆகிய அறிஞர்கள் தத்துவவுரை, விளக்கவுரை, பொழிப்புரை என்று கடந்த நூறு ஆண்டுகளில் தந்துள்ளார்கள். அவற்றின் எண்ணிக்கை மிகக் குறைவு; அவையும் கிடைப்பது அரிது.

ஜி.யு.போப், கே.எம். பாலசுப்பிரமணியம், கோ. வன்மீகநாதப் பிள்ளை, ரத்னா நவரத்தினா ஆகியோர் ஆங்கிலத்தில் திருவாசகத்தைத் தந்துள்ளனர். ஜெர்மன் மொழிபெயர்ப்பு ஒன்றும் இதற்குக் கிடைக்கிறது.

திருவாசகத்துக்கு இத் தெளிவுரை, எளிமையும் செப்பமும் உடையதாகப் பலரையும் சென்று அடையுமாறும், பலரும் பயன் பெறுமாறும் வரையப்பெற்றுள்ளது.

இற்றை நாள் சமய மறுமலர்ச்சிக்கும் அமைதித் தேவைக்கும் ஏற்பச் சுருக்கமாகவும் எளிமையாகவும் இவ்வுரை வெளி வருகின்றது.

## ஒன்று

# சிவபுராணம்

ஐந்தெழுத்து மந்திரத்தை, அதற்கு ஆதாரமான தலைவனை, குருமணியை, ஆகமம் ஆனவனை வாழ்த்தி, அவன் திருவடி தொழுது தொடங்கும் சிவபுராணம் என்ற 95 அடிகள் கொண்ட கலிவெண்பா வாதவூர் அடிகளால் திருப்பெருந்துறையில் அருளப்பெற்றதாகும்.

புராணம் என்பது பழமை. ஆகவே, ''சிவபுராணம் என்பது சிவனது அனாதி முறைமையான பழமை கூறுவது'' என்று இதன் உட்கிடையைக் குறித்தனர் முன்னைச் சான்றோர். மூலங்காண முடியாத காலப்பழமையோன், காலங் கடந்தோன் ஆகலின் அவனது பழமை அனாதிமுறையான பழமை ஆயிற்று.

திருவாசகம் ஆகிய அருள்நூலுக்கு முதலில் அமைந்துள்ள இத்திருப்பாட்டு, அடியார்களால் நாடொறும் ஓதப்படுவதாகும். திருவாசகத்தில் உள்ள கருத்துக்களின் பொலிவும் உண்மையும் அருளும் இதில் நுட்பமாக அடங்கியுள்ளன.

திருவாசகத்துக்கு இதனைத் தற்சிறப்பாயிரம் (நூன்முகம்) என்ப.

வாழ்த்தும் வணக்கமும், முறையே **வாழ்க** என்று 5 அடிகளாலும் வெல்க என்று 5 அடிகளாலும் **போற்றி** என்று 6 அடிகளாலும் புகலப்படுகின்றன. அதன்பின் ''சிந்தை மகிழச் சிவ புராணம் தன்னை ... உரைப்பன் யான்'' என்று வருபொருள் உரைக்கிறார் அடிகள்.

அதன்பின்25ஆவது அடிவரை அவையடக்கம்; எல்லாப்பிறப்பும் பிறந்து இளைத்த அலுப்பு 30அடி வரை; அடுத்து, மெய்யே இறைவன் அடி கண்டு வீடுற்ற செய்தி என்பன விளம்பப்படுகின்றன.

அதன் பின் முன்னிலைப் பரவலாக இறைவனை நேரிடையாகப் போற்றுதல் வருகின்றது. இறைவனின் ஐந்தொழில், சிந்தனையில் தேனாக அவன் ஊறுதல், நலம் இல்லாத தமக்கு இறைவன் நல்கியமை, ஆட்கொண்ட கருணை, இறைவனின் வியத்தகு பெற்றிகள் என்பனவும் போற்றப் படுகின்றன. ''திருவடிக்கீழ், சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்வார் செல்வர், சிவபுரத்தில் சிவனடிக் கீழ்ப்பல்லாரும் ஏத்தப் பணிந்து'' சிவமயமாக இருப்பர் என்று நூற்பயனோடு முடிகிறது. அழகு, அமைதி, தெளிவு, உணர்ச்சி ஆகியவற்றின் கூடலாகச் சிவ புராணம் திகழ்கிறது. ○

திருச்சிற்றம்பலம்

## வாழ்த்தும் வணக்கமும்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க

வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரம்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரம் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க

ஈசன்அடி போற்றி எந்தை அடிபோற்றி
தேசன்அடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்புஅறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி

## வருபொருள் உரைத்தல்

சிவன்அவன்என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழல்இறைஞ்சி

[சிவ பெருமானுக்கு வணக்கம் என்பதான] நமச்சிவாய என்ற ஐந்தெழுத்து மந்திரம் வாழ்க. அந்த ஒலியின் பொருளாம் தலைவன் வாழ்க. கண் இமைக்கும் கால அளவிலும் அடியேன் நெஞ்சினின்றும் நீங்காத பெருமானின் திருவடி வாழ்க. கோகழி என்ற ஊரில் எழுந்தருளியிருந்தவன் திருவடி வாழ்க. அடியேனை ஆட்கொண்ட மேம்பட்ட ஆசிரியரின் திருவடி வாழ்க. தான் ஒருவனே என்றாலும் பலராகவும் பலவாகவும் காட்சி தருபவனாகிய இறைவன் திருவடி வாழ்க.

மன ஓட்டத்தை அழித்து அடியேனை ஆண்டு கொண்டருளிய இறைவன் திருவடி வெல்க. பிறவித் தளையை அறுப்பவன், சடைமுடியாம் தலைக்கோலம் அணிந்தவன் ஆகிய பெருமானின் திருவடியில் கட்டிய கழல்கள் வெல்க. தன்னை அடையார்க்குத் தொலைவில் இருப்பவனின் பொலிவுடைய அடிகள் வெல்க. கைகூப்பித் தொழுவார் மகிழ்தற்கு ஏதுவாகிய இறைவன் திருவடிகள் வெல்க. தலைவணங்குவாரை உயர்வடையச் செய்யும் சிறப்புடையோன் திருவடிகள் வெல்க.

எல்லாம் உடைய பெருமானின் திருவடிக்கு வணக்கம். எம் தந்தையின் திருவடிக்கு வணக்கம். ஒளிவடிவானோனின் திருவடிக்கு வணக்கம். சிவபெருமானின் சிவந்த திருவடிக்கு வணக்கம். அன்பினில் நிலைத்த தூயோன் திருவடிக்கு வணக்கம். நிலையற்றதாக வரும் பிறப்புத் தொடரை அறுக்கும் அரசனின் திருவடிக்கு வணக்கம். சிறப்பு மிக்க பெருந்துறைக்கண் எழுந்தருளியுள்ள நம் தேவனின் திருவடிக்கு வணக்கம். தெவிட்டுதல் இல்லாத இன்பம் அருள்கிற மலைபோல்பவனுக்கு வணக்கம்.

சிவபெருமானாகிய இறையவன் எம் நெஞ்சில் நிலைத்திருத்தலால் அவன் அருளாலே அவன் திருவடி தொழுது, எல்லார் உள்ளமும் மகிழ, சிவபெருமானது பழைமையான முறைமையினைப் பழவினைகள் எல்லாம் ஓய்ந்து கெடும்படி அடியேன் இயம்பலானேன்.

நெருப்புக் கண் அமைந்த நெற்றியுடைய பெருமானின் அருட்பார்வை வழிகாட்ட அவன் திருமுன் அணுகி, நினைத்தற்கும் எட்டாத எழுச்சி நிரம்பிய வீரக்கழல் அணிந்த திருவடியை வணங்கி,

### அவையடக்கம்

விண்நிறைந்து மண்நிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந்து எல்லை இலாதோனே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்

### முந்திய பிறப்புகள் இன்றைய வீடு

புல்ஆகிப் பூடுஆய்ப் புழுவாய் மரம்ஆகிப்
பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்புஆகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யே உன் பொன்னடிகள் கண்டுஇன்று வீடு உற்றேன்

### மிளிர்கின்ற மெய் விளக்கு

உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யா யினஎல்லாம் போய்அகல வந்தருளி
மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே ''

### ஐந்தொழில்

ஆக்கம் அளவுஇறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பில்

### ஊறும் தேன்

நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே

விண்ணில் நிறைந்தும் மண்ணில் நிறைந்தும் மேம்பட்ட வனே, காட்சிக்கு விளங்கும் ஒளியாக இருப்பவனே, அளவு கடந்து எல்லை யாவும் இகந்து உள்ளவனே, உன் பெருஞ் சீர்த்தியைப் புகழ்ந்து உரைக்கும் வழியைத் தீவினையேன் உன் அருளால் அன்றிச் சிறிதும் அறிந்திலேன்.

எம்பெருமானே, புல்லாகியும் பல்வகைப் பூடுகள் ஆகியும் புழுவாகியும் மரமாகியும் பல வகைப்பட்ட விலங்குகள் ஆகியும் பறவைகள் ஆகியும் பாம்புகள் ஆகியும் கல்ஆகியும் மனிதர்கள் ஆகியும் பேய்கள்ஆகியும் பூதகணங்கள்ஆகியும் வலியஅசுரர்கள் ஆகியும் முனிவர்கள் ஆகியும் தேவர்கள் ஆகியும் பிறந்து நிகழ்கின்ற இந்த நிலைத்திணை இயங்கு திணைப் பொருள் களுள்ளே எல்லா வகையான பிறப்புக்களிலும் பிறந்துமெலிந்து விட்டேன். உண்மையாகவே இந்நாள் உன் பொன் போலும் திருவடிகளைக் கண்டு அடியேன் பிறவித் துன்பத்தினின்று விடுதலை அடைந்தேன்.

அடியேன் உய்யும் பொருட்டு என் உள்ளத்தில் ஓம் என்ற பிரணவ உருவமாக நின்ற மெய்யனே, மாசிலனே, அறத்தின் வடிவாம் காளையை ஊர்தியாக உடையவனே, 'ஐயனே' என்று மறைகள் துதிக்க அவற்றுக்கு எட்டாது உயர்ந்தும் ஆழ்ந்தும் விரிந்தும் நுட்பமாகவும் இருக்கும் பெருமானே, உயிர் உருவான தூயனே, பொய்யான எண்ணமும் சொல்லும் யாவும் சென்று ஒழிய ஆசான் ஆக எழுந்தருளி மெய்யுணர்வாகித் திகழ்கின்ற என்றுமுள்ள பேரொளியே, எவ்வகை அறிவும் இல்லாத எளி யேனுக்கு இன்பம் தரும் பெருமானே, அறியாமை இருளை நீங்கச் செய்யும் நன்மை தரும் அறிவுருவே,

தனக்குத் தோற்றமும் நிலைபேற்றின் அளவும் முடிவும் இல்லாதவனே, எல்லா உலகையும் படைப்பாய் காப்பாய் ஒடுக்குவாய் அருள் தருவாய் பல்வகைப் பிறப்புக்களில் செலுத்தி மறைத்தலின் மயக்கம் தருவாய், அதன் பின் அடியேனை உன் தொண்டினுள் புகச் செய்வாய்.

பூவின் மணம் போல உயிர்க்குள்ளே இருப்போனே அன்பிலார்க்குத் தொலைவினில் இருப்போனே, அன்பர்க்கு

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்து அடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்!

### மாய இருள் போக்கிய தூய ஒளி

நிறங்கள் ஓர் ஐந்துஉடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை
மறைத்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல் போர்த்து எங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலன்ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்து உள்ளுருகும்
நலம்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே !
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே !

### ஆட்கொண்ட அளவிலாப் பேரருள்

தேசனே தேன்ஆர் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றுஅறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ் சம்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்துஎன்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே

அருகினில் திகழ்வோனே, உரையும் மனமும் ஒழிய இங்கு அப் பாற்பட்டு நின்ற மறை பொருளாக விளங்குவோனே, ஆவிற் கறந்த பால் சருக்கரை நெய் ஆகியன ஏற்பக் கலந்தாற்போல இனிமையுறச் சிறப்புற்று அடியாரது சிந்தனையில் தேனாக ஊற்றெடுத்து நின்று அடியவர் எடுத்த பிறவியை அடியோடு நீக்கும் எங்கள் பெருமானே!

[ஐம்பூதங்களின்] நிறம் ஐந்தும் [பொன்மை வெண்மை செம்மை, கறுமை புகைமை] உடையவனே, தேவர்கள் போற்றவும் அவர்கட்குத் தோன்றாது மறைந்து இருந்தவனே! வலியவினையை உடைய அடியேனை அறிவு மறையும்படி மூடிய மாயமான அறி யாமை இருளை நல்வினை தீவினை என்ற அரிய கயிறுகளால் கட்டி, புறத்தே தோலைப் போர்வையாகப் பொத்தி, அதனால், எவ்விடத்தும் உள்ள புழு அழுக்குகள் மறைத்துச் செய்த அழுக்கு ஒழுகும் ஒன்பது வாயில் உள்ள சிறுவீட்டை, கலங்கும்படி ஐம் புலன்களும் வஞ்சனையைச் செய்ய விலகிச் செல்லும் மனத்தால் குற்றமற்றவனே! உன்பொருட்டு உண்மை கலந்த அன்பு பூண்டவன் ஆகி உள்ளம் கசிந்து உருகும் நன்மை யாதும் இல்லாத சிறியேன் பொருட்டு இரங்கிப் புவிமேல் குருவடிவில் வந்தருளி, புகழால் நீண்ட திருவடிகளைக் காட்டி, நாயினும் இழிந்தவனாகக் கிடந்த அடியேனுக்குத் தாயினும் சிறந்த அருளே வடிவாகிய உண்மைப் பொருளே! களங்கம் இல்லா ஒளிவிரிந்த மலர்போன்ற சுடர் ஆனவனே !

அறிவொளியான ஆசானே, தேனே, அரிய அமுதே, சிவ புரத்தை உடையவனே, மும் மலத் தொடர்பை அறுத்துக் காப் பாற்றுகின்ற மேலோனே, உன்னிடம் நேயம். கொள்வதற்கு அருளைச் செய்து மனத்தில் உள்ள வஞ்சகம் அழிய அவ் விடத்தில் நீங்காது நிலை பெற்ற பெருங்கருணையாகிய பெரிய ஆறே, தெவிட்டாதே அமுதமே, அளவிட முடியாத பெருமை யுடையவனே, உன்னை ஆராயாதவர் உள்ளத்து மறைகின்ற ஒளியாயிருப்பவனே, அடியேன் மனத்தை நீராக உருகச் செய்து என் அருமையான உயிருக்கு உயிராகி நின்றோனே, இயல்பாக இன்பதுன்பங்கள் இல்லாதவனே, அன்பர்க்காக அவற்றை உடையவனே, அன்பருக்கு அன்பனே, எல்லாப் பொருள் களும் ஆகி அவை அல்லாதவனும் ஆகி ஒளிப்பிழம்பான வடிவனே, நெருங்கிய இருளாக இருப்பவனே, காண்டற்கு இயலாப் பெருமை உடையவனே! எல்லாவற்றிற்கும் முதல் ஆனவனே, முடிவும்

கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார்
தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்உணர்வே
போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே
காக்கும்எம் எம்காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின் வெள்ளமே அத்தா! மிக்காய்! நின்ற
தோற்றச் சுடர் ஒளியாய்ச் சொல்லாத
நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊற்றான உண்ஆர் அமுதே உடையானே

**இத் திருப்பாடலைப் பாடுவார் பெறும் பயன்**

வேற்று : விகார விடக்குஉடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா அரனே!ஓ! என்றுஎன்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய் ஆனார்,
மீட்டுஇங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்இருளில் நட்டம் பயின்றாடு நாதனே!
தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே!
அல்லற் பிறவி அறுப்பானே! ஓ! என்று
சொல்லற்கு அரியானைச் சொல்லி, திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார், சிவன் அடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து’’

திருச்சிற்றம்பலம்

நடுவும் ஆகி அம்மூன்றும் இல்லானாகி இருப்போனே, அடியேனை உன்னிடம் இழுத்து ஆட்கொண்ட எம் தந்தை ஆகிய பெருமானே கூர்மையாகிய மெய்யறிவினால் உளம் கொண்டு உணர்வார் தமது கருத்தினாலும் காண்டற்கு அரிய நுண்மையான ஞான உருவே, போக்கும் வரவும் பொருந்தியிருத்தலும் இல்லாத அற வடிவனே, காக்கின்ற எம் அரசனே, காண்பதற்கு அரிய பெரிய ஒளியே, ஆற்றின் வெள்ளம் போல் நன்னெறிக் கண் உள்ள ஆனந்தப் பெருக்கே, எம் தந்தையே, யாவற்றினும் மேலானவனே, நிலைத்த தோற்றத்தை உடைய விளங்குகின்ற ஒளியாகி, சொல்ல ஒண்ணாத நுண் அறிவாகி மாறுபாட்டை உடைய உலகத்தில் வெவ்வேறு உருவாய் வந்து அருள் செய்தலால் (அறிஞர்க்கு) அறிதலாகிய தெளிவானவனே, அத்தெளிவினில் தெளிவே, என் மனத்தில் ஊற்றுப்போல் சுரக்கின்ற உண்ணப் படும் அரிய அமிர்தமே, எல்லாப் பொருளும் எல்லா உயிரும் உடையவனே,

வெவ்வேறு மாறுபாடுகளை உடைய தசை உடம்பின் உள்ளே தங்கிக் கிடக்க அதனால் ஆகிய துன்பத்தைப் பொறுக்க மாட்டேன். எம் ஐயனே! பாசங்களை அழிப்போனே, ஓ! என்று பலகால் ஓலமிட்டு அரற்றி வணங்கிப் போற்றிப் புகழ்ந்து பாடிக்கொண்டிருந்து பொய்யான சொல் செயல் மனம் ஒழிந்து மெய்யே ஆனவர்கள் மறுபடி இவ்வுலகில் வந்து வினைப்பயன் ஆகிய பிறவியை அடையாமல் வஞ்சனையைச் செய்கின்ற புலன் களின் வழிச்செல்லும் ஐம்பொறிகளின் இருப்பிடம் ஆகிய உடலின் பிணிப்பை அறுக்க வல்லவனே, எப்போதும் ஆடும் திருக்கூத்தைச் செறிந்த இருளாகிய அறியாமையால் மூடப்பெற்ற பேரூழிக் காலத்தும் புரிகின்ற தலைவனே, தில்லைச்சிற்றம்பலத்தே கூத்தாடும் பெருமானே, தெற்கேயுள்ள பாண்டிய நாட்டைப் பழம்பதியாக உடையவனே, துன்பத்தைத் தருகின்ற பிறவியை அறுப்பவனே ஓ! என்று முறையிட்டு, சொல்லுதற்கு அருமைப் பாடு உடையவனை முடிந்த மட்டும் புகழ்ந்து சொல்லி, அவனது திருவடியாகிய திருவருளின் கீழ்நின்று சாத்திய சொன்மாலையின் பொருள்களை அறிந்து சொல்ல வல்ல ஞானச் செல்வர், அன்பர் கள் எப்போதும் வணங்கித் துதிக்க இன்பமும் நிறைவும் மங்கல மும் உடைய சிவலோகமாகிய வீட்டுலகில் வாழ்கின்ற சிவபெரு மானது திருவடியின் கீழ்ச் சென்று இன்புற்றிருக்கப் பெறுவர்.

## இரண்டு

# கீர்த்தித் திரு அகவல்

''தில்லை மூதூர் ஆடிய திருவடி'' என்று தொடங்கி ''பொலிதரு புலியூர்ப்புக்கு இனிது இருந்தனன், ஒலிதரு கைலை மலை கிழவோனே'' என்று முடியும் இத் திருப்பாட்டு நிலை மண்டில ஆசிரியப்பாவில் 146 அடிகொண்டு தில்லையில் அருளப் பெற்றது.

''சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை; அவனது அருட் குணச் செய்கையை அறிவித்தல்'' இதன் உட்கிடை என்றனர் முன்னையோர். ''புகழ் பெருகும் செய்கை எலாம் புகழ் அகவல் ஒன்றாகும்'' என்பது திருவாசக உண்மை.

படைத்தல் காத்தல் நீக்கல் மறைத்தல் அருளல் என்ற ஐந் தொழில்களைத் திருக் கூத்தால் நிகழ்த்தும் கூத்தப் பெருமானின் ஆடல், எல்லாவற்றையும் இயங்கச் செய்கிறது. அவன் ஆன்மாக்களின் ஈடேற்றம் கருதித் தலங்கள் தோறும் எழுந்தருளி அருட்செயல்கள் புரிந்து அடியாரை ஆட்கொள்கிறான். இதனை

திருச்சிற்றம்பலம்

### பெருமானின் சில அருட்செயல்கள்

தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயிர் எல்லாம் பயின்றனன் ஆகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோர் உலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை இருளை ஏறத் துரந்தும்
அடியார் உள்ளத்து அன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்

மன்னு மாமலை மகேந்திரம் அதனில்
சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளியும்

கல்லா டத்துக் கலந்தினிது அருளி
நல்லாளோடு நயப்புறவு எய்தியும்

99 அடிகள் பேசுகின்றன. அருளுடை அண்ணலாகிய பெருமான் அரசச் சின்னங்களுடன் தோன்றி அடிகளை ஆட்கொண்டான். அதனை 126 அடிவரை விளம்புகிறார் அடிகள். எவ்வெவர் திறமும் நிலையும் கண்டு "அப்பரிசு அதனால் ஆண்டு கொண்ட" இறைவன், அடிகளை மட்டும் தில்லைப் பொதுவுக்கு வரப்பணிக்கிறான். 129 அடி வரை இது இயம்பப் படுகிறது. அதன் பின் பெருமானுடன் சென்ற அடியார் நிலையும் செல்ல இயலாத அடியாரின் ஏக்கமும் 139 வரை வருகின்றன. முடிவு, இறைவன் புலியூர் புக்கு இனிது அருளிய எழில் வருணிக்கப்படுகிறது

பெரும்பாலும் இறைவன் நிகழ்த்திய விந்தை அருட் செயல்கள் இத்திருப்பாட்டில் இயம்பப்படுகின்றன; அவற்றை விரும்புவார்க்கு அரிய விருந்தாக அமையும் இப் பகுதி தில்லையை மையமாக வைத்துக் கயிலையை உரிமையாகச் கொண்டு இறைவன் எந்நாட்டவர்க்கும் இறைவனாக விளங்கும் உண்மையை உணர்த்துகிறது.

தில்லை ஆகிய பழைய ஊரின் கண், திருச்சிற்றம்பலத்து ஆடுதல் தொழில் செய்கின்ற திருவடிகள், பலவாகிய உயிர்கள் யாவற்றுள்ளும் பொருந்தப் பெற்றவன் ஆகி, அளவில் அடங்காத பலவகை அருங்குணங்களும் எழுச்சிபெற விளங்கி,

மண்ணுலகையும் (சுவர்க்கமாகிய) விண்ணுலகையும் திருமால் முதலிய வானவர் தலைவர்களின் உலகங்களையும் செறிந்த கல்வியோடு படைத்தும் அழித்தும் அடியேனின் அறியாமை இருளை முழுதும் போக்கியும் அடியவர்களின் உள்ளத்திலே அன்பு மேன்மேல் பெருக அதனையே தன் இருப்பிடமாகக் கொண்ட கொள்கையும் மேன்மையும்

சிறப்பு உடைய பெரிய மகேந்திர மலையில், முன்னாளில் உமையம்மைக்கு உரைத்த ஆகமங்களை யாவர்க்கும் ஆகுமாறு வெளிப்படுத்தருளியும்

கல்லாடம் என்ற ஊரில் கலந்து இனிதாக எழுந்தருளி உமையம்மையோடு இனிமையுற நட்புக் கொண்டும்

பஞ்சப் பள்ளியில் பான்மொழி தன்னொடும்
எஞ்சாது ஈண்டும் இன்னருள் விளைத்தும்

கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்

கேவேடர் ஆகிக் கெளிறது படுத்தும்
மாவேட்டு ஆகிய ஆகமம் வாங்கியும்

மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து
உற்றஐம் முகங்க ளாற்பணித் தருளியும்

நந்தம் பாடியில் நான்மறை யோனாய்
அந்தமில் ஆரிய னாய்அமர்ந் தருளியும்

வேறுவே றுருவும் வேறுவேறு இயற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை ஈசன்இப் புவனியை உய்யக்
கூறுடை மங்கையும் தானும்வந் தருளி

குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தான்எழுந்தருளியும்

வேலம் புத்தூர் விட்டேறு அருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்

தர்ப்பணம் அதனில் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற்கு ஈந்த விளைவும்.

மொக்கணி அருளி முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்

பஞ்சப்பள்ளி என்ற ஊரில் பால்போலும் இனிய சொற்களை உடைய உமையம்மையோடு சேர்ந்து எழுந்தருளிக் குறைவற்று மிகுவதாகிய இனிய திருவருளைச் செய்தும்

வேடவடிவம் தாங்கி முள்முருக்க மலர் போலச் சிவந்த வாயினை உடைய உமையம்மையுடன் ஒன்றோடு ஒன்று கலந்த நல்ல மார்புத் தடத்தில் தோய்ந்தும்

வலைஞர் வடிவம் தாங்கிக் கெளிற்றுமீனைப் பிடித்துக் கொன்றும், மிகப் பெரிய ஏட்டில் வரையப் பெற்ற ஆகமங்களை அந்தக் கெளிற்றினின்றும் எடுத்தும்

அங்ஙனம் வாங்கிய ஆகமங்களை மகேந்திரமலை மேல் எழுந்தருளி, பொருந்திய தன் (ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்) என்ற ஐந்து முகங்களாலும் உரைத்தருளியும்

நந்தம்பாடி என்ற ஊரில் நான்கு மறைகளும் அறிந்தவனாக, முடிவில்லாத ஆசிரியனாக வீற்றிருந்தருளியும்

வெவ்வேறு உருவங்களையும் வெவ்வேறு தன்மைகளையும் கொண்டு பல நூறாயிரம் இயல்புகளும் உடையதாகி, காளை ஊர்தி உடைய இறைவன் இந்நிலவுலகில் ஆன்மாக்களின் கடைத்தேற்றம் எண்ணித் தன்னில் ஒரு கூறான அம்மையுடன் தானும் எழுந்தருளி

குதிரை செலுத்திக் கொண்டு [திருப்பெருந்துறைக்கு] மேற்கே உள்ள நாடாகிய மதுரைக்குத் திறமை உண்டாக வணிகக் கூட்டத்துடன் தான் ஒருவனாக எழுந்தருளி வந்தும்

வேலம் புத்தூர் என்ற ஊரில் உக்கிர குமாரற்கு வேலைக் கொடுத்துத் தவத்திருக்கோல அழகைக் காட்டிய முறையும்

சாந்தம் புத்தூர் என்ற ஊரில் வில்லினால் சண்டையிட வல்ல வேடன் ஒருவனுக்குக் கண்ணாடியில் எழுந்தருளி அவனுக்குப் படைக்கலம் தந்த முறையும்

குதிரைக்கு ஆன கொள்ளுப் பையில் முழுத் தழல் போலும் மேனியைச் சொக்க வடிவாக [லிங்கமாக]க் காட்டிய பழமையும்

அரியொடு பிரமற்கு அளவறி வொண்ணான்
நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்

ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்தனக் குப்பரி மாவிற்று
ஈண்டு கனகம் இசையப் பெறாஅது
ஆண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்

அந்தணன் ஆகி ஆண்டுகொண் டருளி
இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்

மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும்

ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்

உத்தர கோச மங்கையுள் இருந்து
வித்தக வேடம் காட்டிய இயல்பும்

பூவணம் அதனில் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்

வாத வூரில் வந்தினிது அருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்

திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியில் கரந்த கள்ளமும்

பூவலம் அதனில் பொலிந்தினிது அருளிப்
பாவ நாசம் ஆக்கிய பரிசும்

தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவகன் ஆகிய நன்மையும்

திருமாலுக்கும் பிரமனுக்கும் எல்லை காண முடியாமல் இருக்கும் பெருமான் நரிகளைக் குதிரைகள் ஆக்கிய நன்மையும்

அடியேனை ஆட்கொண்டு அழகு மிக்க திருவடியை அருளும் பொருட்டுப் பாண்டிய மன்னனுக்குக் குதிரையை விற்று அதற்கு விலையான மிக்க பொன்னைப் பெற உடன்படாமல் என் தலைவனாகிய இறைவன் தன் திருவருள் நெறியில் யான் இருத்தற்காக ஒளிப்பிழம்பாகத் தோற்றம் காட்டிய பழமையும்

அழகிய குளிர்ந்த மெய்யறிஞனின் வடிவம் தாங்கி வந்து அடியேனை ஆட்கொண்டருளி இந்திர சாலம் போன்ற இயல்பு களைக் காட்டிய வகையும்

மதுரையாகிய பெரிய நல்ல சிறந்த நகரில் குதிரை வீரன் ஆக வந்த தன்மையும்

அந்த மதுரை நகரில் அடியவளாகிய பிட்டு விற்பவள் பொருட்டு, பெற்ற கூலிக்கான முறையில் மண் சுமந்தருளிய தன்மையும்

உத்தர கோச மங்கையாகிய திருப்பதியுள் எழுந்தருளி யிருந்து ஞான ஆசிரியராகிய வேடத்தைக் காட்டிய இயல்பும்

திருப்பூவணம் என்னும் ஊரில் தன் அடியாளாகிய பொன் னனையாள் பொருட்டுத் தூய சித்தர் வடிவத்தில் விளங்கியிருந்து தன் பொன்மேனி காட்சி தந்த பழமையும்

திருவாதவூரில் வந்து இனிமையுற எழுந்தருளித் தன் திருவடியில் அணிந்த ஞானச்சிலம்பின் ஒலியினை அடியேன் கேட்குமாறு செய்த இயல்பும்

அழகு மிக்க திருப்பெருந்துறையில் ஞானச் செல்வனாகத் தோன்றி என்னை ஆட்கொண்டு எப்பொருட்கும் மூலமான ஒளியில் மறைந்த தந்திரமும்

பூவலம் என்ற ஊரில் விளங்கி இனிதாக அருள் புரிந்து அடியார்களின் பாவங்களை அழித்த தன்மையும்

தன் அடியவனாகிய பாண்டியனின் படைகளின் விடாய் தீர்த்து அவன் வெற்றி அடையுமாறு தண்ணீர்ப் பந்தர் வைத்து அங்கு நன்னீர் வழங்கும் செயல் வீரன் ஆக வந்த நன்மையும்

விருந்தினன் ஆகி வெண்காடு அதனில்
குருந்தின் கீழ்அன்று இருந்த கொள்கையும்

பட்ட மங்கையில் பாங்கா யிருந்தங்கு
அட்டமா சித்தி அருளிய அதுவும்

வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னில் கரந்த கள்ளமும்

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கான் ஒருவன் ஆகிய தன்மையும்

ஓரி யூரின் உகந்தினிது அருளிப்
பாரிரும் பாலகன் ஆகிய தன்மையும்

பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்தும்
தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்
கோவார் கோலம் கொண்ட கொள்கையும்

தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானம் தன்னை நல்கிய நன்மையும்

இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்தஅப் பரிசும்

ஏகம் பத்தில் இயல்பா யிருந்து
பாகம் பெண்ணோடு ஆயின பரிசும்

திருவாஞ் சியத்தில் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்

சேவகன் ஆகித் திண்சிலை ஏந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்

திருவெண் காட்டில் ஒரு புதியனாக எழுந்தருளிக் குருந்த மர நிழலின்கண் அந்நாளில் வீற்றிருந்த தன்மையும்

முன்பு தான் உரைத்திருந்த முறைப்படியே பட்டமங்கை என்ற ஊரில் இயக்க மாதர் அறுவர்க்கு எட்டுப் பெரிய சித்திகளை அருளிய அந்தத் தன்மையும்

பாண்டியன் பொருட்டு வேட்டுவ வடிவத்தோடு ஒரு குதிரை வீரனாகத் தாம் விரும்பிய உருவம் கொண்டு காட்டில் ஒரு மடுவில் குதிரையோடு விழுந்து அங்கிருந்து மறைந்து விட்ட தந்திரமும்

படைகளின் எண்ணிக்கையை, ஆள்களை நேரில் எண்ணிக் காட்டும் முறையில் தாம் விரும்பிய வடிவத்தைக் கொண்டு படைத் தலைவனாம் தகுதிக்கு உரியவனாகத் தோன்றியருளிய தன்மையும்

ஓரியூர் என்ற ஊரில் விரும்பி எழுந்தருளியிருந்து அங்குப் பிறந்திருந்த உமையம்மைக்குக் காட்சி தந்து பழைய வடிவம் தரும் பொருட்டு நிலவுலகில் அவ்வூரில் முதியராய்-இளையராய்-பாலனாய் ஆகிய தன்மையும்

பாண்டூர் என்ற ஊரில் அடியார்கள் நெருங்கி வணங்குமாறு இருந்தும் தேவூர் என்ற ஊருக்குத் தெற்கே கடலில் அமைந்த தீவின் கண் அரச வடிவம் தாங்கிய தன்மையும்

வண்டுகள் தங்கும் சோலைகள் சூழ்ந்த திருவாரூரில் மெய்யுணர்வை வழங்கியருளிய நன்மையும்

திருவிடை மருதூரில் அடியவர்கள் நிறைந்திருந்து வழிபட வீற்றிருந்து தன் தூய திருவடிகளை அடியேனின் தலையில் சூட்டிய திருவருட் பண்பும்

திருஏகம்பம் எனப்படும் காஞ்சிபுரத்தில் தான் மட்டும் தனித்து வீற்றிருந்து இடப்பாகம் உமையம்மையோடு கூடியிருந்ததான தன்மையும்

திருவாஞ்சியம் என்ற ஊரில் அழகாக வீற்றிருந்து மணம் பொருந்திய கூந்தலையுடைய அம்மையுடன் மகிழ்ந்த தன்மையும்

பாண்டிய மன்னனுக்காக வில் வீரனாகத் தோற்றம் கொண்டு வலிய வில்லை ஏந்தியவாறு பலவகைத் திறங்கள் காட்டிய தன்மையும்

கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயாறு அதனில் சைவன் ஆகியும்
துருத்தி தன்னில் அருத்தியோடு இருந்தும்
திருப்பனை யூரில் விருப்பன் ஆகியும்

கழுமலம் அதனில் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்காது இருந்தும்
புறம்பயம் அதனில் அறம்பல அருளியும்
குற்றா லத்தில் குறியா யிருந்தும்

அந்தமில் பெருமை அழல்உருக் கரந்து
சுந்தர வேடத்து ஒருமுதல் உருவுகொண்டு
இந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்துத்
தானே ஆகிய தயாபரன் எம்இறை

சந்திர தீபத்துச் சாத்திரன் ஆகி
அந்தரத் திழிந்துவந்து அழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்

மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்
எந்தமை ஆண்ட பரிசது பகரின்

**பெருமானின் கொடி ஆறு முரசு படை மாலை ஊர்தி நாடு ஊர் பெயர் மலை என்பன**

ஆற்றல் அதுஉடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்

ஊனந் தன்னை ஒருங்குடன் அறுக்கும்
ஆனந் தம்மே ஆறா அருளியும்

மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்

திருக்கடம்பூரில் கோயில் கொண்டுத் திகழ அங்கு இருந்தும் தனது அழகிய திருமேனியைத் திருஈங்கோய் மலையிற் காட்சி தந்தும், திருவையாற்றில் ஓர் ஆதிசைவன் ஆகியும் திருத்துருத்தி (குத்தாலம்) யில் ஆர்வம் பொருந்த வந்திருந்தும் திருப்பனை யூரில் அடியார்க்கு அருளும் விருப்பம் உடையனாகவும்

சீர்காழிப் பதியில் திருக்காட்சி வழங்கியும், திருக்கழுக் குன்றத்தில் நிலையாக எழுந்தருளியிருந்தும், திருப்புறம்பயத்தில் அறநூல்கள் உரைத்தருளி அறச்செயல்கள் பல நிகழ்த்தியும்,திருக் குற்றாலத்தில் சிவலிங்க வடிவாக அதில் எழுந்தருளியிருந்தும்

முடிவற்ற பெருமையுடைய ஒளிப்பிழம்பின் படிவத்தை மறைத்து அழகிய தோற்றத்தினை உடைய ஒப்பற்ற குருமுதல்வ னாம் வடிவு கொண்டு இந்திரசால வித்தைபோல மாயமாக எழுந்தருளி வந்து, எவ்வெத் தெய்வங்கள் உளர் அவர்களின் தன்மைகளை எல்லாம் தம்மிடம் அடக்கி அவர்கள் எல்லாரினும் தானே எல்லாமுமாய் உயர்ந்து விளங்கும் அருள்மேலோன் ஆகிய எம் இறைவன்

சந்திர தீபம் என்ற ஊரில் கலைநூல் வல்லோனாக விண்ணினின்றும் இறங்கி வந்து அழகு பொருந்திய திருக்கழிப் பாலை என்னும் ஊரில் அழகாம் இயல்புடன் நெருங்கி எழுந் தருளியிருந்தும்

ஆகிய, இத்தகைய முடிவிலாப் பெருமையும் அருளும் உடைய பெருமான், மந்திர ஆகமங்கள் வெளிப்பட்ட மாமலை யாகிய மகேந்திர மலையை உரிய இடமாகக் கொண்டவன், எங்களை ஆட்கொண்ட தன்மைகளைப் பற்றிக் கூறுமிடத்து,

எல்லாம் வல்ல அழகு பொருந்திய தன் திருஉருவத்தில் திருநீற்றுக் கோடுகள் உயர்ந்து தோன்ற, இடபக் கொடியைக் காட்டியும்,

தீமையை ஒருசேர அழித்துக் கொண்டு ஓடுவதாகிய பேரின்ப வெள்ளமே ஆறாகக் கொண்டருளியும்

உமையம்மையை ஒரு கூற்றில் உடைய மிகப் பெரிய அருளினை உடையவன் நாதத் தத்துவம் ஆகிய பெரிய பறை மீண்டு மீண்டு ஒலிக்கவும்

அழுக்குஅடை யாமல் ஆண்டுகொண்டு அருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண்டு அருளியும்

மூல மாகிய மும்மலம் அறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாகி எழில்பெற அணிந்தும்

அரியொடு பிரமற்கு அளவறி யாதவன்
பரிமாவின் மிசைப் பயின்ற வண்ணமும்

மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்

பத்திசெய் அடியரைப் பரம்பரத்து உய்ப்பவன்
உத்தர கோச மங்கை ஊராகவும்

ஆதி மூர்த்திகட்கு அருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெயர் ஆகவும்

இருள்கடிந்து அருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருள்மலை ஆகவும்

**ஆண்டு கொண்ட முறை**

எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறனும்
அப்பரிசு அதனால் ஆண்டுகொண் டருளி

**என்னை மட்டும் இருக்க வைத்தனன்**

நாயி னேனை நலம்மலி தில்லையுள்
கோலம் ஆர்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை ஈங்கொழித் தருளி

**உடன்போக முடியாத அடியார்களின் பிரிவு**

அன்றுஉடன் சென்ற அருள்பெறு அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்

மும்முல அழுக்கு வந்து சேராமல் உயிர்களை ஆட்கொண்டு அருள்புரியும் இறைவன் சூலம் ஆகிய முத்தலை வேலைத் திருக்கை யிற் பிடித்தருளியும்

உயிர்களின் துன்பங்களுக்குக் காரணமான மூவகை அழுக்கு களையும் அழிக்கின்ற தூய மேனியில் சுடர் பெருகும் ஒளிப்பிழம் பாகிய இறைவன் அன்பு மிக்கவனாகிச் செங்கழுநீர் மாலையைப் பொருத்தமாக அழகுற அணிந்தும்

மால் அயன் ஆகியோரால் தன் வரம்பு அறியப்படாதவன் குதிரையின் மேல் ஏறிப் பலமுறை ஊர்ந்து வந்த அழகும்

தன்னை வந்து அடைந்தோர் மீண்டும் பிறவாவாறு வீட்டுநெறியை அருள்பவனாகிய பெருமானுக்குப் பாண்டிய நாடே பழைய இருப்பிடமாகவும்

அன்புடன் தன்னை வழிபடும் அடியவர்களை மிக மேலான வீட்டுலகிற் சேர்ப்பவனாகிய பெருமான் திருவுத்தர கோச மங்கையாகிய ஊரைத் தனக்கு ஊராகக் கொண்டருளியும்

முதலான தேவர் தலைவர்களுக்கு அருளை விரும்பி வழங்கியதனால் தேவதேவன் என்பதே தனக்கு அழகிய திருப் பெயர் ஆகக் கொண்டவன்

அடியாரின் அறியாமை இருளைப் போக்கி அருளிய பேரின்பமே ஊர்தியாக உயிர்கட் கெல்லாம் அருள் புரிந்த பெருமையுடைய திருவருளே மலையாகவும்

எவ்வெவர் எவ்வெப் பெருந்தன்மைகளும் கூறுபாடுகளும் கொண்டுள்ளனரோ அவ்வவரின் அவ்வத் தன்மைகளுக்கு ஏற்ப ஆட்கொண்டருளி

நாய் போலும் இழிதகைமையுடைய என்னை மட்டும் நன்மைகள் மிகுந்த தில்லையுள் அழகு நிரம்பிய மன்றினுள் வருக என்று பொருந்தப் பணிந்து, அடியேனை இந் நிலவுலகிலேயே விடுத்தருளி

அந்நாளில் தன் உடன் போன தன் அருள் பெறுதற்கான அடியார்கள் இரண்டறக் கலக்க அவர்களோடு பெருமான், கலந்தருளியும்

எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்கம் எய்தியும்
பூதல மதனில் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத்து ஓடிக் கடல்புக மண்டி 153
நாத நாத என்றழுது அரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்

பதஞ்சலிக்கு அருளிய பரமநா டக என்று
இதம் சலிப்பு எய்த நின்று ஏங்கினர் ஏங்கவும்

## அடியவரோடு இறைவன் அம்பலம் அடைதல்

எழில் பெறும் இமயத்து இயல்புடை அம்பொன்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத்து அழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினிது அருளினன்
ஒலிதரு கயிலை உயர்கிழ வோனே

திருச்சிற்றம்பலம்

அவ்வாறு இறைவன் அருளால் அவனோடு கலக்கும் பேறு பெறாதோர் மெய்யறிவாகிய நெருப்பிற் பாய்ந்து தன்னோடு கலக்கவும் சிலர் பித்துப் பிடித்தவராக மயக்கம் அடைந்தும் நிலத்தில் விழுந்து புரண்டும் அலறியும் காலால் விரைந்து ஓடிப் பேரின்பக் கடலில் புகுதற்கு நெருங்கச் சென்று ''தலைவனே, தலைவனே'' என்று அழுது புலம்பியும் பெருமானின் திருவடியை அடையப் பெற்றோர்கள் அவ்வாறு அடையப் பெறவும்

பெருமானின் திருவடிப் பேறு கிடைக்கப் பெறாமல், 'பதஞ்சலி முனிவர்க்கு அருளிய மேலான கூத்தப் பெருமானே!'' என்று மனம் சலிக்க நின்று ஏங்கினவர் ஏங்கி நிற்கவும்

அழகு விளங்கும் இமயத்தின் தன்மைகள் யாவும் உடைய அழகிய புலியூராகிய தில்லையில் உள்ள பொன்னம்பலத்தில் ஆடுதல் புரியும்; கொவ்வைக் கனி போலும் சிவந்த வாயினை உடைய உமையம்மையோடு காளிக்கும் அருள் புரிந்த, அழகிய முகத்தில் அழகிய இளநகை உடைய சிவபெருமான், உயர் ஒலியைத் தருகின்ற திருக்கயிலை மலைக்கு உரிமை உடைய அவ் இறைவன் நெருங்கிய அடியவரோடும் எல்லாவற்றாலும் பொலிவுற்று விளங்கும் புலியூரில் உள்ள சிற்றம்பலத்தில் புகுந்து இனிதாக அருளினன்.

○ ''திருக்கயிலை மலைக் கிழவனாகிய சிவபெருமான். தில்லை என்னும் பழைய ஊரில் திருச்சிற்றம்பலத்தில் ஐந்தொழில் நடனம் செய்யம் திருவடிகள் பலவகைப்பட்ட உயிர்கள் எல்லா வற்றுள்ளும் பொருந்தப் பெற்றவனாகி'' என்று தொடங்கி ''புலியூரில் புகுந்து உயிர்கட்கு எல்லாம் இனிதாக அருளினன்'' என்று முடியும் இவ் அகவல், இறைவனின் அருட் செயல்கள் பலவற்றைக் கூறி, அவனது தசாங்கத்தைச் சுருங்கச் சொல்லி அடியார்க்கு அருளிய வகையையும் விளம்பிக் ''கீர்த்தித் திருவகவல்'' என்பதற்கேற்ப அழகிய ஒரு தொகுப்புரையாக,புகழ், மாலையாக, விளங்குகிறது. ○

### மூன்றாவது

## திரு அண்டப்பகுதி

‘அண்டப்பகுதி’ என்று தொடங்கும் இத்திருப்பாட்டு முதற் குறிப்பால் பெயர்பெற்று 182 அடிகள் கொண்ட இணைக்குறள் ஆசிரியப்பாவால் தில்லையில் அருளப்பெற்றது.

“சிவனுடைய தூல சூக்குமத்தை வியந்தது” இதன் உட்கிடை என்றனர் முன்னையோர். அண்டம் எல்லாம் சிறிய என்னுமாறு இறைவன் மிகப் பெரியன் ஆக இருக்கிறான் என்பதும் பேரூழியும் அதன் நீக்கமும் நிலையும சூக்குமமாகவும் தூலமாகவும் சுழலுமாறு திரிக்கும் இளமையோன் அவன் என்பதும் முதல் 12 அடிகள் தெரிவிக்கின்றன.

28 அடிவரை முத்தொழிலுக்கும் வீடுபேற்றுக்கும் ஐம்பூத இயற்கைக்கும் அவன் தலைவன் என்பது விளக்கப்படுகிறது.

65அடிவரை இறைவனின் அருட்செயல்கள், இயல்பு ஆகியன கூறி அவனைக் காணுமாறு நாற்பது **காண்க** உள்ளன. 66-95 வரை இறைவனை மேகமாக முற்றுருவகம் செய்து கண்முன்

திருச்சிற்றம்பலம்

### இறைவனின் பெருமையும் வலிமையும்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக்கு ஒன்று நின்றெழில் பகரின்
நூற்று ஒரு கோடியின் மேற்பட விரிந்தன;
இல்நுழை கதிரின் துண்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்; தெரியின்
வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொரு புணரிய
மாப்பேர் ஊழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்து
எறியது வளியின்
கொட்கப் பெயர்க்கும் குழகன்;

காணும் சித்திரமாக வரையப்பட்டுள்ளது. 105 வரை இறைவன் **வாழ்க** என்று பதினொரு **வாழ்க** 121 வரை **போற்றி** ஆறு 123 வரை ஆற்றாமை, 145 வரை தேவர்களுக்கு ஒளித்தமை **ஒன்பது** அமைந்துள்ளன.

146 முதல் முடிவு வரை பெருமான் அறைகூவி ஆட்கொண்டதும் அதனால் விளைந்த அனுபவங்கள், அனுபவம் கடந்த பெற்றி முதலியன விளம்பப்படுகின்றன.

○ பேரின்பம் வாய்க்கப் பெற்ற அருள்ஞானியர் தம் அனுபவங்களை உரைத்தல் மிகமிக அரிது; இயலாது என்றே கூறுவர்; அடிகள் "சொல்லுவதறியேன் வாழி முறையோ தரியேன்" என்றும் "செழுந்தண் பாற்கடல் திரைபுரைவித்து, உள்ளகம் ததும்ப வாக்கிறந்து அமுதம் மயிர்க்கால் தோறும் தேக்கிடச் செய்தனன்" என்றும் "ஆவா செத்தேன் பருகியும் ஆரேன் விழுங்கியும் ஒல்லகில்லேன் என்றும்" "அள்ளூறு ஆக்கை அமைத்தனன்" என்றும் பரவசத்துடன் பகரும் செய்திகள் புதியன, அரியன. அவை ஓதுவார்க்குப் பரவசம் ஊட்டுவன. ○

அண்டங்களின் பகுதிகளாக உள்ளனவாகிய கோள்கள் முதலியவற்றின் பெருக்கமும் அவற்றின் அளக்கலாகாத் தன்மையும் வளம் மிக்க தோற்றமும் ஒன்றற்கு ஒன்று ஈர்ப்புடன் அவை நிற்கிற எழுச்சியும் சொல்லுமிடத்து நூற்று ஒரு கோடிக்கு மேற்பட்ட விரிந்து கிடக்கும் அண்டங்கள் எல்லாம்

வீட்டின் உள்ளே சிறுவழியில் நுழைகின்ற ஞாயிற்றின் கதிரில் அடர்ந்து காணப்படும் அணுக்களைப் போலச் சிறியனவாகக் காணும்படி
அவன் (இறைவன்) அவற்றிலும் பெரியனாக இருப்பவன் —
ஆராயுங்கால்

பிரம்மாக்களின் கூட்டத்துடன் மாலோரின் கூட்டமும் படைப்பு நிலைபெறல் அழிவு ஆகியவற்றோடு கூடிய மிகப் பெரிய ஊழிக் காலங்களும் அவ் வூழிக் காலங்களின் நீக்கமும் நீக்கத்தின் பின் தோன்றுதலும் அவர்களும் அவையும் முன்போல நிலைபெறலும் ஆகிய எல்லாம் நுண்மையாகவும் வெளிப்படு வகையாகவும் வளியோடு சூறாவளிபோல எறியச் செய்தலோடு சுழன்று நிலைபெயரச்செய்யும் இளைய அழகன் (ஆகிய பெருமான்)

### முத்தொழில் முதல்வன்

*படைப்போன் படைக்கும் பழையோன் படைத்தவை*
*காப்போன் காக்கும் கடவுள்; கரப்பவை*
*கரப்போன் கரப்பவை கருதாக்*
*கருத்துடைக் கடவுள் ;*

### வீடு பேற்றுக்கு உரியவன்

*திருத்தகும்*
*அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும்*
*வீடுபேறாய் நின்று விண்ணோர் பகுதி*
*கீடம் புரியும் கிழவன்*

### ஐம்பூதங்களுக்கும் ஆற்றல் தருவோன்

*நாடொறும்*
*அருக்கனில் சோதி அமைத்தோன் திருத்தகு*
*மதியில் தண்மை வைத்தோன்; திண்திறல்*
*தீயின் வெம்மை செய்தோன்; பொய்தீர்*
*வானில் கலப்பு வைத்தோன்; மேதகு*
*காலின் ஊக்கம் கண்டோன்; நிழல்திகழ்*
*நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட*
*மண்ணில் திண்மை வைத்தோன் என்றென்று*
*எனைப்பல கோடி எனைப்பல பிறவும்*
*அனைத்து அனைத்து. அவ்வயின் அடைத்தோன்*

### அவன் அருமை பெருமைகள் காண்க!

*அஃதான்று*
*முன்னோன் காண்க முழுதோன் காண்க*
*தன்னேர் இல்லோன் தானே காண்க*
*ஏனத் தொல்லெயிறு அணிந்தோன் காண்க*
*கானப் புலியுரி அரையோன் காண்க*
*நீற்றோன் காண்க*

*நினைதொறும் நினைதொறும்*
*ஆற்றேன் காண்க! அந்தோ கெடுவேன்!*

எல்லாவற்றையும் படைப்பவன் ஆகிய பிரமனையும் படைக்கும் பழைமையானவன்; படைக்கப்பட்டவற்றைக் காப்ப வன் ஆகிய திருமாலைக் காக்கும் கடவுள்; காக்கப்பட்டவற்றை அவற்றிற்கு உரிய காலத்தில் முறையே ஒடுக்குகிறவன்; ஒடுக்கப் பட்டவற்றைச் சில காலம் ஓய்ந்து கிடக்கச் செய்து பின்னால் அவற்றைப் படைக்கக் கருதும் கடவுள் அப் பெருமான்

நலம் பொருந்திய ஆறு வகையான சமயக்கொள்கையைப் போற்றும் ஆறு வகைச் சமயத்தார்க்கும் வீட்டின்பப் பேறு தரும் கடவுளர் பிரிவு எல்லாம் தன்னை (சிவபெருமானை) நோக்கப் புழுக்களாகத் தோன்றத் தானே அவ்வீடு பேற்றை அளித்தற்கு உரிமை உடையோன்

ஒவ்வொரு நாளும் ஒளி தருமாறு ஞாயிற்றுக்கு ஒளியினை அமைத்தவன், அழகிய திங்களில் குளிர்ச்சியை வைத்தவன், உறுதி வலிமை உடைய தீயின்கண் வெப்பத்தைச் செய்தவன், பொய்யில்லாத வானத்தில் மற்றைய பூதங்கள் எல்லாம் கலந் திருக்கும் வலிமையைத் தந்தவன்; மேன்மையான காற்றில் கிளர்ந்து எழும் தன்மையை வைத்தவன்; ஒளியோடு விளங்கும் நீரில் இனிய சுவையினைப் பொருந்தச் செய்தவன், வெளிப் படையாக நிலத்திற்குத் திட்பத்தை வைத்தவன்

இவ்வாறாக, எத்தனையோ பல கோடிகளாக உள்ள பொருள்களிலும் உயிர்களிலும் அவ்வளவு அவ்வளவான தன் மைகளை அவ்வவ் இடங்களில் சேரச் செய்தோன்

அஃது அன்றியும்

எல்லாவற்றுக்கும் முன்பு உள்ளவன், அவனைக் காண்க. எல்லாமாக நிறைந்தோன் அவனைக் காண்க. தனக்கு ஒப்பாவார் இல்லாதவன். தான் ஒருவனாக உள்ளவன் காண்க.

மிகப் பழங் காலத்தில் ஆதிவராகத்தின் கொம்பை அணிந்தவன் காண்க. முனிவரர் ஏவிய காட்டுப் புலியின் தோலை உரித்து அதை உடுத்துக் கொண்டவன் காண்க. உடம் பெல்லாம் திருநீறு அணிந்தோன் காண்க.

இறைவனாகிய அவனது திருவுருவை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் அவனைப் பிரிந்திருத்தல் பொறுக்க முடியாத வன் ஆனேன் காண்க. ஐயகோ யான்அழிவேன் !

இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க
அன்னது ஒன்று அவ்வயின் அறிந்தோன் காண்க

பரமன் காண்க பழையோன் காண்க!
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அனேகன் காண்க

சொற்பதம் கடந்த தொல்லோன் காண்க
சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க
பக்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தரும் தன்மையில் ஐயோன் காண்க

இணைப்பரும் பெருமையின் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவிஎப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க

நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண்ஆண் அலிஎனும் பெற்றியன் காண்க

கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருள்நனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
இவன்என யானும் தேறினன் காண்க

அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க

வீணையில் இனிய இசையாகப் பொருந்தியிருப்போன் காண்க. அவ் வீணையின் கண் அப் பண்பினதாக அடங்கியிருப்பதை அறிந்தவன் காண்க.

எல்லாவற்றுக்கும் மேலானவன் காண்க, எல்லாவற்றிற்கும் பழைமையானவன் காண்க. வியக்கத்தக்க இயல்புகள் உடையவன் காண்க. பலவாக உள்ளவன் காண்க.

சொல்லின் அளவைக் கடந்த தொன்மையானவன் காண்க. எண்ணமும் சென்று எட்ட முடியாத சேய்மையில் இருப்போன் காண்க. அடியாரது அன்பாகிய வலையில் அகப்படுவோன் காண்க. ஒருவனே என்று கூறப்படும் ஒப்பற்றவன் இறைவன் காண்க. விரிந்துள்ள உலகம் முழுதுமாக விரிந்து இருப்போன் காண்க. அணுவிற் காணப்படும் நுட்பத் தன்மையிலும் வியக்கத் தக்க நுண்மையானவன் காண்க.

ஒப்பு உரைத்தற்கு அரிய பெருமையுடைய தலைவன் காண்க. அரியவற்றுள் அரிய அருமையுடையவன் காண்க. எல்லாப் பொருள்களிலும் கலந்து அவற்றை வளர்த்து வருவோன் காண்க, வேதம் முதலிய நூற்பயிற்சியில் உணரப்படாத நுட்பம் உடையவன் காண்க. மேலும் கீழுமாக விரிந்தவன் காண்க. தனக்கு முடிவும் முதலும் இல்லாதவன் காண்க. கட்டும் விடுதலையும் உயிர்களுக்கு உண்டாக்குவோன் காண்க.

நிற்பனவும் இயங்குவனவும் ஆனவன் காண்க. தேவத் தலைவர்களின் காலமும் அவற்றிற்கு முடிவும் செய்தோன் காண்க. எல்லாரும் அடைதற்கு நாடும் உடையவன் காண்க. தேவர்களாயினும் அன்பரல்லாதவரால் அறிதற்கு இயலாச் செம்பொருள் காண்க. அவள் அவன் அது என்ற மூன்றாகிய தன்மைகளையும் உடையவன் காண்க.

தகுதியற்ற எளியேன் ஆகிய யானும் என் கண்களால் கண்டேன் காண்க. அருள் பெருக்கெடுக்கும் அமுத ஊற்றுக் காண்க. பெருமான் அவனின் அருள் பெருமையினைக் கண்டேன் காண்க. இந் நிலவுலகில் தன் செவ்விய திருவடி படுமாறு செய்தருளினவன் காண்க. ஆளவந்த அவன் சிவபெருமான் என்று எளியன் கண்டு தெளிந்தனன் காண்க.

அப்பெருமான் என்னை அடிமை கொண்டு அருள் செய்தனன் காண்க, கருங்குவளை போலும் கண்களை உடைய

### பரமானந்தப் பெருங்கடல் வாழ்க

பரமா னந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலின் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின்ஒளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாள்அரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடுஎழில் தோன்றி வாள்ஒளி மிளிர
எந்தம் பிறவியில் கோபம் மிகுத்து
முரசுஎறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கி
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்அருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட
வரையுறக்

கேதக் குட்டம் கையுற ஓங்கி
இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன
ஆயிடை

வானம் பேரியாற்று அகவயின்
பாய்ந்தெழுந்து இன்பப் பெருஞ்சுழி கொழித்துக்
சுழித்துஎம் பந்தமாக் கரைபொருது அலைத்திடித்து
ஊழ்ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்பறித் தெழுந்து
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய்க் கோலி,
நிறைஅகில்

மாப்புகை கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத்து அரும்பெறல் மேகன் வாழ்க!

உமையம்மையை ஒரு கூற்றில் உடையவன் காண்க. அம்மை யாகிய அவளும் அப்பனாகிய தானும் ஒன்றி விளங்குதல் காண்க.

மேலான இன்பங் கொழிக்கும் பழமையான கடலாகிய அதுவே கரிய பெரிய மழைமுகில் போல் தோன்றி, அழகு மிக்க திருப்பெருந்துறையாகிய மலையில் ஏறி, அழகு பொருந்திய அருள் ஒளியாகிய மின்னல் திசைகள் தோறும் விரிய, அதனால், ஐம்புல ஆசைகளாகிய கொடிய பாம்புகள் அழிய, பிறவியின் வெய்ய துன்பத்தைத் தரும் வேனிற்காலம் தன் பெரிய தலையை மறைத்துக் கொள்ள, பக்குவ ஆன்மாக்கள் மிக்க ஒளியுடன் விளங்க, எம்முடைய பலவாகிய பிறவிகள் போன்று இந்திர கோபப் பூச்சிகளை மிகுவித்து, முரசு அடித்தாற் போன்று பெரிய அருளினால் நாதப் பறை முழங்கச் செய்து, அடியார்களின் பூப் போன்றனவாகிய குவிந்த கைகள் காந்தள் பூக்கள் போலத் தோன்ற, குறையாத இனிய அருளாகிய மழைத் துளிகள் விழுந்து கொண்டிருக்க, அதனால் சிவந்த ஒளியினையுடைய அருளாகிய வெள்ளமானது திசைகள் தோறும் ஆன்மாக்களின் உள்ளங்களில் பெருகி ஓட

துன்பக் குளம் உடையும்படி உயர்ந்த எல்லையை [ஆனந்த வெள்ளம்] அடைய, ஆறு வகைச் சமயங்களாகிய, நீர் வேட்கை யால் ஓடிவருகின்ற நெடிய விழிகளை உடைய மான்களின் கூட்டம், கானல் நீரைப் பெரிய வாயினால் மிகவும் குடித்தும் வீணே மிகு வேட்கை தணியாது தளர்ச்சியோடு வருந்தின. அவ்விடத்தே,

அறிவுப் பெருவெளியிலே பெரிய ஆற்றின் உள்ளே பாய்ந்து மேலே எழுந்து இன்பமாகிய பெரிய சுழி தெள்ளிச் சுழித்துக் கொண்டு சென்று எம்மைப் பிணித்துள்ள கட்டு ஆகிய கரையை மோதி அலைத்து இடித்து, முறைமுறையாக வளர்ந்துள்ள நம்முடைய இருவினைகள் ஆகிய பெரிய மரங்களை வேரோடு பிடுங்கி எழுந்து, அழகிய திருவருளாகிய நீர் பாயச் செய்து, நிலையில் உயர்ந்த அடியார்களாகிய ஏறற்கு அரிய மலைகளில் உள்ள பெரிய மெய்யுணர்வு ஆகிய சந்தன மரங்களில் பெரிய அணையைக் கட்டித் தேன் விரியப் பெற்ற நறுமண மலர்களாகிய இதய கமல மலர்க் குளங்களின் உள்ளிடத்தை வளைத்து

நிறைவாகிய அகிலின் பெரிய புகைபோன்ற கரைகளை அடைந்த வண்டுகள் உள்ள அக் குளத்தில் வெள்ளம் மேலே ஏறிவர, மேலும் மேலும் மகிழ்ச்சி கூர்தலால், அதனைக் கண்டு அருச்

## இன்பத் திளைப்பில் இறையருளைப் பாராட்டுதல்

கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க்கு அருளும் ஆதி வாழ்க
அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்துஆட் கொள்வோன் வாழ்க
சூழ்இரும் துன்பம் துடைப்போன் வாழ்க

எய்தினர்க்கு ஆரமுது அளிப்போன் வாழ்க
கூர்இருள் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேர்அமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க்கு ஏதில்எம் இறைவன் வாழ்க
காதலர்க்கு எய்ப்பினில் வைப்பு வாழ்க

நச்சரவு ஆட்டிய நம்பன் போற்றி
பிச்சுஎமை ஏற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதம் கடந்த தொல்லோன்
உள்ளத்து உணர்ச்சியில் கொள்ளவும் படாஅன்
கண்முதல் புலனால் காட்சியும் இல்லோன்
விண்முதல் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்றுயர்ந்து எங்கும்
ஒழிவுஅற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக்கு எளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச்செய்த ஒண்பொருள்
இன்றுஎனக்கு எளிவந்து இருந்தனன் போற்றி

அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந்து உள்ளம் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்து அலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்

சனையாகிய வயலில் அன்புஎன்ற வித்தினை விதைத்து விளைத்து அடியார்களாகிய உழவர்கள் சிவப்பே ரின்பம் ஆகிய விளை வினை உண்ணுமாறு தந்த அருள் வெளிக்கண் உள்ள, வாய்த்தற்கு அரிய மேகம் போல விளங்குபவன் ஆகிய சிவபெருமான் வாழ்க;

கரிய நிறம் உள்ள, படத்தை உடைய பாம்பை அரைக் கச்சையாக அணிந்த கடவுள் வாழ்க! செயற்கு அரிய தவத்தினை உடையார்க்கு அருள்புரியும் முதல்வன் வாழ்க! மெய்யுணர்வு பெற்றாரின் அச்சத்தை ஒழித்த வீரன் வாழ்க! எக்காலத்தும் ஆன்மாக்களை வலிய இழுத்து ஆட்கொள்வான் வாழ்க! உயிர் களைச் சூழ்ந்து கொள்ளும் துன்பங்களை அழிப்பவன் வாழ்க!

தன்னை வந்து அடைந்தார்க்கு அருளார் அமுதம் அளிப் பவன் வாழ்க! மிக்க இருள் ஆகிய பேருழிக் காலத்து இயற்றும் கூத்தோடு அதன் இறுதியில் இயற்றும் தோற்றக் கூத்தினைச் செய்வோன் வாழ்க! பெரிய மூங்கில் அனைய தோள்களை உடைய உமையம்மைக்குக் கணவன் வாழ்க! அன்புக்கு அயலா ராக இருப்போர்க்கு அயலாக இருக்கும் எம் இறைவன் வாழ்க. மெய்யன்பர்க்கு, இளைத்த காலத்தில் வாய்க்கும் புதையல் போல் பவன் வாழ்க!

நஞ்சுள்ள பாம்பை ஆட்டிய நம் இறைவனுக்கு வணக்கம்.

எமக்கு இறையுணர்வுப் பித்தினை மிகுவித்த பெருமானுக்கு வணக்கம். திருநீற்றுடன் காட்சி தர வல்லவனுக்கு வணக்கம். நான்கு திசைகளிலும் இயங்குபவற்றை இயங்கவும் நிற்பவற்றை நிற்கவும் செய்து சொல்லளவைக் கடந்து நின்ற தொன்மை யானவன், மனஉணர்ச்சியால் உணர்ந்து கொள்ளவும் படாதவன் கண் முதலிய ஐம்பொறிகளாலும் அறியப்படுதல் இல்லாதவன் வானம் முதலிய ஐம்பெரும் பூதங்களும் வெளிப்படையாகத் தோன்றப் படைத்தவன், பூவிடத்துள்ள நறுமணம் போல ஓங்கி எங்கும் நீக்கம் இன்றி நிறைந்து பரவிய பெருந்தன்மையை

இன்று அடியேனுக்கு இரங்கி வந்து அருளி, அழிந்துவிடக் கூடிய இந்த உடல் தன் இயல்பு ஒழியிமாறு செய்த ஒள்ளிய பொருளானவன்; இன்று எளியேனிடத்து எளியவாறு வந்து அருளினன், அவனுக்கு வணக்கம்,

அன்பினால் என் உடல் குழையுமாறு செய்தோனுக்கு வணக்கம். ஊற்றாக உள்ளத்து இருந்து களிப்பு அருள்பவனுக்கு

### இறைவன், கையிற் கிடைத்த நெல்லிக்கனி ஆயினன்

மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்ஒளி கொண்ட பொன்ஒளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க்கு ஒளித்தும்
முறையுளி ஒற்றி முயன்றவர்க்கு ஒளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்து
உற்றவர் வருந்த உறைப்பவர்க்கு ஒளித்தும்
மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கு ஒளித்தும்
இத் தந்திரத்தில் காண்டும் என்று இருந்தோர்க்கு
அத் தந்திரத்தில் அவ்வயின் ஒளித்தும்
முனிவுஅற நோக்கி நனிவரக் கௌவி
ஆண்எனத் தோன்றி அலிஎனப் பெயர்ந்து
வாள்நுதல் பெண்என ஒளித்தும்

சேண் வயின்
ஐம்புலன் செலவிடுத்து அருவரை தொறும் போய்த்
துற்றவை துறந்த வெற்றுயிர் ஆக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும்
ஒன்றுண்டு இல்லை என்றறி வொளித்தும்;

'பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
ஒளிக்கும் சோரனைக் கண்டனம்;
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை இடுமின்!
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின்' என்றவர் பற்றுமுறை ஒளித்தும்;

தன்நேர் இல்லோன் தானே ஆனதன்மை
என்நேர் அனையார் கேட்கவந்து இயம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி
மறையோர் கோலம் காட்டி யருளலும்

உளையா அன்புஎன்பு உருக ஓலமிட்டு
அலைகடல் திரையின் ஆர்த்தார்த்து ஓங்கித்
தலைதடு மாறா வீழ்ந்து புரண்டு அலறிப்

வணக்கம். பொறுக்க முடியாத பேரின்பப் பெருக்கு எழுந்து விரிந்து அலை வீச அதனைத் தாங்க முடியாத இவ்வுடலைத் தாங்க விரும்பேன்.

பச்சை மணியின் குவியலும் மாணிக்க மணியின் குவியலும் ஒன்று சேர்ந்து மின்னலின் ஒளியைத் தன்னிடத்தே கொண்ட பொன்னொளியாக இறைவன் விளங்க அதனைத்திசைமுகன் ஆகிய பிரமனும் பிறரும் தேடிச் சென்றோர்க்கு அகப்படாமல் கரந்தும்,

உள்ளத்தை ஒன்று படுத்தித் தன்னைக் காண முயன்றார்க்கு ஒளித்தும் சுற்றத்தார் முதலியோர் வருந்த அன்பில் அழுந்தி ஒன்றுபட்ட உறுதியாளர்க்கு ஒளித்தும்

'இந்தத் தந்திரத்தில் காண்போம்' என்று அந்தத் தந்திரத்தில் முயன்றோர்க்கு அதற்குள்ளே ஒளித்தும், வெறுப்பு அற எண்ணி அன்பினால் மிகுதியாகப் பற்றி ஆண் என்று ஒரு கால் தோன்றியும் மற்றொரு கால் அல்லாதது என்று கருதும்படி பெயர்ந்தும் ஒளி பொருந்திய நெற்றியினையுடைய பெண் என்னுமாறு தன்னை மறைத்தும்

நெடுந் தொலைவிலே ஐம்புல அவாக்கள் சென்று ஒழியுமாறு அகற்றிச் சேருதற்கு அரிய மலைகள் தோறும் சென்று, தாம் முன் நுகர்ந்தவற்றை எல்லாம் அறவே விட்டமையால் உயிர் மட்டும் இயங்கிக் கொண்டிருக்கும் ஊனில்லாத உடம்பினை உடைய செய்தற்கு அரிய தவத்தினைச் செய்வார்க்கு முழுக்க ஒளித்தும் ஒரு மெய்ப்பொருள் உண்டு இல்லை என்ற ஐயுறவு உடையார்க்கு அறிவில் ஒளித்தும்

முற்காலத்தில் பழகும் போதும் இந்நாளில் பழகும் தோறும் தன்னை மறைத்துக் கொள்ளும் கள்வனைக் கண்டோம் ஆதலால் வாருங்கள் ஆரவாரம் செய்யுங்கள் புதிய மலர்களால் கட்டப் பெற்ற மாலைகளைக் கொண்டு திருவடிகளைக் கட்டுங்கள் சுற்றுங்கள் பின் தொடருங்கள் விடாதேயுங்கள் பிடியுங்கள் என்று கூறியவர்களின் பற்றுகளுக்கு அகப்படாமல் முழுக்க ஒளித்தும்

எல்லா வகையிலும் தனக்கு ஒப்பாவார் எவரும் இல்லாதவன் தானே ஆன தன்மையை என் போன்ற இயல்புடையவர் கேட்டு உணருமாறு, அந்தணர் கோலத்தைக் காட்டி ஆசானாக வந்து வலிய அழைத்து என்னை ஆட்கொண்டு அருளிப் பொருளுரை இயம்பிய அளவிலே

அருட்பெருக்கைத் தாங்க முடியாமல் வருந்தி அன்பினால் என்பும் உருக ஓலமிட்டு அலைகடலின் அலை போல இடை

பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்
கடக்களிறு ஏற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றேன் ஆக அவயவம் சுவைதரு
கோல்தேன் கொண்டு செய்தனன்

ஏற்றார் மூதூர் எழில் நகை எரியின்
வீழ்வித்து ஆங்கு, அன்று
அருள்பெரும் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்;
தடக்கையின் நெல்லிக் கனிஎனக்கு ஆயினன்,

**உரைக்க இயலாப் பேரின்பம்**

சொல்லுவது அறியேன்; வாழி! முறையோ!
தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது
தெரியேன்; ஆஆ செத்தேன் அடியேற்கு
அருளியது அறியேன்; பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்;

செழுந்தண் பாற்கடல் திரைபுவிரைத்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகம் ததும்ப
வாக்கிறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்

குரம்பை தோறும் நாயுடல் அகத்தே
குரம்பை கொண்டு இன்தேன் பாய்த்தினன் நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவது

யறாத ஆரவாரம் செய்து மேல் எழுந்து தலைதடுமாறிக் கீழே விழுந்து புரண்டு கதறிப் பித்தரைப் போல் மயங்கி வெறி கொண்டவரைப் போல் அடியேனை நினைத்து நாட்டு மக்கள் மருட்சியடையவும் என் நிலையைக் கேள்விப்பட்டோர்கள் வியப் படையவும், மதயானை பாகனைத் தான் மேல் ஏறவிடாமைக்கு காரணம் ஆகிய பெரிய மதக் களிப்பினைத் தாங்க மாட்டாமை போல என்னிடம் பெருகிய களிப்பினைத் தாங்க இயலாதவனாக அடியேனின் உறுப்புக்கள் எல்லாம் தீஞ்சுவை தருகின்ற கொம்புத் தேன் கொண்டு [என் உடம்பை நுண்ணிய தூய இன்ப வடி வாக] ஆக்கினன்.

பகைவர்களின் பழைய ஊர்கள் ஆகிய முப்புரங்களைத் தன் அழகிய சிரிப்பினால் உண்டான நெருப்பில் விழச் செய்தது போல எம்மை ஆட்கொண்ட அவ்விடத்தின் அன்று ஒருவரும் விட்டுப் போகாமல் திருவருட் பெருந்தீயில் அடியோமும் எம் சிறுகுடில் ஆகிய உடலும் ஒடுக்கிக் கொண்டனன்.

எனக்கு அப்பெருமான் உள்ளங்கையிற் கிடைத் நெல்லிக் கனி போல நன்கு விளங்கித் தோன்றினன்!

எம்பெருமான் நாய் போன்ற என்னை ஆட்கொண்ட தன்மை இத்தகையது எனச் சொல்லுவது அறிகிலேன். இறைவன் பேரருள் வாழ்க! அடியேன் இவ்வாறு இருப்பது முறையோ? பேரின்பப் பெருக்கை அடியேன் தாங்க மாட்டேன். இன்னதென அறியேன். ஆ! என்னை இழந்தேன்! அடியேனுக்கு அருளிய ஆரமுதத்தைக் குடித்தும் தெவிட்டப் பெறேன். அதனை விழுங்கி யும் தாங்க மாட்டேன்.

சொல்லின் அளவைக் கடந்த பேரின்ப அமுதமானது நிறைமதி நாளில் கடல் உள்ளிடத்துப் பொங்கி எழும் நீரைப் போல உள்ளத்தின் உள்ளிடம் ததும்ப வளமான குளிர்ந்த பாற்கடலின் அலைகளைப் போலப் பரவச் செய்து மயிரின் அடிதோறும் வந்து நிறையும்படி செய்தனன்.

நாய் போன்ற இழிந்த உடலினுள்ளே குடியிருந்து இனிய தேனைப் பாய்ச்சி நிரம்பிய வியக்கத் தக்க பேரின்ப அமுத நீர் ஒழுக்கினை என் உடம்பிலுள்ள எலும்பின் உள் துளைகள்

உள்ளங் கொண்டு ஓர் உருச்செய் தாங்கு எனக்கு
அள்ளூறு ஆக்கை அமைத்தனன்.

ஒள்ளிய
கன்னல் கனிதேர் களிறுஎனக் கடைமுறை
என்னையும் இருப்பது ஆக்கினன் என்னில்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமுது ஆக்கினன்
பிரமன்மால் அறியாப் பெற்றியோனே.

திருச்சிற்றம்பலம்

## நான்கு
## போற்றித் திரு அகவல்

'வணக்கம்' எனவும் 'காத்தருள்க' எனவும் பொருள் தரும் **போற்றி** என்ற சொல்லை ஈற்றிலும் இடையிலுமாகக் கொண்டு 135 அடிகள் வருதலின் இது போற்றித் திருவகவல் எனப்பெயர் பெற்றிருக்கலாம். நிலைமண்டில் ஆசிரியப்பாவில் 225 அடிகள் கொண்ட இஃது தில்லையில் அருளப்பெற்றதாகும்.

"சகத்தின் உற்பத்தி; பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் முறைமை" இதன் உட்கிடை என்ப. உயிர்கள் உடம்போடு தோன்றுமுறை தொடக்கத்தில் இருக்கிறது; மற்றவை போற்றியே. "முத்திபெறு நெறியறியும்மொழி,போற்றித் திருவகவல்" என்பது பழைய திருப்பெருந்துறைப் புராணம் கூறும் திருவாசக உண்மை.

முதலில் இதில் திருமால் பெருமை பேசப்படுகிறது. அத்தகு மாலும் மற்றையரும் காணா மலரடிகள் தமக்கு எளிமையானமை தொடக்கம் 10 அடிகளில் அமைகிறது

பல வகை உயிர்ப்பிறப்பிலிருந்து மானிடப் பிறப்புக்கு வருவதும். கருவிலிருந்து பின் பிறக்குங்காறும் திங்கள்தோறும் வரும் துன்பங்களும் 25 அடி வரை பேசப்படுகின்றன.

தோறும் ஏறச் செய்தனன். உருகுவதாகிய உள்ளத்தைக்கொண்டு கண்ணுக்குப் புலனாகும் படி ஒரு வடிவம் செய்து அமைத்தது போல எனக்கு அமுதத்தைக் கொண்டு கசிவதாகிய உடம்பை ஆக்கித் தந்தனன்.

சிறந்த கரும்பாகிய இனிய உணவினையும் விளவில் கனியையும் தேர்ந்து உணவாகக் கொள்கின்ற ஆண் யானை யைப் போல,

முடிவாக ஒன்றுக்கும் பற்றாத என்னையும் பேரின்பத்தில் நிலைபெற்று இருக்குமாறு செய்தருளினன்; என்னிடத்தில் தூய தேன் கலக்க, நான்முகனும் திருமாலும் அணுக முடியாத தன்மை யன் ஆகிய பெருமான் அவ் அருளோடு மேலான பேரின்ப அமுதத்தினையும் அமைத்து வைத்தனன்.

○

அதன்பின் 41அடிகள் வரை, அகவை ஏறஏற வரும் தொல்லை கள் கல்விசெல்வம் காமம் வறுமை போன்றவை கூறப்படுகின்றன.

''தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி''யதும் மெய்ப் பொருள் காணத் தடையாகும் சமயக்கணக்கர் தரும் குழப்பங்கள் கூறப்படுகின்றன.

அடுத்து 85 அடி வரை, குருபரனாகி வந்த பெருமான் அளிக்கும் அருட்பேறு பெற்றமையும் அதனால் தோன்றிய மெய்ப் பாடுகளும் பேசப்படுகின்றன. அதன் பின் நன்றியும் உணர்ச்சியும் மகிழ்ச்சியும் கூறப் பெருமானின் அருமை பெருமைகள் புதுமைகள் சிறப்புகள் விளம்பப்படுகின்றன. இவை ஓதுவார் தமக்கு அடி களின் உள்ளத்து உணர்ச்சிகளைப் பகிர்ந்து தரவல்லன. மீட்டும் மீட்டும் ஓதுதல் உயர்நிலைக்குக் கொண்டு செல்லும் அருளுடையன.

○

திருச்சிற்றம்பலம்

**பெருமானின் மலரடி இணையின் அருமையும் எளிமையும்**

நான்முகன் முதலா வானவர் தொழுதுஎழ
ஈரடி யாலே மூவுலகு அளந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மால் அன்று
அடிமுடி அறியும் ஆதரவு அதனில்
கடுமுரண் ஏனம் ஆகி முன்கலந்து
ஏழ்தலம் உருவ இடந்து பின்எய்த்து
"ஊழி முதல்வ! சய!சய!" என்று
வழுத்தியும் காணா மலர்அடி இணைகள்
வழுத்துதற்கு எளிதாய்

**பிறப்பின் அருமையும் பிறக்கும் வரையில் உள்ள துன்பங்களினின்று பிழைத்தலும்**

வார்கடல் உலகினில்
யானை முதலா எறும்பீறு ஆய
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களின் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறுஅலர் பிழைத்தும்
ஏழு திங்களின் தாழ் புவி பிழைத்தும்
எட்டுத் திங்களின் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்

**பசி காமம் கல்வி செல்வம் வறுமை முதலியவற்றினின்று தப்பிப் பிழைத்தல்**

ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்

"நான்கு முகங்களை உடைய பிரமன் முதலான வானகத் தேவர் யாவரும் உன்னைத் தொழுது எழுந்திடவும், குறள் (வாமன) அவதாரத்தில் திருமால் தன் இரண்டு அடிகளால் [மண் விண் காற்று என்ற] மூவுலகை அளந்து,

நான்கு திக்குகளில் உள்ள முனிவர்களும் தத்தம் ஐம்புலன் களும் மகிழ்ச்சியால் விரிவுடைய வணங்குதல் செய்யப் பெற்ற ஒளி முடி உடைய நெடிய திருமால் அன்று உன் அடியின் முடி வாகிய இலக்கை அறியும் விருப்பம் காரணமாக விரைவும் வலிமையும் உடைய பன்றி வடிவம் கொண்டு முற்பட்டுப் புவியுள் புகுந்து கீழ் ஏழ் உலகங்களையும் [அதலம் விதலம் சுதலம் தாராதலம் இரசாதலம் மகாதலம் பாதலம்] ஊடுருவித் தோண்டிய பின் இளைத்து, காணமுடியாமையால் "ஊழி முதல்வனே! உனக்கு வெற்றி வெற்றி" என்று வணங்கியும் காணாத மலர் போன்ற உன் திருவடிகள் எம் போல்வார் பரவி வழிபடற்கு எளிதாக [உள்ளன].

நெடிய கடலாற் சூழப்பெற்ற உலகத்தில் மிகப் பெரிய யானை முதல் மிகச் சிறிய எறும்பு முடிவாக உள்ள குற்ற மில்லாத பிறப்புக்களுள் தங்கி

அவற்றுள் நிகழும் செய்கைகளினின்று தப்பியும்,

மானுடப் பிறப்பினுள் தாயின் வயிற்றில் ஒழிவற்ற புழுப் போரில் பிழைத்தும் முதல் திங்களில் தான்றிக் காய் அளவு வடிவமானது கரு இரண்டுபடாமல் பிழைத்தும்

இரண்டாவது திங்களில் ஒன்றுபட்டுத் திரண்டவழி உள தாம் தடையினின்றும் பிழைத்தும் மூன்றாம் திங்களில் கருப்பை யில் மதநீர் பெருகுவதால் உளதாகும் கேட்டினின்று உய்ந்தும் நான்காவது திங்களில் மதநீர் கருத்தலால் உண்டாகிய இருளி னின்றும் தப்பியும் ஐந்தாம் திங்களில் சாவினின்று தப்பியும் ஆறாம் திங்களில் உறுவதாகிய விரிவினால் தினவு மிகுதியால் உளதாகும் துன்பத்தினின்று தப்பியும், ஏழாம் திங்களில் தசைத் திரளாகப் புவியில் வந்து விழுவதினின்று தப்பியும் எட்டாம் திங்களில் வளர்ச்சிக் கூடுதலால் வரும் துன்பத்திலிருந்து உய்ந்தும் ஒன்பதாம் திங்களில் வெளிவருதற்கான துன்பத்தினின்று தப்பி யும் பொருந்திய பத்தாம் திங்களில் பிறத்தல் காரணமாகத் தாயும் தானும் படும் துன்பக் கடலில் படும் துயரத்தினின்று பிழைத்தும்,

காலை மலமொடு கடும்பகல் பசி நிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற், செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கிஉள் மதர்த்துக்
கச்சுஅற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்து இடை வருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்குஇடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறுஎனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குரவு என்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பல்துறை பிழைத்தும்

'' தெய்வம் என்பதோர் சித்தம்உண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சக்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின —
ஆத்தம் ஆனார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறினர் —
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும் —
விரத மேபரம் ஆக,வே தியரும்
சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர் —
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர் —
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதம் சுழித்துஅடித்து ஆர்த்து
உலோகா யதன்என்னும் ஒண்திறல் பாம்பின்
கலா பேதத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை எனைப்பல ஓதியும்

ஆண்டாண்டு ஆக வளர்ச்சி அடைந்த சமயம், நெருக்குதலும் அழுத்துதலும் முதலிய எத்தனையோ பல துன்பங்களினின்று பிழைத்தும், காலைக் கடன் நண்பகல் பசி இரவுத் துயில் போக்குவரவு ஆகிய பயணம் ஆகியவற்றால் வரும் தீங்குகளினின்று தப்பியும்,

கரிய கூந்தலும் சிவந்த வாயும் வெண்ணிறப் பற்களும் மழைக்காலத்து மகிழும் மயில் கண்டு அடங்குதற்கான மென்மையும், நெருக்கமாக உள்ளே மதர்த்துக் கச்சும் கிழிய நிமிர்ந்து ஒளிகொண்டு முன்னே பருத்து அதனால் சுமை தாங்க முடியாது இடை மெலிந்து வருந்துமாறு ஓங்கிப் பக்கத்தும் பரவி ஈர்க்கும் இடையே புக. முடியாவாறு உள்ள இனிமையான தனங்களும் உடைய மாதர்தம் பார்வையாகிய கவர்ச்சிக் கொள்ளையினின்று தப்பியும், பித்துப் பிடித்தாற் போல வெறி கொண்டு அலையும் உலகமக்கள் நாடும் பெருந்துறைப்பரப்புகளுள் மதயானைபோன்ற பேராசைகளினின்று தப்பியும், கல்வி என்று சொல்லப்படும் பலவாகிய கடலினின்று தப்பியும், செல்வம் என்னும் தொல்லையினின்று தப்பியும்; வறுமை என்று கூறப்படும் பழங்காலம் முதலாக வரும் நஞ்சினின்று தப்பியும் சிறிய இலக்குகளைக் கொண்ட முயற்சிகளாகிய பல துறை ஈடுபாடுகளினின்று பிழைத்தும்

தெய்வம் என்று சிறப்பித்துக் கூறப் படுவதாகிய ஒன்று உளது என்று உறுதி உண்டாகியதும், வெறுப்பில்லாததாகிய ஒரு பொருள் ஆன அதன்மேல் நாட்டம் உண்டானதும்,

ஆறு கோடி என்னும் எண்ணிக்கையுள்ள (மிகப் பலவாய அல்லது காமம் வெகுளி உலோபம் மயக்கம் செருக்கு பொறாமை என்ற ஆறின் பெருக்கமான) மாயா சக்திகள் வெவ்வேறு ஆகிய தம் வித்தைகளைக் காட்டத் தொடங்கின. அன்பு நண்பர்களும் அண்டை அயலாரும் கூடி இறை நாட்டத்தை விடுமாறு நாத்தழும்பு ஏறுமளவு இறையின்மை உரைத்தனர்.

உறவினர் ஆகிய தொன்று தொட்டு வரும் பழைய பசுக் கூட்டங்கள் தொடர்ந்து அழைத்து மிகவும் பதற்றம் கொண்டனர். விரதங்கள் ஆகிய சடங்கு முறைகளே மேலானவை என்று வேதியர்கள் சாத்திரங்களை எடுத்துக் காட்டினார்கள். பலவாகிய சமயங்களைச் சார்ந்துள்ளோர் தத்தம் கொள்கைகளே வீடு பேற்றுக்குப் பொருந்தியிருப்பன என்று அரற்றிப் போரிட்டனர்.

### ஆசிரியப் பெருமானை உறுதியாக பற்றிக் கொள்ளுதல்

தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழல்அது கண்ட மெழுகுஅது போலத்
தொழுதுளம் உருகி அழுதுஉடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதுஎனும்
படியே ஆகிநல் இடையறா அன்பில்
பசுமரத்து ஆணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடல்என மறுகி
அகம் குழைந்து அனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூண் அது வாகக் கோணுதல் இன்றிச்
சதுர்இழந்து அறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசயம் ஆகக்
கற்றா மனம்எனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமை என்று இகழாதே திருவடி இணையைப்
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் ஆகி முனியாது அத்திசை
என்புநைந்து உருகி நெக்குநெக்கு ஏங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி 'நாத' என்று அரற்றி
உரைதடு மாறி உரோமம் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி!

### போற்றிப் போற்றி வணங்கி மகிழ்தல்

மெய்தரு வேதியன் ஆகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி

(வாத) வலிமையுள்ள மாயா வாதம் என்ற பெருங் காற்று சுழன்று அடித்து ஆரவாரித்தது. உலகாயதம் என்னும் பளபளப்பான பாம்பின் மாறுமாறான பிரிவுகளாகிய கொடு நஞ்சு வந்ததும் அதனால் பெரிய மாயைகள் எத்தனையோ வந்து சூழ்ந்தன.

முற்கூறப்பட்ட காரணங்களால் நெறி தவறாமலும் தாம் மேற்கொண்ட இறையன்பின் வழுவாமலும் சலிப்பு அடையாம லும் பற்றி நின்று நெருப்பை நெருங்கிய மெழுகு போல் உள்ளம் உருகி வணங்கி அழுது உடல் நடுங்கி இன்பப் பெருக்கால் ஆடியும் உரத்துக் கூவியும் பாடியும் வழிபட்டும்,

பற்றுக் குறடும் பேதையும் தாம் பிடித்ததை விடாமை போல இறையுணர்வை இறுகப் பற்றியவாறு இடைவிடாமல் கடவுளன்பில் பசுமரத்தில் அறையப்பட்ட ஆணி போல் ஆழ்ந்து பதிந்து உருக்கம் மிக்குக் கடல் அலைபோல் அதிலேயே மறுகி,

நெஞ்சம் குழைய அதற்கு ஏற்ப உடல் அசைய அது கண்டு உலக மக்கள் பேய் என்று தம்மை எள்ளி நகைக்க வெட்கம் துறந்து, நாட்டு மக்கள் உரைக்கும் வசைமொழிகளை வெறுப் பின்றி அணிகலன் ஆக ஏற்று, மனம் கோணாமல், தம் திறமை என்பதை இழந்து, மெய்யறிவு பெறல்வேண்டும் என்ற வேண வாக் கொண்டு, தாம் அடைய வேண்டிய வீடுபேற்றை உயர் விந்தை என்று கொண்டு,

கன்றினை ஈன்ற பசுவின் உள்ளம் போலக் கதறியும் விரைந் தும் சிவப்பெரும்பொருள் அல்லது வேறு ஒரு தெய்வத்தைக் கன விலும் கருதாது, அடைதற்கு அரிய மேம்பட்ட ஒருவன் புவி யினில் வந்து ஆசிரிய வடிவம் கொண்டு அருள் புரிந்த பெருமை யை அஃது எளிதில் கிடைத்தமையால் எளிதானது என்று புறக் கணிப்பாக இராமல்

அவன் திருவடி இணையை ஒரு வடிவத்தை விட்டு நீங் காத நிழல்போல

முன்னுள ஆசானுக்குத் தான் பின்னிலை நின்று சலிப்பின்றி

அவர் எழுந்தருளிய திசை நோக்கி எலும்பு தேய்ந்து உருகவும் மனம் நெகிழ்ந்து வருந்தியும் இறையன்பு என்ற ஆறு பெருகி இருகரையும் புரண்டுஓட நல்ல ஐம்புலன்களும் ஒன்றாகித் ''தலைவனே'' என்று ஓலம் இட்டுச் சொல் தடுமாற, மெய்ம் மயிர் சிலிர்க்க, கையாகிய மலர் குவித்து நெஞ்சம் ஆகிய மலர் விரியக் கண்கள் உவகை மிகுதியால் சிறு நீர்த்துளிகள் பனிப்ப

ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக்கு ஆரமுது ஆனாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னார் உருவ விகிர்தா போற்றி
கல்நார் உரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக்கு அருளாய் போற்றி

படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி
தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி

உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையோன் அடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க்கு அரிய மருந்தே போற்றி
ஏனோர்க்கு எளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மேஅருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி

நிலை மாறாத அன்பினை நாள் தோறும் செழிக்கச் செய்வோரைத் தாயைப்போல நின்றுவளர்த்தனை, உனக்கு வணக்கம்!

மெய்ப்பொருளை அருள வல்ல மறையவன் ஆக வடிவு கொண்டு தோன்றி இருவினைகளும் கெடுமாறு கைகொடுத்து உதவ வல்ல கடவுளே! பொன் வண்ணமான மதுரை மாநகரின் மன்னவனே வணக்கம். கூடல் திருக்கோயிலில் விளங்கும் நல்ல நிறமான மாணிக்கமே வணக்கம். அழகிய தில்லைச் சிற்றம்பலத்தில் கூத்து இயற்றுவோனே வணக்கம்.

இன்று அடியேற்குக் கிடைத்த அரிய அமுதம் ஆனவனே வணக்கம். மூப்பின்றி ஒரே தன்மையாயிருக்கும் நான்மறைக்கும் முதல்வனே, காளை வடிவு பொறித்த வெற்றிக் கொடி உடைய சிவபெருமானே வணக்கம், ஒளிபொருந்திய வேறுபட்ட வடிவுகள் எடுப்பவனே வணக்கம். கல்லில் நார் உரித்தாற் போல என் கடிய நெஞ்சைக் கனிவித்த கனியானவனே, வணக்கம். பொற்குன்று போன்றவனே என்னைக் காப்பாயாக, உனக்கு வணக்கம். ஐயோ! என்று இரங்கி எனக்கு அருள்வாயாக உனக்கு வணக்கம்.

யாவற்றையும் படைத்துக் காத்தும் நீக்கியும் மறைத்தும் அருளியும் தொழில் நிகழ்த்துவோனே வணக்கம். துன்பங்களைப் போக்கும் எம்தந்தையே வணக்கம். எல்லாம் உடையானே போற்றி. என்றும் இறுக்க வல்லவனே போற்றி. ஒளியுள்ள பளிங்குத் தொகுதியே போற்றி. அரசனே போற்றி ஆருயிர் மருந்தே வணக்கம். மணம் உள்ள திருவடிகளை உடைய, வெவ்வேறு இயல்பினனே. வணக்கம் மறைப்புக்கு இலக்காகிக் கிடக்கும் உயிர்களை உண்மை உணர வைக்கும் வேதிப்பைச் செய்பவனே! வணக்கம்.இயல்பாகவே, மாசு அணுகப் பெறாதவனே வணக்கம். முதற்பொருளே வணக்கம்.மெய்யறிவே வணக்கம். உயர்வழிசேர்ப்பாய் வணக்கம். கனிபோற் சுவையுடையானே வணக்கம். கங்கை ஆற்றைச்செஞ்சடையில் வைத்த நம்பிக்கைப் பொருளே போற்றி.

எம்மை ஆட்கொண்டவா வணக்கம். மெய்யணர்வுப் பொருளே வணக்கம். தாழ்ந்தவன் என்னை அடியனாகக் கண்டு கொண்டாய் வணக்கம். ஐயனே வணக்கம். அணுவினுள் இருப்போனே வணக்கம். சிவத்தை அருளும் பெருமான் வணக்கம். தலைவனே வணக்கம். வணங்குதற்கு உரிய வடிவே போற்றி. எண் வகைக் குணத்தின் நிலையமே போற்றி. வீட்டுநெறியைக் காட்டுவோனே வணக்கம். நினைவெலாம் உறைவோனே வணக்கம். தேவர்கள் அடைதற்கு அரிய அமுதமே போற்றி.

வாழ்வே போற்றிஎன் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர்வு இறந்த ஒருவ போற்றி
விரிகடல் உலகின் விளைவே போற்றி
அருமையில் எளிய அழகே போற்றி
கருமுகில் ஆகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருள் மலையே போற்றி
என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பம் துடைப்பாய் போற்றி
அழிவிலா ஆனந்த வாரி போற்றி
அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி
முழுவதும் இறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத்து அமரர் தாயே போற்றி

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி

அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி
கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி
நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி
இடைமருது உறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி

மற்றை மானுடர் அடைதற்கு எளியவனே வணக்கம். இறைவனே வணக்கம். ஆட் கொள்ளப்பட்டவர் தம் இருபத்தொரு தலை முறையினரான உற்றார் உறவினர்களும், மாறுபட்ட துன்பத் தைத் தரும் நரகங்களில் ஆழ்ந்து போகாமல் அருள்புரிகின்ற அரசனே, உனக்கு வணக்கம்,

மெய்யடியாரைத் தன் நண்பராகக் கருதும் தோழனே வணக்கம். நீங்குதல் இல்லாத் துணைவனே, வணக்கம்.

அடியார்க்கு வாழ்க்கை இலக்காக இருப்போனே வணக்கம்.அடி யேனுக்குப் புதைபொருளாக இருப்போனே வணக்கம். வீடுபேறாக இருப்போனே வணக்கம். உலகின் முதற்பொருளே வணக்கம். தந்தையே போற்றி அழுக்குகளை அழிப்போனே வணக்கம்.சொல் லாலும் மனஉணர்வாலும் அகப்படுத்த முடியாத ஒப்பற்றவனே வணக்கம். பரந்த கடல் சூழ்ந்த நில உலகின் வாழ்வின் பயனாக உள்ளவனே வணக்கம். மிக அரியதாம் நிலையில் இருந்தும் எளி வந்து உதவும் மெய் அழகே வணக்கம், சூல் கொண்ட முகில் போல் அருள் மழைபொழியும் கண்களை உடையவனே வணக்கம்.

நிலைபெற்ற மேலாம் அருள்வடிவ மலையே வணக்கம். அடியேனையும் ஒரு பொருள் ஆக்கி உன் பெருமை மிக்க திரு வடிகளை என் தலைமேல் வைத்த வீரனே வணக்கம். தொழுத கையினரது துன்பத்தை நீக்குவோனே வணக்கம். நீக்கம் இல்லாப் பேரின்பக் கடலே வணக்கம். இறப்பு பிறப்புகள் இல்லாதவனே வணக்கம்.யாவும்கடந்த மூத்தபொருளே வணக்கம். மான் போன்ற விழிகளை உடைய உமையம்மையின் தலைவனே! வணக்கம். வானுறையும் தேவர்களுக்குத் தாயாக விளங்குபவனே வணக்கம்.

நிலன் ஆகிய பூதத்தில் நாற்றம் சுவை ஒளி ஊறு ஓசை யாகிய ஐந்தாகப் பரந்து நிற்பவனே வணக்கம். தண்ணீரில் சுவை ஒளி ஊறு ஓசையாம் நான்கு பண்புகளாக இருப்பவனே வணக்கம். நெருப்பில் சுவை ஒளி ஊறாக விளங்குபவனே வணக்கம். காற்றில் ஊறு ஓசை என்று இரண்டு பண்புகளாக மகிழ்ந்து இருப்பவனே வணக்கம். வான் ஆகிய பூதத்தில் ஓசை யாகிய ஒரு பொருளாக அமைந்திருப்பவனே வணக்கம்.

அன்பினால் உள்ளம் கனிவாராகிய மெய்யடியார் தம் உள்ளிடத்து ஊறும் அமுதமாக இருப்பவனே! வணக்கம். அன்பர் அல்லாத தேவர்கட்குக் கனவிலும் காண்பதற்கு அரியவனே! வணக்கம். திருவிடை மருதூரில் எழுந்தருளியிருக்கும் எம

ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலைஎம் அண்ணா போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி
ஏகம் பத்து உறை எந்தாய் போற்றி
பாகம் பெண்உரு ஆனாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றுஓர் பற்றுஇங்கு அறியேன் போற்றி
குற்றா லத்துஎம் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத்து அழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க்கு அருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழ் இரு மூவர்க்கு
அத்திக்கு அருளிய அரசே போற்றி
தென்னாடு உடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக்கு அருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி
களம்கொளக் கருத அருளாய் போற்றி

அஞ்சேல் என்றுஇங்கு அருளாய் போற்றி
நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி

தந்தையே! வணக்கம் கங்கை ஆற்றைச் சடையிலே தாங்கின வனே! வணக்கம். திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் அரசனே! வணக்கம். சிறப்பு அமைந்த திருவையாற்றில் எழுந்தருளியிருக்கும் இறைவனே! வணக்கம். திருவண்ணாமலை வாழும் அண்ணலே! வணக்கம். கண் நிறைந்த அமுதமயமான கடல் போன்றவனே! வணக்கம்.

திருவேகம்பத்தில் தங்கியுள்ள எம் தந்தையே! வணக்கம். இடப் பாகத்தில் பெண் வடிவம் கொண்டவனே வணக்கம். திருப் பராய்த் துறையில் பொருந்திய மேலாம் பெருமானே! வணக்கம். திருச் சிராப்பள்ளியில் வீற்றிருக்கும் சிவபெருமானே வணக்கம்.

நின்னை அன்றி இங்கு வேறு பற்றுக் கோடு அடியேன் அறியேன் வணக்கம். திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள கூத்தப் பெருமானே வணக்கம்.

கோகழியில் விரும்பி அமர்ந்த மன்னவனே வணக்கம். ஈங்கோய் மலையில் எழுந்தருளிய எம் தந்தையே வணக்கம். சீர் மிக்க திருப் பழனத்து அழகனே வணக்கம். திருக் கடம்பூரில் அமர்ந்த, இயல்பாகத் தோன்றியவனே, வணக்கம்.

தன்னை அடைந்தோர்க்கு அருள்புரியும் அப்பனே, வணக் கம், இத்தி (கல்லால) மரத்தின் கீழ் இயக்கிமார் அறுவர்க்கு அருளியதோடு [மதுரையில்] வெள்ளையானைக்கு அருளிய அரசே வணக்கம். தொன்னாட்டைப் பழைய இருப்பிடமாக உடையவனே வணக்கம். எந்நாட்டவர்க்கும் கடவுளாக உள்ள வனே, வணக்கம். பன்றிக்குட்டிக்குப் பால் ஊட்டி அருள்புரிந்தாய் வணக்கம். பெருமையுள்ள கயிலை மலையை உறைவிடமாக உடையவனே வணக்கம். அடியேற்கு நன்னிலை அருளல் வேண்டும் அம்மானே வணக்கம். அடியேனின் அறியாமை இருளானது கெட அருளும் எக்காலத்தும் எங்கும் இறுப்பவனே வணக்கம்.

எளியேன் தனியானவன், தளர்ந்து விட்டேன், காப்பாயாக. நிலையான இடத்தை அடியேன் அடைய நினைந்திருக்க அருள் புரிய வேண்டும் வணக்கம்.

'அஞ்சற்க' என்று எனக்கு ஆறுதல் அருள்வாய், வணக்கம். உயிர்போக்கும் நஞ்சினைச் சாவா மருந்தாக விரும்பி உண்டனை, வணக்கம். தந்தை, வணக்கம். தலைவா வணக்கம். எக்காலத்தும் உள்ளவனே வணக்கம். மாசிலாதவனே வணக்கம். அன்பின் இருப்பிடமே வணக்கம். உயிர்களின் தோற்ற காரணனே வணக்கம். மிகப்பெரும் பொருளே வணக்கம். தலைவனே வணக்கம். மிகவும் அரியவனே வணக்கம். இயல்பாகவே களங்கம்

முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சுஏர் அடியாள் பங்கா போற்றி
அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடர்எம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநாடு உடைய மன்னே போற்றி
கலையார் அரிகே சரியாய் போற்றி

திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத்து அரசே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட்கு அன்பா போற்றி
ஆரா அமுதே அருளே போற்றி
பேரா யிரம்உடைப் பெம்மான் போற்றி
தாளி அறுகின் தாராய் போற்றி
நீள்ஒளி ஆகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக்கு அரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை உய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க்கு அருளினை போற்றி
அலைகடல் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்குஅன்று அருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி

படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுஈறு ஆனாய் போற்றி
நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி

இல்லாதவனே வணக்கம். மறையோர் கோலத்து எழுந்தருளி வந்து வழிகாட்டியவனே வணக்கம். அடியேன் துன்புறுவது முறையோ தாங்க இயலேன் முதல்வா காத்தருள்க. எனக்கு உறவாக உள்ளோனே வணக்கம் உயிரானனே வணக்கம். சிறப்பாம் பொருளே வணக்கம். மங்கலப் பொருளே வணக்கம். வலிமையுள்ளவனே வணக்கம். மணவாளவனே வணக்கம். பஞ்சு அனைய மெல்லடி உடைய உமையவளைப் பாகமாக உடையவனே வணக்கம். எதுவும் இலன் ஆனேன். நாய் அனையேன் அடியேன் துன்புற்றேன். காப்பாயாக. விளங்குகின்ற சுடர் வடிவத்து எம் ஈசனே, வணக்கம். கவைத்தலை என்ற தலத்தில் வந்தமர்ந்த கண் போன்றவனே வணக்கம். குவை என்ற பதியில் மகிழ்ச்சி நிறைய எழுந்தருளிய மன்னவனே வணக்கம். கலை மலிந்த அரிகேசரி என்ற ஊரில் உறைவோனே வணக்கம். மலைநாட்டை உடைய மன்னனே வணக்கம்.

திருக்கழுக்குன்றத்து வீற்றிருக்கும் நிதியமே வணக்கம். மலை சார்ந்த திருப்பூவணத்துச் சிவபெருமானே வணக்கம். அருவாகவும் உருவாகவும் உள்ளவனே வணக்கம். பொருந்திய அருட்குன்றே வணக்கம். நான்காம் நிலையையும் கடந்த யோகச் சுடரே வணக்கம். தெரிதற்கு அரிய, ஆனால் தெளிவாகிய பொருளே வணக்கம். தொளையிடப்படாத முத்தின் ஒளியே வணக்கம். அடிப்பட்டோருக்கு அன்புசெலுத்துவோனே வணக்கம். தெவிட்டாத அமுதே. பரிவே வணக்கம் ஆயிரம் திருப்பெயர் உடைய பெருமானே வணக்கம். தாளிக் கொடி மாலையை அணிந்தவனே வணக்கம். நீண்ட ஒளி வடிவாகத் தோன்றிய கூத்தனே வணக்கம். சந்தனச் சாந்து பூசிய அழகனே வணக்கம். சிந்தனைக்கும் எட்டாத சிவபரம் பொருளே வணக்கம், (இறைவன்) ஆகமங்களை வெளிப்படுத்தருளிய மலையாகிய மகேந்திர வெற்பில் பொருந்தியவனே வணக்கம். யாங்கள் உய்ய அடியராய் ஏற்றுக் கொள்பவனே வணக்கம். புலியின் மடு மானுக்கு உதவ அருள்புரிந்தவனே வணக்கம். அசைகின்ற கடல் மேல் நடந்தவனே வணக்கம். கருங்குருவிக்கு முன்னாளில் அருள் தந்தவனே வணக்கம். வலிய புலக் குறும்புகள் ஒழியத் திருவுளம் கொண்டவனே, வணக்கம்.

நிலத்தின் மிசை நெருங்கி உறவாடிய தோற்றம் உடையவனே வணக்கம். யாவற்றுக்கும் தொடக்கமும் இடையும் முடிவுமாக இருப்பவனே, வணக்கம். துன்ப நரகிலோ இன்ப சுவர்க்கத்திலோ அன்றி நானிலத்திலோ செல்லாமல் பாண்டியன் வீடுபேறு

ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத்து அரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன்று அறியா நாயேன
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி

திருச்சிற்றம்பலம்

## ஐந்து
## திருச் சதகம்

திருச் சதகம் என்பது தெய்வ நலம் வாய்ந்த நூறு பாக்களின் தொகுப்பு ஆகும். சதம்—நூறு; சதகம் – நூறு பாக்களைத் தன்னுட் கொண்டது. சதகம் எனப் பெயர் பெற்றன பலவும் நீதி நூல்களாக உள்ளன. திருச்சதகமோ தெய்விக இலக்கியமாகத் தெய்வத் திருவாசகத்தின் சிறப்பான ஒரு பகுதியாக அமைந்துள்ளது இது திருப்பெருந்துறையில் அருளப்பட்டது.

திருச்சதகம் முழுமையும் **பக்தி வைராக்கிய விசித்திரம்** என்ற தலைப்பிலும், அதில் உள்ள பப்பத்துப் பாக்கள் கொண்ட பத்துப் பகுதிகள் முறையே, மய்யுணர்தல், அறிவுறுத்தல்

### *1. மெய்யுணர்தல்*

நில்லாதவற்றை அவற்றின் இயல்பு கண்டு விலக்கி நிலையுதல் உள்ள இறைமையை உணர்வது மெய்யுணர்தல் ஆகும். இப்பதிகம் கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆயது.

எய்துமாறு அருள்புரிந்தவனே வணக்கம். இடையறவு இன்றி யாங்கும் நிறைந்துள்ள ஒப்பற்றவனே வணக்கம். செழித்த மலர்கள் மலிந்த சிவமாநகரின் வேந்தனே வணக்கம். செங்கழு நீர் மாலை அணிந்த பெருமானே வணக்கம். தொழுவாரது மயக்கத்தை அறுத்தெறிபவனே வணக்கம். தகாதது தக்கது எது என்று ஒன்றும் அறியா நாயனையேன் இசைத்த சொன்மாலையைத் தரித்துக்கொண்டு அருள்வாயாக. முப்புரம் [அனைய ஊர் களை] எரித்த பழையோனே வணக்கம். மேலாம் ஒளிவடிவப் பொருள்களுக்கு எல்லாம் மேலோனே வணக்கம். வணக்கம் வணக்கம் பாம்பு அணிந்த பெருமானே! வணக்கம் வணக்கம் பழைய மூல காரணனே! வணக்கம் வணக்கம் உனக்கு வெற்றி உனக்கு வெற்றி வணக்கம். ○

சுட்டறுத்தல், ஆன்ம சுத்தி, கைம்மாறு கொடுத்தல், அனுபோக சுத்தி, காருண்யத்து இரங்கல், ஆனந்தத்து அழுந்தல், ஆனந்த பரவசம், ஆனந்தாதீதம் என்ற தலைப்புகளிலும் வகுக்கப் பட்டுள்ளன. **பக்தி வைராக்கிய விசித்திரம்** என்ற சதகத் தலைப்பிற்குப் பொருள், இறையன்பு காரணமாகப் பிறவற்றில் உளதாம் பற்றினை அகற்றுவதால் உண்டாகும் வியக்கத்தக்க பலவாகிய தன்மைகள் என்பதாம்.

இதில் உள்ள நூறு பாக்களும் முடி முதல் [அந்தாதி] முறையில் அமைந்துள்ளன. 'மெய்' என்று தொடங்கிச் சதக மானது 'மெய்யனே' என்று வட்டித்து (மண்டலித்து) முடிகிறது. ○

திருச்சிற்றம்பலம்

### இறைவா, என்னைக் கண்டுகொள்

1. மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன்விரை யார்கழற்குஎன்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப்'போற்றி
சயசய போற்றி' என்னும்
கைதான் நெகிழ விடேன்உடை
யாய்! என்னைக் கண்டுகொள்ளே!

### பிற தெய்வம் நினைக்கமாட்டேன்

2. கொள்ளேன் புரந்தரன் மால்அயன்
வாழ்வு, குடிகெடினும்
நள்ளேன் நினதுஅடி யாரொடுஅல்
லால், நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே
இருக்கப் பெறின் இறைவா !
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்
வாது எங்கள் உத்தமனே !

### பேரின்ப மிதப்பில் உலகியல் ஒழிவு என்றோ?

3. உத்தமன் அத்தன் உடையான்
அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு ' மால் இவன் '
என்ன மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட
ஊரூர் திரிந்தெவரும்
தத்தம் மனத்தன பேச எஞ்
ஞான்றுகொல் சாவதுவே !

### எம்பிரானே ஒப்பற்ற ஒரே இறைவன்

4. சாவமுன் னாள்தக்கன் வேள்வித்
தகர்தின்று நஞ்சம்அஞ்சி
'ஆவ!எந் தாய்!' என்று அவிதா
இடுநம் மவரவரே

உடையவனே! என் உடல் புளகாங்கிதம் கொண்டு மிக நடுங்கி, மணம் பொருந்திய உன் திருவடியில் கைகூப்பிக் கண்ணீர் ததும்பி உள்ளம் வெதும்பி, பொய் நீங்கிவிட உனக்கு "வணக்கம் வெல்க வெல்க வணக்கம்" என்று உரைப்பேன். இவ் வாறான ஒழுக்கத்தை [மன மொழி மெய்களில்] தளர விடேன். எளியேனைக் கண்டுகொள். உன் அடியவனாக ஏற்றுக்கொள்.

இறைவா! இந்திரன் மால் அயன் ஆகியோரின் வளவாழ்வு வாய்ப்பினும் அதனை ஏற்றுக் கொள்ள மாட்டேன். உன் அடியாரோடு அன்றி மற்றவரோடு நட்புக் கொள்ள மாட்டேன்.

உன் திருவருளால் இருக்கப் பெற்றால் நரகம் புக நேர்ந் தாலும் அதனை இகழ மாட்டேன்.

எங்கள் உயர்ந்தோனே! உன்னை அல்லாது வேறு கடவு ளரைக் கருதமாட்டேன்

மேலோனும் தந்தையும் எம்மை உடையோனும் ஆகிய இறைவனின் திருவடியையே நினைந்து உருகிப் பேரின்பக் களிப்பு ஏற,

பல சிவ தலங்களிலும் சுற்றி அலைந்து என் மனத்திற்கு இசைந்தவற்றைச் சொல்ல,

'இவன் மயங்கினான்' என்று அவரவர் தத்தம் மனத்திற் பட்டன பட்டனவற்றைக் கூற அடியேன் இவ்வுலகத் தொடர் பிணின்றும் ஒழிதல் எப்பொழுதோ?

தக்கன் என்பவன் செய்த வேள்வியில் இட்ட ஆட்டுக்கிடா இறைச்சியைத் தின்றவர்கள் [அதன் பின் வீரபத்திரர் தண்டிக்க வர] சாவதற்கு அஞ்சியும் பாற்கடலில் நஞ்சு தோன்றிய போது சாவதற்கு அஞ்சியும்,

'ஐயோ எம் தந்தையே, காப்பாற்றுவீர்' என்று முறை யிடும் நம்மவராகிய அத்தேவர்களே எம்பெருமானாகிய சிவ பெருமானொடு தம்மையும் சேர்த்து மூவராக உள்ளோம் என்று நினைத்து விண்ணுலகை ஆண்டு மண்ணுலகில் பெரிய தேவர் என்று செருக்கித் திரிவார்கள். இஃது என்ன பாவமோ?

மூவர்என் றேஎம் பிரானொடும்
எண்ணிவிண் ணாண்டுமண்மேல்
தேவர்என் றேஇறு மாந்தென்ன
பாவம், திரிதவரே!

**உன் திருவடி பணியும் பிறப்பே வேண்டும்**

5. தவமே புரிந்திலன் தண்மலர்
இட்டுமுட் டாது இறைஞ்சேன்
அவமே பிறந்த அருவினை
யேனுக்கு அன்பருள் ளாம்
சிவமே பெறுந்திரு எய்திற்றி
லேன்நின் திருவடிக்காம்
பவமே அருளுகண் டாய்அடி
யேற்குஎம் பரம்பரனே!

**அன்பினை இடையறாது அருளுவாயாக!**

6. பரந்துபல் ஆய்மலர் இட்டுமு
டாது அடியே இறைஞ்சி
இரந்தஎல் லாம் எமக் கேபெற
லாம் என்னும் அன்பருள்ளம்
கரந்துநில் லாக்கள்வ னே! நின்றன்
வார்கழற்கு அன்பெனக்கு
நிரந்தர மாஅரு ளாய் நின்னை
ஏத்த முழுவதுமே

**அப்பால் இருந்தவன் இப்பால் அலைகிறான்**

7. முழுவதும் கண்டவ னைப்படைத்
தான்முடி சாய்த்துமுன்னாள்
செழுமலர் கொண்டெங்கும் தேடஅப்
பாலன் இப் பால்எம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடகம்
ஆடிக் கதியிலியாய்
உழுவையின் தோலுடுத்து உன்மத்த
மேல்கொண்டு உழிதருமே.

**என் வினை ஒழியும் காலம் எப்போது?**

8. உழிதரு காலும் கனலும்
புனலொடு மண்ணும் விண்ணும்
இழிதரு காலம்எக் காலம்
வருவது வந்ததன்பின்

மிக மேலாம் இறைவா! சிறியேன் தவமே புரியவில்லை உன் திருவடிகளுக்குக் குளிர்ந்த மலர்களை இட்டுக் குறைவிலாது யான் வணங்க வில்லை. பயனின்றிப் பிறந்த, கடத்தற்கு அரிய, தீவினையேன் ஆகிய எளியேன் உனக்கு அன்பரானோரின் உள்ளத்தில் உண்டாகும் பேரின்பம் பெறும் அந்தச் செல்வத்தை அடையவில்லை. இனி நின் திருவடி பணிந்து அடைதற்கான பிறப்பினை அடியேனுக்கு அருளுவாயாக.

பல சிவ தலங்களுக்கும் சென்று, தெரிந்தெடுத்த நல்ல மலர்களைப் பெய்து, குறைவறத் திருவடி வணங்கி, நின்பால் வேண்டிய எல்லாம் தமக்குக் கிடைக்கும் என்று கருதுகிற அன்பர் உள்ளத்தில் ஒளியாத கள்வனே! பெரிய கழல் அணிந்த உன் திருவடிக்கண் செய்யும் அன்பினை முழுதுமாக நின்னை வழி படுதற்கு இடையறாது அடியேனுக்கு அருளுக.

உலகம் முழுவதையும் படைத்த பிரமனைப் படைத்த வனாகிய திருமால் முன்னாளில் தலை வணங்கி; வளமான மலர்கள் கொண்டு எங்கும் தேடவும் அப்பாற் பட்டிருந்த எங்கள் பெருமான் இவ்விடத்தில் பேய்க் குழாத்தோடு சுடு காட்டில் கூத்தாடி, புகலிடம் இல்லாதவனாக, புலித்தோல் உடுத்துக் களிப்பு மீதூர அலைந்து திரிகுவன். இஃதுஎன்னவியப்பு!

உலாவும் காற்றும், மற்றும் உள்ள தீயும் நீரும் நிலனும் வானும ஆகிய பூதங்கள் ஐந்தும் ஒன்றனுள் ஒன்றாக ஒடுங்கும் காலம் வந்த பின்பும் கூத்து இயற்றும் அடிகளை உடைய ஐயனே;

உன் அடியனாகிய யான் செய்த கொடிய வினைகளை ஒழிக்கும் கால தத்துவமும் ஆகி, அவ்வினைகள் பற்ற வராது தடுத்து எம்மை எல்லாம் காப்பவனே!

அங்ஙனம் ஆகிய பூதங்கள் ஒடுங்கும் காலம் எப்பொழுது?

உழிதரு கால் அத்த! உன் அடி
யேன்செய்த வல்வினையைச்
கழிதரு காலமும் ஆய்அவை
காத்தெம்மைக் காப்பவனே!

**அவனது இயல்பு இது என்று உலகம் இயம்புக**

9. பவன்எம் பிரான்பனி மாமதிக்
கண்ணிவிண் ணோர்பெருமான்
சிவன்எம் பிரான்என்னை ஆண்டுகொண்
டான்எம் சிறுமைகண்டும்
அவன்எம் பிரான்என்ன நான்அடி
யேன் என்ன இப்பரிசே
புவன்எம் பிரான்தெரி யும்பரிசு
ஆவது இயம்புகவே

**நீ செய்த இக்கூத்து வேடிக்கையானதே!**

10. புகவே தகேன் உனக்கு அன்பருள்
யான்என் பொல் லாமணியே!
தகவே என்ன உனக்கு ஆட்கொண்ட
தன்மைஎப் புன்மையரை
மிகவே உயர்த்திவிண் ணோரைப்
பணித்திஅண் ணாஅமுதே!
நகவே தகும்எம் பிரான்! என்னை
நீசெய்த நாடகமே!

## உ. அறிவுறுத்தல்

திருவருட் பேற்றுக்கு உதவாத தன் மனத்தை [எட்டுப் பாக்களில்] மறைமுகமாகவும் [இரண்டு பாக்களில்] நேரிடையாகவும் அறிவுறுத்தல் தரவு கொச்சகக் கலிப்பாக்கள்

**நடித்து விரைதல்**

11. நாடகத்தின் உன்னடியார்
போல்நடித்து நான்நடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே!
இடையறா அன்பு உனக்கு என்
ஊடகத்தே நின்றுருகத்
தந்தருள்எம் உடையானே!

யாவும் தோன்றக் காரணன் ஆன எம்பெருமான் குளிர்ந்த பெருமை பொருந்திய பிறை முடி மாலை அணிந்தவன், தேவர் கோமான், பேரின்பமானவன், அவன் என்னை ஆண்டவனாக, யான் அடியவனாக என் சிறுமை அறிந்தும் ஆட்கொண்டான்.

அவன் எம் வள்ளல். யான் அடியேன். இந்த இயல்பே சுயம்புவான அவனது இயல்பு என்று உலகம் இயம்புமாக!

துளைப்படாத என் முழுமணியே! நின் அன்பர் குழாத்துள் புகுதற்கு நான் தகுதியில்லாதவன். அவ்வாறு இருக்க என்னைநீ ஆட்கொண்டமை உனக்குப் பொருந்துமா? எத்தகைய இழிந் தோரையும் நீ மிக உயரச் செய்கிறாய்; மேலிருக்கும் தேவரைத் தாழச் செய்கிறாய்.

பெறற்கு அரிய அமிழ்தே! எம்பெருமானே! நீ இயற்றிய இக் கூத்து இருந்தவாறு என்னே! இது வேடிக்கையானதே!

எம்மை ஆளாக உடைய பெருமானே! கூத்தில் உன் அடியவர் வேடம் போட்டு நடிப்பவர் போல் அடியேன் உலகில் நடித்து இடையே வீட்டு நிலையில் புகுவதற்கு மிக அதிகம் விரைவு கொள்கிறேன்

பொன் நிலத்தில் சிறப்பாக அமைந்துள்ள மாணிக்கக் குன்று போன்று இருப்பவனே! உன்பால் இடையறாத அன்பு, அடியேனின் உள்ளத்தின் ஊடே நிலைநிற்கவும் அதனால் உள்ளம் உருகவும் உதவி அருள்வாயாக!

**உன் அருள்பெறும் நாள் என்று வரும்?**

12. யான் ஏதும் பிறப்புஅஞ்சேன்;
இறப்பதனுக்கு என்கடவேன்?
வானேயும் பெறில்வேண்டேன்
மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேன் ஏயும் மலர்க்கொன்றைச்
சிவனே! எம் பெருமான்! எம்
மானே! உன் அருள்பெறுநாள்
என்றுஎன்றே வருந்துவனே!

**அருளமுதம் தராவிடில் நான் என்ன ஆவேன்?**

13. வருந்துவன்நின் மலர்ப்பாதம்
அவை காண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன்
ஏத்தேன்நாத் தழும்புஏறப
பொருந்தியபொற் சிலைகுனித்தாய்!
அருளமுதம் புரியாயேல்
வருந்துவன் அத் தமியேன்மற்று
என்னே நான் ஆமாறே!

**சாமர்த்தியமாக முந்துகிறேன் சாவதற்கு?**

14. ஆமாறுஉன் திருவடிக்கே
அகம்குழையேன் அன்புஉருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான் ! நின் திருக்கோயில்
தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே.

**எல்லாம் நீயே; உன்னை எப்படிப் புகழ்வேன்?**

15. வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனது என்று அவரவரைக் கூத்தாட்டு
வான், ஆகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே!

பிறப்புக்கு நான் சிறிதும் அஞ்ச மாட்டேன்; இறப்புக்கு என்ன செய்யமுடியும்? வான் முழுவதும் கிடைப்பதானாலும் அதனை அடியேன் விரும்பமாட்டேன்.

நிலவுலக ஆட்சியை நான் ஒரு பொருட்டாக நினைத்ததும் இல்லை. தேன் பொருந்திய கொன்றை மலர் சூடிய பேரின்ப வடிவனே! எம் தலைவா! எம் தந்தையே!

உன் அருளைப் பெறுதற்கு உரிய நாள் என்று வரும் என்றே வருந்துகிறேன்.

தாமரை மலர் போன்ற நின் திருவடிகளைக் காணும் பொருட்டு நாய் போன்ற அடியவனாகிய யான் வருந்தியவாறு இருக்கின்றேன். உடலும் உறுப்புகளும் இருந்தும் நல்ல மலர் களைத் தொகுத்து உனக்குச் சாத்தேன். நாவில் தழும்பு உண் டாக வாழ்த்து உரையேன். பொருத்தமாகிய மேரு மலையை வில்லாக வளைத்தவனே!

உன் திருவருளாகிய அமுதத்தை அடியேனுக்குத் தரா விட்டால் அத்தகைய துணையற்ற யான் மிக மிக வருந்துவேன். அடியேன் உய்தற்கு வழி என்ன உளது?

தேவர்க்குத் தலைவனே! எம் பெருமானே! உன் திருவடிக்கு ஆளாகும் வண்ணம் அடியேன் நெஞ்சம் குழையவில்லை. அன்பி னால் உருகவில்லை. மலர்மாலை தொடுத்து வாழ்த்தவில்லை. யான் உன் பெருமைகளைப் பாராட்டி உரையேன். உன் திருக் கோயிலைத் துப்புரவு செய்யேன், மெழுகேன். உவகை மிகுந்து எளியேன் கூத்தாடல் செய்யேன்; ஆனால் திறமையால் உன்னை அடைய முந்துகிறேன். அங்ஙனம் யான் முந்துவது பயனிலாது சாதற் பொருட்டேயாம்!

வான் மண் காற்று ஒளி என்ற எல்லாம் ஆகி, உடல் ஆகி உயிர் ஆகி, உள்பொருளாகவும் இல் பொருளாகவும், எல்லாவற் றுக்கும் முதல்வன் ஆகி, எல்லாரையும் யான் எனது என்று பற்றுக்கள் செருக்குகளால் கூத்தாடச் செய்பவனாகி நிற்கும் உன்னை என்ன சொல்லிப் புகழ்வேன்!

**தேவர் வாழ்த்தும் என் வாழ்த்தும் எதற்காக?**

16. வாழ்த்துவதும் வானவர்கள்
தாம் வாழ்வான், மனம் நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து
தம்மை எல்லாம் தொழவேண்டிச்
சூழ்த்தமது கரம்முரலும்
தாரோயை நாயடியேன்
பாழ்த்த பிறப் பறுத்திடுவான்
யானும் உன்னைப் பரவுவனே.

**உன் திருவடிகளை மேன் மேலும் காண்பாரா?**

17. பரவுவார் இமையோர்கள்
பாடுவன நால்வேதம்
குரவுவார் குழல்மடவாள்
கூறுடையாள் ஒருபாகம்;
விரவுவார் மெய்யன்பின்
அடியார்கள் மேன்மேல்உன்
அரவுவார் கழல் இணைகள்
காண்பாரோ, அரியானே!

**இவ்வாறான நான் உய்யும் வழி யாது ?**

18. அரியானே யாவர்க்கும் !
அம்பரவா ! அம்பலத்துஎம்
பெரியானே ! சிறியேனை
ஆட்கொண்ட பெய்கழற்கீழ்
விரைஆர்ந்த மலர் தூவேன்
வியந்தலறேன் நயந்துருகேன்
தரியேன் நான் சாவேனே !

**காம உருக்கம் வேண்டாம் பாழ்நெஞ்சே !**

19. வேனில்வேள் மலர்க்கணைக்கும்
வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும்
பதைத்துருகும் பாழ்நெஞ்சே!
ஊன்எலாம் நின்றுருகப்
புகுந்தாண்டான் இன்றுபோய்
வான்உளான் காணாய் நீ
மாளாவாழ் கின்றாயே!

வண்டுகள் மொய்த்து ஒலிக்கும் மாலை அணிந்த உன்னைத் தேவர்கள் வாழ்த்துதல், தாம் இனிய நெடுவாழ்வு பெறுதற் பொருட்டே; அவர்கள் மனத்தே உன்னிடம் பணிய வைப்பது தாங்கள் உயர மற்ற உயிர்கள் தங்களைப் பணிய விரும்பியே ஆகும். நாய் போன்ற அடியேன் யானும் உன்னை என் பயனற்ற பிறவித் தளை அறுதற்கு வாழ்த்துவேன்.

மனம் முதலியவற்றால் அறிதற்கு அரியவனே! தேவர்கள் வாழ்த்துவர். நான்கு மறைகளும் உன்னைப் புகழ்ந்து பாடுகின்றன. குராமலர் சூடிய கூந்தலை உடைய இறைவி உன் மேனியில் பாதியைத் தன் இடமாகக் கொண்டிருக்கிறாள். மெய்யன்பு உள்ள அடியார்கள் தம் அன்பில் உன்னோடு கலந்திடுவார்கள். ஆனால் அவர்கள் எல்லாரும், ஒலிக்கும் புகழ் நீண்ட உன் கழலிணைகளை மேன்மேலும் காண்பார்களோ!

யாராலும் பார்த்தற்கு அரியவனே! காண முடியா அறிவு வெளியில் திகழ்பவனே! காணுமாறு தில்லைப் பொதுவில் நடம் புரியும் எங்கள் பெருமானே! சிறுமை உடைய என்னை ஆட்கொண்ட கழல் அணிந்த திருவடிக்கண் மணம் நிறைந்த மலர்களைச் சாத்தி வழிபாடு செய்யேன். வியப்புற்று உரத்துக் கதறேன். அன்பினால் விரும்பி உருக மாட்டேன், இவ்வாறு இருக்கும் நான் உய்யும் வழி யாது? நான் உயிர் தரியேன் இறப்பேன் இறப்பேன்.

இளவேனிலுக்கு அரசாகிய காமன் எய்யும் மலர் அம்புக்கும் வெண் பற்களும் சிவந்த உதடுகளும் கரிய குவளைக் கண்களும் உடைய பெண்டிர் பொருட்டு பதைத்து உருகும் பயனற்ற நெஞ்சமே!

உடம்பு முழுதும் கரைந்து உருகுமாறு உள்ளே புகுந்து ஆண்டருளிய எம் இறைவன் இன்று இங்கிருந்து சென்று உயர் வெளியில் உள்ளான், நீ காண்கிலையா? அங்ஙனம் இருக்க, மாளாது நீ வாழ்கின்றாயே!

**நெஞ்சமே உனக்குச் சொல்கின்றேன்**

20. வாழ்கின் றாய் வாழாத
நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின் றாய் ஆழாமற்
காப்பானை ஏத்தாதே
சூழ்கின் றாய் கேடு உனக்குச்
சொல்கின்றேன் பலகாலும்
வீழ்கின் றாய் நீ அவலக்
கடலாய வெள்ளத்தே

## 3 சுட்டறுத்தல்

பொறிவாயிலாக அறியப்படும் அறிவு சுட்டறிவு ஆகும். அதுவே உலகியல் அறிவு. அதனை ஒழித்தல் சுட்டறுத்தல் எனப்படும். சுட்டறுத்து, சுட்டிறந்து அறியும் மெய்யறிவைப் பெறுதல் இப்பதிகத்தின் கருத்தாக உள்ளது. எண்சீர் விருத்தங்கள்.

**என் நெஞ்சம் கல், கண்கள் மரம்**

21. வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தாழ் உறுபுனலில் கீழ்மேல் ஆகப்
பதைத்துருகும் அவர்நிற்க என்னை ஆண்டாய்க்கு
உள்ளந்தாள் நின்றுச்சி அளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா!
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சம் கல்லாம்
கண்இணையும் மரமாம்தீ வினையினேற்கே.

**நான் இவ்வாறு ஆனது முறையா?**

22. வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
'போது,தான் வினைக்கேடன்' என்பாய்போல
'இனையன் நான்' என்றுன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டுஎம் பிரான்ஆனாய்க்கு இருப்பின் பாவை
அனையநான் பாடேன்நின்று ஆடேன் அந்தோ !
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே! முறையோ, நான் ஆன வாறு?
முடிவறியேன், முதல்அந்தம் ஆயி னானே !

நிலைக்கும் இன்ப வாழ்வில் தலைப்படாமல் நிலையற்ற வாழ்வு வாழ்கிறாய், நெஞ்சமே! வன்மையான வினைகளுள் அகப்பட்டு அழுந்துகின்றாய். அவ்வாறு ஆழ்ந்துவிடாமல் காப்பவனைப் போற்றுதல் செய்யாமல் உனக்கு நீயே தீங்கு தேடிக் கொள்ள நினைக்கிறாய். உனக்குப் பல முறையும் இடித்து உரைத்தேன். அவ்வாறு உரைத்தும் நினையாமல் நீ துன்பம் ஆகிய கடற்பெருக்கில் வீழ்ந்து ஆழ்கிறாய்.

வெள்ளம் தங்கிய விரிந்த சடையை உடையவனே! காளை ஊர்தியனே! வானோர் தலைவனே! என்று அன்பர் ஏத்தக்கேட்டு,

அவ்வளவில் வேட்கை மிக்க மனத்தினராக, பள்ளத்தில் பாயும் மிக்க நீர் போலக் கீழ்மேல் ஆகப் பதைத்து உருகும் உயர் அடியார் நின்று கொண்டிருக்க, அவ்வாறு இல்லாத என்னை ஆளாகக் கொண்ட உன் பொருட்டு, உள்ளங்கால் முதல் உச்சந் தலை வரை என் உடம்பில் உட்புறம் மனம் ஆகி உருகியிருக்க வேண்டும். உடம்பின் வெளிப்புறம் எல்லாம் கண்ணாகி வெள்ளம் போல் கண்ணீர் பொழிந்திருக்க வேண்டும். அவ்வாறு ஆகவில்லை. தந்தையே! தீவினையேனுக்கு நெஞ்சம் கல்லாகவும் கண்கள் மர மாகவும் உள்ளன. என் செய்வேன்!

தோற்றம் இறுதிகளின் காரணம் ஆனவனே! வினை வசத்தில் கிடந்து முடங்கியிருக்கும் என்பால் வந்து உட்புகுந்து நிலை கொண்டு, 'வா, நான் உன் வினைகளைத் தொலைப்பேன்' என்று கூறுவாய் போல, 'நான் இப்படிப் பட்டவன்' என்று உன்னை எனக்கு அறிவித்து ஆட்கொண்டு எனக்குத் தலைவன் ஆகிய உன் பொருட்டு, இரும்பால் செய்யப்பட்ட பாவை போன்ற நான், பாடவில்லை, நின்று ஆடவில்லை அந்தோ! அலறவில்லை, வற்றவில்லை, உயிர் தளரவில்லை; அறிவு மயமான கடவுளே இவ்வாறு நான் ஆனது முறையாகுமோ? இது எவ்வாறு முடியும் என்றும் அறிகிலேனே!

### எவ்வாறு புகழ்ந்து பாராட்டுவேன்?

23. ஆயநான் மறையவனும் நீயே ஆதல்
அறிந்தியான் யாவரினும் கடையன் ஆய
நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டு
'நாதனே! நான் உனக்கோர் அன்பன்' என்பேன்
ஆயினேன், ஆதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தாம் இல்லையே? அன்றி மற்றோர்
பேயனேன்? இதுதான்நின் பெருமை அன்றே!
எம்பெருமான்! என்சொல்லிப் பேசு கேனே?

### அவா மிக்கவனை ஆட்கொண்டாயே?

24. பேசில்தாம் 'ஈசனே எந்தாய் எந்தை
பெருமானே!' என்றென்றே பேசிப் பேசிப்
பூசில்தாம் திருநீறே நிறையப் பூசி
'போற்றி எம் பெருமானே!' என்று பின்றா
நேசத்தால் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே! அவாவெள்ளக் கள்வனேனை
மாசற்ற மணிக்குன்றே! எந்தாய் அந்தோ,
என்னைநீ ஆட்கொண்ட வண்ணம் தானே?

### காப்பாற்றி ஆட்கொண்டாயே!

25. வண்ணம்தான் சேயதன்று வெளிதே அன்(று)அ
னேகன்ஏகன் அணுஅணுவில் இறந்தாய் என்றங்கு
எண்ணம் தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்துமாறு அறியாத எந்தாய்! உன்றன்
வண்ணம்தான் அதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்கள் அவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணம்தான் பிறவாமல் காத்தாட் கொண்டாய்
எம் பெருமான் என்சொல்லிச் சிந்திக் கேனே?

### உன்னைத் தந்தனை!

26. சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்கள் ஆர
வந்துஎனை ஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மால்அமுதப் பெருங்கடலே! மலையே! உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்காடு அனைய மேனித்
தனிச்சுடரே! இரண்டும் இலித் தனியனேற்கே.

கடவுளே ஆராயின் நீயே மேலாம் நான்மறைப் பொருளானவன் ஆதல் அறிந்தும் நான் எல்லார்க்கும் கடைப்பட்ட நாய் போன்றவனாக இருத்தலை அறிந்து வைத்தும்,

நான் உனக்கு அன்பன் என்று (வாயளவிற்) சொல்லிக் கொள்பவன் ஆனேன். அது காரணமாக அடியேனை நீ ஆளாகக் கொண்டாய். இந்தப் பேயனைத் தவிர உனக்கு வேறு அடியார் இல்லையா? இது உன் பெருந்தன்மை அல்லவா? எம் பெருமானே!உன்னை என்ன சொல்லிப் போற்றுவேன்?

தாங்கள் பேசப் புகுந்தால் 'ஈசனே, எம் தந்தையே, எம் தந்தைக்கும் பெருமானே!' என்று பன்முறை சொல்லியும்,

பூசுவதானால் 'எம்பெருமானே, காத்தருள்!' என்று திருநீறே குறைவறப் பூசியும் பின்னடையாத அன்பினால் பிறப்பு இறப்பினைக் கடந்த மெய்யன்பரை ஆட்கொண்டவனே!

வெள்ளம் போன்ற அவாவை மறைத்து வைத்திருக்கும் என்னையும் குற்றமில்லா மாணிக்க மலை போன்றவனே! எந்தையே நீ ஆட்கொண்ட தன்மை தான் என்னே!

எம் பெருமானே! வானவர் கூட்டம் உனது நிறம் சிவப்பன்று, வெள்ளை அன்று; நீ பல்லுயிராக உள்ளவன், தனிமுதல்வனாக உள்ளவன்; அணுவாக அணுவைக் கடந்த மிக நுட்பமாக இருப்பவன் என்று நினைவு தடுமாறி, அறியப் படாதவாறு இருக்கும் எம்தந்தையே! நீ உனது உண்மை வண்ணத்தையும் வடிவத்தையும் காட்டித் தாமரை மலர் போன்ற திருவடிகளையும் காட்டி, வழிதெரியாது கலங்கிய அடியேனுக்கு, உறுதியாக இனிப் பிறவி வராதபடி காப்பாற்றி ஆட்கொண்டாய்! என்ன சொல்லி உன்னை நினைவு கூர்வேன்!

தானே வந்து அடியேனை ஆட்கொண்டு உட்புகுந்த வித்தை உடைய பேரின்ப அமுதப் பெருங்கடலே! மலையே! செந்தாமரைக் காடு போன்ற திருமேனி உடைய ஒப்பற்ற விளக்கே! நாய் போன்ற சிறுமை உடைய எனது நினைவெல்லாம் உனக்கே உரித்தாக்கி, என் கண்கள் இரண்டும் உன் திருவடி மலர்களுக்கு உரிமையாக்கி, வணக்கத்தையும் அதற்கே செய்யுமாறு ஆக்கி, நின் இனிய புகழுக்குச் சொல்லை உரியதாக்கி இம்மை மறுமை இரண்டும் இல்லாத ஆதரவற்ற தனியனுக்கு ஐம்புலன்கள் நுகர்ந்து சிவப்பேரின்பம் எய்த உன்னையே தந்து அருளினை. உன் அருட்பெருக்கு இருந்தவாறு என்னே! என்னே!

**வளமிக்க முத்திக் கரைகாட்டி ஆட்கொண்டாய் !**

27. தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்து எவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன்று இன்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனிஎன்னே உய்யுமாறு என்றென்று எண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே! முதல்அந்தம் இல்லா மல்லல்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்க னேற்கே

**எம் பெருமான் செய்த விந்தை!**

28. கேட்டுஆரும் அறியாதான் கேடுஒன்று இல்லான்
கிளையிலான் கேளாதே எல்லாம் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனஎல்லாம் காட்டிப் பின்னும்
கேளா தனஎல்லாம் கேட்பித்து என்னை
மீட்டேயும் பிறவாமல் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.

**அமுதம் ஊற்றெடுக்க அகம் உருக**

29. விச்சைதான் இதுஒப்பது உண்டோ கேட்கின்
மிகுகாதல் அடியார்தம் அடியன் ஆக்கி
அச்சம்தீர்த் தாட்கொண்டான் அமுதம் ஊறி
அகம்நெகவே புகுந்தாண்டான் அன்புகூர
அச்சன் ஆண் பெண்அலிஆ காசம் ஆகி
ஆரழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சைமா மலர்புரையு மேனி எங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே

**மேன்மேலும் இன்பக்கடலில் திளைத்தாடுவோம்!**

30 தேவர்கோ அறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத்து அழிக்கும் மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத்து எந்தை
யாவர்கோன் என்னையும்வந்து ஆண்டு கொண்டான்,
யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவன்அடியார் அடியா ரோடு
மேன்மேலும் குடைந்தாடி ஆடுவோமே

அறிவுப்பெரும் பொருளே, உதவியின்றித் தனியனாக நான் பிறவிப் பெருங்கடலில் துன்பமாகிய பெரிய அலைகளால் எற்றித் தள்ளப்பட்டுப் பற்றுக்கோடு எதுவும் இன்றி,

பழம் போன்ற சிவந்த வாயினையுடைய மாதர் என்னும் காற்றினால் கலக்கத்துக்கு உள்ளாகிக் காமம் என்கிற பெரிய சுறாவின் வாயில் அகப்பட்டு, இனி உய்யும் வழி என்ன எனப் பலமுறை எண்ணி ஐந்தெழுத்து ஆகிய தெப்பத்தைப் பற்றிக் கொண்டு கிடக்கும் முரடனாகிய எனக்குத் தோற்றமும் இறுதியும் இல்லா வளமிக்க வீடுபேறாகிய கரையைக் காட்டி ஆட் கொண்டாய். நின் அருட் பெருமையை என்னென்பேன் !

யாவராலும் கேட்டு அறியப்படாதவன், கேடு என்பது சிறிதும் இல்லாதவன். சுற்றத் தொடர்பு இல்லாதவன், கேளாமலே எல்லாவற்றையும் கேட்டிருப்பவன் ஆகிய இறைவன், நாட்டு மக்கள் விழித்திருக்கையில் இந்த உலகத்தில் நாய்க்கு இருக்கை இடுவதுபோல இழிதகையேனாகிய எனக்கு, யாராலும் காட்டப் பெறாதன எல்லாவற்றையும் காட்டி, கேட்கப்பெறாதன எல்லாம் கேட்கவைத்து,அடியேன் மறுபடி பிறவாமற்காத்து ஆட்கொண்டு அருள்புரிந்தான். எம்பெருமான் செய்த ஞானக்கூத்து இது.

தந்தையாகவும், அவன் அவள் அது என்றுள்ள உயிர்த் திரளாகவும் அறிவு வெளியாகவும் அரிய ஒளிவடிவாகவும் முடிந்த முடிவாகவும் அதற்கு அப்பாலாகவும் நிலையுதல் உள்ள எம் பெருமான் வெட்சிப்பூப் போன்ற சிவந்த மேனியன் எங்கள் சிவபெருமான் பெருந்தேவன், அவன் மெய்யன்பு மிக்கஅடியார்க்கு என்னை அடியன் ஆக்கினான், தொல்லை வினைகளால் வரும் அச்சத்தை அகற்றி என்னுட் புகுந்தான்.

அமுதம் ஊறிப் பெருக அதனால் ஏன் நெஞ்சம் உருக அன்பு பெருகவும் [என்னுட் புகுந்து] ஆட்கொண்டான். ஆய்ந்து பார்த்தால் இது போன்ற மாயவித்தை வேறு ஒன்றும் இருக்குமோ?

தேவர்களின் அரசனான இந்திரனாலும் அறியப் படாத மாதேவனும், வளம் பொருந்திய உலகங்களை உண்டாக்கிக் காத்து அழிக்கும் மற்றை மூவராகிய அயன் மால் உருத்திரன் ஆகியோர்க்கும் தலைவனாக நிலைபெற்ற முதல்வன், எல்லாமும் தன் வடிவானோன், பாட்டன், இறைவியைத் தன் இடப்பாகத்து உடைய எம் தந்தை, யாவர்க்கும் அரசன் ஆகிய சிவபெருமான் வந்து எளியனாகிய அடியேனையும் ஆண்டுகொண்டான். நாம்

## 4 ஆத்தும சுத்தி

உலகியற் பற்றுகள் உயிரைப் போர்த்து மாசுபடுத்துகின்றன. ஆகவே உயிர் தன் இயல் நிலை பெற, இறை நிலை உணரத் தூய்மை இன்றியமையாது. உயிரின் தூய்மைக்கு உரியவற்றை முதல் ஐந்து பாக்களும் இறைநெருக்கம் அகன்ற விடத்து ஆற்றாமையைப் பின் ஐந்து பாக்களும் தெரிவிக்கின்றன. ஆறு சீர் விருத்தங்கள்.

### மடிந்த நெஞ்சமே உனக்குத் துணையில்லை!

31. ஆடு கின்றிலை கூத்துடை
யான் கழற்கு அன்பிலை என்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதும்
செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின்
றதும் இலை துணையிலி பிணநெஞ்சே!
தேடு கின்றிலை தெருவுதோறு
அலறிலை செய்வதொன்று அறியேனே.

### மாறாடுகிறாயே நெஞ்சமே !

32. அறிவி லாத எனைப்புகுந்து
ஆண்டுகொண் டறிவதை அருளிமேல்
நெறியெ லாம்புலம் ஆக்கிய
எந்தையைப் பந்தனை அறுப்பானைப்
பிறிவி லாதஇன் அருள்கள்பெற்று
இருந்துமா றாடுதி, பிணநெஞ்சே!
கிறியெ லாமிகக் கீழ்ப்படுத்
தாய்கெடுத் தாய்என்னைக் கெடுமாறே !

### மனமே, உன்னை நம்பமாட்டோம் !

33 மாறி நின்றுஎனைக் கெடக்கிடந்
தனையைஎம் மதியிலி மடநெஞ்சே !
தேறு கின்றிலம் இனிஉனைச்
சிக்கெனச் சிவனவன் திரள் தோள்மேல்
நீறு நின்றது கண்டனை
யாயினும் நெக்கிலை இக்காயம்
கீறு கின்றிலை கெடுவதுன்
பரிசது கேட்கவும் நில்லேனே

### மனமே, என்னே உன் அறிவும் பெருமையும்!

3'. கிற்ற வாமன மேகெடு வாய்உடை
யான்அடி நாயேனை
விற்றெ லாமிக ஆள்வதற்குரியவன்
விரைமலர்த் திருப்பாத,

பிறர் எவருக்கும் அடிமையாக இரோம், எதற்கும் சற்றும் அஞ்ச மாட்டோம். அவன் அடியார்க்கு அடியாரோடு கூடினோம். மேலும் மேலும் இன்பப் பெருக்கில் மூழ்கிக் கூத்தாடுவோம்.

செயலற்ற பிணம் போன்ற நெஞ்சமே! பேரின்ப நடம் புரியும் பெருமானின் திருவடிக்கு அன்பு செய்கின்றாயில்லை. அன்பு மிகுந்து ஆடுகின்றாயில்லை. எலும்பு உருகப் பாடுகின்றாயில்லை. பதைப்பதும் செய்யவில்லை. அவ்இறைவனின் திருவடி மலரைத்தலை மேற் சூடுவதும் செய்யவில்லை. அவன் திருவடிகளில் மலர்கள் பெய்வதும் செய்யவில்லை அவன் எங்குளான் என்று தேடுகின்றாயும் இல்லை. ஆகவே துணையில்லை உனக்கு. இந் நிலையில் செய்யத் தக்கது ஒன்றும் அறிகிலனாயுள்ளேன்.

மெய்யறிவு இல்லாத என்னிடம் வலிய வந்து ஆண்டு கொண்டு மெய்யறிவைப் புகட்டி மேற்செலும் நெறிகளை எல்லாம் விளங்கச் செய்த எம் தந்தையை, பிணிப்புகளை அறுத்து விடுபவனை, நீக்கமற இனிய திருவருட்பேறுகள் எளிதாகப் பெற்றிருந்தும் நீ மாறுபட நடக்கிறாய், இழிந்த நெஞ்சமே! பொய் நடை எல்லாம் மேலோங்கி நிற்க யான் கெடுமாறு என்னைத் தாழ்வுபடுத்திக் கெடுத்தாய்.

யான் கூறும் அறிரையை மதித்து நடக்கும் அறிவு இலாத மடநெஞ்சே! எனக்கு எதிராகி நின்று, நான் கெட்டுப்போக என்னிடம் கிடந்த உன்னை இனி உறுதியாக நம்பமாட்டோம்.

சிவபெருமானாகிய அவ்இறைவனின் திரண்ட தோள்களின் மேல் அணிந்த திருநீறு நிலைத்து விளங்குவதைப் பார்த்தாய். ஆயினும் நெகிழ்ந்தாயில்லை. உடலைக் கிழித்துக் கொள்ளவில்லை. உன் தன்மை கெடுவதற்கு உரியது. அதைக் கேட்கவும் எனக்கு ஆற்றல் இல்லை.

மனமே! நம்மை எல்லாம் உடையவன், அடிமையாகிய நாய் போன்ற என்னை விற்று எல்லா நன்மைகளும் உண்டாகுமாறு ஆண்டு கொள்வதற்கு உரியவன் ஆகிய பெருமானின் மணம் தங்கும் தாமரை மலர்போன்ற திருவடிகளாகிய முற்றா இளந் தளிரினின்று நீங்கியிருந்து, நீ நுகர்ந்தன யாவும் இல்லாது

முற்றி லாஇளந் தளிர்பிரிந் திருந்துநீ
உண்டன எல்லாமுன்
அற்ற வாறுநின் அறிவுநின் பெருமையும்
அளவறுக் கில்லேனே

**நெஞ்சே, அவன் இருக்கக் களம் செய்யவில்லையே,**

35 அளவு அறுப்பதற்கு அரியவன்
இமையவர்க்கு; அடியவர்க்கு எளியோன்நம்
களவு அ றுத்துநின்று ஆண்டமை
கருத்தினுள் கசிந்துணர்ந் திருந்தேயும்
உளக றுத்துஉனை நினைந்துளம்
பெருங்களன் செய்ததும் இலை நெஞ்சே!
பளக றுத்துடை யான்கழல்
பணிந்திலை பரகதி புகுவானே

**இல்லை என்றால் என்ன செய்வேன்?**

36. புகுவ தாவதும் போதரவு
இல்லதும் பொன்னகர் புகப்போவதற்கு
உகுவ தாவதும் எந்தைஎம்
பிரான்என்னை ஆண்டவன் கழற்குஅன்பு
நெகுவ தாவதும் நித்தலும்
அமுதொடு தேனொடு பால்கட்டி
மிகுவ தாவதும் இன்றெனின்
மற்றிதற்கு என்செய்வேன் வினையேனே?

**பிரிந்திருப்பது இறைவன் கருத்து அன்று**

37. வினைஎன் போல்உடை யார்பிறர்
ஆர்? உடை யான்அடி நாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது
திருக்குறிப் பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந்
திருந்துநான் முட்டிலேன் தலைகீறேன்
இனையன் பாவனை இரும்பு, கல்
மனம், செவி இன்னதென்று அறியேனே

**நெடுங்காலமாக நான் நெருங்கவில்லை**

38. ஏனை யாவரும் எய்திடல்
உற்றுமற்று இன்னதென்று அறியாத
தேனை ஆனெயைக் கரும்பின்இன்
தேறலைச் சிவனைஎன் சிவலோகக்

ஒழிந்த தன்மையையும் அதனை அறியும் உன் (சிறிய) அறிவையும் அதனால் உன் (போலிப்) பெருமையையும் அளவிட்டு வரையறுக்கும் ஆற்றல் உடையேன் அல்லேன். ஆதலால் நீ செய்தவாறு என்னே; நீ கெடுவாயாக!

நெஞ்சே! இத்தகையவன் என்று வரையறுத்து உணர அமரர்க்கு இயலாத நிலையினன்; அடியவர்க்கு உணர்தற்கு எளியவன்.

நம் வஞ்சத்தை ஒழித்து நிலைபெற்று அவன் ஆண்டருளியதைக் கருத்தினுள் வைத்து உருகி உணர்ந்திருந்தும்

வீடுபேறு எய்தற் பொருட்டு, பொய்யாக உள்ளவற்றை வெறுத்து உன்னை நினைந்து உன் உள்ளத்தை அவன் இருப்பதற்கான பெரிய இடமாக நீ செய்யவும் இல்லை. குற்றங்களை அழித்து, உன்னை உடையவனின் திருவடிகளை நீ பணியவும் இல்லையே; என்னே உன் நிலை இருந்தவாறு!

அடைதற்கு உரியதும் அடைந்தபின் மறுபடி மீள்வதற்கு வழியில்லாததும் ஆகிய அழகிய சிவபுரத்திற்குச் செல்லுதற்குத் தடையான பற்றுக்கள் களையப்பெறுவதும், எம் தந்தையும் தலைவனும் என்னை ஆட்கொண்டவனும் ஆகிய இறைவனின் திருவடிக்கு அன்பு செய்து உருகுவதும் எந்நாளும் அமுதம் தேன் பால் கரும்பின் கட்டி ஆகியவற்றின் சுவையில் மிகுந்து இனிப்பு அடைதலும் இல்லை என்றால் தீவினையேன் இதற்கு என்ன செய்வேன்!

என்னைப் போலத் தீவினை உடையவர் வேறு யார் உளர்? அடிமையாகிய நாய் போன்ற என்னைத் தினையளவு இடமோ நேரமோ பிரிந்திருப்பது உடையவனாம் இறைவனின் கருத்து அன்று. அதனால் பெருமானின் திருவடிகளாகிய நல்ல மலர்களை விட்டுப் பிரிந்திருந்தும் அதற்கு வருந்தி யான் தலையை முட்டிக் கொள்ளவில்லை. இத்தகைய நிலையில் இருக்கும் எனது நினைப்பு இரும்பாகவும் மனம் கல்லாகவும் உள்ளன. என்செவி இன்னது என்று சொல்லுதற்குத் தெரியவில்லை.

அன்பு இல்லாத மக்கள் தேவர் முதலிய பலரும் அடைய முயன்றும் மெய்யுணர்வு இன்மையால் இத்தன்மையது என்று அறியாத, ஆனால் எனக்குத் தேனும் ஆவின் நெய்யும் கருப்பஞ்

கோனை மான்அன நோக்கிதன்
　　கூறனைக் குறுகிலேன் நெடுங்காலம்
ஊனை யான்இருந் தோம்புகின்
　　றேன்கெடு வேன்உயிர் ஓயாதே

**அருள் புரிந்த தலைவனைக் காணவில்லையே!**

39. ஓய்வி லாதன உவமனில்
　　இறந்தன ஒண்மலர்த் தாள்தந்து
நாயில் ஆகிய குலத்திலும்
　　கடைப்படும் என்னைநன் னெறிகாட்டித்
தாயில் ஆகிய இன்னருள்
　　புரிந்தஎன் தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை
　　உருள்கிலேன் செழுங்கடல் புகுவேனே.

**உண்டு உடுத்து உயிரை வைத்திருந்தேன்**

40. வேனில் வேள்கணை கிழித்திட
　　மதிசுடும் அதுதனை நினையாதே
மான்நி லாவிய நோக்கியர்
　　படிறிடை மத்துறு தயிராகித்
தேன்நி லாவிய திருவருள்
　　புரிந்தஎன் சிவனகர் புகப்போகேன்
ஊனில் ஆவியை ஓம்புதற்
　　பொருட்டினும் உண்டுடுத் திருந்தேனே.

## 5. கைம்மாறு கொடுத்தல்

தம்மை ஆட்கொண்டு பேரருள் செய்த இறைவற்குக் கைம் மாறாகக் கொடுக்கத்தக்கது யாது என எண்ணி, இயலாமை பற்றி வருந்துதல். கலிவிருத்தங்கள் பத்து இதில் அமைந்துள்ளன.

**வருக என்று பணித்தாயே, என்னால் முடியவில்லையே!**

41. இருகை யானையை ஒத்திருந்து என்உளக்
கருவை யான்கண்டி லேன்; கண்டது எவ்வமே;
'வருக' என்று பணித்தனை, வான்உளோர்க்கு
ஒருவ னே!கிற்றி லேன்நிற்பன் உண்ணவே!

சாறும் ஆக இருக்கும் இன்ப வடிவினை, பேரின்ப உலகத் தலைவனை, மான்போலும் பார்வையுடைய உமையம்மையைத் தன் உடம்பிற் பாதியாகக் கொண்டவனைப் பலகாலம் அடியேன் அணுகவில்லை; வெறிதே இருந்து உடம்பைக் காத்து வருகின் றேன். யான் கெடுவேன்; என் உயிர் ஒடுங்காதோ?

ஓய்ந்து அழியாதனவும் உவமைகளை எல்லாம் கடந்தனவும் ஆகிய அறிவொளி பொருந்திய மலர்போன்ற திருவடிகளைத் தந்து, இழிந்த நாய்ப்பிறவியினும் கீழ்ப்பட்ட எனக்கு, மேலாம் வீடுபேற்றுக்கு உரிய நெறி அருளி, தாயிடத்து உளதாகிய இனிய இரக்கத்தை எனக்குத் தந்த என் தலைவனை யான் நெடுங் காலம் காணப் பெறேன். அதனால் அடியேன் தீயில் வீழ்ந்திலேன் திண்ணிய மலையினின்று உருண்டு உயிர் விட்டிலேன். பெருகு நீர்க்கடலிலாவது பாய்வேனா? அதுவும் செய்கிலேன்

தேன்போலும் இனிய திருவருள் புரிந்த என் பெருமானின் இன்பப் பேரூர்க்குப் புக முற்படாமல் இளவேனில் அரசாகிய காமனின் கணை நெஞ்சைப் பிளக்க, திங்கட் செல்வன் சுடுகின்ற கெடுதியும் சேர அதனை நினையாமல் மான் போன்ற விழி களுள்ள மாதரின் வஞ்சச் செயல்களிடை மத்தில் அகப்பட்ட தயிர்போலத் தத்தளிக்க, என் ஊனுடம்பில் உயிரை இன்னமும் போற்றியிருத்தற்கு உண்டும் உடுத்தும் வாழ்ந்திருந்தேன். என் பேதைமை இது என்னே !

விண்ணுலகத்து அமரர்களின் ஒப்பற்றதனிப்பெரும்பொருளே!

இரண்டு கைகளை உடைய யானை போன்று [ நிரம்பத் தின்று] உயிர் வாழ்ந்திருந்து என் உள்ளத்தின் உட்பொருளான மூலப்பொருளை யான் கண்டு கொள்ளவில்லை. யான் கண்ட தெல்லாம் துன்பமே. இருப்பினும் திருவடிக் காட்சி தந்து 'வா!' ன்று எனக்கு கட்டளை இட்டாய். அதனை நுகர்தற்கும் கைம் மாறு கருதற்கும் ஆற்றல் இல்லாதவனாக உண்டு வாழ்தற்கு மட்டும்ஆற்றல்உடையனாகஇருக்கிறேன்.என்னேஎன் அறியாமை!

**உண்மையாகவே எனக்குக் காட்சி தந்தாயே!**

42. உண்டுஓர் ஒண்பொருள் என்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்றுஅறி யொண்கிலை
தொண்ட னேற்குஉள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமோ?

**உன்னை என்று காண்பேன்**

43. மேலை வானவ ரும்அறி யாததோர்
கோல மே!எனை ஆட்கொண்ட கூத்தனே!
ஞால மே விசும் பே இவை வந்துபோம்
கால மே! உனை என்று கொல் காண்பதே!

**பறவைக் குஞ்சு போல் பறக்கவில்லையே!**

44. காண லாம்பர மே!கட்கு இறந்ததோர்
வாள்நி லாப்பொரு ளே!இங்குஓர் பார்ப்பெனப்
பாண னேன்படிற்று ஆக்கையை விட்டுனைப்
பூணு மாறுஅறி யேன்புலன் போற்றியே!

**என் கொள்கை கூற்றுவன் கொள்கை போல்வதே**

45. போற்றி என்றும் புரண்டும் புகழ்ந்தும் நின்று
ஆற்றல் மிக்கஅன் பால்அழைக் கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாள்உறும்
கூற்றம் அன்னதோர் கொள்கைஎன் கொள்கையே

**என்னையும் அழைத்துப் பணி கொள்ளுவானா ?**

46. கொள்ளும் கில்லெனை அன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறாமலர்க் கொன்றையான்
நள்ளும் கீழுளும் மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தையே !

**அறிவரும் அறிவுச் செல்வன்**

47 எந்தை யாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும்
தந்தை தாய் தம்பிரான்; தனக்கு அஃதிலான்
முந்தி என்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலும் அறிவரும் செல்வனே.

அழிவில்லாத ஒப்பற்ற இறை உண்டு என்று பொதுவாக உணர்ந்திருக்கும் அன்பர்களுக்கெல்லாம், அப்பொருள் ஆணா பெண்ணா அல்லதா என்று அறிய முடியாத இயல்பினன் நீ.

ஆனால் அடியனாகிய எனக்கு உன் உண்மையான நிலையிலேயே எனக்குக் காட்சி தந்தாய். யான் உன்னைக் காணக் கொடுத்து வைத்தும் இடையறாது காண முடியாதவனாக இருக்கிறேன். இது என்ன கண் மயக்கமோ?

வானவருள் மேல் நிலையில் இருப்போரும் அறியாத ஓர் அழகுஉருவே!என்னைஆட்கொண்டஆடற்பெருமானே! வையமும் வானமும் இவை போல்வன பிறவும் வந்து செல்லக் காரணமான காலத்தின் தலைவனே! உன்னைக் காண்பது எப்பொழுதோ!

மெய்யுணர்வினால் காண்பதற்குரிய விழுப்பொருளே! கண்ணின் பார்வையைக் கடந்து ஒளிப் பிழம்பாகத் திகழும் ஒப்பற்ற பொருளே! தன் கூட்டை [அல்லது முட்டையை] விட்டுச் சென்றுவிடும் பறவைக் குஞ்சு போல, வீணன் ஆன நான் ஐம்புல இன்பங்களை நாடாமல் காத்துப் பொய்யான இவ்வுடம்பை விடுத்து உன்னைப் பொருந்தும் வழி தெரியாதவனாக இருக்கிறேனே!

காத்தருள்க என்று வேண்டியும் நிலமிசைப் புரண்டு வலம் வந்தும் புகழ்ந்து ஏத்தியும் அந் நிலையே நின்று, திட்பமுள்ள மெய்யன்பால் உன்னைக் கூவி நான் அழைக்காதிருக்கிறேன். என் கொள்கை மாறுபாட்டை ஏற்று நேரே வந்து உன் தாமரைத் திருவடியிற் பொருந்தும் கூற்றுவனின் கொள்கை போன்றிருக்கிறது.

எல்லாவற்றும் நடுவிலும் கீழும் மேலும் எள்ளும் எண்ணையும் ஆகப் பரந்திருக்கும் எம் தந்தையும்,

தேனும் வண்டும் நீங்காத கொன்றை மாலை அணிந்தவனும் ஆகிய இறைவன் ஆற்றலற்ற அடியேனையும் அழைத்துத் தன் மெய்யன்பர்களை அழைத்துப் பணி கொள்ளுதல் போல் பணி கொள்ளுவானா ?

எமக்குத் தந்தை தாய் தலைவனாகவும் எல்லோருக்கும் அவ்வாறே தந்தை தாய் தலைவனாகவும் இருப்பவன்,

ஆனால் தனக்கு அவ்வகை உறவுமுறை இல்லாதவன்,

வானோரும் மற்றையோரும் தம் சொல்லால் மட்டுமின்றி நினைப்பாலும் அறிதற்கு அரிய உயர் அறிவுச் செல்வமாக இருப்பவன்,

**கண்டும் விட்டுவிட்டேனே**

48. செல்வம் நல்குரவு இன்றிவிண் ணோர்புழுப்
புல்வ ரம்பின்றி யார்க்கும் அரும்பொருள்
எல்லையில் கழல் கண்டும் பிரிந்தனன்;
கல்வகை மனத்தேன் பட்ட கட்டமே!

**எட்டும் இரண்டும் தெரியாதவனுக்கு ஏற்றம்!**

49. கட்டு அறுத்துஎனை ஆண்டுகண் ணாரநீறு
இட்ட அன்பரொடு யாவருங் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை, ஏற்றினை!
எட்டி னோடுஇரண் டும்அறி யேனையே!

**முழுதும் அறிந்தவனே, ஈசனே, அருளுக!**

50. அறிவ னே! அமு தே! அடி நாயினேன்
அறிவன் ஆகக்கொண் டோஉனை ஆண்டதும்
அறிவி லாமையன் றேகண் டது ஆண்டநாள்
அறிவனோ அல்ல னோஅருள் ஈசனே!

## 6. அநுபோக சுத்தி

சிவானுபவத்தின் பொருட்டு உயிர் தன் அனுபவங்களைச் சுத்தி செய்தல் அனுபவம். பட்டறிவு; அனுபோகம் - விளைவாக வரும் இன்பம், ஆசிரிய விருத்தங்கள் பத்து இதில் உள்ளன.

**ஆட் கொண்டவனை நினைக்கவில்லையே !**

51. ஈச னே! என் எம்மானே!
எந்தை பெருமான்! என்பிறவி
நாச னே! நான் யாதும்ஒன்று
அல்லாப் பொல்லா நாயான
நீச னேனை ஆண்டாய்க்கு
நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னே! அம் பலவனே;
செய்வ தொன்றும் அறியேனே!

**நான் பொய்யன், உண்டு உடுத்து இருக்கிறேன்**

52. செய்வ தறியாச் சிறு நாயேன்
செம்பொற் பாத மலர்காணாப்
பொய்யர் பெறும்பேறு அத்தனையும்
பெறுதற்கு உரியேன் பொய்யிலா

யான் அவனை உணரும் முன்பே என்னுள் புகுந்தான், இதற்கு என்ன கைம்மாறு தர இயலும் ?

வினைப்பயனால் செல்வம் உடையார் வறுமை உடையார் என்றும் விண்ணோர் என்றும் புல்புழு என்றும் உயர்வு-உயர் விலாத் திணை வேறுபாடுகள் போன்ற வரம்புகள் இல்லாமல் எத்தகையோர்க்கும் எத்தகையதற்கும் அருமைப் பொருளாக இருப்பவனின் சொல் மனம் என்ற எல்லைகளைக் கடந்து நிற்கும் திருவடிகளைக் கண்டும் அவற்றைப் பிரிந்தனனே! கல்லின் வகை என்று கூறத் தரும் வலிய நெஞ்சை உடைய யான் பட்டது; துன்பம் ஆகும்

காளை ஊர்தியனே! கட்டுக்களை அறுத்து என்னை ஆட் கொண்டு திருநீறு பூசிய மெய்யடியாரும் மற்றை அன்பர் யாவரும் கண்ணெதிரே காணுமாறு, எட்டையும் இரண்டையும் கூட்டத் தெரியாத அறிவிலியாகிய என்னை, அறிஞர்கள் சொல் லாடும் கலைமண்டபத்திலே ஏற்றி வைத்தாய்! இதற்கு என்ன கைம்மாறு சொல்ல வல்லேன்!

முற்றறிவினனே! அமுதமாக இருப்போனே! தாழ்ந்த நா யின் தன்மை உடைய என்னை அறிவுடையனாகக் கருதியா நீ ஆட்கொண்டாய்? அடியேனை நீ ஆட்கொண்ட நாளில் நீ கண் டது என் அறிவின்மை அல்லவா? அடியேன் அறியவல்லனோ அறிய மாட்டாதவனோ ஆண்டவனே! எனக்கு அருளுதல் வேண்டும்.

உயர் செல்வனே ! என் ஆருயிர்த் தலைவனே ! எம் தந்தையாகிய பெருமானே! என் பிறப்பை அழிக்க வல்லவனே!

ஒரு சிறு பொருளொடும் சேர்த்தற்கு இயலாத தீயநாயாகிய இழிவுடைய எளியேனை ஆண்டருளிய உன்னை நான் நினை யன். ஒளி வடிவானவனே, அம்பலத்தவனே, செய்தற்கு உரியது சிறிதும் அறிந்திலேன்.

போரில் வல்ல அரியேறு போல்பவனே ! செய்யக்கடவது இது என்று அறியாத சிறுமையுள்ள நாய் போன்றவன் யான். செம்மையான பொன்போன்ற உன் அருமையான திருவடிகளாகிய தாமரை மலரைக் காணும் பேறு இல்லாத பொய்யர்கள் பெறு தற்குரிய பேறுகள் யாவும் பெறுதற்கு உரியவன் யான்.

மெய்யர் வெறியார் மலர்ப்பாதம்
மேவக் கண்டும் கேட்டிருந்தும்
பொய்ய னேநான் உண்டுடுத்திங்கு
இருப்ப தானேன், போர்ஏறே!

**கண்கெட்ட ஊர்மாடு போல அலைவேனோ?**

53. போர்ஏ றே!நின் பொன்னகர்வாய்
நீபோந் தருளி இருள்நீக்கி
வார்ஏ றிளமென் முலையாளோடு
உடன்வந் தருள அருள்பெற்ற
சீர்ஏ றடியார் நின்பாதம்
சேரக் கண்டும் கண்கெட்ட
ஊர்ஏ றாய்இங்கு உழல்வேனோ?
கொடியேன் உயிர்தான் உலவாதே.

**எது கொண்டு எழுவேன்?**

54. உலவாக் காலம் தவம்எய்தி
உறுப்பும் வெறுத்திங்கு உனைக் காண்பான்
பலமா முனிவர் நனிவாடப்
பாவி யேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை இதுமாய்க்க
மாட்டேன் மணியே! உனைக்காண்பான்
அலவா நிற்கும் அன்பிலேன்
என்கொண்டு எழுகேன், எம்மானே!

**புழுக்கூடு காத்து இருக்கிறேன்**

55 மானேர் நோக்கி உமையாள்
பங்கா! வந்திங்கு ஆட்கொண்ட
தேனே! அமுதே! கரும்பின்
தெளிவே! சிவனே! தென்தில்லைக்
கோனே! உன்றன் திருக்குறிப்புக்
கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூடு இதுகாத்திங்கு
இருப்ப தானேன், உடையானே!

**நான் இங்கே கிடக்க வேண்டும் என்பது உன் முடிவா?**

56. உடையா னே! நின் தனைஉள்கி
உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையார் உடையாய் நின்பாதம்
சேரக் கண்டு இங்கு ஊர்நாயின்

இத்தகைய பொய்யனான யான் பொய்யறியாத மெய்யன்பர்கள் மணம் பொருந்திய மலர் போன்ற உன் திருவடிகளை அடையக் கண்டும் கேட்டிருந்தும், அவ்வாறு அடைதலைக் கருதாமல் உண்டும் உடுத்தும் இவ்வுலகில் வாழ்ந்திருக்கலானேன்.

போர் வல்ல அரியேறு போன்ற பெருமானே! உன் திருக் கோயிலினின்றும் புறப்பட்டு வந்து இளமையுள்ள இறைவியோடும் உடனிருந்து, அடியாரின் உள் அழுக்காகிய இருளை நீக்கி அருள்புரிய, அத் திருவருள் பெற்ற சிறப்பு மிக்க மெய்யன்பர்கள் நின் திருவடி அடைவதை நேரே பார்த்திருந்தும் கொடியவனாகிய என் உயிர் ஒழியாது இருக்க, அடியேன் கண்கெட்ட ஊர்ப்பொலி எருதுபோல இவ்வுலகில் அலைந்து திரிவேனோ?

மாணிக்கமே! எம் தலைவனே! இவ்வுலகில் பல பெரிய முனிவர்கள் உன்னைப் பார்த்தற்காக அளவிலாக் காலம் தவம் புரிந்து உடம்பையும் வெறுத்து [உன் காட்சி கிடையாமையால்] மிகவும் வாட்டமுற்று இருக்க, அவ்வாறான தவமுயற்சி இல்லாத பாவியாகிய அடியேனைத் தடுத்து ஆட்கொண்டாய். அழுக்கு மயமான சிறுகுடிலாகிய இவ்வுடம்பை மாய்த்துக்கொள்ள மாட்டாது இருக்கிறேன். உன்னைக் காண்பதற்குத் துன்புற்று நிற்கும் உள்ளன்பு இல்லேன். இந் நிலையில் எதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு உய்வேன்?

மானின் விழிபோன்ற விழியினை உடையவளாகிய இறைவியை உடம்பில் ஒரு பாதியாக உடையவனே! நீ இவ்வுலகிற்கு வந்து என்னை ஆட்கொண்டு தேனும் அமுதும் கருப்பஞ் சாற்றின் தெளிவுமாக விளங்குகிறாய். நன்மையே வடிவானவனே! அழகிய தில்லையம்பதிக் கோமானே! உன் திருக்குறிப்பு அடையப் பெற்றோர் உன் திருவடியைச் சார்ந்துவிட, அடியேனோ தசை மலிந்த இப்புழுக்கூடாகிய உடலினைக் காத்து இங்குக் காத்திருக்கலானேன், இறைவா!

எல்லாம் உடையவனே! இறைவா! உன்னை உள்ளூர நினைந்து நெஞ்சம் கரையும் மிகுந்த அன்பு உடையவர்களை உடைய உன் திருவடிகளை அவர்கள் அடைவதைக் கண்டு வைத்தும், யான் இவ்வுலகில், ஊர்ப் பொது நாயினும் கடைப்

கடையா னேன்நெஞ்சு உருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூடு இது காத்துஇங்கு
இருப்ப தாக முடித்தாயே

**நீ செய்த முடிவு பொருத்தமானதே**

57. முடிந்த வாறும் என்தனக்கே
தக்க தேமுன் அடியாரைப்
பிடித்த வாறும் சோராமல்
சோர னேன்இங்கு ஒருத்திவாய்
துடித்த வாறும் துகில் இறையே
சோர்ந்த வாறும் முகம் குறுவேர்
பொடித்த வாறும் இவையுணர்ந்து
கேடுஎன் தனக்கே சூழ்ந்தேனே

**அடியேனைப் பார்த்துச் சிரித்தாகிலும் அருளலாமே!**

58. தேனைப் பாலைக் கன்னலின்
தெளிவை ஒளியைத் தெளிந்தார்தம்
ஊனை உருக்கும் உடையானை
உம்ப ரானை வம்பனேன்
நானின் அடியேன் நீ என்னை
ஆண்டாய் என்றால் அடியேற்குத்
தானும் சிரித்தே அருளலாம்
தன்மை யாம்என் தன்மையே!

**எந்தையே! யான் எங்கே புகுவேன்?**

59. தன்மை பிறரால் அறியாத
தலைவா! பொல்லா நாயான
புன்மை யேனை ஆண்டு, ஐயா!
புறமே போக விடுவாயோ?
என்னை நோக்கு வார்யாரே?
என்நான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழும் திருமேனி
எந்தாய்! எங்குப் புகுவேனே?

**உன் பாதம் என்னுடையது புகல் அடைவேன்**

60. புகுவேன் எனதே நின்பாதம்
போற்றும் அடியா ருள்நின்று
நகுவேன் பண்டு தோள்நோக்கி
நாணம் இல்லா நாயினேன்

பட்டு நெஞ்சம் உருகாதிருக்கிறேன். மெய்யறிவு உண்மைகளைக் கல்லாத மனம் உடையவன் நான். உள்ளம் குழையாதவன். நாற்ற மிக்க புழுக்கூடாகிய இவ் வுடம்பை ஓம்பி இந் நிலவுலகத்தே இருக்கும்படி முடிவு செய்தனையா?

அடியேன் இவ்வுடலைக் காத்துக்கொண்டு இருக்குமாறு நீ முடிவு செய்தது பொருத்தமே; மெய்யன்பர்களை நீ முன்பு தளரவிடாமல் பிடித்துக் கொண்டதும் பொருத்தமானதே. கள்வன் நான். இங்கு ஒரு மாய மாதின் வாய் இதழ் துடித்த வகையையும் ஆடை சிறிது தளர்ந்த வகையையும் முகத்தில் வியர்வைத் துளிகள் தோன்றிய வகையையும் பார்த்து எனக்கே நான் தீங்கு தேடிக்கொண்டேன்.

தன்னைச் சேர்ந்தார்க்குத் தேனாகவும், பாலாகவும் கருப் பஞ் சாற்றுத் தெளிவாகவும் இருப்பவனை, ஒளிவடிவானவனை, தன்னை உணர்ந்து கொண்டவர்களின் ஊனை உருக்கும் ஈசனை, மேம்பட்டு நிற்பவனை, வீணனாகிய யான் அவனிடம் ''யான் நின் அடியவன் நீ என்னை ஆட்கொண்டாய்'' என்று கூறினால் அடியேனை அவன் சிரித்தவாறு அருளக்கூடிய நிலை மை என்னுடைய நிலைமையாகும்.

தன் தன்மை பிறரால் அறியப்படாத தலைவா! தீய நாய் போன்ற இழிந்த என்னை ஆட்கொண்டு அருளி, ஐயனே! யான் புறத்தே போகுமாறு விட்டுவிடுவாயா? அங்ஙனமாயின் அடி யேனை யார்தாம் கடைக்கண் நோக்குவர்? எங்கள் பெருமானே, யான் யாது செய்ய வல்லேன்? பொன் வடிவாகத் திகழும் திரு மேனி உடைய எம் அப்பனே! அடியேன் எங்கே அடைக்கலம் புகுவேன்?

முன்பு என் தோள் பருமையை எண்ணிப் பூரித்து நகைப் பேன்; பழி பாவங்களுக்கு நாணம் இல்லாத நாயின் தன்மை உடையவன் நான். நின்னை வழிபடும் அடியாருள் நின்று மனம் உருகும் அன்பு எனக்கு இல்லை; நின் திருவுருவைக் காணவும் நீ ஆண்டருளவும் அடியவன் யானும் தகுதி உடையவன்

நெகும்அன் பில்லை நினைக்காண
நீஆண் டருள அடியேனும்
தகுவ னேஎன் தன்மையே
எந்தாய்! அந்தோ! தரியேனே.

## 7. காருணியத்து இரங்கல்

தம் சிறுமைகளைப் பொறுத்து இறைவன் அருள்புரிய வேண்டி இரங்குதல். ஆசிரிய விருத்தம் பத்து இதில் உள்ளன.

**இன்பம் தருவோனே! வணக்கம்; காப்பாற்றுக[**

61. தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா! போற்றி வான
விருத்தனே! போற்றி எங்கள்
விடலையே! போற்றி ஒப்பில்
ஒருத்தனே! போற்றி உம்பர்
தம்பிரான்! போற்றி தில்லை
நிருத்தனே! போற்றி எங்கள்
நின்மலா! போற்றி! போற்றி!

**சிவபெருமானே! வணக்கம்!**

62. போற்றி! ஓ, நமச்சி வாய!
புயங்கனே! மயங்கு கின்தேன்
போற்றி! ஓ, நமச்சி வாய!
புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றி! ஓ, நமச்சி வாய!
புறம்எனைப் போக்கல் கண்டாய்!
போற்றி! ஓ, நமச்சி வாய!
சயசய போற்றி போற்றி!

**வள்ளல் பெருமானே வணக்கம்**

63, போற்றிஎன் போலும் பொய்யர்
தம்மைஆட் கொள்ளும் வள்ளல்!
போற்றிநின் பாதம் போற்றி!
நாதனே, போற்றி போற்றி!
போற்றிநின் கருணை வெள்ளப்
புதுமது! புவனம் நீர்தீக்
காற்று இய மானன் வானம்
இருசுடர்க் கடவு ளானே!

**விரைவில் அருளுக, போற்றி !**

64. கடவுளே போற்றி! என்னைக்
கண்டுகொண் டருளு போற்றி!
விடவுளே உருக்கி என்னை
ஆண்டிட வேண்டும் போற்றிi

ஆவனா? எந்தையே, ஐயகோ, என் தன்மை இவ்வாறு இருக்கிறதே! இவ்வுலக வாழ்வைப் பொறுத்திரேன். நின் திருவடியே எளியேனுக்கு உரியது. அதனைப் புகல் அடைவேன்.

இப் புன்புலால் உடம்போடு கூடிய வாழ்க்கையை அடியேன் தாங்கேன். இன்பம் செய்பவனே! வணக்கம். மேலாம் வெளியினில் விளங்கும் அறிவுப் பெரியோனே! வணக்கம். எங்கள் வலிமையோனே! வணக்கம். ஒப்பற்ற தனிமுதல்வனே! வணக்கம். வானோர் தலைவனே! வணக்கம். தில்லை அம்பலத்தில் கூத்திடுவோனே! வணக்கம். எங்கள் தூயோனே! வணக்கம். வணக்கம். காத்தருள்வாயாக.

ஐந்தெழுத்து இறைவா! காத்தருள்க! பாம்பை அணிந்தவனே, அறிவின்மையால் கலங்குகிறேன். ஐந்தெழுத்து இறைவா! வணக்கம். உன்னை அன்றி எனக்குப் புகலிடம் வேறு எதுவும் இல்லை. ஐந்தெழுத்து இறைவா! வணக்கம். என்னை வெளியே தள்ளிவிடாதே! சிவபெருமானே வணக்கம்; வெல்க! வெல்க! காத்தருள்க!

என்னைப் போன்ற அன்பு இல்லாதவரையும் ஆளாகக் கொள்ளும் வள்ளற் பெருமானே! நின் திருவடிக்கு வணக்கம். எம் தலைவனே, காத்தருள்க காத்தருள்க! நிலம் நீர் நெருப்பு காற்று விசும்பு கதிரவன் திங்கள் ஆகிய இரு சுடர், உயிர் என்னும் எண்வகைப் பொருள்களையும் திருமேனியாகக் கொண்டும் எல்லாவற்றையும் கடந்து இருப்போனாகவும் விளங்கும் இறைவனே! நின் அருளாகிய புதிய தேன் பெருக்கு என்னைக் காத்தருள்க.

எல்லாவற்றையும் கடந்த பெரும் பொருளே ! வணக்கம். அடியேன்பால் கடைக்கண் செலுத்தி அருளுக, வணக்கம். பற்று ஒழிய என் உள்ளத்தை உருக்கி அடியேனை ஆட்கொள்ள வேண்டும் வணக்கம். இந்த உடலையும் ஒழித்து விரைவில்

உடலிது களைந்திட்டு ஒல்லை
உம்பர்தந் தருளு போற்றி!
சடையுளே கங்கை வைத்த
சங்கரா! போற்றி, போற்றி!

**இங்கு இவ் வாழ்வு பொறுக்க மாட்டேன்**

65 சங்கரா போற்றி! மற்றோர்
சரண்இலேன் போற்றி! கோலப்
பொங்கரா வல்குற் செவ்வாய்
வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க, போற்றி!
மால்விடை ஊர்தி போற்றி!
இங்கி(வ்) வாழ்வு ஆற்ற கில்லேன்
எம்பிரான் இழிந்திட்டேனே.

**உன்னை நான் குறை கூறியதில்லை**

66. இழித்தனன் என்னை யானே
எமபிரான் போற்றி போற்றி'
பழித்திலேன் உன்னை என்னை
ஆளுடைப் பாதம் போற்றி!
பிழைத்தலைப் பொறுக்கை எல்லாம்
பெரியவர் கடமை போற்றி!
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி
உம்பர்நாட் டெம்பி ரானே!

**திருச்சிற்றம்பலவ போற்றி**

67. எம்பிரான் போற்றி! வானத்
தவரவர் ஏறு போற்றி!
கொம்பரார் மருங்குல் மங்கை
கூறவெண் நீற! போற்றி!
செம்பிரான் போற்றி! தில்லைத்
திருச்சிற்றம் பலவ போற்றி!
உம்பரா போற்றி என்னை
ஆளுடை ஒருவ! போற்றி!

**வா என்று அழைத்து ஏற்றுக் கொள்க!**

68. ஒருவனே! போற்றி ஒப்பில்
அப்பனே! போற்றி வானோர்
குருவனே! போற்றி எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருக என் றென்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி
தமியேனன் தனிமை தீர்த்தே

மேலான நிலையைத்தந்து அருளுக, வணக்கம். சடையின் கண்ணே கங்கையை வைத்து உலகைக் காத்த இன்பப் பெருமானே, வணக்கம்.

இன்பம் செய்வோனே, வணக்கம்! வேறு புகலிடம் இல்லேன், காப்பாற்றுக. சிவந்த வாய் வெண்பற்கள் கரிய ஒளி மிக்க கண்கள் ஆகியன உடைய உமையம்மையை ஒருபாகத்தில் உடையவனே! காப்பாற்றுக; திருமாலைக் காளை ஊர்தியாக உடையவனே! காப்பாற்றுக. இவ் வுலகிலே இவ் வாழ்வைப் பொறுத்துக் கொண்டிருக்க இயலாதேன்: எம் பெருமானே!

எம்பெருமானே! வணக்கம் வணக்கம். யானே என்னைத் தாழ்வு படுத்தினேன். ஆண்டவனாகிய உன்னை யான் இகழ்ந்திலேன். என்னை ஆட்கொண்ட நின் திருவடிக்கு வணக்கம். செய்த பிழைகளை எல்லாம் பொறுத்து அருளல் பெரியோர்களின் முறைமையாகும். வணக்கம். உயரிய பேரின்ப உலகின் கண் உள்ள எங்கள் தலைவனே! வணக்கம். எனது இவ் வாழ்க்கையை ஒழித்தருள்வாய் வணக்கம்.

எங்கள் தலைவனே! வணக்கம் விண்ணகத் தேவர்க்கும் தலைவர்க்கும் மேலான ஏறு போல்பவனே! வணக்கம். பூங்கொடி போன்ற இடையுடைய உமையம்மையை ஒரு கூறாக உடையவனே! வெள்ளிய திருநீற்றினை உடையானே! வணக்கம். சிவந்த மேனியுடைய பெருமானே! காத்தருள்க! தில்லைப் பகுதியில் விளங்கும் அழகிய நுண்பெரு வெளியில் ஆள்பவனே! வணக்கம். மேலாகிய வீட்டுலகனே! வணக்கம். என்னை ஆட்கொண்ட ஒப்பற்ற தனி முதல்வனே காப்பாற்றுவாயாக.

தனிப் பெரும் இறைவனே! வணக்கம். நிகர் இல்லாத என் அப்பனே! வணக்கம். அமரர்களின் ஆசானே! வணக்கம்! எங்கள் அழகு மாறாத இளந்தளிர் போல்பவனே! வணக்கம். எளியேனை நின் பக்கல் வருக என்று பணித்து ஏற்றுக்கொள்ள வேண்டும். துணையில்லாதவனாகிய என் தனிமையை நீக்கி நின் திருவடியாகிய துணை தந்து காக்க வேண்டும். வணக்கம்.

**நின் திருவடி தந்தருளுக, வள்ளலே!**

69. தீர்ந்தஅன் பாய அன்பர்க்கு
அவரினும் அன்ப! போற்றி!
பேர்ந்தும்என் பொய்ம்மை ஆட்கொண்டு
அருளிடும் பெருமை! போற்றி!
வார்ந்தநஞ்சு அயின்று வானோர்க்கு
அமுதம்ஈ வள்ளல்! போற்றி!
ஆர்ந்தநின் பாதம் நாயேற்கு
அருளிட வேண்டும் போற்றி!

**எல்லாம் ஆனவனே! போற்றி**

70. போற்றி!இப் புவனம் நீர்தீக்
காலொடு வானம் ஆனாய்!
போற்றி!எவ் வுயிர்க்கும் தோற்றம்
ஆகிநீ தோற்றம் இல்லாய்
போற்றிஎல் லாவு யிர்க்கும்
ஈறாய்ஈ றின்மை ஆனாய்
போற்றிஐம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கை யானே.

## 8. ஆனந்தத்து அழுந்தல்

பேரின்ப வடிவான இறைவனது பேரின்பத்தில் முழுகி நிற்றல். ஆசிரிய விருத்தம் பத்து இதில் அடங்கியுள்ளன.

**மெய்யன்பே உயர்ந்த பேரின்பம் உண்டாக்குவதாக !**

71. புணர்ப்ப தொக்க எந்தை ! என்னை
ஆண்டு பூண நோக்கினாய் ;
புணர்ப்பது அன்றுஇது என்ற போது
நின்னொடு என்னொடு என் இதாம் ?
புணர்ப்ப தாக அன்றி தாக
அன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக அங்கணாள !
புங்க மான போகமே !

**என் கண்ணீர் ஆறாகப் பெருகுவதாக!**

72. போகம் வேண்டி வேண்டி வேன்,பு
ரந்த ராதி இன்பமும்;
ஏக! நின்க ழலி ணைய
லாதி லேன்என் எம்பிரான்!
ஆகம் விண்டு கம்பம் வந்து
குஞ்சி யஞ்ச லிக்கணே
ஆக என்கை, கண்கள் தாரை
ஆற தாக! ஐயனே!

முழுவதும் அன்பு உருவாக விளங்கும் அடியார்க்கு, அவர்களின் அளவிலும் மிகுதியான அன்பு உடையவனே! வணக்கம். என் பொய்யியல்பை நீக்கியும் என்னை ஆளாகக் கொண்டும் அருளுகிற பெருந்தன்மையனே! வணக்கம். பாற்கடலில் வடிந்த நஞ்சினை உண்டு, வானவர்களுக்கு அமுதம் வழங்கிய வள்ளல் பெருமானே! வணக்கம். அருள் நிறைந்த நின் திருவடியை நாய் போன்ற எனக்குத் தந்தருள வேண்டும், வணக்கம்.

இந்த நிலம் நீர் தீ காற்று வானம் என்னும் பூதங்கள் ஐந்தும் ஆனவனே! வணக்கம். எல்லா உயிர்களும் தோன்று தற்குக் காரணன் ஆகி, நீ ஒன்றில் பிறத்தல் இலனாக இருப்பவனே! வணக்கம். எல்லா உயிர்களும் ஒடுங்கும் முடிவிடனாக உள்ள நீ ஒன்றில் ஒடுங்குதல் இலனாக உள்ளாய்! வணக்கம். ஐம்புலன்களால் அடைய முடியாத, ஆனால் ஐம்புலன்களை உயிர்களின் நலம் கருதிச் சார்ந்திருப்பவனே! வணக்கம்.

எம் தந்தையே! நின் அருட்பேரின்பத்தே அடியேனைச் சேர்க்கும் காலம் பொருந்துவதாக. அடியேனை ஆட்கொண்டு நின் திருவடித் தொண்டினை யான் மேற்கொள்ளுமாறு என்பால் அருள்நோக்கம் தந்தாய்! பின்பு, என்னைச் சேர்க்கும் காலம் இது அன்று என்று விட்டுவிட்ட போது அது பற்றி யான் செய்யத் தக்கது யாது உளது? நின்னொடு என்னைச் சேர்த்துக் கொள்வதாக அன்றி விட்டுவிடுவதாக இருந்தாலும், நின் திருவடிக் கண் யான் பூண்டுள மெய்யன்பு உயர்ந்த பேரின்பத்தை அடையச் செய்யுமாக.

ஒப்பற்ற முதல்வனே! என் தலைவனே! ஆசானே! இன்பம் விரும்பி இந்திரன் முதலிய தேவர்களின் பதங்கள் தரும் இன்பத்தை விரும்புகின்றிலேன், நின் திருவடித் துணையலாது வேறு துணையில்லேன். அன்பு மிகுதியால் உடம்பு நெகிழ்ந்து நடுநடுங்கி என் கைகள் தலைக்கு மேல் குவித்துத் தொழுதல் செயலில் பொருந்த என் கண்களின் நீர் ஒழுக்கு ஆறாகப் பெருகுவதாக!

**மெய்யன்பர் அன்பே எனக்கும் வரவேண்டும்**

73. ஐய!நின்ன தல்லது இல்லை
மற்றோர் பற்று, வஞ்சனேன்
பொய்க லந்த தல்லது இல்லை
பொய்ம்மை யேன்என் எம்பிரான்!
மைக லந்த கண்ணி பங்க!
வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்பர் அன்பெ
னக்கும் ஆக வேண்டுமே.

**எக்காலமும் நின்னை வணங்க அன்பு வேண்டும்.**

74. வேண்டும் நின்க ழற்கண் அன்பு
பொய்ம்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை
'ஆவ!' என்று அருளுநீ
பூண்டு கொண்டு அடியனேனும் போற்றி
போற்றி என்றும் என்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து
மன்ன நின்வ ணங்கவே.

**உன்னை அன்றி வேறுஓர் உண்மை இல்லை**

75. வணங்கும் நின்னை மண்ணும் விண்ணும்
வேதம் நான்கும் ஓலமிட்டு
உணங்கும் நின்னை எய்தலுற்று
மற்றோர் உண்மை இன்மையின்
வணங்கி யாம்வி டேங்கள் என்ன
வந்து நின்றுஅ ருளுதற்கு
இணங்கு கொங்கை மங்கை பங்க!
என்கொ லோநி னைப்பதே?

**உன் திருவடி எவ்விடத்துள்ளது?**

76. நினைப்ப தாக சிந்தை செல்லும்
எல்லை ஏய வாக்கினால்
தினைத்த னையும் ஆவ தில்லை
சொல்ல லாவ கேட்பவே
அனைத்து வகும் ஆய நின்னை
ஐம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெ னைத்த தெப்பு றத்தது
எந்தை பாதம் எய்தவே!

**நீ இரங்கி அருளுதல் வேண்டும்**

77. எய்த லாவது என்று நின்னை
எம்பி ரான்!இவ் வஞ்சனேற்கு
உய்தல் ஆவது உன்கண் அன்றி
மற்றோர் உண்மை யின்மையின்

ஐயனே, எங்கள் தலைவனே, மை தீட்டிய கண்களை உடைய உமையம்மையை ஒரு கூற்றில் உடையவனே! வஞ்சகன் யான். எனக்கு நினது அருள் அன்றி வேறு ஒரு பற்றுக்கோடு இல்லை. ஆகவே நின் திருவடிக் கண் வந்து இரண்டற்ற நிலையில் இயைந்து இன்புறும் மெய்யன்பரது உயர்ந்த அன்பே பொய்யனாகிய எனக்கும் உண்டாதல் வேண்டும்.

இறைவனே! நாய் போன்ற கடைப்பட்ட என்னை நீ 'அந்தோ' என்று இரங்கிப் பொய்ம்மை அகற்றி ஆட்கொண்டு அருள்வாயாக. அடியனாகிய யானும் நின் திருவடி ஆட்சியை மேற்கொண்டு வணக்கம் வணக்கம் என்று கூறியும் பலகால் இறந்து பிறந்தும் எக்காலமும் நின்னை வணங்குதற்கு நின் திருவடிக் கண்ணே மெய்யன்பே எனக்கு வேண்டுவதாகும்.

உமையம்மையை ஒரு பங்கில் உடையவனே! நின்னைத் தவிர வேறு ஒரு மெய்ப்பொருள் எதுவும் இல்லை என்பதால், மண்ணுலகும் விண்ணுலகும் நின்னைப் பணிகின்றன, நான் மறைகளும் நின்னை அணுக முயன்று முடியாமையால் ஓலமிட்டு வாட்டமுறும். அடியேமாகிய யாங்களும் நின்னை வணங்கி அருளுதற்குத் தடையாக நினைப்பது என்னையோ?

எந்தையே, மனமானது தான் செல்லும் அளவு சென்று நினைக்குமாக; சொல்லுதற்கு உரியன எல்லாம்கேட்கப்படுவனவே, ஆகலின் பொருந்திய சொற்களால் தினை அளவும் ஆகும் பயன் எதுவும் இல்லை. உலகு எல்லாம் ஆகிய உன்னை ஐம்பொறிகளும் காணும் ஆற்றல் இல்லாதன; நின் திருவடி அடையவே அத் திருவடி எவ்வளவினதோ, எவ்வளவினதோ? எவ்விடத்ததோ, அறிந்திலேன்.

எங்கள் பெருமானே! உன்னை அடைந்து இன்புறுதல் எப்பொழுது? வஞ்சகனாகிய எனக்கு ஈடேற்றம் உன்னிடத்து இருக்கிறது. வேறு எந்த மெய்யான பொருளும் உன்னையன்றி இல்லை. ஆகவே கைவிடின் துன்பம் உண்டாகும் என்று காப்

பைத லாவது என்று பாது
காத்து இரங்கு பாவியேற்கு
ஈத லாது நின்கண் ஒன்றும்
வண்ணம் இல்லை, ஈசனே !

**ஈசனே! நீ அல்லது வேறு இறைமையில்லை**

78 ஈசனே ! நீ அல்ல தில்லை
இங்கும் அங்கும் என்பதும்
பேசினே னொர் பேதம் இன்மை
பேதை யேன்என் எம்பிரான்
நீச னேனை ஆண்டு கொண்ட
நின்ம லா ! ஓர் நின்னலால்
தேச னே ! ஓர் தேவ ருண்மை
சிந்தி யாது சிந்தையே.

**முன்பே அடையப் பெறாத மூடன் யான்!**

79. சிந்தை செய்கை கேள்வி வாக்குச்
சீரில் ஐம்பு லன்களால்
முந்தை யான காலம் நின்னை
எய்தி டாத மூர்க்கனேன்
வெந்து,ஐ யா! வி ழுந்தி லேன்என்
உள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை யாய நின்னை இன்னம்
எய்தல் உற்று இருப்பனே.

**அருள் அமுதம் உண்பித்து உயிரில் கலந்து**

80. இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை
ஆண்டு கொண்ட நின்னதாள்
கருப்பு மட்டு வாய்ம டுத்துஎ
னைக்க லந்து போகவும்
நெருப்பும் உண்டு யானும் உண்டு
இருந்த துண்டது ஆயினும்
விருப்பம் உண்டு நின்கண் என்கண்
என்பது என்ன விச்சையே

## 9 ஆனந்த பரவசம்

இறைவன் திருவருள் இன்பத்தில் திளைத்துத் தன்னை இழத்தல் என்ற நிலையை விரும்புதல். கலிநிலைத் துறைச் செய்யுள் பத்து இதில் உள்ளன.

**பொய் அழியக் கூடாது என்று என்னை வைத்தாய்!**

81. விச்சுக் கேடு பொய்க்கு ஆகாது
என்றிங்கு எனை வைத்தாய்
இச்சைக் கானார் எல்லாரும்
வந்துன் தாள் சேர்ந்தார்

பாற்றி இரங்கி அருள்வாயாக. இங்ஙனம் நீயே அருளுதல் அல்லாது பாவியாகிய அடியேனுக்கு உன்னிடம் வந்து ஒன்றாகிப் பேரின்ப நிலையடையும் வகை வேறு இல்லை.

ஈசனே, இவ்வுலகிலும் மறுவுலகிலும் மெய்ப் பொருள் உன்னை அல்லாமல் வேறு எதுவும் இல்லை என்பதையும் வேறு பாடின்றி உயிர் ஒன்றும் வீடுபேரின்ப நிலையையும் ஓர் அறிவிலியாகிய நான் உரைத்தது உண்டு அன்புரிமை கொண்ட என் தலைவனே! இழிந்தவனாகிய என்னை ஆளாகக் கொண்ட தூயவனே! ஒளிப்பிழம்பானவனே! ஒப்பற்ற நின்னை அல்லாமல் எண்ணற்கு உரிய தேவர் எவரும் இருப்பதாக என் மனம் எண்ணாது.

ஐயா, மனம் செயல் கேள்வி மொழி என்னும் இவற்றாலும் சிறப்பு இல்லாத ஐம்பொறிகளாலும் முந்திய காலத்திலேயே உன்னை அடையப்பெற்றிராத அறிவற்ற நான் தீயில் விழுந்து வெந்திலேன், என் மனம் நாணி அலறவில்லை. எம் தந்தையாகிய உன்னை இன்னமும் அடைகின்ற விருப்பம் கொண்டு வாழ்ந்திருக்கிறேன்.

இரும்பு போன்ற கடுமையான நெஞ்சமும் வஞ்சகமும் உடையவனான என்னை ஆட்கொண்டு அருளிய நின் திருவடிகள் எனக்குக் கருப்பஞ் சாறு போன்ற அருள் அமுதத்தை ஊட்டி உயிரில் கலந்து பிரிந்து போகவும் என் உயிரைப் போக்கிக் கொள்ள நெருப்பும் இருக்க நானும் உயிரோடு இருந்தேன். உணவுகளை உண்டு இருந்தது உண்டு. அவ்வாறு இருக்க, உன்னிடம் அடியேனுக்கு அன்பும் இருப்பதாக நான் கூறிக் கொள்வது என்ன வித்தையோ?

திருவாரூரில் இருக்கும் ஐயம் ஏற்கும் உருக் கொண்ட எங்கள் இறைவா! பொய்க்கு விதை அழிவு கூடாது என்று

அச்சத் தாலே ஆழ்ந்திடு
கின்றேன் ஆரூர்எம்
பிச்சைத் தேவா! என்நான்
செய்கேன்? பேசாயே!

**நின் அடியாருள் ஒருவனாக வைத்துப் பேசப்பட்டேன்**

82. பேசப் பட்டேன் நின்னடி
யாரில்; திருநீறே
பூசப் பட்டேன்; பூதல
ரால் உன் அடியான் என்று
ஏசப் பட்டேன், இனிப்படு
கின்றது அமையாதால்
ஆசைப் பட்டேன் ஆட்பட்
டேன் உன் அடியானே

**யான் உன் அடியவன் இல்லையா?**

83. அடியேன் அல்லேன் கொல்லோ தான்எனை
ஆட்கொண் டிலைகொலோ
அடியா ரானார் எல்லோரும்
வந்துன் தாள்சேர்ந்தார்
செடிசேர் உடலம் இதுநீக்க மாட்டேன்
எங்கள் சிவலோகா!
கடியேன் உன்னைக் கண்ணாரக்
காணுமாறு காணேனே.

**உன்னைப் பார்த்தேன்; ஆனால் பயனற்ற பேச்சால் விட்டுவிட்டேன்!**

84. காணு மாறு காணேன் உன்னை
அந்நாள் கண்டேனும்
பாணே பேசி என்றன்னைப்
படுத்த தென்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே ஆரமுதே!
அத்தா, செத்தே போயினேன்
ஏண்நாண்இல்லா நாயினேன் என்கொண்டு
எழுகேன் எம்மானே!

**சிறிது கொடுஞ்சொல் சொல்லிவிட்டேன்**

85. மானேர் நோக்கி உமையாள் பங்கா!
மறைஈறு அறியா மறையோனே!
தேனே அமுதே சிந்தைக்கு அரியாய்!
சிறியேன் பிழைபொறுக்கும்

என்னை இவ்வுலக வாழ்க்கையில் இருக்கச் செய்தாய், உன் அருளுக்கு உரியார் எல்லாரும் வந்து உன் திருவடிப் பேறு பெற்றனர். யான் அச்சம் காரணமாக வருந்துகிறேன். யான் யாது செய்வேன்? சொல்லி அருள்வாயாக,

நின் திருவடியாரால், அவருள் ஒருவனாக வைத்துப் பேசப் பட்டேன், இறைவனாகிய நின்னால் திருநீறு பூசப்பட்டேன். ஆனால் உலகத்தவரால் நின் அடியான் என்று இகழ்ந்து பேசப் பட்டேன். இனியும் யான் துன்பப் படுவது தாங்க ஒண்ணாதது. நின் அடியேனாகிய யான் நினக்கே ஆளானேன்; நின் திருவடிப் பேறே விரும்பினேன்.

எங்கள் சிவ உலகத் தலைவனே! மெய்யடியவராக உள்ள எல்லோரும் உன்னை அணுகி உன் திருவடி நிழலைப் பெற்றனர். துன்பம் தரும் ஊன் உடலாகிய இதனை யான் விடவும் மாட் டேன்; கடியவன் யான். உன்னைக் கண்கள் நிறையக் காணும் வழியையும் அறிகிலேன். இவற்றை நோக்கும் போது யான் உனக்கு அடியவன் அல்லேனோ? நீ தான் என்னை ஆட்கொண்ட தில்லையோ! இன்னதென்று யான் அறிகிலேன்,

உயர்ந்த ஒளிப்பிழம்பே, ஆணாகப் பெண்ணாக உள்ள வனே, நிறைந்த அமுதமானவனே! எங்கள் தந்தையே! தலை வனே! உன்னைக் காணும் வழி தெரியாதவன் ஆகிய அடியேன் அக் காலத்தில் கண்டேன் என்றாலும், பயனிலாதன பேசி எனக்கு என்ன செய்து கொண்டேன்! வலிமையும் நாணமும் இல்லாதவன், நாய் போன்ற இழிதகையேன், பயனிலாது ஒழிந்தேன். இனி எதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு உய்வேன்?

மான் போன்ற விழிகளை உடைய இறைவியை ஒரு பங்கில் உடையவனே! மறை முடிவுகளும் உணராத மறை பொருளாக இருப்பவனே! தேனே! அமுதே! மனத்திற்கு எட்டாதவனே! சிறுமையுடைய எனது குற்றங்களைப்

கோனே சிறிதே கொடுமை பறைந்தேன்
சிவமா நகர் குறுகப்
போனார் அடியார் யானும் பொய்யும்
புறமே போந்தோமே!

**புறத்தே சென்றோம்!**

86 புறமே போந்தோம் பொய்யும்
யானும் மெய்யன்பு
பெறவே வல்லேன் அல்லா
வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சேர்ந்த அடியார்
மற்றொன்று அறியாதார்
சிறவே செய்து வழிவந்து
சிவனே! நின்தாள் சேர்ந்தாரே

**நின் திருவடிக்கு உரிய மெய்யன்பு தருக!**

87. தாராய், உடையாய்! அடியேற்கு
உன்தாள் இணையன்பு
பேரா உலகம் புக்கார் அடியார்
புறமே போந்தேன் யான்
ஊர்ஆ மிலைக்கக் குருட்டுஆ மிலைத்தாங்
குன்தாள் இணையன்பு
சாரா அடியேன் அயலே
மயல்கொண்டு அழுகேனே

**அவர்கள் தொழுதே உன்னைத் தொடர்ந்தார்கள்**

88. அழுகேன் நின்பால் அன்பாம்
மனமாய், அழல்சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார்
பொன்னார் கழல்கண்டு
தொழுதே உன்னைத் தொடர்ந்தா
ரோடும் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண்டு
உன்னைப் பணிகேனே?

**குளிர்ந்த நின் திருவடி நிழல் தருக!**

89. பணிவார் பிணிதீர்த்து அருளிப்
பழைய அடியார்க்கு உன்
அணியார் பாதம் கொடுத்தி;
அதுவும் அரிதென்றால்

பொறுத்தருளும அரசே; ஆற்றாமையில் சிறிது கடுஞ்சொற் கூறி விட்டேன். மெய்யடியார் எல்லாரும் பெருமையுள்ள உன் சிவநகர் அணுகச் சென்றனர். யானும் என் பொய்யும் அங்குச் செல்ல முடியாது புறத்தே சென்றோம். அருள்புரிவாயாக.

சிவபெருமானே, உன்னிடம் முழுமையாகச் சார்ந்து கொண்ட அடியார் வேறு ஒன்றும் அறியாராய்ச் சிறப்பான செயல் செய்து நெறிப்பட வந்து நின் திருவடிக்கண் சேர்ந்தனர். நானும் பொய்யும் புறமே சென்றோம். அதற்கு மேலும் மெய் யன்பைப் பெறுதற்கே முடியாத தன்மையையும் பெற்றிருக்கி றேன். இன்ன செய்வது என்று அறிகிலேன், அருள்புரிவாயாக.

உடையவனே! மெய்யன்பு மிக்க அடியார் வீட்டுலகு எய்தினர். நானோ அதற்குப் புறம்பான இடத்தை அடைந்தேன். ஊர்ப் பசுக்கள் கத்துவது கேட்டு குருட்டுப் பசு அதுவும் கத்து வது போல உன் திருவடி இணைக்கு, அன்பு செலுத்தும் நிறை வில்லாத அடியேன் அதற்குப் புறம்பான மயலில் கிடந்து அழு கின்றேன். ஆகவே அடியவனாகிய எனக்கு நின் திருவடித் துணை பற்றும் மெய்யன்பு தருவாயாக.

நின்னிடத்துக் கொண்ட அன்புருவமான உள்ளத்தினராக, ஒளி பொருந்திய நின் பொன் போன்ற திருவடிகள் காணப் பெற்று, தீயிற் பட்ட மெழுகு போன்றவர்களாகத் தொழுத வாறே உன்னைப் பற்றித் தொடர்ந்த மெய்யடியாரோடும் தொடர்ந்து வராமல் தனிமைப்பட்டு அழலானேன். ஆகவே பயனின்றிப் பிறந்தவனாகிய யான் எதனைப் பற்றுக்கோடாகக் கொண்டு உன்னை வழிபடுவேன்?

பொய் தீர்தற்குக் காரணமான மெய்ப் பொருளானவனே! உன்னை வழிபடுவோராகிய பண்டை அடியார்க்குப் பிறவி நோய் ஒழித்து, உன் அழகு மிக்க திருவடியைக் கொடுக்கின்றாய். எனக்கு அங்ஙனம் தருவது அரியது என்றாலும் வலிமை மிக்க

திணியார் மூங்கில் அனையேன்
வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்துஒல்லை
தாராய் பொய்தீர் மெய்யானே!

**அழுதால் உன்னைப் பெறலாமா?**

90. யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே?
தேனே! அமுதே! கரும்பின் தெளிவே! தித்திக்கும்
மானே! அருளாய் அடியேன் உனைவந்து உறுமாறே

## 10 ஆனந்தாதீதம்

இருள் நீங்கப் பெற்று ஒளி விளக்கம் போலப் பேரின்ப விளக்கம் எய்தி ஆனந்தத்தில் உயிர் அழுந்தித் தன்வயம் 'அழிதலின் மேம்பட்ட நிலைமை. ஆனந்த ஆதீதம்–மேலான இன்பம். ஆசிரிய விருத்தங்கள் பத்து இதில் அமைந்துள்ளன.

**மானுடமாக வந்து பார்வைத் தீட்சை தந்தாய்.**

91. மாறுஇ லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொள் தாள்இணை
வேறுஇ லாப்பதம் பரிசு பெற்றநின்
மெய்ம்மை அன்பருள் மெய்ம்மை மேவினார்
ஈறுஇ லாதநீ எளியை ஆகிவந்து
ஒளிசெய் மானுட மாக நோக்கியும்
கீறுஇ லாதநெஞ் சுடைய நாயினேன்
கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே

**என்னைப் பொய்யில் விட்டுப் போவதோ?**

92. மைஇ லங்குநற் கண்ணி பங்கனே!
வந்துஎ னைப்பணி கொண்ட பின், மழக்
கையி லங்குபொற் கிண்ணம் என்றலால்
அரியை என்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்!
மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினார்
பொய்யில் அங்குஎனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே?

**என் வினைக்கு ஒரு முடிவு இல்லையா?**

93. பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை உண்மையேன்
'போத' என்று எனைப் புரிந்து நோக்கவும்
வருத்தம் இன்மையேன் வஞ்சம் உண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே!

(கல்) மூங்கில் போன்றவனாகிய என்னுடைய வினைப் பயன்களைச் சாம்பராக்கி விரைந்து வந்து உனது குளிர்ச்சி பொருந்திய திருவடிகளைத் தந்தருள்வாயாக.

தேனும் அமுதமும் கரும்பின் தெளிந்த சாறுமாக உள்ளவனே!

இனிமை வடிவான எம்மானே! யான் பொய்யனே, என் உள்ளமும் கள்ளம் உடையது. என் அன்பும் போலி. அவ்வாறாயின் தீவினையேனாகிய யான் வருந்தி அழுதால் உன்னை அடையலாமா? அடியேன் உன்னை வந்து அடைய அருள் புரிவாயாக.

என்றும் மாறுபடுதல் இல்லாத அருட்பெருக்கே! தாமரை மலர் போன்ற உன் திருவடிக்கண் வேற்றுமையின்றிக் கலத்தற்கு உரிய பக்குவத்தன்மை பெற்ற உன் உள்ளன்பர் முன்னால் வந்து உன் திருவடியின்பம் எய்தினர். அழிவிலாத நீ எளிமை உடையை ஆகி ஒளிபொருந்திய மானுட வடிவில் (அருட்குருவாக) எழுந்தருளி என்பால் அருட்பார்வை செய்தும், பிளவு படாத வலிய நெஞ்சுடைய, நாய் போன்றவனாகிய யான் அடைந்த இவ் இழிவினால் கடைப்பட்டவன் ஆயினேன்.

மை விளங்கும் அருள் விழிகளை உடைய இறைவியை ஒரு கூற்றில் உடையவனே! திருமேனியில் விளங்கும் திருநீற்றின் வெண்ணிறம் உடையவனே! நீ எழுந்தருளி வந்து என்னை ஆட்கொண்ட பின்னர், குழந்தை தன் கையிலுள்ள பொற்கிண்ணத்தை எளிமையாக எண்ணுவது போல எண்ணினேன், அடைதற்கு அரிய பொருளாவாய் என்று உன்னை யான் நினைத்தேனில்லை. மெய்யன்பர் உன் வீட்டின்பமாகிய அழிதலில்லாத வாழ்க்கையை அடைந்தனர். என் பொய்ம்மையான வாழ்க்கையில் புகும்படி விட்டு நீ சிவபுரம் போய்விடுவது பொருந்துமா? கூறியருள்க.

செந்தாமரை மலர் போன்ற திருவடிகளை உடையாய்! சிவந்த திருமேனியாய்! எனக்குச் சிறப்பு உரிமையான எங்கள் தலைவா! திருவடிப் பேற்றுக்கு உரிய தகுதி இல்லாதவன், பொய்யுடையவன், அத்தகைய சிறுமை உடைய எளியேனை 'வருக!' என்று விரும்பி அருட்பார்வை நல்கவும், யானே வருதற்கு

அரத்த மேனியாய்! அருள்செய் அன்பரும்
நீயும் அங்கெழுந் தருளி இங்குஎனை
இருத்தி னாய்,முறை யோ? என் எம்பிரான்!
வம்ப னேன்வினைக்கு இறுதி இல்லையே!

**மீண்டும் உன் திருவடிக் காட்சி தருவாயா?**

94. இல்லை நின்கழற்கு அன்பது, என்கணே;
ஏலம் ஏலுநற் குழலி பங்கனே!
கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டு
என்னை நின்கழற்கு அன்பன் ஆக்கினாய்;
எல்லை இல்லைநின் கருணை; எம்பிரான்!
ஏது கொண்டு நான் ஏது செய்யினும்;
வல்லை யே எனக்கு இன்னும் உன்கழல்
காட்டி மீட்கவும்; மறுவில் வானனே!

**எதற்காக ஞானக்கூத்து ஆட வைத்தாய்?**

95. வான நாடரும் அறியொ ணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடரும் தெரியொ ணாதநீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா!
ஊனை நாடகம் ஆடு வித்தவா?
உருகி நான்உனைப் பருக வைத்தவா!
ஞான நாடகம் ஆடு வித்தவா!
நைய வையகத்து உடைய இச்சையே!

**நச்சு மரமானாலும் வெட்ட மனம் வருமா ?**

96. விச்சது இன்றியே விளைவு செய்குவாய் ;
விண்ணு மண்ணகம் முழுதும் யர்வையும்
வைச்சு வாங்குவாய்; வஞ்ச கம்பெரும்
புலைய னேனை உன் கோயில் வாயிலில்
பிச்சன் ஆக்கினாய் ; பெரிய அன்பருக்கு
உரியன் ஆக்கினாய் ; தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமரம் ஆயி னுங்கொலார் ;
நானும் அங்ஙனே உடைய நாதனே !

முயற்சி இல்லாதவன், ஏமாற்றும் தன்மை உடையவன், அதனால் யான் ஒழிந்தேனும் இல்லை. உன்னால் அருள் செய்யப் பெற்ற மெய்யன்பரும் நீயும் மேலாம் சிவபுரத்திற்கு எழுந்தருளிச் சென்று இங்கு இப் பொய்யுலக வாழ்வில் என்னை இருக்கப் பணித்தல் முறையாகுமா? பயனிலியாகிய என் வினைக்கு அழிவே இல்லையா?

குற்றம் இல்லாத நுண்ணிய அறிவு வெளியில் இருப்பவனே, மயிர்ச் சாந்து பொருந்திய அழகிய கூந்தலை உடைய உமை யம்மையை ஒரு கூற்றில் உடையவனே! எம்பெருமானே!

உன் திருவடிக்கு என்னிடம் மெய்யன்பு இல்லை. வன்மை யான கல்லைக் கனிந்த பழம் ஆக்கும் வித்தை காட்டி அடி யேனை உன் திருவடிக்கு அன்புடையனாகச் செய்தாய்! யான் எதனைக் கருவியாகக் கொண்டு எச் செயல் செய்தாலும் உன் பேரருளுக்கு வரம்பு கிடையாது. ஆதலால் சிறியேனாகிய எனக்கு மீண்டும் உன் திருவடிக் காட்சி யளித்து இவ்வுலக வாழ்க்கையினின்று மீட்டுக்கொள்ள ஆற்றல் உடையை அல்லவா?

விண்ணுலகத் தேவரும் அறிய முடியாத நீ, தொன்மை யான மறைகளின் முடிபாக உள்ள பகுதியாகிய அறிவுக் கூறும் தொடர்ந்து சென்ற பற்ற முடியாத நீ, மற்ற உலகத்தவரும் தெரியமுடியாத நீ, இனிமையுற எளியேனை ஆண்டு கொண்ட தன்மையும், ஊனுடலோடு என்னை ஆடும்படி செய்த தன்மை யும் யான் உள்ளம் நெகிழ்ந்து கரைந்து உன் திருவருள் அமுதை உண்ணும்படி செய்த தன்மையும் அதனால் ஞானக்கூத்து ஆடும் படி செய்த தன்மையும் இவ்வுலகத் தொடர்பான அவா ஒழிதற் பொருட்டு அல்லவா ?

வித்து ஆகிய முதற் காரணம் இல்லாமலே விளையுள் உண்டாக்குவாய்; வானம் நிலம் முதலிய உலகங்களை எல்லாம் குறைவின்றி நிலைக்க வைத்து அழித்து விடுவாய். அத்தகைய நீ, வஞ்சகனும் மிக இழிதகையனும் ஆகிய என்னை உன் திருக் கோயில் வாயிற்கண் பித்தன் ஆகச் செய்தாய், பேரன்பு உடைய அடியார்க்கு உரியனாகவும் ஆக்கி வைத்தாய். உலகில் மக்கள் தாம் வளர்த்தது ஒரு நச்சு மரமானாலும் அதைத் தாமே அழிக்க மாட்டார். எளியேனை ஆளாக உடைய தலைவனே! நானும் அப்படியே ஆவேன். ஆதரிக்க வேண்டுகின்றேன்.

**என் பெருங் கருணையாளனே, போற்றி**

97. உடைய நாதனே! போற்றி! நின்னலால்
பற்று மற்றெனக்கு ஆவது ஒன்றுஇனி
உடைய னோ?பணி போற்றி! உம்பரார்
தம்ப ராபரா! போற்றி! யாரினும்
கடையன் ஆயினேன் போற்றி! என்பெருங்
கருணை யாளனே போற்றி! என்னைநின்
அடியன் ஆக்கினாய் போற்றி! ஆதியும்
அந்தம் ஆயினாய் போற்றி! அப்பனே!

**வையகத்து நான் நைந்து போகுமாறு விட்டு வைப்பதா?**

98. அப்ப னே!எனக்கு அமுதனே!ஆ
னந்த னே!அகம் நெகஅள் ஊறுதேன்
ஒப்ப னே!உனக்கு உரிய அன்பரில்
உரிய னாயுனைப் பருக நின்றதோர்
துப்ப னே! சுடர் முடிய னே!துணை
யாள னே!தொழும் பாளர் எய்ப்பினில்
வைப்ப னே!எனை வைப்ப தோ!சொலாய்,
நைய வையகத்து, எங்கள் மன்னனே!

**"வருக" என்று கட்டளை இடுவாயாக**

99. மன்ன எம்பிரான்! 'வருக'என் எனை;
மாலும் நான்முகத் தொருவன், யாரினும்
முன்ன எம்பிரான்! 'வருக'என் எனை;
முழுதும் யாவையும் இறுதி யுற்றநாட்
பின்ன எம்பிரான்! 'வருக'என் எனைப்;
பெய்க ழற்கண்அன் பாய்என் நாவினால்
பன்ன எம்பிரான்! 'வருக'என் எனைப்
பாவ நாச!நின் சீர்கள் பாடவே!

**வீடு தந்து அருளுக, வணக்கம்!**

100. பாட வேண்டுநான் போற்றி! நின்னையே
பாடி, நைந்துநைந் துருகி நெக்குநெக்கு
ஆட வேண்டுநான்; போற்றி! அம்பலத்து
ஆடு நின்கழற் போது, நாயினேன்
கூட வேணடுநான்; போற்றி! இப்புழுக்
கூடு நீக்கெனைப்; போற்றி! பொய்எலாம்
வீட வேண்டுநான்; போற்றி வீடுதந்து
அருளு; போற்றிநின் மெய்யர் மெய்யனே!

திருச்சிற்றம்பலம்

முதலும் முடிவுமாக விளங்குகின்றவனே! வணக்கம். மேல் உலகத்தவர்க்கு நிகர் அற்ற மேலான பரம்பொருளே! வணக்கம். நான் எல்லாரினும் கடைப்பட்டவன் ஆயினேன்! வணக்கம். என்னிடம் பெருங்கருணை காட்டுபவனே! வணக்கம். என்னை உனக்கு ஆளாகக் கொண்ட தலைவனே, வணக்கம். அப்பனே! அடியேனுக்கு ஆதரவான பற்றுக்கோடு வேறு எதுவும் உடைய னோ? உரைத்தருள்வாயாக. வணக்கம்.

எனக்கு அப்பனே! எனக்கு அருமருந்தாக விளங்குபவனே! பேரின்பம் ஆனவனே! உள்ளம் இளக, வாய் ஊறுதற்குக் காரண மான தேன் போன்றவனே! உன்னிடம் அன்புரிமை பூண்ட மெய்யன்பரைப் போல நானும் உன்னை அருந்தக் கிடைத்த உண் பொருளாக இருப்பவனே! ஒளி வீசும் திருமுடியை உடைய வனே! அடியேமாகிய எங்கள் காவலனே! இளைத்த அடியார்க்குத் தளர்ச்சிக்கண் உதவும் சேம நிதியாக உள்ளவனே! எங்கள் மன்னவனே! இவ் வுலக வாழ்க்கையில் கிடந்து நான் நைந்து போகுமாறு என்னை விட்டு வைக்கலாமா? உரைத்தருள்வாய்.

என்றும் நிலைத்திருக்கும் எம்பெருமானே! எளியேனை 'வருக' என்று பணித்தருள்க! திருமால் பிரமன் முதலிய பிற தேவர்கள் யாவரினும் முன்னவனான எங்கள் தலைவனே! 'வருக' என்று னெக்குக் கட்டளை தருக. எல்லாம் அழிவு எய்திய பின்னரும் நிலைத்திருக்கும் எம் பெருமானே! எளியேனை 'வருக' என்று பணித்தருள்க! கழல் அணிந்த உன் திருவடி களிடத்து அன்புடன் என் நாவினால் புகழ்ந்து பாராட்டவும் உன் பெருமைகளை இசைத்துப் பாடவும், பாவங்களை அழிப்ப வனே! என்னை 'வருக' என்று பணித்தருள்வாயாக,

உன்னிடம் உள்ளன்பு உள்ள அடியார்க்கு மெய்ப்பொரு ளாக உள்ளவனே! வணக்கம். உன்னையே நான் பாடவேண்டும், வணக்கம். உள்ளம் தன்னை இழந்து உருகிக் கனிந்து நான் கூத்தாட வேண்டும் வணக்கம். தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடும் நின் திருவடி மலரை, நாயின் இயல்பினனான எளியேன் அடைதல் வேண்டும். வணக்கம். அதன் பொருட்டு அடியேனைப் புழுக் களின் இருப்பிடமாகிய இவ் வுடலினின்றும் விடுவித்தருளல் வேண்டும் வணக்கம். நான் இப் பொய்யான வாழ்வின் தொடர்பு கள் எல்லாவற்றையும் விட்டுவிடச் செய்தல் வேண்டும். நிலை பேரின்பமாகிய வீட்டுநிலையைத் தந்தருளுவாயாக, வணக்கம். ○

## ஆறு

# நீத்தல் விண்ணப்பம்

இறைவனின் திருவருளாம் அமுதப் பெருங்கடலில் அன்பரெல்லாம் திளைத்திருக்கத் தம்மை மட்டும் இடையே கைவிட்டமை கருதி வருந்தி, அவ்வாறு கைவிடுதல் தகுமோ? என்று இறைவனிடம் முறையிட்டுக் கொள்ளுதல், **நீத்தல் விண்ணப்பம்** என்பதன் பொருளமைதி ஆகும்.

'பிரபஞ்ச வைராக்கியம்' என்பது இதன் மையக் கருத்து என்ப. உலக வாழ்க்கையை வெறுத்தல் என்பது அதன் பொருள். ஐம்பது கட்டளைக் கலித்துறைச் செய்யுள்கள் இதில் அடங்கியுள்ளன. அந்தாதி எனப்படும் முடிமுதல் யாப்பாகக் 'கடையவனேனை' எனத் தொடங்கிக் 'கடையவனே' என்று இது முடிவடைகிறது.

உத்தர கோச மங்கை எனற சிவ தலத்தில் அருளப்பெற்றவை இச் செய்யுள்கள். இவற்றுள் முதல் இருபது செய்யுள்களிலும் நாற்பத்தெட்டாவது செய்யுளிலும் உத்தர கோச மங்கை குறிப்பிடப்பட்டுள்ளது.

திருச்சிற்றம்பலம்

1. கடையவ னேனைக் கருணையி
 னால்கலந்து ஆண்டுகொண்ட
 விடையவ னே!விட் டிடுதிகண்
 டாய்?விறல் வேங்கையின்தோல்
 உடையவ னே!மன்னும் உத்தர
 கோசமங் கைக்கரசே!
 சடையவ னே! தளர்ந் தேன்,எம்
 பிரான்! என்னைத் தாங்கிக் கொள்ளே!

2. கொள்ஏர் பிளவுஅக லாத்தடம்
 கொங்கையர் கொவ்வைச் செவ்வாய்
 விள்ளேன் எனினும் விடுதிகண்
 டாய்? நின் விழுத்தொழும்பின்
 உள்ளேன் புறம்அல்லேன் உத்தர
 கோசமங் கைக் கரசே!
 கள்ளேன் ஒழியவும் கண்டுகொண்(டு)
 ஆண்டது எக் காரணமே?

இறைவன் தமக்கு அருள் தந்து பிரிந்து சென்றமையால் பெரிதும் மனம் நொந்த அடிகள், அங்ஙனம் இறைவன் தம்மை விட்டுப் பிரிந்து சென்றமைக்குக் காரணம் தம் மெய்யன்புக் குறைவும் உலகின்பச் சார்வும் என்று கருதி நைந்து உருகிப் பாடுகிறார். மாசற்ற பொன்னாகச் சுடரும் இயல்பினராகிய அடிகள் தம்மிடம் ஐம்புல அவா, காம வேட்கை, பொய் யொழுக்கம் ஆகியன இருப்பதாக நினைந்து சொல்லொணாத் துயர் உறுகிறார். அவரது கூற்று வாசிப்பவர் நெஞ்சை நெருப்பிற் பட்ட மெழுகாக உருக்கி விடுகிறது. தளைகளின் ஆசையால் இயங்கும் உலக மக்கள் யாவரையும் உளப் போராட்டத்தில் ஈடுபடுத்தி மாசு களைந்து களியாக் களிப்புக்கு ஆளாக்கும் அனுபவஞ் செறிந்த பாடல்கள் இவை என்பதை, மீட்டும் மீட்டும் ஓதுவார் எவரும் ஆழ்ந்து உணருவர். ○

உன் பணிக்குத் தகுதியற்ற கடைப்பட்டவனாகிய சிறியேனைக் கருணை காரணமாக உடல் உயிர் உணர்வு ஆகியவற்றில் ஒன்றாகி ஆட்கொண்டருளிய, காளை ஊர்தியனே! அடியேனைக் கைவிட்டு விடுவாயோ?

வலிமை உள்ள புலியின் தோலை ஆடையாக உடையவனே! நிலையான உத்தரகோச மங்கையில் எழுந்தருளியுள்ள அருள் அரசே! சடைக் கற்றை தாங்கியவனே! எம் பெருமானே! சோர் வடைந்தேன். அடியேனைத் தாங்கிக் காத்தருள்வாயாக.

கொள்ளுப் பயற்றைப் பிளந்தாற் போன்ற அளவு கூட இடைவெளி இல்லாத அழகிய அடி அகன்ற கொங்கைகளை உடைய மாதரின் கொவ்வைப் பழம் போன்ற சிவந்த வாய் இதழினின்றும் நீங்கேன் என்றாலும் உன் சிறந்த தொண்டிலே இருக்கிறேன். அதற்குப் புறம்பானவன் அல்லேன். என்னைக் கைவிடுவாயோ? உத்தர கோச மங்கையில் எழுந்தருளியுள்ள அருள் அரசே! வஞ்சகனாகிய அடியேன் உன்னை விட்டுச் செல்லவும் அதனைக் கண்டு பிடித்து நீ ஆட்கொண்டதன் காரணம் என்னவோ?

3. கார்உறு கண்ணியர் ஐம்புலன்
ஆற்றங் கரைமரமாய்
வேர்உறு வேனை விடுதிகண்
டாய்? விளங் கும் திருவா
ரூர் உறை வாய்! மன்னும் உத்தர
கோசமங் கைக் கரசே!
வார்உறு பூண்முலை யாள்பங்க!
என்னை வளர்ப்பவனே!

4. வளர்கின்ற நின் கரு ணைக்கையில்
வாங்கவும் நீங்கி இப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதிகண்
டாய்? வெண் மதிக்கொழுந்து ஒன்று
ஒளிர்கின்ற நீள்முடி உத்தர
கோசமங் கைக் கரசே!
தெளிகின்ற பொன்னுமின் னும் அன்ன
தோற்றச் செழுஞ்சுடரே!

5. செழிகின்ற தீப்புகு விட்டிலில்
சின்மொழி யாரிற்பன்னாள்
விழுகின்ற என்னை விடுதிகண்
டாய்? வெறி வாய் அறுகால்
உழுகின்ற பூமுடி உத்தர
கோசமங் கைக்கரசே!
வழிநின்று நின் அருள் ஆரமுது
ஊட்ட, மறுத்தனனே!

6. மறுத்தனன் யான்உன் அருள், அறி
யாமையில், என்மணியே!
வெறுத்துஎனை நீவிட் டிடுதிகண்
டாய்? வினை யின் தொகுதி
ஒறுத்து எனை ஆண்டுகொள் உத்தர
கோசமங் கைக் கரசே!
பொறுப்பர் அன் றேபெரி யோர்சிறு
நாய்கள் தம் பொய்யினையே?

கொடையால் திகழும் திருவாரூரில் எழுந்தருளியிருப்பவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கை அருள் அரசே! கச்சுப் பொருந்திய, அணிகலன் அணிந்த மார்பையுடைய அம்மையை ஒரு கூற்றில் உடையவனே! என்னைக் காத்து வளர்ப்பவனே! கருநிறக் கண்கள் உள்ள மகளிரைப் பற்றிய ஐம்புலன்கள் ஆகிய ஆற்றங்கரையில் மரம் போல வேர் ஊன்றி இருப்பவனாகிய என்னைக் கைவிட்டு விடுவாயா?

வெள்ளிய பிறை ஒளிர்கின்ற நீண்ட சடைமுடி உடைய, உத்தர கோச மங்கைக் கண் உள்ள அருள் அரசே! உருக்கித் தெளிய வைத்த பொன்னையும் மின்னலையும் போன்ற காட்சி யுடைய பேரொளிப் பிழம்பே!

வளர்ந்து பெருகும் நின் அருள்மிக்க கையினால் வளைத்து இருக்கவும் அதற்கு அகப்படாமல் விலகி இப் பொய்யான உலக வாழ்க்கையில் செருக்கிக் களிக்கும் சிறியேனைக் கைவிட்டு விடு வாயா?

தேன் படிந்த வாயினவாகிய வண்டுகள் கிண்டுகிற கொன்றை மாலை அணிந்த முடியினை உடைய, உத்தரகோச மங்கையில் எழுந்தருளியுள்ள அருள் அரசே! வழி மறித்து நின்று உன் அருள் ஆகிய அரிய அமிழ்தத்தை ஊட்டவும் ஏற்றுக் கொள்ளாமல் மறுத்தனன். மிகுகின்ற தீயின்கண் விழும் விட்டிற் பூச்சியைப் போல நான், நிரம்ப மொழிகளை உடைய மகளிரிடத்துப் பல காலம் விரும்பிக் கிடக்கின்ற சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ?

சிறந்த செல்வமாகிய, என் மாணிக்க மணியே! சிறி யேன் என் அறியாமையால், நீ ஊட்டிய அருள் ஆகிய ஆரமு தை உண்ண மறுத்தேன்;, ஆகவே வெறுத்து என்னை விட்டு விடாதே.

என் முந்தைய வினை முழுதும் கடிந்து என்னை ஆண்டு கொள்வாயாக, உத்தர கோச மங்கையில் எழுந்தருளியிருக்கும் அருள் அரசே! இழிந்த நாய்கள் போன்ற சிறியோரின் பொய் யொழுக்கத்தைப் பெரியோர்கள் பொறுத்துக் கொள்வர் அல்லவா?

7 பொய்யவ னேனைப் பொருள்என
ஆண்டு ஒன்று பொத்திக் கொண்ட
மெய்யவ னே! விட்டிடுதிகண்
டாய்? விடம் உண்மிடற்று
மையவ னே!மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே!
செய்யவனே! சிவ னே! சிறி
யேன்பவம் தீர்ப்பவனே!

8. தீர்க்கின்ற வாறுஎன் பிழையைநின்
சீர் அருள் என்கொல் என்று
வேர்க்கின்ற என்னை விடுதிகண்
டாய்? விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை உத்தர
கோசமங் கைக்கரசே!
ஈர்க்கின்ற அஞ்சொடு அச் சம்வினை
யேனை இருதலையே.

9. இருதலைக் கொள்ளியி னுள்எறும்பு
ஒத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண்
டாய்? வியன் மூவுலகுக்கு
ஒரு தலை வா! மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே!
பொருதலை மூவிலை வேல்வலன்
ஏந்திப் பொலிபவனே!

10. பொலிகின்ற நின்தாள் புகுதப்பெற்று
ஆக்கையைப் போக்கப்பெற்று
மெலிகின்ற என்னை விடுதிகண்
டாய்? அளி தேர்விளரி
ஒலிநின்ற பூம் பொழில் உத்தர
கோசமங் கைக்கரசே!
வலிநின்ற திண்சிலை யால்எரித்
தாய், புரம் மாறுபட்டே !

நஞ்சு உண்ட கழுத்திடத்துக் கரிய நிறம் உடையவனே! நிலையான உத்தர கோச மங்கையில் எழுந்தருளியுள்ள அருள் அரசே! சிவந்த மேனியனே! இன்ப வடிவினனே! சிறியேனாகிய என் பிறப்பை ஒழிப்பவனே! பொய்யுடைய என்னை ஒரு பொருளாக மதித்து ஆண்டுகொண்டு உன் அருள் காரணமாக அடியேனின் பொய்யை மறைத்து ஏற்றுக் கொண்ட மெய்ப் பொருளாக உள்ளவனே! என்னைக் கைவிட்டு விடுவாயோ?

மாற்றார் அஞ்சுமாறு ஒலிக்கும் கிண்கிணி மாலை அணிந்த காளையை ஊர்தியாக உடைய உத்தரகோச மங்கை அருள் அரசே!

தீவினையுடைய அடியேனை, ஐம்புலன்களும் அச்சமும் நின்று இரு பக்கத்தும் இழுக்கின்றன ஆகலின், என் குற்றங்களை உன் சிறப்பு மிக்க அருட் பண்பு தீர்க்கின்ற வகை எவ்வாறு என்று மனம் புழுங்குகின்ற அடியேனைக் கைவிட்டு விடுவாயோ?

மேல் கீழ் நடு என்னும் பெரிய உலகங்கள் மூன்றுக்கும் தனிப்பெருந் தலைவனே! நிலைத்தல் பொருந்திய உத்தர கோச மங்கையில் உறையும் அருள்அரசே!

போர் செய்தற்கு உரிய இலை போலும் நுனி மூன்று உடைய வேலாகிய சூலப் படையை வெற்றி உண்டாக வலக் கையில் ஏந்தி விளங்குபவனே; இருபுறம் பற்றி எரியும் நெருப் பினை உடைய ஒரு கொள்ளியின் உட்புறத்தில் அகப்பட்ட எறும்பு போல, உன்னைப் பிரிந்த காரணத்தால் தலைவிரி கோலத்துடன் இடர்ப்படுவேனை விட்டு விடுவாயோ?

வண்டுகள் பழகிப் பாடும் விளரி என்னும் இசை நிலை பெற்ற பூஞ்சோலைகள் உள்ள உத்தர கோச மங்கையின் அருள் தலைவா! முப்புரங்களுடன் முரண்பட்டு வலிமை மிக்க உறுதி யான மேருமலையை வில்லாகக் கொண்டு அழித்தவனே! விளங்கும் உன் திருவடிக்கண் வந்து புகலாகச் சேரப் பெற்றும் உடம்பு எடுத்த பிறவியை வீணாக்கி வருந்துகின்ற சிறியேனைக் கைவிட்டு விடுவாயா ?

11. மாறுபட்டு அஞ்சு என்னை வஞ்சிப்ப
யான்உன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண்
டாய் ? வினை யேன் மனத்தே
ஊறுமட் டே ! மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே !
நீறுபட் டேஒளி காட்டும்பொன்
மேனி நெடுந்தகையே !

12. நெடுந்தகை நீஎன்னை ஆட்கொள்ள
யான்ஐம் புலன்கள் கொண்டு
விடுந்தகை யேனை விடுதிகண்
டாய்? விர வார்வெருவ
அடுந்தகை வேல்வல உத்தர
கோசமங் கைக்கரசே!
கடுந்தகை யேன்உண்ணும் தெண்ணீர்
அமுதப் பெருங்கடலே!

13. கடலினுள் நாய்நக்கி யாங்குஉன்
கருணைக் கடலின் உள்ளம்
விடல்அறி யேனை விடுதிகண்
டாய்? விடல்இல், அடியார்
உடல்இல மேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே!
மடலின்மட் டே!மணி யே!அமு
தே!என் மதுவெள்ளமே!

14. வெள்ளத்துள் நாவற்றி யாங்குஉன்
அருள்பெற்றுத் துன்பத்தினின்றும்
விள்ளக்கி லேனை விடுதிகண்
டாய்?விரும் பும்அடியார்
உள்ளத்துள் ளாய்!மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே!
கள்ளத்து ளேற்குஅரு ளாய்களி
யாத களிஎனக்கே!

15. களிவந்த சிந்தையொடு உன்கழல்
கண்டும் கலந்தருள
வெளிவந்தி லேனை விடுதிகண்
டாய்?மெய்ச் சுடருக்கெல்லாம்

தீவினையேன் உள்ளத்தில் ஊறும் தேனே! நிலையான உத்தரகோச மங்கைக் கண் உள்ள அருள் அரசே! திருநீறு பூசப் பட்டு ஒளி விளங்கும் பொன் மேனியை உடைய பெருமானே! ஐம்புலன்களும் மாறுபட்டு எளியேன் ஆகிய என்னை வஞ்சித்த லால் உன் அழகிய மலர் போன்ற திருவடிக்கு உரிய தொண்டி னின்றும் வேறுபட்டு ஒழுகும் சிறியேனை விட்டுவிடுவாயோ?

பகைவர் அஞ்ச அவரை அழிக்கும் தன்மையுடைய சூலப் படையில் வல்லவனே! உத்தரகோச மங்கையில் எழுந்தருளியுள்ள அருள்அரசே! கொடிய தன்மையுடைய சிறியேன் பருகுதற்கு உரிய தெளிந்த நீரையுடைய அமிழ்த மயமான பெருங்கடலே! உயர் தகைமை உடைய நீ எளியேனை ஆட்கொள்ள, நானோ ஐம்புலன் களைப் பொருளாகக் கொண்டு உன் சார்பை விட்டு ஒதுங்கும் தன்மையுடையேன் ஆயினேன். என்னை விட்டு விடுவாயோ?

விடாமல் உன்னையே பற்றிநிற்கும் மெய்யடியாரது உடம்பே ஆலயமாக அதில் நிலைபெற்று வீற்றிருக்கும் உத்தர கோசமங்கை அருள்அரசே! பூவிதழில் வரும் தேனே! மாணிக்க மணியே! அமுதமே! எனக்குக் கிடைத்த கள்ளின் பெருக்கே! கடலில் உள்ள நீரை நாய் நக்கிக் குடிப்பதுபோல, உன் அருட் பெருங் கடலின்கண் உள்ளத்தை விரும்பிச்செல்ல விடாத இச் சிறியவனைக் கைவிட்டு விடுவாயோ?

உன்னையே விரும்பும் அடியார்தம் உள்ளத்து எழுந்தருளு வோய்! நிலைப்பு உடைய உத்தரகோச மங்கையில் எழுந்தருளி யுள்ள அருள்அரசே! நன்னீர்ப் பெருக்கில் கிடந்தும் நாவரட்சிக்கு உள்ளானது போல் உன் அருட்பெருக்கினைப் பெற்றும் உலகத் துயரின் காரணமான துன்பத்தினின்று விலக ஆற்றல் இல்லாத எளியேனை விட்டுவிடுவாயோ? புலன் இன்பமாகிய வஞ்சனை யினுள் இருப்பேனாகிய சிறியேனுக்குப் பொறிபுலன்களால் வரும் மகிழ்ச்சி அல்லாத பெருமகிழ்ச்சியைத் தந்து அருள்வாயாக!

ஒளிவீசும் உண்மையான சுடர்ப் பொருள்களுக்கெல்லாம் ஒளிதரக் காரணமாக அமைந்த அழகிய திருவடிகளை உடைய, உத்தரகோச மங்கைப் பதிக்கண் உள்ள அருள்அரசே, எளிமை யாகக் காட்சி நல்கிய, எம் தந்தை முதலியோர்க்கும் தலைவனே,

ஒளிவந்த பூங்கழல் உத்தர
　　கோசமங் கைக்கரசே!
எளிவந்த எந்தைபி ரான் என்னை
　　ஆளுடை என்னப்பனே!

16. என்னை'அப் பா!அஞ்சல்!' என்பவர்
　　இன்றிநின்று எய்த்தலைந்தேன்
மின்னைஒப் பாய்!விட் டிடுதிகண்
　　டாய்? உவ மிக்கின் மெய்யே
உன்னைஒப் பாய்! மன்னும் உத்தர
　　கோசமங் கைக்கரசே!
அன்னைஒப் பாய்!எனக்கு அத்தன்ஒப்
　　பாய்!என் அரும்பொருளே!

17. பொருளே! தமியேன் புகலிட
　　மே!நின் புகழ்இகழ்வார்
வெருளே! எனைவிட் டிடுதிகண்
　　டாய்? மெய்ம்மை யார்விழுங்கும்
அருளே! அணிபொழில் உத்தர
　　கோசமங் கைக்கரசே!
இருளே! வெளியே! இகபரம்
　　ஆகி இருந்தவனே!

18. இருந்துஎன்னை ஆண்டுகொள் விற்றுக்கொள்
　　ஒற்றிவை என்னின்அல்லால்
விருந்தின னேனை விடுதிகண்
　　டாய்? மிக்க நஞ்சு அமுதா
அருந்தின னே! மன்னும் உத்தர
　　கோசமங் கைக் கரசே!
மருந்தின னே பிற விப்பிணிப்
　　பட்டு மடங்கினர்க்கே!

19. மடங்க என் வல்வினைக் காட்டைநின்
　　மன் அருள் தீக்கொளுவும்
விடங்க! என் தன்னை விடுதிகண்
　　டாய்? என் பிறவியையே

என்னை ஆளாக உடைய என் தந்தையே, மகிழ்வு மிக்க உள்ளத்தோடு உன் திருவடிக்காட்சி காணப் பெற்றும் நீ என்னோடு இரண்டறக் கலந்து அருளும் வண்ணம் சிறியேன் உலகியற் பிணிப்புகளை விட்டு வெளிவந்திலேன். என்னைக் கைவிட்டு விடுவாயோ?

மின்னல் ஒளிக்கு ஒப்பாக எனக்குத் திருக்காட்சி தந்தவனே, நிலையான திருவுத்தர கோச மங்கையின் அருள்அரசே, உண்மையாக உவமை கூறினால் தானே தனக்கு ஒப்பாக உள்ளாய், எனக்கு அரும்பொருளாக இருப்பவனே, எனக்குத் தாய்தந்தைக்கு ஒப்பாக இருப்பவனே, என்னைப் பார்த்து ''அப்பா அஞ்சாதே!'' என்று சொல்லுவார் இல்லையாக வருந்தி நின்று அலைந்து தளர்ந்தேன். இந்நிலையில் என்னைக் கைவிட்டுவிடுவையோ?

மெய்ப்பொருளே! துணையற்ற எனக்கு அடைக்கலமாக இருப்பவனே! நின்மெய்ப் புகழை இகழ்வோருக்கு அஞ்சத் தகும் பொருளே! மெய்யன்பாற் புகழ்வார் உண்ணும் அருள் அமுதே! அழகிய சோலை சூழ்ந்த திருவுத்தர கோச மங்கையின் அருள் அரசே! உண்மை தெரியாமல் புறப்பார்வையால் காண்பார்க்கு மறைபொருளாக இருப்பவனே! அகப்பார்வையால் கூர்ந்து நோக்குவார்க்கு வெளிப்படையான பொருளாக இருப்பவனே! என் இம்மை மறுமைகளில் உறுதுணையாக இருந்துவந் தவனே! எளியேனைக் கைவிட்டு விடுவாயோ?

கடலில் தோன்றிய மிகுந்த நெஞ்சை அமுத உணவாகக் கொண்டு உண்டவனே! நிலைபெற்ற உத்தர கோச மங்கையில் எழுந்தருளியுள்ள அருள் அரசே! பிறவி நோயில் சிக்கிச் செய லற்றவர்க்குப் பிணி போக்கும் மருந்தாக உள்ளவனே! என் நெஞ்சில் அமர்ந்தருளி, என்னை ஆண்டு கொள்க! விற்றுக் கொள்க! ஒற்றி வைத்துக் கொள்க! என்று கூறுவது தவிர வேறு ஒன்றும் செய்தற்குத் தகுதியில்லாத, தவத்திற்குப் புதியவனாகிய என்னை விட்டுவிடுவாயோ?

திருவுத்தரகோச மங்கையில் வீற்றிருக்கும் அருள் அரசே! மலை போன்ற கொடிய யானையின் [அசுரனின்] தோலை உரித்து, வஞ்சிக் கொடி போலும் உமையம்மை அஞ்சச் செய்த

றொடுங்களைந்து ஆண்டுகொள், உத்தர
கோசமங் கைக்கரசே!
கொடுங்கரிக் குன்றுஉரித்து அஞ்சுவித்
தாய் வஞ்சிக் கொம்பினையே!

20. கொம்பரில் லாக்கொடி போல்அல
மந்தனன் கோமளமே!
வெம்புகின் றேனை விடுதிகண்
டாய்? விண்ணர் நண்ணுகில்லா
உம்பர்உள் ளாய்! மன்னும் உத்தர
கோசமங்கைக் கரசே!
அம்பர மேநில னே அனல்
காலொடு அப் பானவனே!

21. ஆனைவெம் போரில் குறுந்தூறு
எனப் புலனால் அலைப்புஉண்
டேனை,எந் தாய்! விட் டிடுதிகண்
டாய்? வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையும் கன்ன
லையும்அமு தத்தையும்ஒத்து
ஊனையும் என்பினை யும்உருக்
கா நின்ற ஒண்மையனே!

22. ஒண்மைய னே!திரு நீற்றைஉத்
தூளித்து ஒளிமிளிரும
வெண்மைய னே!விட் டிடுதிகண்
டாய்? மெய் யடியவர்கட்கு
அண்மைய னே!என்றும் சேயாய்
பிறர்க்கு! அறி தற்கரிதாம்
பெண்மைய னே!தொன்மை ஆண்மைய
னே!அலிப் பெற்றியனே!

23. பெற்றது கொண்டு பிழையே
பெருக்கிச் சுருக்கும் அன்பின்
வெற்றுஅடி யேனை விடுதிகண்
டாய்?விடி லோகெடுவேன்
மற்றுஅடி யென்தன்னைத் தாங்குநர்
இல்லைஎன் வாழ்முதலே!
உற்றுஅடி யேன்மிகத் தேறிநின்
றேன் எனக்கு உள்ளவனே!

வனே! அடியயனது வலிய தீவினைக் காட்டை ஒடுங்கி யழியு மாறு நின் சிறந்த அருளாகிய நெருப்பிட்டுக் கொளுத்தும் ஆண்மை மிக்கவனே! என்னை விட்டுவிடுவாயா? அடியேனின் பிறப்பை வேரோடும் பிடுங்கி அழித்து என்னை ஆட்கொண்டு அருள்வாயாக.

தேவர்களும் அணுக முடியாத உயர்ந்த சிவப் பேருலகில் இருப்பவனே! நிலையுதல் உள்ள உத்தர கோச மங்கைக்கண் எழுந்தருளியுள்ள அருள் அரசே! வானும் நிலனும் காற்றும் நெருப்பும் நீரும் ஆனவனே! என்றும் மாறா இளமைச் செவ் வியனே! கொழுகொம்பு இல்லாது சுழன்று வாடித் தவிக்கின்ற கொடி போன்ற என்னை விட்டு விடுவையோ?

தீவினையேனது உள்ளத்துள் தேனும் பாலும் கருப்பஞ் சாறும் அமுதமும் போன்று இனிமை அளித்து என் உடம்பின் ஊனையும் உள்ளிருக்கும் எலும்புகளையும் உருக்கிக் கரைந்து போகும்படி செய்கிற அறிவொளி வடிவனே! யானைகளின் கடுமையான சண்டையில் அகப்பட்ட சிறு புதர்ச் செடிபோல அலைக்கப்பட்ட சிறியேனை, எந்தையே! விட்டு விடுவாயோ?

ஒளிவடிவினனே! திருநீற்றை நீர் கலவாது நிறையப் பூசி ஒளியாய் விளங்கும் வெண்ணிறத்தோனே! மெய்யைப் போற்றி ஒழுகும் அடியார்க்கு என்றும் பக்கத்தில் இருப்போனே! அவ்வாறு இல்லாதவர்க்குத் தொலைவினில் இருப்போனே! அளவைகளால் காண்பதற்கு இயலாத, பழைய பெண்மையன் ஆண்மையன் அவையல்லாத இயல்பினன் என்று இருப்பவனே! சிறியேனைக் கைவிட்டு விடுவையோ?

என் வாழ்வின் அடிப்படைப் பொருளே! நீ தந்த இவ் வுடம்பை [அதிலுள்ள கருவிகளை]க் கொண்டு தவறுகளையே மிகுதியாகச் செய்து அன்பினைச் சுருக்கி விடுகின்ற உள்ளீடு இல்லாத அடியவனைக் கைவிட்டு விடுவாயோ? அடியேன் நன்றாகத் தெளிந்து வைத்திருக்கிறேன்; என் உள்ளத்தின் உள்ளிருக்கும் ஆதரவாளன் நீயே. என்னைக் கைவிட்டுவிட்டால் நான் கெட்டொழிவேன். அடியேனைக் காப்பாற்றுவார் யாரும் இல்லை.

24\. உள்ளன வேநிற்க இலலன
செய்யுமை யல்துழனி
வெள்ளன லேனை விடுதிகண்
டாய்? வியன் மாத் தடகைகைப்
பொள்ளல்நல் வேழத்து உரியாய்!
புலனின்கண் போதல்லொட்டா
மெள்ளன வேமொய்க்கும் நெய்க்குடம்
தன்னை எறும்பெனவே.

25\. எறும்பிடை நாங்கூழ் எனப்புல
னால் அரிப்பு உண்டு அலந்த
வெறுந் தமி யேனை விடுதிகண்
டாய்? வெய்ய கூற்றுஒடுங்க
உறும் கடிப் போது அவை யேஉணர்வு
உற்றவர் உம்பர்உம்பர்
பெறும் பத மே! அடி யார் பெய
ராத பெருமையனே!

26\. பெருநீர் அறச்சிறு மீன்துவண்
டாங்கு நினைப் பிரிந்த
வெரும்நீர்மை யேனை விடுதிகண்
டாய்?வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுள் மலைச்சிறு
தோணிவடிவின் வெள்ளைக்
குருநீர் மதிபொதி யும்சடை
வானக் கொழுமணியே!

27\. கொழுமணி ஏர்நகை யார்கொங்கைக்
குன்றிடைச் சென்றுகுன்றி
விழும்அடி யேனை விடுதிகண்
டாய்?மெய்ம் முழுதும் கம்பித்து
அழும்அடி யாரிடை ஆர்த்துவைத்து
ஆட்கொண்டு அருளி, என்னைநீ
கழுமணி யே!இன்னும் காட்டுகண்
டாய்,நின் புலன்கழலே!

28\. புலன்கள் திசைப்பிக்க யானும்
திகைத்திங்குஓர் பொய்ந்நெறிக்கே
விலங்கின் றேனை விடுதிகண்
டாய்? விண்ணு மண்ணுமெல்லாம்

துளை பொருந்திய அகன்ற பெரிய துதிக்கையை உடைய நல்ல யானையின் தோலைப் போர்த்தவனே! உன்னிடம் நெஞ்சம் செல்லாதபடி நெய் நிறைந்த குடத்தை எறும்பு மொய்த்துத் தடை செய்தல் போலப் புலன்கள் மெல்ல நெருங்கித் தடை செய்வன; அதனால் செய்தற்கு உரியன இருக்கச் செய்தற்கு உரிய அல்லாதன வற்றையே செய்யும் [காம] மயக்கம் ஆரவாரித்து எரியும் வெள் நெருப்புப் போன்று சுட்டெரிக்கும் தன்மையுடைய சிறியேனைக் கைவிட்டுவிடுவாயோ?

கொடிய கூற்றுவனின் ஆற்றல் குன்ற மணம் பொருந்திய உன் திருவடி மலர்களாகிய அவற்றைப் பற்றுக்கோடாக உணர்ந்து அடைந்தவர்கள் தம் தொண்டு அன்பு ஒருமைக்கு ஏற்பப் பெறும் உயர்பதங்களாக உள்ளவனே! மிக மெய்யுணர்வு எய்திய அடியார் உன்னோடு இரண்டற இயைந்திருக்கும் பெருமை அளித்தவனே!

எறும்புகளிடை அகப்பட்ட மண்புழுப் போலப் புலன் களிடை அகப்பட்டு அரிக்கப் பட்டு வருந்திய பயனற்ற தனியனாகிய அடியேனை விட்டு விடுவாயோ?

பெரிய கங்கை ஆறு பொங்கி விழுகின்ற நீர் மடுவுள் [தண்ணீரால் அங்கும் இங்குமாக] பொருது அலைபடும் சிறு தோணியின் வடிவம் போன்றிருக்கும் வெண்ணிறமான குளிர்ந்த பிறையினைப் பொதிந்துள்ள சடையினை உடைய, அறிவுவானில் திகழும் திரண்ட மாணிக்கமே! மிக்கிருந்த நீர் இல்லாது போக, அங்குள்ள சிறுமீன் துடித்தாற் போல ஆதரவாகிய உன்னைப் பிரிந்ததால் அஞ்சும் இயல்புடைய சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ?

அடியேனைத் தூய்மைப் படுத்தும் மாணிக்கமே! செழிப் பான முத்துப் போன்ற பற்களை உடைய மகளிரின் கொங்கை களாம் மலைகளில் ஏறிச் சென்று அறிவு குறைந்து இடறி விழும் அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? அன்புப் பெருக்கினால் மெய் முழுதும் நடுநடுங்கி அழுகின்ற மெய்யடியாரின் கூட்டத்தில் அடியேனைச் சேர்த்து ஆளாக ஏற்றுக் கொண்டு அருள்புரிந்து அறிவடிவாகிய நின் திருவடிக் காட்சியை அருளல் வேண்டும்.

வானுலகமும் நிலவுலகமும் ஆகிய எல்லாமும் நிலைகலங்கக் கண்டு கடலில் தோன்றிய நஞ்சை உண்டு காத்தருளியவனே! கருணையின் இருப்பிடம் ஆனவனே! நிலைகலங்கும் அடியேனைத்

கலங்கமுந் நீர்நஞ்சு அமுதுசெய்
தாய்கரு ணாகரனே!
துவங்கு கின் றேன்அடி யேன்உடை
யாய்!என் தொழுகுலமே.

29. குலம்களைந் தாய்,களைந் தாய்என்னைச்
குற்றம், கொற்றச் சிலையாம்
விலங்கல்எந் தாய்! விட் டிடுதிகண்
டாய்? பொன்னின் மின்னுகொன்றை
அலங்கல்அந் தாமரை மேனியப்
பா! ஒப்பி லாதவனே!
மலங்கள் ஐந் தாற்சுழல் வன்தயி
ரிற்பொது மத்துஎனவே!

30. மத்துறு தண்தயி ரில்புலன்
தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண்
டாய்? வெண் தலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து
குடர் நெடு மாலை சுற்றித்
தத்துறு நீறுடன் ஆரச்செஞ்
சாந்தணி சச்சையனே!

31. சச்சைய னே!மிக்க தண்புனல்
விண்கால் நிலம் நெருப்பாம்
விச்சைய னே!விட் டிடுதிகண்
டாய்? வெளி யாய்!கரியாய்!
பச்சைய னே!செய்ய மேனிய
னே! ஒண் படஅரவக்
கச்சைய னே!கடந் தாய்தடந்
தாள அடற் கரியே!

32. அடல்கரி போல்ஐம் புலன்களுக்கு
அஞ்சியழிந்த என்னை
விடற்குஅரி யாய்!விட் டிடுதிகண்
டாய்?விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்குஅரி யாய்!சுடர் மாமணி
யே!சுடு தீச் சுழலக்
கடல் கரி தாய்எழு நஞ்சமுது
ஆக்கும் கறைக் கண்டனே!

தன் அடிக்கண் உடையவனே! யான் தொழும் தெய்வமே! ஐம் புலன்களும் திகைப்பு உண்டாக்க மயக்கமுற்று இவ் வுலகில் பொய்யான ஒரு நெறிக்கு விலகிச் செல்லுகின்ற சிறியேன் ஆகிய என்னை விட்டுவிடுவாயோ?

பொன் போல் ஒளிவிடும் கொன்றை மாலை அணிந்த, அழகிய தாமரை மலர் போலும் திருமேனியை உடைய என் அப்பனே! ஒப்பற்ற உயர்பொருளே! [ஆணவம் கன்மம் மாயை மாயேயம் திரோதாயி என்னும்] ஐந்து அழுக்குகளாலும் கலக்க முற்றுச் சுழல்கிறேன். இந் நிலையில் நீ என் குலத்தொடர்பு களைக் களைந்தாய் [காமம் முதலிய] குற்றங்களைக் களைந் தாய்; மேருமலையாகிய வெற்றிவில்லை உடைய எந்தையே! என்னைக் கைவிட்டு விடுவாயோ?

வெண்ணிறம் உடைய தலையைச் சடையில் சூடி, கொத் தாகப் பொருந்தி இருக்கும் கொன்றை மலர் மாலையை அணிந்து குடராகிய நெடிய மாலையைக் கழுத்தில் சுற்றிப் புனைந்து, பரந்து பூசப் பெற்ற திருநீற்றுடன் சந்தனத்தின் செம்மையான கலவையைப் பூசித் திகழும் மெய்ப்பொருள் வடிவனே! மத்தினால் கடையப்படும் குளிர்ந்த தயிரைப்போல் உடைந்து புலன்கள் ஆகிய தீப்பற்றுதலால் வெம்மையுற்றுக் கலங்கி அக் கலக்கத்தில் வித்துப்போல் [வேர் ஊன்றல்] ஆகி விடுவே னைக் கைவிட்டு விடுவாயோ?

வெண்மை கருமை செம்மை பசுமை [புகை] நிறங்கள் உடைய மேனியனே! ஒளி பொருந்திய படத்தையுடைய பாம் பாகிய அரைப்பட்டிகை கட்டியவனே! அகன்ற அடிகளும் கொல்லும் தொழிலும் உடைய யானையை அழித்தவனே! மெய்ப்பொருள் வடிவமானவனே! மிக்கவாகிய தண்ணீர் விசும்பு காற்று நிலம் தீ ஆகிய ஐம்பெரும் பூதங்களாகவும் விளங்கும் விந்தையுடையவனே! அடியேனைக் கைவிட்டு விடுவாயோ?

[ஆணவம் அழியப்பெற்றுக் கனிந்த உயர்] தொண்டர்க்கு அல்லாமல் மற்றவர்க்குத் தீண்டுதற்கு அரியவனே! ஒளிவிளங்கும் பெரிய மாணிக்க மணியே! கடுமையான தீ சூழ்வதாகத் திருப்பாற் கடலில் கருமை நிறத்தில் தோன்றிய நஞ்சை உணவாகக் கொள்ளும் கறுப்புநிறக் கழுத்தை உடையவனே! வலிமையுள்ள யானையைப் போல் உள்ள ஐம்புலன்களுக்கும் அஞ்சி நிலை கலங்கிய அடியேனை, ஒருபோதும் விட்டு விடாதவனே, இப் போது விட்டுவிடுவாயோ?

33. கண்டது செய்து கருணைமட்
டுப்பருகிக் களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண்
டாய்?நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போல் பணித்துப்
பணிசெயக் கூவித்து என்னைக்
கொண்டுஎன்எந் தாய்!களை யாய்களை
யாய குதுகுதுப்பே.

34. குதுகுதுப் பின்றிநின்று என்குறிப்
பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண்
டாய்?விரை யார்ந்துஇனிய
மதுமதுப் போன்று என்னைவாழைப்
பழத்தின் மனம்கனிவித்து
எதிர்வதுஎப் போது? பயில்விக்
கயிலைப் பரம்பரனே!

35. பரம்பர னே!நின் பழஅடி
யாரொடும் என்படிறு
விரும்புஅர னே!விட் டிடுதிகண்
டாய்?மென் முயல்கறையின்
அரும்புஅர நேர்வைத்து அணிந்தாய்!
பிறவிஐ வாய்அரவம்
பொரும்பெரு மான்!வினை யேன்மனம்
அஞ்சிப் பொதும்புறவே.

36. பொதும்புஉறு தீப்போல் புகைந்துஎரி
யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண்
டாய்?விரை யார்நறவம்
ததும்புமந் தாரத்தில் தாரம்
பயின்றுமந் தம்முரல்வண்டு
அதும்பும் கொழுந்தேன் அவிர்சடை
வானத்து அடல்அரசே,

37. அரைசே! அறியாச் சிறியேன்
'பிழைக்கு அஞ்சல்' என்னினல்லால்
விரைசேர் முடியாய்! விடுதிகண்
டாய்? வெண் ணகைக் கருங்கண்

என்பாற் பரிவுமிக்க தந்தையே! உன் அருளாகிய தேனை நிரம்பக் குடித்து அதனால் களிப்பு ஏறப் பெற்று, மனத்தில் பட்டபடி செய்து, மதம் கொண்டு திரிகின்ற சிறியேனைக் கை விட்டு விடுவாயோ? உன் மணமிகுந்த தாமரை மலர் போன்ற திருவடிகளை முன்பு தந்தருளியது போலத் தந்தருளி உன் திருத் தொண்டுக்குக் கூவி அழைத்து அடியேனை ஆளாகக் கொண்டு, தடையாக உள்ள நடுக்கத்தை நீக்குவாயாக.

கயிலை மலையில் எழுந்தருளியுள்ள மேலாம் உயர் பொருளே! நடுக்கமின்றி என் மனக்கருத்தில் நின்று அவ்வாறே செய்து உன் திருவுள்ளக் கருத்துக்கு உரிய பயனைப் பெறுவதில் விரைவு கொள்கின்ற அடியேனை விட்டுவிடுவாயோ?

வாழையின் பழம் போல் அடியேன் மனத்தைக் குழைவித்து மணம் பொருந்திய இனிமையான, பெருகும் தேன்போன்று என் எதிரே வருதல் எப்போது? சிறியேனை அழைப்பாயாக.

முயல் போன்ற உருவத்தில் கறுப்பு நிறம் கொண்ட திங்களின் மெல்லிய அரும்பு போன்ற பிறையைப் பாம்புக்கு நேரில் வைத்து அணிந்திருக்கிறவனே, எம்பெருமானே! ஐந்து வாய்களை உடைய பாம்பு போன்ற ஐம்பொறிகள் கொண்ட பிறவிப் பாம்பு தீவினையேனின் உள்ளம் நடுங்கிப் பொந்தினுள் ஒளியுமாறு தாக்குகின்றன. மிக மேலாகிய பொருளே, ஒழுக்கம் மிக்க நின் பழைய திருவடியாரொடு சிறியேனையும் காக்க என் வஞ்ச ஒழுக்கத்தோடு ஏற்றுக்கொண்ட, ஒடுக்கத்தின் காரணனே, என்னை விட்டுவிடுவாயோ?

மணம் மிக்க தேன் நிரம்பிய மந்தார மலரில் எடுத்தல் இசை பாடிப் பின் படுத்தல் இசை ஒலிக்கும் வண்டுகள் அமிழ் தற்குக் காரணம் ஆகிய செழித்த தேன் விளங்கும் சடையை உடைய, அறிவு வானில் வீற்றிருக்கும் வேந்தனே!

மரப் பொந்தில் வைக்கப் பெற்ற பெற்ற நெருப்புப் போல் புகைந்து எரிகின்ற அப் புலன்கள் தீப் பற்றி அதனால் வெதும் புகின்ற சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ?

வெண்பற்களும் கருங்கண்களாகிய கடலும் உடைய இறை வியை ஒரு கூற்றில் வைத்தவனே! வீடாகிய செல்வத்தை அளிக்க வல்ல அழகிய திருவடிகளை உடைய, பாம்பு அணிந்த பெரு மானே!பல மலைகள் சேர்ந்துவந்து நெருக்கினாற் போல,கொடிய

திரைசேர் மடந்தை மணந்த
திருப்பொற் பதப்புயங்கா!
வரைசேர்ந்து அடர்ந்தென்னை வல்வினை
தான்வந்து அடர்ந்தனவே.

38. அடர்புல னால்நின் பிரிந்துஅஞ்சி
அஞ்சொல்நல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண்
டாய்? விரிந் தேளரியும்
சுடர் அனை யாய்சுடு காட்டுஅர
சே!தொழும் பர்க்குஅமுதே!
தொடர்வுஅரி யாய்!தமி யேன்தனி
நீக்கும் தனித்துணையே!

39. தனித்துணை நீநிற்க யான்தருக்
கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதி கண்
டாய் வினையே னுடைய
மனத்துணை யேன்என் றன் வாழ்முத
லே!எனக்கு எய்ப்பில் வைப்பே!
தினைத்துணை யேனும் பொறேன்துயர்
ஆக்கையின் திண்வலையே

40, வலைத்தலை மான்அன்ன நோக்கியர்
நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்து அலைந் தேனை விடுதிகண்
டாய்?வெண் மதியின் ஒற்றைக்
கலைத்தலை யாய்!கரு ணாகர
னே!கயி லாயம்என்னும்
மலைத்தலை வா! மலை யாள்மண
வாள! என் வாழ்முதலே!

41. முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந்
நீரில் கடிப்ப மூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண்
டாய்? விடக்கு ஊன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன் சிவ
னே! முறை யோ? முறையோ?
திதலைச்செய் பூண்முலை மங்கைபங்
கா!என் சிவகதியே!

வினைகள் திரண்டு வந்து நெருக்குகின்றன, வேந்தே! நறுமணம் பொருந்திய சடை முடியை உடையவனே! அறிவிலாச் சிறியேன் என் பிழைகள் காரணமாக யான் அஞ்சுதல் வேண்டா என்று நீ கூறினல்லால் வேறு துணையில்லை. கைவிட்டு விடுவாயோ?

எங்கும் பரவி ஒளிதரும் தீப்பிழம்பு போல் திகழ்பவனே! யாவும் ஒடுங்கும் இடமாகிய பெருஞ்சுடலை மன்னவனே! மெய்த் தொண்டர்க்கு அமுதம் போல்பவனே! யாரும் தொடர்ந்து பற்றுதற்கு அரியவனே! அடைக்கலம் இல்லாத அடியேனது தனிமையை நீக்கி அருள்புரியும் ஒப்பற்ற துணையாக உள்ளவனே! எளியேனைத் தாக்கும் புலன்களுக்கு அஞ்சி உன்னைப் பிரிந்து, அழகிய சொற்கள் பேசும் மகளிர்தம் குகையை விடாதவனைக் கைவிட்டு விடுவாயோ?

தீவினையேனின் உயிர்த் துணையாக இருப்பவனே! என் வாழ்வுக்கு ஆதாரமாம் முதற் பொருளே! என் மெலிவுக் காலத்தில் உதவும் சேமநிதி போல்பவனே! ஒப்பற்ற துணையாக நீ இருக்கவும், செருக்குக் கொண்டு அதனால் தலைகீழாகக் கால் மேலாக நடக்கும் வினையைத் துணையாக உடையவனாகிய இச் சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ? உடலாகிய வலிய வலையிற் பட்டு அதனால் வரும் துன்பத்தைத் தினையளவு ஆகிய சிறுபொழுதும் பொறுக்க இயலாதவனாக உள்ளேன்.

வெள்ளிய திங்களின் ஒரு கலையாகிய பிறையைத் தலையில் அணிந்தவனே! அருளுக்கு இருப்பிடம் ஆனவனே! கயிலாயம் எனப்படும் மலையில் வீற்றிருக்கும் தலைவனே! மலைமகளாம் உமையம்மையின் மணவாளனே! அடியேனின் வாழ்வின் முதற் பொருளாக உள்ளவனே! வலையிடைப்பட்ட மானின் பார்வை போலும் மருண்ட பார்வை படைத்த கண்களாகிய வலையிற் சிக்கி மயங்கித் திரிந்த சிறியேன் என்னை விட்டு விடுவாயோ?

தேமல் படர்ந்த. அணிகலன் விளங்கும் தனங்கள் உடைய உமையம்மையை ஒரு பங்கில் உடையவனே! எனக்கு வீடுபேறாக விளங்குபவனே! காமமாகிய வெந்நீரில் மூழ்கி, சிவந்த வாயினை உடைய மகளிராகிய முதலை கடித்தலால், அதன் காரணமாக நடுக்கம் அடையும் சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ? புலால் நாறும் இறைச்சி மயமான நோய் உண்டாக்கும் உடம்பைத் தாங்க மாட்டேன், சிவபெருமானே! இவ்வுடல் வாழ்க்கையில் சிறியேனைக் கைவிட்டு விடுதல் முறையாகுமோ? முறையாகுமோ?

42. கதிஅடி யேற்குஉன் கழல்தந்து
அருளவும் ஊன்கழியா
விதிஅடி யேனை விடுதிகண்
டாய்? வெண் தலைமுழையில்
பதியுடை வாள்அரப் பார்த்துஇறை
பைத்துச் சுருங்க, அஞ்சி
மதிநெடு நீரில் குளித்துஒளிக்
கும்சடை மன்னவனே !

43. மன்னவ னே!ஒன்று மாறுஅறி
யாச்சிறி யேன் மகிழ்ச்சி
மின்னவ னே!விட் டிடுதிகண்
டாய்?மிக்க வேதமெய்ந்நூல்
சொன்னவ னே!சொற் கழிந்தவ
னே!கழி யாத்தொழும்பர்
முன்னவ னே!பின்னும் ஆனவ
னேஇம் முழுதையுமே!

44. முழுதுஅயில் வேற்கண்ணியர் என்னும்
மூரித் தழல்முழ்கும்
விழுதுஅனை யேனை விடுதிகண்
டாய்?நின் வெறிமலர்த்தாள்
தொழுதுசெல் வானத் தொழும்பரில்
கூட்டிடு 'சோத்து' எம்பிரான்!
பழுது செய் வேனை விடேல்உடை
யாய்! உன்னைப் பாடுவனே!

45. பாடிற்றி லேன்பணி யேன், மணி!
நீஒளித் தாய்க்குப் பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண்
டாய்? வியந் தாங்குஅலறித்
தேடிற்றி லேன்சிவன் எவ்விடத்
தான்எவர் கண்டனர் என்று
ஓடிற்றி லேன்கிடந்து உள்ளுரு
கேன்நின்று உழைத்தனனே.

46. உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப்பழத்து ஈயின்ஒப்பாய்
விழைதரு வேனை விடுதிகண்
டாய்?விடின் வேலைநஞ்சுண்

[நீ அணிந்துள்ள] வெள்ளிய தலையின் துளையில் தங்கும் ஒளி பொருந்திய பாம்பு அருகிலுள்ள திங்களைப் பார்த்துச் சிறிது படம் விரித்துப் பின் அதனைச் சுருக்கிக் கொள்ள, அதனைத் திங்கள் கண்டு அஞ்சிக் கங்கைநீரில் மறையும் சடையினை உடைய இறைவனே! அடியேனாகிய இச் சிறியவனுக்கு உன் திருவடியாகிய புகலிடம் கொடுத்தருளியும் இவ் உடம்பு நீங்கப் பெறாமைக்குக் காரணமாகிய ஊழ்வினையை உடைய எளியேனை விட்டு விடுவாயோ?

பொருள் மிக்க மறைகளையும் மெய்யான சிவாகம நூல்களையும் உரைத்தருளியவனே! சொற்களுக்கு அகப்படாது அப்பாலிருப்போனே! என்றும் நீங்குதல் இல்லாத் தொண்டில் நிலைத்த மெய்யன்பர்க்கு முன் நிற்பவனே! அவர்க்கு ஆதரவாகப் பின் நிற்பவனும் இவ் எல்லாமும் ஆனவனே! நிலையானவனே! உன்னோடு கலக்கும் வழி அறியாத சிறியேனாகிய எனக்குப் பேரின்ப விளக்கமாகத் திகழ்பவனே! கைவிட்டு விடுவாயோ?

எங்கள் பெருமானே; கூரிய வேல் போலும் கண்களை உடைய பெண்டிராகிய பெரிய நெருப்பில் முற்றும் அமிழ்ந்து போகும் வெண்ணெயைப்போன்ற சிறியேனை விட்டுவிடுவாயோ? உன்னைப் போற்றிப் பாடுவேனோ எனில் அஃதும் இல்லை. குற்றமே செய்யும் என்னைக் கைவிடலாகாது வணக்கம். தேன் நிறைந்த தாமரைமலர் போன்ற உன் திருவடிகளை வணங்கி, உயர் அறிவுப் பெருவெளி நோக்கிச் செல்லும் தொண்டரோடு சிறியேனையும் சேர்ப்பாயாக.

மாணிக்க மணி போல்பவனே! உன்னைப் பாடினேன் இல்லை, வணங்கினேன் இல்லை. காட்சியளித்து மறைந்துவிட்ட உன் பொருட்டுப் பச்சை இறைச்சிப் பிண்டம் ஆகிய இவ் உடலை ஒழித்திலேன் ஆகிய அடியேனைக் கைவிட்டு விடுவாயோ?

அப்பொழுதே வியப்புற்றுச் சிவபெருமான் எங்கு இருக்கிறான் என்று அலறித் தேடவும் இல்லை. அப் பெருமானைப் பார்த்தவர் யார் என்று சொல்லிக் கொண்டு ஓடவும் இல்லை. ஓய்ந்து கிடந்து உள்ளம் உருகவில்லை. பயனிலாது உயிர் தாங்கி வருந்தினேன்

மானின் பார்வை போலும் பார்வையுடைய பெண்டிரது கொங்கையை, பலாப்பழத்தில் மொய்க்கும் ஈயைப் போன்று விரும்புகின்ற சிறியேனை விட்டுவிடுவாயோ?

மழைதரு கண்டன் குணமிலி
மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபரன் என்றென்று
அறைவன் பழிப்பினையே!

47. பழிப்பில்நின் பாதம் பழந்தொழும்பு
எய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண்
டாய்? வெண் மணிப்பணிலம்
கொழித்துமந் தாரமந் தாகினி
நுந்தும் பந் தப்பெருமை
தழிச்சிறை நீரில் பிறைக்கலம்
சேர்தரு தாரவனே!

48. தாரகை போலும் தலைத்தலை
மாலை தழல் அரப் பூண்
வீர! என் தன்னை விடுதிகண்
டாய்? விடில் என்னை மிக்கார்
'ஆர் அடி யான்?' என்னின் உத்தர
கோசமங் கைக் கரசின்
சீரடி யார்அடி யான் என்று
நின்னைச் சிரிப்பிப்பனே

49. சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்
தொழும்பையும் ஈசற்கு என்று
விரிப்பிப்பன் என்னை விடுதிகண்
டாய்? விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் தோலுடைப் பிச்சன் நஞ்சு
ஊண்பிச்சன் ஊர்ச்சுடுகாட்டு
எரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப்
பிச்சன் என்று ஏசுவனே.

50. ஏசினும் யான் உன்னை ஏத்தினும்
என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண்
டாய்? செம் பவளவெற்பின்
தேசுடை யாய்! என்னை ஆளுடை
யாய்!சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலம்உண் டாய்அமுது
உண்ணக் கடையவனே

திருச்சிற்றம்பலம்

விட்டுவிடுவையாயின் உன்னைக் கடலில் தோன்றிய நஞ்சை உண்ட நீலமேகம் போன்ற கழுத்தினன் எனவும் குணமில்லாதவன் (குணம் கடந்தவன்) எனவும் மானிடன் (மான் இடப்புறம் தாங்கியவன்) எனவும் தேய்ந்த அறிவினன் (பிறை அணிந்தவன்) எனவும் பழைய பரதேசி (பழைய உயர்பொருள்) எனவும் உன் பழி (உண்மையில் புகழ்) களை எடுத்துச் சொல்லுவேன்.

வெண்ணிற மணிகளாகிய முத்துக்களையும் சங்குகளையும் கொழிக்க, சடையாகிய அணையின் பெருமையைச் சார்ந்து மந்தார மலர்களை ஒதுக்குகிற கங்கையாகிய வரம்புட் பட்ட நீர் நிலையில் பிறையாகிய தோணி இருக்கப் பெற்ற மாலையை உடையவனே! பழிக்கப் படாத நின் திருவடிக்கண்ணே பழமையான தொண்டினை மேற்கொண்டு அது பின்பு நழுவி விடுதலால் அத் திருவடியைப் பழித்து விழித்திருக்கும் சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ?

தலையில் விண்மீன்கள் போன்ற தலை மாலைகளையும் நெருப்புப் போலும் நஞ்சு உடைய பாம்புகளாகிய அணிகலன் அணியும் வீரனே! சிறியேனைக் கைவிட்டு விடுவாயோ? கைவிட்டு விடுவாயாயின், அறிவு ஒழுக்கம் மிகுந்தவர் என்னைப் பார்த்து நீ யாருக்கு அடியவன்? என்று வினவுவராயின் திருவுத்தரகோசமங்கையில் வீற்றிருக்கும் இறைவனாகிய சிவபெருமானுடைய சிறப்புப் பொருந்திய அடியவர்க்கு அடியன் என்று கூறி உன்னைக் குறித்துச் சிரிக்கும் படியாகச் செய்துவிடுவேன்!

வெறுத்தற்கு உரிய என் உலக வாழ்க்கையை இகழ்ந்து சிரிக்கச் செய்வேன்; தொண்டு செய்து ஒழுகுதலை இறைவனுக்கே என்று எங்கும் எப்போதும் பரவும்படி செய்வேன்,

இத்தகைய அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? கைவிட்டு விடுவாயேல்கொடிய யானையின்தோலைப்போர்த்த பித்தன்,புலித் தோலை உடையாகக் கொண்ட பித்தன், ஊர்க்குப் பொதுவான சுடலைத் தீயில் ஆடும் பித்தன், எளியனாகிய என்னையும் ஆட்கொண்ட பித்தன் என்று இவ்வாறு சொல்லி இகழ்ந்துரைப்பேன்.

சிவந்த பவள மலை போய் ஒளி திகழும் மேனியுடையாய்! என்னை ஆளாக உடையாய்! சிறிய உயிர்க் கூட்டத்துக்கு வரக் கூடிய துன்பத்திற்கு இரங்கி. அமுது உண்ணப் பின்னடைந்து [உண்ணாது] கொடிய ஆலகால விடத்தை உண்டாய்! சிறியேன் உன்னை இகழ்ந்துரைப்பினும் புகழ்ந்துரைப்பினும் உண்டாகும் என் குற்றங்களுக்கே உள்ளம் உருகி வருந்துகின்றவனாகிய என்னைக் கைவிட்டு விடுவாயோ? ○

ஏழு

# திருவெம்பாவை

'எம்பாவாய்' என்ற முடிவுத் தொடரால் அமைந்த கொச்சகக் கலிப்பா 20 கொண்ட இத்திருப்பாட்டு, தொன்று தொட்டு மகளிரிடை நிலவி வரும் தைந்நீராடல், மார்கழி நீராட்டு என்ற பழக்கத்திற்குத் தெய்விக மரபைத் தோற்றுவிப்பதாகும். இவ்வாறே மகளிர் விளையாட்டுக்கள், நாட்டுப்புறப் பாக்கள் முறைகளுக்குத் தெய்விகப் புதுமரபைத் தோற்றுவித்தார் அடிகள். அவற்றுக்கு ஆன்மீக அடிப்படை தந்து வலுப்படுத்தினார் அவர்

கன்னிப் பெண்டிர் ஒருவரை ஒருவர் வைகறையில் துயில் எழுப்பி அழைத்துக் கொண்டு அனைவரும் கூடி நீராடச் செல்கையில், அவ்வாறு அழைக்கின்ற முறையிலும் விடைசொல்கிற வாறும் நகையாடும் பாங்கிலும் இறைவனைப் போற்றும் முறையிலும் இறைமை சார்ந்த கற்பனை, இயற்கைச்சூழல், மங்கையர் பேச்சுமுறை என்பன இயல்பாக இழைய உணர்ச்சியோடும் அருள் நோக்கோடும் இத் திருப்பாட்டு சிறப்புற அமைந்திருக்கிறது.

இதில் முதற் பத்துப்பாடல் மகளிர் ஒருவரை ஒருவர் எழுப்புதலும் எல்லாரும் சேர்ந்து இறைவன் புகழ்பாடிச் செல்லுதலும் பதினோராம் பாடல் முதல் இருபதுவரை நீராடுதலும் கூறப்படுகின்றன.

திருச்சிற்றம்பலம்

1. ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய
வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டு இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்என் னே!என்னே!
ஈதே எந்தோழி பரிசு! ஏலோர் எம்பாவாய்!

•"போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்" என்று தொடங்கும் இறுதிப்பாடல் அடிதோறும் இறைவன் திருவடியைப் போற்றிக் கடைசியில் "போற்றியாம் மார்கழி நீராடல் ஏல்ஓர் எம்பாவாய்" என்று பொருத்தமாக நிறைவுறுகிறது. "சக்தியை வியத்தல்" இதன் உட்கிடை என்ப. ○

ஒளியுள்ள அகன்ற கண்களை உடைய பெண்ணே!

தோற்றமும் இறுதியும் இல்லாத அரிய பெரிய ஒளிப் பிழம்பான இறைவனை நாங்கள் புகழ்ந்து பாடக் கேட்டுக் கொண்டும் நீ உறங்குகின்றாயோ? அல்லது உன் செவிகள் கேட்கும் திறமில்லாத செவிகளோ?

சிவபெருமானின், நெடிய கழல்கள் அணிந்த திருவடிகளைத் தெருவில் நாங்கள் புகழ்ந்து பாடிய வாழ்த்துப் பாடல்களின் ஒலி சென்று செவிப்பட்ட அளவிலே [இவள்] மலர் நிறைந்த படுக்கையில் நின்றும் புரண்டும் எழுந்து இறையன்பு மிகுதியால் தேம்பித் தேம்பி அழுது பின் தன்வயம் இழந்து வேறு எச்செயலுக்கும் ஆகாதவளாக இவ்வாறு கிடந்தாள். இவள் இவ்வாறு இருக்க எங்கள் தோழியாகிய உன் தன்மை இவ்வாறாக உள்ளது. என்னே இது! வியப்பு! வியப்பு!

⌒ பாவை நோன்பு மேற்கொண்ட கன்னியருள் சிலர் துயிலெழுந்து உடல் தூய்மை செய்துகொண்டு நீராடச் செல்கையில் அந்த நோன்பு மேற்கொண்டு நீராட உடன் வருவதாக முன்னை நாளில் கூறியவர்களையும் அழைத்துச் செல்பவர்களாக, இன்னமும் எழாமல் உறங்கும் ஒருத்தியை எழுப்பும் வகையில் இப் பாடல் அருளப்பட்டது. நாங்கள் பாடக்கேட்டும் எழாமைக்குக் காரணம், நீராட வருதலில் விருப்பம் இன்மையோ என்று கருதி வினவுகின்றனர்.

இறைவனிடம் அவளுக்கு அன்பு குறைவாக இருத்தலை உணர்த்தும் முறையில் அவள் போன்ற இன்னொருத்தியின் பேரன்பை எடுத்துக் காட்டி உணர்த்துகின்றனர். வாழ்த்தொலி கேட்டதும் துயில் உணர்ந்து அன்பின் மிகுதியால் கண்ணீர் வடித்து மெய்ம் மறந்தாள் என்று சுட்டிக் கூறி அவளது அனுபவச் சிறப்பைப் பேசி, இன்னம் துயிலெழாதவளாக இருப்பவளை எழுப்புகின்றனர்.

2. பாசம் பரஞ்சோதிக்கு என்பாய் இராப்பகல் நாம்
பேசும்போது எப்போது;இப் போதுஆர் அமளிக்கே,
நேசமும் வைத்தனையோ? நேரிழையாய், ''நேரிழையீர்,
சீசீ இவையும் சிலவோ விளையாடி
ஏசும் இடம்ஈதோ?'' விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசும் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பர்யாம் ஆர்?ஏலோர் எம்பாவாய்,

3. ''முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்து எதிர் எழுந்தென்
அத்தன் ஆனந்தன் அமுதன்என்று அள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்''
''பத்துடையீர் ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டால் பொல்லாதோ?''
''எத்தோநின் அன்புடைமைஎல்லோம் அறியோமோ?
சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை
இத்தனையும் வேண்டும் எமக்குஏல்ஓர் எம்பாவாய்,

4. ''ஒள்நித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?''
''எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத் துயின்றுஅவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக்கு ஒருமருந்தை வேத விழுப்பொருளை
கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக! யாமாட்டோம்; நீயே வந்து
எண்ணிக் குறையில் துயில்ஏலோர் எம்பாவாய்!''

''தக்க அணிகலன்களை அணிந்த மாதே, நாம் உரையாடும் பொழுதெல்லாம் இரவும் பகலும், என் அன்பு, மேலான பேரொளியாக உள்ள இறைவனுக்கு என்று கூறுவாய், இப்போது மலர் நிறைந்த இப் படுக்கையிடம் அன்பு கொண்டனையோ,'' ''தக்க அணிகலன் உடையீர், சீச்சீ, உங்கள் பேச்சில் இவ்வாறு உரைக்கப்படும் சொற்களும் உளவோ? விளையாட்டுப் போக்கில் இகழ்ந்து உரைக்கக் காலமும் இதுவா?''

''தேவர்கள் கொண்டாடத் தருதற்கு நாணும் மலர் போன்ற திருவடிகளை எளியோம் ஆகிய நமக்காகத் தந்தருள இந் நிலவுலகில் எழுந்தருளும் ஞானகுருவும், பேரின்ப உலகினனும், தில்லைச் சிற்றம்பலத்துள் திகழும் ஈசனும் ஆகிய பெருமானுக்குச் செய்யப்படும் அன்பு மிகுந்தவர்கள் நாம் அல்லரோ? அவ்வாறன்றி நாம் வேறு யார்?''

''முத்துப் போன்ற வெள்ளிய பற்களை உடையவளே, முன்பெல்லாம் எங்களுக்கு முன்னரே எழுந்து எதிரில் வந்து ''என் தந்தை, பேரின்பமானவன், அமுதம் போன்றவன் என்று வாயூறி இனிக்கப் பாராட்டிச் சொல்லுவாய். இப்பொழுது எழுந்து வந்து உன் வாயில் கதவைத் திறவாதிருக்கிறாய்,'' ''இறைவனிடம் அன்பு உடையவர்களே, ஆண்டவனின் பழைய அடியவர்களே, சீலம் உடையவர்களே, இத்தகைய நீங்கள் புதிய அடியவராகிய எங்களது சிறுமையைப் பொறுத்துக் கொண்டால் அது தீங்கு ஆகுமா?'' ''உன் அன்புடைமை எப்படிப்பட்டது? எல்லாம் நாங்கள் அறியமாட்டோமா? நம் சிவபெருமானை அழகிய உள்ளம் கொண்டவர்கள் பாடாமல் இருப்பார்களா? உன்னை அழைக்க எங்களுக்கு இவ்வளவும் வேண்டும்,''

''ஒளியுள்ள முத்துப் போன்ற பற்களை உடைய நங்கையே! இன்னும் விடியவில்லையா? அழகிய கிளிபோலும் மொழியுடைய பெண்டிர் எல்லாரும் வந்துவிட்டார்களா?''

''வந்தவர்களைக் கணக்கிட்டுச் சொல்லுவோம். அதுவரைக்கும் கண்களை உறங்கச் செய்து, இறைவனைப் போற்றாமல் காலத்தை வீணே கழியாமல், அமரர்க்கு ஒப்பற்ற அமிழ்தாக உள்ளவனும் திருமறையின் மேலாம் பொருளாக இருப்பவனும் காண்பாருடைய கண்களுக்கு இனிய காட்சியளிப்பவனும் ஆகிய சிவபெருமானைப் புகழ்ந்து பாடி உள்ளம் அசைவற்று இருக்க உள்ளே நெகிழ்ந்து கசிந்து உருகுவாயாக! வந்தவர்களை நாங்கள் எண்ணமாட்டோம். கணக்கிட்டு

5. மாலறியா நான்முகனும் காணா மலையினை நாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்களே பேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்!
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மை ஆட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனே என்று
ஓலம் இடினும் உணராய் உணராய் காண்
ஏலக் குழலி! பரிசுஏலோர் எம்பாவாய்!

6. மானே! நீ நென்னலை நாளைவந்து உங்களை
நானே எழுப்புவன் என்றலுமே நாணாமே
போன திசைபகராய்! இன்னம் புலர்ந்தின்றோ?
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானே வந்தெம்மைத் தலையளித்து ஆட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்!
ஊனே உருகாய்! உனக்கே உறும் எமக்கும்
ஏனோர்க்கும் தங்கோனைப் பாடு ஏலோர்!
எம்பாவாய்!

7. அன்னே! இவையும் சிலவோ? பலஅமரர்
உன்னற்கு அரியான் ஒருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் 'சிவன்' என்றே வாய்திறப்பாய்!
தென்னாஎன் னாமுன்னம் தீசேர் மெழுகுஒப்பாய்!
என்னானை என்அரையன் இன்னமுது என்றெல்லோமும்
சொன்னோம்கேள்; வெவ்வேறா! இன்னமும்
துயிலுதியோ?
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்!
என்னே துயிலின் பரிசு!ஏலோர் எம்பாவாய்!

எண்ணிக்கை குறையுமானால் நீ மறுபடி சென்று உறங்கு வாயாக!''

''திருமாலால் அறியப் படாத அடியினையும் பிரமனால் காணப்படாத முடியினையும் உடைய மலைவடிவாக நின்ற இறைவனை நாம் உணர்வோம் என்று இவ்வாறு உள்ளன வாகிய பொய்களையே - சுரக்கும் பாலும் தேனும் போல் இனி மையாகப் பேசும் வாயினையுடைய வஞ்சகீ! வாயிற் கதவைத் திறப்பாயாக! மண்ணுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் பிற, உலகத்தவரும் அறிதற்கும் அரிய அப் பெருமானின் அழகையும், நம்மையும் ஆட்கொண்டு அருளிச் சீராட்டும் இனிய குணத்தை யும் புகழ்ந்து பாடிச் சிவபெருமானே சிவபெருமானே என்று குறையிரந்து கூவியும் நீ அறியவில்லை! துயில்விட்டு எழுந்தாயு மில்லை! மயிர்ச்சாந்து அணிந்த கூந்தலை உடையவளே! நின் தன்மை இருந்தவாறு என்னே!''

''மான் போலும் மருண்ட விழியுடையாய்! நேற்று நீ [எம்மிடம்] நாளைக்கு வந்து உங்களை நானே துயில் உணர்த்து வேன் என்று சொன்ன சொல்லும் நாணாது போன திசையைச் சொல்லுவாயாக, இன்னமும் விடியவில்லையோ?

விண்ணவரும் மண்ணவரும் பிறரும் யாவராலும் அறி தற்கு அரியவன் தானாக வலிய வந்து எளியவராகிய நம்மை அருளிக் காத்து அடிமை கொண்டருளும் மேலான நெடிய திரு வடிகளைப் புகழ்ந்து பாடி வந்தோர்க்கு உன் வாய் திறந்து ஒரு சொல் சொல்லவில்லை; உடல் உருகப் பெற்றில்லை. இந் நிலை உனக்குப் பொருந்தும், எமக்கும் மற்றும் எல்லார்க்கும் தலைவனான அப்பெருமானைப் பாட எழுந்திருப்பாயாக!''

தாயே! [பெண்ணே] [அன்போடிருந்தும் அன்பிலள் போலக் கிடத்தல் செய்யும்] இவை தாமும் உன்னிடம் சில இருக் கின்றனவோ? பல தேவர்களாலும் நினைப்பதற்கும் அரியவனும் ஒப்பற்றவனும் பெருஞ்சிறப்பு உடையவனும் ஆகிய சிவபெரு மானின் சங்கு முதலிய திருச்சின்னங்கள் ஒலிக்கக் கேட்ட அளவில் ''சிவசிவ'' என்றே வாய் திறந்து பேசுவாய்! ''தென்னவனே'' என்று பிறர் சொல்லுமுன் நெருப்பைச் சேர்ந்த மெழுகு போல் உருகுவாய்! இப்பொழுதோ ''என் தந்தை, ஆட்கொள்ளும் என் அரசு, இன்புறுத்தும் என் இனிய அமுதம்!'' என்று நாங்கள் எல்லோரும் தனித்தனியே கூறக் கேட்பாய்! கேட்டும் இன்னமும் உறங்குன்றனையோ? இறைவனுக்கான அன்பு இல்லாத வன்மை

8. கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்
ஏழில் இயம்ப இயம்பும்வெண் சங்குஎங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோம்
கேட்டிலையோ?
வாழி! ஈது என்ன உறக்கமோ? வாய்திறவாய்!
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ?
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழைபங் காளனையே பாடு ஏல்ஓர் எம்பாவாய்!

9. முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!
உன்னைப் பிரான் ஆகப் பெற்ற உன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்
காவோம் !
அன்னவரே எங்கணவர் ஆவார் அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்கு எங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம் ஏலோர் எம்பாவாய் !

10. பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர்;
போதார் புனைமுடியும் எல்லாமும் பொருள்முடிவே
பேதை ஒருபால்; திருமேனி ஒன்றல்லன்,
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்
ஓத உலவா ஒருதோழன் தொண்டருளன்
கோதில் குலத்துஅரன்தன் கோயில் பிணாப்
பிள்ளைகாள்!
ஏதுஅவனூர்? ஏதுஅவன்பேர்? ஆர்உற்றார் ஆர்அயலார்?
ஏதுஅவனைப் பாடும் பரிசு! ஏலோர் எம்பாவாய்?

யான நெஞ்சு படைத்த அறிவிலார் போல் சும்மா கிடக்கிறாய். உறக்கத்தின் தன்மை எத்தகையது?''

கோழிச்சேவல் கூவும்; எங்கும் பறவைகள் ஒலி செய்யும். நாதசுரம் வாசிக்க [அதற்கு முன்] வெண்ணிறச் சங்குகள் எங்கும் ஒலிக்கும். ஒப்பற்ற மேலாம் பேரொளி வடிவினனின் ஒப்பற்ற மேலாம் கருணை முதலிய ஒப்பற்ற உயர் பொருள்கள் சேரும் புகழ்ப் பாடல்களை நாங்கள் பாடினோம்; நீ கேட்டாயில்லையா? வாழிய இஃது என்ன துயிலோ ? வாய் திறக்கின்றாயில்லையே! அருட்கடலாம் இறைவனிடம் அன்பு செய்யும் முறையும் இத் தகையது தானா? ஊழித் தலைவனாகத் தான் மட்டும் அழிவற்று நிற்கும் ஒப்பற்றவனும் இறைவியை ஒரு கூற்றில் உடையவனும் ஆகிய இறைவனைப் பாடுவாயாக !

முற்பட்டவனாகிய பழைய பொருள்கள் யாவினும் முற் பட்ட பழைய பொருளாக உள்ளவனே! பிற்பட்டவனாகிய புதிய பொருள்கள் யாவற்றிற்கும் மீண்டும் அப்புதிய பொருள் தன்மை உடையவனே! உன்னைத் தலைவனாகப் பெற்றமையால் உன் சிறப்பு மிக்க அடியவராகிய நாங்கள் உன் அடியாருடைய திரு வடிகளை வணங்குவோம்; அவ்வாறே உன் அடியார்க்கே உரிமை உடையவர் ஆவோம். அவ் அடியாரே எம் கொழுநர் ஆவார். அவர் விரும்பிச் சொன்ன வண்ணமே தொண்டராய்ப் பணி செய்யக் கடவேம். இந்த வண்ணமே எம் இறைவனாகிய நீ எங்களுக்கு அருள்புரிவையாயின் எந்தக் குறைவும் இல்லாதவர்கள் ஆவோம்!

இறைவனின் திருவடி மலர்கள் கீழுலகம் ஏழினுக்கும் கீழாக, சொல்லில் அடங்காத நிலையன. மலர்கள் நிறைந்து அணி செய்யப்பட்ட திருமுடியும் எல்லாப் பொருள்களுக்கும் முடிவாக உள்ளது. பெண்ணை ஒரு பக்கத்தில் உடையவன்; ஒரு வகைப்பட்ட திருமேனியன் அல்லன். தன் அடியார்க்கு, மறை முதலாக விண்ணுலகத்தினரும் மண்ணுலகத்தினரும் புகழ்ந்து போற்றினும் புகழ்ச்சி முடிக்கப்பெறாத ஒப்பற்ற உயிர்த் தோழனாக உள்ளவன்; குற்றமிலா அடியார் கூட்டத்தை உடைய சிவபெருமானின் திருக்கோயிலில் உள்ள பெண்மக்களே!

அப்பெருமானின் ஊர் யாது? பெயர் யாது? உற்றார் ஆக உள்ளோர் யாவர்? அயலார் யாவர்? அவனைப் புகழ்ந்து பாடும் முறை யாது?

!மொய்ஆர் தடம்பொய்கை புக்கு 'முகேர்' என்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா! வழியடியோம் வாழ்ந்தோம் காண்! ஆர் அழல் போல்
செய்யா! வெண் நீறாடி! செல்வா! சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா!
ஐயாநீ ஆண்டுகொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகைஎல்லாம் உய்ந்தொழிந்தோம்
எய்யாமல் காப்பாய் எமை ஏலோர் எம்பாவாய்!

12. ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடும்
தீர்த்தன்நற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தன்இவ் வானும் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவம் செய்ய அணிகுழல்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துஉடையான் பொற்பாதம்
ஏத்தி இருஞ்சுனைநீர் ஆடுஏலோர் எம்பாவாய்!

13. பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தால் பின்னும் அரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார் வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கும் மடுவில் புகப் பாய்ந்து பாய்ந்து நம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல் பொங்கப்
பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடலோர் எம்பாவாய்!

○ அம்மையும் அப்பனும் ஒத்தியைந்து இருப்பது போலப் பூம் பொய்கை விளங்குதற்குக் காரணம், பைங்குவளைக் கார் மலர், செங்கமல மலர்ப்போது, அங்கங் குருகினம், பின்னும் அரவம், தங்கண் மலங்கழுவுவார் வந்து சார்தல் என்பன ஆகும்.

அம்மையப்பருக்குக் கூறுங்கால், குளிர்ந்த கருங்குவளை மலர் அருள் நிறைந்த நீலமேனியுடைய அம்மையையும் செந் தாமரை மலர் தீமேனியனாகிய அப்பனையும் குறிக்கும். அங்கம் (கை) குருகு இனம் (வளையல் தொகுதி) என்பன கையில்

அடர்ந்த நெருப்புப் போன்ற செம்மை நிறம் உடையவனே! திருமேனியில் வெள்ளிய திருநீறு நிரம்ப அணிந்தவனே! முத்திச் செல்வனே! சிறிய இடையும் மையுண்ட அகன்ற கண்களும் உடைய உமையம்மையின் கணவனே! எங்கள் தலைவனே!

வண்டுகள் நிறைந்த அகன்ற குளத்திற் புகுந்து 'முகேர்' என்று ஒலியுண்டாகக் கையினால் நீரை இறைத்து அமுங்கிக் குளித்து உன் திருவடிகளைப் புகழ்ந்து பாடி வழிவழி அடிமைகளாகிய நாங்கள் நல்வாழ்வு வாழ்ந்தோம். ஆண்டவனாகிய நீ உயிர்களை ஆட்கொண்டு காத்தருளும் திருவிளையாட்டினால் உய்தி பெறுவார் உய்யும் வகைகளில் எல்லாவற்றாலும்பிழைத்துக் கொண்டோம். இனி நாங்கள் தளராதபடி காத்தருள்வாயாக!

நம்மை மிக முற்பட்ட கால முதலே பிணித்துள்ள பிறவித் துன்பம் ஒழிய நாம் மகிழ்ந்து ஆடும் தூய நன்னீரனும், தில்லைச் சிற்றம்பலம் ஆகிய மேலாம் நுண் அறிவு வெளியில் அனலை ஏந்தி ஆடும் அருட்கூத்தினை உடையவனும், வானையும் இந் நிலவுலகத்தையும் நம் எல்லோரையும் படைத்துக் காத்து ஒடுக்கி விளையாடுபவனும் ஆகிய வளையல்கள் ஒலிக்கவும் நீண்ட மேகலைகள் ஆரவாரிக்கவும் அழகிய கூந்தலின் மேல் வண்டுகள் ஆரவாரமாக ஒலிக்கவும் பொய்கையில் முழுகி எல்லாம் உடைய இறைவனுடைய பொன்னடிகளைப் புகழ்ந்து பாடி (பின்) பெரிய நீர்ச் சுனைக் கண்ணும் ஆடுவோமாக.

பொய்கையில் குளிர்ந்த குவளைக் கருமலர்களும் செந்தாமரையின் அழகிய மலர்களும் அழகிய நீர்ப் பறவைத் தொகுதியும் பின்னி எழும் அலை ஓசையும் இருத்தலால், தம் அழுக்கைப் போக்க நீராடுவார் வந்து சேர்தலால் எம் இறைவியும் இறைவனும் ஒத்து இயைந்து இருப்பது போலக் காட்சி தரும் நீர் நிறைந்த பொய்கையில் நாம் குதித்துக் குதித்து உட்புகலால்,

கைவளைகள் ஒலிக்கவும் சிலம்புகள் சேர்ந்து ஆரவாரிக்கவும் கொங்கைகள் குலுங்கவும் முழுகப் புனல் மேலேற, தாமரை மலர்களால்அழகுறவிளங்கும் பொய்கையில்புகுந்துகுதித்து ஆடுவோமாக!

வளையல் குழுவையுடைய இறைவியையும், பின்னும் அரவம் என்பது பின்னிக்கிடக்கின்ற பாம்பாகிய அணிகளை உடைய இறைவனையும் குறிக்கும். மலங்கழுவுவார் வந்து சார்தல், தங்கள் ஆணவம் முதலியவற்றைப் போக்குவார் வந்து அம்மையப்பரை அடைதலைக் குறிக்கும்.

○

14. காதார் குழையாடப் பைம்பூண் கலன்ஆடக்
கோதை குழலாட வண்டின் குழாம்ஆடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதித் திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தம்ஆ மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடலோர் எம்பாவாய்!

15. ஓரொருகால் 'எம்பெருமான்' என்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாய்ஓவாள் சித்தம் களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரைக் கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத்
தான்பணியாள்
பேரறையற்கு இங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆர்ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும்
வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர்
எம்பாவாய்!

16. முன்னிக் கடலைச் சுருக்கி எழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள்
இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பில் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவன்நமக்கு முன்சுரக்கும் இன்அருளே
என்னப் பொழியாய் மழைஏலோர் எம்பாவாய்

காதில் அணியப் பெற்ற தோடு அசையவும் உடம்பில் அணிந்திருந்த பிற அழகிய அணிகலன்கள் அசையவும், கூந்தலில் சூடிய மாலை அசையவும், மாலையினைச் சுற்றும் வண்டுகளின் கூட்டம் எழுந்து அலையவும், குளிர்ந்த நீரில் முழுகிப் பின் திருச்சிற்றம்பலமாம் இறையிருக்கையைப் பாடி, மறைப்பொருள் அமைந்த பாடல்களைப் பாடி, பெருமான் அப் பாடல்களாக இருத்தலைப் பாடி, ஒளிவடிவினனான அப்பெருமானின் மாட்சி யைப் பாடி, சுற்றியணிந்த கொன்றை மாலையைப் புகழ்ந்து பாடி, அப்பெருமான் எல்லாவற்றுக்கும் முதலாக இருக்கும் முறைமையைப் பாடி, முடிவாக இருக்கும் முறைமையைப் பாடி, வினைப்பயனை நுகருங்கால் வேறுபடுத்து நம்மைப் பாதுகாத்து ஆட்கொண்ட வளையல் அணிந்த கையினை உடைய உமை யம்மையின் திருவடியின் அருள் திறத்தைப் பாடி ஆடுவோமாக.

கச்சு அணிந்த, அழகிய அணிகலன் அணிந்த மார்பு உடையீர்! சிவானுபவ இன்பநிலையில் இவள் ஒவ்வொரு சமயம் எம்பெருமானே என்றுகூறி நம் தலைவனின் பெருமையினை ஒரு போதும் வாய்நில்லாது கூறுவாள். மிகுந்த கண்ணீர் ஒருகாலும் வற்றாத நெடிய தாரையாகப் பொழிய நிலத்தின்மேல் ஒரே முறையான வணங்குதலை உடையாள். தேவர்களைப் பணிதல் செய்யாள். யாவரினும் பெரிய மன்னனாகிய சிவபெருமானுக்கு இவ்வளவு மயக்கமாதலும் இவ்வாறோ! இவ்வகையாக இவளை ஆட்கொள்ள ஆற்றல் உடைய ஒருவர் யாரோ, அவருடைய திருவடிகளை நாம் வாயாரப்பாடிக் கொண்டு, அழகிய மலர்கள் மிக்க நீரில் வீழ்ந்து ஆடுவோமாக!

முகிலே! நீ கடலைப் பொருந்தி அது குறையுமாறு நீரை முகந்து விசும்பில் எழுந்து எம்மை உடையவளாகிய உமையம்மை போல நீல நிறம் திகழ எங்களை ஆட்கொண்டருளும் அவ் அம்மையின் சிறிய இடை போல மின்னுதல் செய்து திகழ்ந்து எம்பெருமாட்டி திருவடி மேல் அணிந்த பொன்னாலாகிய அழகிய சிலம்பு போல ஒலித்து, அவளது அழகிய புருவம் போல (வான)வில் விளங்கப் பெற்று நம்மை அடிமையாக உடையளாகிய அப் பெருமாட்டியினின்றும் பிரிதல் இல்லாத எம்பெருமானின் அடியார்க்கும் எளியேமாகிய எங்கட்கும் அவள் முற்பட்டுத் திருவுளம் கொண்டு சுரக்கின்ற இனிய அருட் பெருக்கைப் போல் பொழிவாயாக.

17. செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள் பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட்கு ஆரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலம் திகழப்
பங்கயப் பூம்புனல் பாய்ந்து ஆடேலோர் எம்பாவாய்!

18. அண்ணா மலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீறு
அற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாம்அகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்குஒளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேஇப் பூம்புனல் பாய்ந்து
ஆடலோர் எம்பாவாய்!

19. உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று
அங்கப் பழஞ்சொல் புதுக்கும்எம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன்று உரைப்பேன்கேள்;
எங்கொங்கை நின்அன்பர் அல்லார்தோள் சேரற்க!
எங்கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க!
கங்குல் பகல்எங்கண் மற்றொன்றும் காணற்க
இங்குஇப் பரிசே எமக்குஎங்கோன் நல்குதியேல்
எங்கெழில்என் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய்!

மணம் தங்கும் கருங்கூந்தலையுடைய நங்கையே! சிவந்த கண்களையுடைய திருமாலிடத்தும் நான்முகனிடத்தும் இந்திரன் முதலிய தேவரிடத்தும் மற்றும் எல்லாரிடத்தும் இல்லாததாகிய ஒப்பற்ற பேரின்பம் எளியேம் ஆகிய நம்மிடத்ததாக, நம் குற்றம் களைந்து இவ்வுலகிலே நம் வீடு தோறும் எழுந்தருளி வந்து தன் செந்தாமரை போன்ற அழகிய திருவடிகளை எளிமையாகத் தந்தருளும் வீரனை, அழகிய அருள் நோக்கம் உடைய இறைவனை, அடிமைகளாகிய நமக்குக் கிடைத்தற்கு அரிய அமுதம் ஆக உள்ள சிவபெருமானின் புகழ் பாடி நம்மனோர்க்கு நன்மை உண்டாகத் தாமரை மலர் முதலியவற்றால் பொலிந்து விளங்கும் நீரில் குளித்து ஆடுவோமாக.

திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் திருவடித் தாமரை மலர்களை அடைந்து வணங்கும் வானவர்களின் முடியில் உள்ள பல்வகை மணித்தொகுதிகளும் ஒளி குன்றிப் பொலிவிழத்தல்போல், இருள் நீங்குமாறு எங்கெங்கும் பரவிய கதிரவனின் ஒளி வெளிப் பரவவும் தம் தண்ணிய ஒளி குன்றி அழகிழந்து விண்மீன்கள் நீங்கிவிடவும் [இந் நிலையில்] பெண் ஆண் அவ்விரண்டும் அல்லாதது ஒளிவிளங்கும் வானம் புவி என்று இத்தனையும் ஆகி இவற்றுக்கு வேறான பொருள்களும் ஆகி, அறிவில் நிறைந்த அமுதம் ஆகி, நிலைபெற்ற பெருமானின் திருவடிகளைப் புகழ்ந்து பாடி, நங்கையே! பொலிவுடைய நீர்நிலையில் ஆடுவோமாக!

'உன்னிடம் ஒப்படைக்கப்பட்ட இப் பெண்பிள்ளை உன்னிடம் அடைக்கலமாக வந்திருக்கிறாள்' என்று தொன்று தொட்டு உரைத்து வரும் வழக்கினைப் புதுப்பித்துச் சொல்கிறோம் என்று அச்சம் காரணமாக உனக்கு ஒன்று வேண்டுதல் செய்து கொள்கிறோம். கேட்டருள்வாயாக! எம் கொங்கை உன் அன்பரல்லாதார் தோள்களைத் தழுவாதொழிக. எம் கைகள் உனக்கல்லாது எவர்க்கும் எத்தகைய தொண்டும் செய்யாதொழிக. எம் கண்கள் இரவும் பகலும் நின்னையன்றி வேறு எந்த ஒரு பொருளையும் காணாது ஒழிக. இவ் வுலகத்தில் இவ்வாறே எங்களுக்கு வேந்தனாகிய நீ அருள் செய்வாயாயின் கதிரவன் கீழ்த் திசையிலன்றி வேறு எத்திசையில் தோன்றினும் எங்களுக்கு வரக்கூடியது எதுவும் இல்லை.

போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றிஎல் லாவுயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றிஎல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றிஎல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரீகம்
போற்றியாம் உய்யஆட் கொண்டருளும் பொன்
மலர்கள்
போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்!

திருச்சிற்றம்பலம்

## எட்டு
## திருவம்மானை

'பாடுதும் காண் அம்மானாய்' என்று முடியும் ஆறடித்தரவு கொச்சகக் கலிப்பா 20 அமைந்த இத் திருப்பதிகம் திருவண்ணாமலையில் அருளப் பெற்றது. ''ஆனந்தக் களிப்பு அதாவது சுக மேலீடு'' இதன் உட்கிடை என்றனர் முன்னைச் சான்றோர். ஆனந்தக் கனிவில் அடிகள், மகளிர் விளையாடும் அம்மானைப் பாட்டில் வைத்து அனுபவச் செறிவின் எதிரொலியாக உண்மைகள் பலவற்றை ஒலி செய்கிறார்.

திருச்சிற்றம்பலம்

1. செங்கண் நெடுமாலும் சென்று இடந்தும் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்புஅறுத்திட்டு எம்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடுஅருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்

எம் தலைவனே! எம்மைக் காத்து எப்பொருட்கும் முதலாக உள்ள உன் திருவடிகளை அருள்வாயாக! எங்களைக் காத்து எப்பொருட்கும் முடிவாகிய உன் செவ்விய தளிர்போன்ற திரு வடிகளை அருள்வாயாக! எல்லா உயிர்க்கும் தோன்றுதற்குக் காரணம் ஆகிய பொன் போன்ற திருவடிகள் எங்களைக் காத்தருளுமாக!

எல்லா உயிர்கட்கும் இன்ப நுகர்ச்சி ஆகிய உன் அழகிய திருவடிகள் எங்களைக் காத்தருளுமாக! எல்லா உயிர்க்கும் ஒடுக்கக் காரணம் ஆகிய இரு திருவடிகளும் எங்களைக் காத் தருளுமாக! திருமாலும் நான்முகனும் காணாத தாமரை போலும் திருவடிகள் காத்தருள்க! நாங்கள் எல்லாம் உய்யும் வண்ணம் அடிமை கொண்டு இன்பம் அருளும் பொன் போன்ற திருவடிகள் நம்மைக் காத்தருள்க!

நாம் ஆடும் மார்கழி நீர் நம்மைக் காத்தருளுமாக!

○

அருட்சுவை கொழித்துச் சொல்லும் பொருளும் சுவை மிகுந்து இனிய ஓசையும் விழுப்பமான உணர்ச்சிப் பெருக்கும் பொருந்தப் பாக்கள் அமைந்துள்ளன இத் திருப்பதிகத்தில். 'பண்சுமந்த பாடல்' என்று தொடங்கும் பாடல் பெருமிதம் பொலிவது; ''ஊன் ஆய் உயிர் ஆய்'' என்று தொடங்கும் பாடல் நெஞ்சை அள்ளுவது; ''சுடுவேன் பூங்கொன்றை'' என்று தொடங்குவது காதல் நலம் கொண்டது. ''பேரானந்தம் பாடு துங்காண்'' என்ற முடிவில் வருவது பதிகப் போக்கைப் படம் பிடித்துக் காட்டுவது.

○

சிவந்த கண்கள் உள்ள உயரிய திருமாலும் ஆழச் சென்று தோண்டியும் காண்பதற்கு முடியாத ஒளி மிக்க மலர் போன்ற பாதங்களுடன் மண்ணுலகிற்கு வந்து எமது தாழ்ந்த நிலையிலும் ஆட்கொண்டு எங்களின் பிறப்பை அகற்றி, தென்னைகள் அடர்ந்த சோலை சூழ்ந்த பாண்டிநாட்டுத் திருப்பெருந்துறை யில் அழகிய அருள்நோக்கம் உடைய இறைவன் குளிர்ச்சியுள்ள ஆசானாக நம்மை வலிய அழைத்து வீடுபேறு அருளும் அந்த அழகிய அருளாளனின் நெடிய கழலணிந்த திருவடிகளைப் பாடுவோம், அம்மானை ஆடும் பெண்ணே!

2. பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலும் காண்டற்கு அரியான் எமக்குஎளிய
பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழிஅருளி வந்தென் உளம்புகுந்த
ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய்

3. இந்திரனும் மால்அயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவன்அவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோள்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துஉருக்கும் சீரார்பெருந்துறையான்
பந்தம் பரியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தம் இலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்

4. வான்வந்த தேவர்களும் மால்அயனோடு இந்திரனும்
கான்நின்று வற்றியும் புற்றுஎழுந்தும் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு
ஊன்வந்து உரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந்து அமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய்!

5. கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத்து அழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம் மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய்

மண்ணுலக மாந்தரும் விண்ணுலகில் இருப்பவரும் பாதாளத்து உள்ளாரும் ஏனைய உலகில் இருப்பாரும் ஆகிய எவராலும் காண்பதற்கு அரியவன் எமக்கு எளிமையாக வந்தருளும் பெருமையானன், பாண்டிப் பெருமான், பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவன் எனக்குப் பித்து ஏற வைத்து இவ்வுலகிற் பிறவா வழி தந்து என் உள்ளத்தில் புகுந்த தெவிட்டாத அமுதம் ஆனவன், அலை கடலில் மீன் பிடிக்க வலை வீசும் பெரிய அன்புக் கடலாக உள்ளவனைப் பாடுவோம், அம்மானை ஆடும் பெண்ணே!

இந்திரனும் திருமால் பிரமன் ஆகியோரும் மற்றைப் பெருந்தேவரும் வானில் உள்ள பிறரும் அருள்வேண்டி விண்ணிலே நிற்கவும் சிவனாகிய பெருமான் தோளில் துலங்கும் நீறு உடையனாக இவ்வுலகிற்கு வந்து எம் போன்ற தரம் இல்லாரையும் ஆட்கொண்டு உள்ளத்திற் புகுந்து உருக்குபவன், சிறப்பு மிக்க பெருந்துறையில் அமர்ந்தவன். எம் பிணிப்புகள் விட்டு நீங்கக் குதிரைமேல் வந்தவன் வழங்கிய முடிவிலாப் பேரின்பத்தைப் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

வானில் உள்ள தேவர்களும் திருமால் பிரமன் இந்திரன் ஆகியோரும் தவம் செய்யக் காட்டில் புகுந்து உடல்வற்றியும் உடல் முற்றும் புற்றால் மூடப்பெற்றும் காணுதற்கு இயலாத இறைவன் தானே வந்து நாய்போன்ற என்னைத் தாய்போல் பேரன்பு செய்து உடம்பில் மயிர்கள் சிலிர்க்க உள்ளே நெடுமூச்சு உண்டாகத் தேன் போன்ற அமுதின் தெளிவைப்போல் ஒளி உருவாக வந்த பெருமை தங்கிய நெடிய கழலணிந்த திருவடிகளைப் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

இறையியல்பைப் பயின்றிராத மனம் உடைய கடையன் ஆகிய நாய் போன்ற அடியேனை வல்லமையுள்ள அழகிய நல்ல பெருந்துறைப் பெருமான், அளவற்ற அன்பு உண்டாக வைத்துக் கல்லைப் பிசைந்தாற் போல என் மனத்தைக் குழைவித்துக் கனியாகச் செய்து தன் பேரருள் வெள்ளத்தில் திளைக்க வைத்து என் வினைகளை அகற்றிய வேதப் பொருள் ஆனவனை, தில்லை ஊரில் புகுந்து சிற்றம்பலத்தே நிலை பெற்றிருப்பவனை விரைவான காளை ஊர்தி உடையவனைப் பாடுவோம், அம்மானைப் பெண்ணே!

6. கேட்டாயோ தோழீ! கிறிசெய்த வாறுஒருவன்
திட்டார் மதில்புடைசூழ் தென்னன்
பெருந்துறையான்
காட்டா தனஎல்லாம் காட்டிச் சிவம்காட்டித்
தாள்தா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாம்மேலை வீடுஎய்த
ஆள்தான் கொண்டு ஆண்டவா
பாடுதுங்காண் அம்மானாய்

7. ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையில்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்
தாயானைத் தத்துவனைத் தானே உலகேழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய்

8. பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்
பெண் சுமந்த பாகத்தன், பெம்மான், பெருந்
துறையான்
விண் சுமந்த கீர்த்தி வியன்மண்டலத்து ஈசன்
கண் சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண் சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்கான் அம்மானாய்

9. துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோலமா ஊர்தியான்
கண்டம் கரியான் செம்மேனியான் வெள்நீற்றான்
அண்டம்முதல் ஆயினான் அந்தம்இலா ஆனந்தம்
பண்டைப் பரிசே பழஅடியார்க்கு ஈந்தருளும்
அண்டம் வியப்புறுமா பாடுதுங்காண் அம்மானாய்.

தோழியே! ஒப்பற்ற ஒருவன் மாயம் செய்த வகையைக் கேட்டாயா? ஓவியங்கள் எழுதப்பெற்ற மதில்களால் சுற்றிச் சூழப்பெற்ற அழகிய நல்ல பெருந்துறையை உடையவன், காட்டுதற்கு ஆகாதனவற்றை எல்லாம் எனக்குக் காட்டி, சிவம் ஆகிய பெருநிலையைக் காட்டி, தன் திருவடி மலரைக் காட்டித் தன் பேரருள் ஆகிய தேனைத் தந்து, உலகத்தார் சிரிக்கவும், நாம் மேலான வீட்டின்பம் அடையவும் நம்மை ஆட்கொண்ட வகையைப் புகழ்ந்து பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

இடைவிடாமல் நினைப்பவர்களின் நெஞ்சில் இருக்கும் உட்பொருள் ஆனவனை, அவ்வாறு நினைத்திராதார்க்குத் தொலைவில் இருப்பவனை, வீரனை, தென்னன் பெருந்துறையில் உள்ளவனை, உமையம்மையை ஒரு பாதியாகத் தன்னில் கொண்டவனை, நாய் போன்ற எளியோமாகிய நம்மையும் ஆட்கொண்ட தலைவனை, அனைத்துயிர்க்கும் தாயாக உள்ளவனை, மெய்ப் பொருள் ஆகத் திகழ்பவனை, தானே ஏழு உலகங்களும் ஆன வனை, எல்லாம் ஆள்பவனைப் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

பண்களால் ஏந்தப் பெற்ற பாடல்களைப் பாடும் ஆற்ற லை உண்டாக்கி அருளிய, இறைவியை ஒரு கூறாகக் கொண் டவன், பெருமான், திருப்பெருந்துறையில் வீற்றிருப்பவன், விண் ணுலகில் நிலைநிறுத்திய புகழை உடையவன், பெரிய மண்ணுல கிற்கும் இறைவன், நெற்றியிற் கண் அமைந்த கடவுள். ஆர வாரம் மிக்க மதுரையில் பிட்டுக்காக மண் சுமந்து பாண்டி யனால் அடிபட்டு அதனால் புண்பட்ட பொன்போன்ற திருமேனி யுடையான் ஆகிய இறைவனைப் புகழ்ந்து பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

கீற்றாக உள்ள பிறையை அணிந்தவன், மறைப்பொருள் ஆனவன், பெருந்துறையில் மேவியிருப்பவன், முப்புரி நூல் தரித் தவன், அழகிய காளை ஊர்தி உடையவன், கழுத்தில் நஞ்சக் கறை உடையவன், சிவந்த உடம்பினன், வெண்ணீறு பூசியவன் அண்டங்களுக்கெல்லாம் முதற்பொருள் ஆனவன், முடிவில்லாப் பேரின்பத்தைப் பழைய முறைப்படியே பழைய அடியார்களுக்கு அண்டம் வியக்குமாறு அவன் அளிக்கின்ற வகையைப் பாடு அம்மானைப் பெண்ணே.

10 விண்ணாளும் தேவர்க்கும் மேலாய வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்குப் மாண்புஆகி நின்றானைத்
தண்ணார் தமிழ்அளிக்கும் தண்பாண்டி நாட்டானை
பெண்ஆளும் பாகனை, பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி, நாயேனை ஆட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்

11 செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தான் அடைந்தார் நெஞ்சுருக்கும்
தன்மையினான்
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார் உள்இருக்கும்
அப்பாலைக்கு அப்பாலைப் பாடுதுங் காண்அம்மானாய்

12. மைத்பொலியும் கண்ணி!கேள், மால்அயனோடு இந்திரனு
எப்பிறவி யும்தேட என்னையும்தன் இன்னருளால்
இப்பிறவி ஆட்கொண்டு இனிப்பிறவா மே காத்து
மெய்ப்பொருட்கண் தோற்றமாய் மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்கும் தானேயாய் யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாய் நம்சிவனைப் பாடுதுங்காண் அம்மானாய்

13. கைஆர் வளைசிலம்ப காதார் குழைஆட
மைஆர் குழல்புரள தேன்பாய வண்டு ஒலிப்பச்
செய்யானை வெண்ணீறு அணிந்தானை சேர்ந்தறியாக்
கையானை எங்கும் செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானை அல்லாதார்க்கு அல்லாத வேதியனை
ஐயாறு அமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய்

வானை ஆளும் தேவர்களுக்கும் மேலான மறைப்பொருள் ஆனவனை, நிலவுலகில் ஆட்சி புரியும் அரசர்களுக்கும் பெருமை மிக்கவன் ஆகி நின்றவனை, குளிர்ந்த தமிழ் வளர்க்கும் அன்பான பாண்டிய நாட்டினனை, உமையம்மையை ஒரு பாகம் ஆகக் கொண்டவனை, விரும்பும் திருப்பெருந்துறையில் எளியேன் கண்கள் நிரம்பத் தன் திருவடிக் காட்சி தந்து, நாய்போன்ற இழிதகையேனை ஆட்கொண்ட திருவண்ணாமலைப் பெருமானை நாம் புகழ்ந்து பாடுவோம். அம்மானைப் பெண்ணே!

செப்புப் போன்ற கொங்கைகள் உடைய உமையம்மையைப் பாகமாக உடையவன், தென்னன் பெருந்துறைப் பெருமான், தவறாது தன் திருவடிகளை அடைந்தவர்களின் நெஞ்சை உருக்கும் தன்மை உடையவன். அந்தப் பாண்டி நாட்டைச் சிவ லோகம் ஆகுமாறு செய்தவன், நீர் (கங்கை) தங்கிய சடையை உடைய தந்தை, நெடிய கழல் அணிந்த திருவடிக்குத் தன் உள்ளத்தை ஈடாக ஒப்படைத்தவர்களின் நெஞ்சில் உள்ளீடாக அமைந்து, எல்லாவற்றையும் கடந்த அப்பாலுக்கும் அப்பாலாக விளங்குபவன் ஆகிய இறைவனைப் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

மை திகழும் கண்களை உடைய பெண்ணே! கேட்பாயாக, திருமாலும் பிரமனும் இந்திரனும் எல்லாப் பிறவிகளிலும் தன்னைத் தேடி நிற்க, ஒன்றுக்கும் பற்றாத என்னையும் தன் இனிய அருளால் இப் பிறப்பிலேயே ஆட்கொண்டு இனிப் பிறவி வாராவாறு காத்து, உன்மைப் பொருட்கண் விளங்குபவனாகி மெய்ம்மையே தான் நிலைபெற்றிருக்கும் இடமாகி, எல்லாப் பொருள்களுக்கும் தானே மூலமாகி, எல்லாவற்றுக்கும் முடிவும் ஆகும் அப் பொருளாகிய நம் சிவபெருமானை நாம் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

நம் கைகளில் உள்ள வளையல்கள் ஒலிக்கவும் காதுகளில் அணிந்த குண்டலங்கள் அசையவும் கருமை மிகுந்த கூந்தல் புரளவும் கூந்தல் மலர்களில் உள்ள தேன் பாய அதனால் வண்டுகள் ஒலிக்கவும் செம்மையானவனை, வெண்ணீறு அணிந்தவனை, இறைஞ்சுதற்கோ எதனையும் பெறுதற்கோ கைகள் சேர்த்தறியாதவனை, எங்கும் நிறைந்திருப்பவனை, அன்பிலார்க்கு அவ்வாறு இல்லாத அந்தணனை, திருவையாற்றில் அமர்ந்த நம் ஐயனை நாம் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

14. ஆனையாய்க் கீடமாய் மானிடராய் தேவராய்
ஏனைப் பிறவிஆய், பிறந்திறந்து எய்த்தேனை
ஊனையும் நின்றுருக்கி என்வினையை ஓட்டுஉகந்து
தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்துஇனிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்தொழும்பில் கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய்.

15. சந்திரனைத் தேய்த்தருளி, தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட்டு எச்சன் தலைஅரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித திசைதிசையே தேவர்களை ஓட்டு உகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய்.

16. ஊனாய் உயிராய் உணர்வாகி உள் கலந்து
தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீர் ஒளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல் உயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய்.

17. சூடுவேன் பூங்கொன்றை, சூடிச் சிவனதிரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்று
ஊடுவேன் செவ்வாய்க்கு உருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனல்ஏந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்கான் அம்மானாய்!

18. கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மால்அயனும் காண்புஅரிய வித்தகனை
தெளிவந்த தேறலை, சீரார் பெருந்துறையில்
எளிவந்து இருந்திரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்து உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய்

யானையாகவும் புழுவாகவும் மானிடராகவும் தேவராகவும் மற்றைப் பிறவிகளாகவும் பிறந்து இறந்து இளைத்த என்னை, உடம்பையும் நின்றுருகச் செய்து, என் வினைகளை ஓட்டுதலில் விருப்பம் கொண்டு தேனும் பாலும் கரும்பும் போல இனிமை யான அரசனாக வந்து என்னைத் தன் தொண்டில் ஏற்றுக் கொண்டருளும் மிக மேலானவனின் அழகிய கழல்களை பாடு வோம், அம்மானைப் பெண்ணே!

தக்கன் செய்த வேள்வியில் சந்திரனை மெலியச் செய்து இந்திரனின் தோள்களை நெரித்து வேள்வி நடத்திவைப்போனின் தலையை அறுத்து, வானில் செல்லும் பரந்த கதிர்களை உடைய சூரியனின் பற்களைத் தகர்த்து, தேவர்களைத் திசை தோறும் சிதறடித்து ஓட்டுதலில் விருப்புற்ற, செவ்விய பூங்கொத்து அணிந்த சோலைகள் பக்கமெங்கும் சூழப் பெற்ற தென்னன் பெருந்துறைக்கண் அமர்ந்த பெருமானின் மந்தார மலர் மாலை, யையே வியந்து பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

உடம்பாகவும் உயிராகவும் அறிவாகவும் என்னுள் கலந்து தேனாகவும் அமுதமாகவும் ஆகி, இனிய வெல்லமும் ஆகி வானோர் அறிந்திரா வீட்டுநெறியினை எமக்குத் தந்தருளும் தேன் பொருந்திய மலர்க் கொன்றை சூடிய வீரர், சிறந்த ஒளி சேர்ந்த நீங்கா அறிவாகி, அளவில்லாத பல உயிர்க்கும் அரசனாகி நின்ற தன்மையைப் பாடுவோம் அம்மானை ஆடும் பெண்ணே!

பொலிவான கொன்றை மாலையைக் சூடிக் கொள்வேன்; சூடி, சிவனின் திரண்ட தோள்களோடு அணைவேன். அணைந்து கலந்து மயங்கிநின்று பிணங்குவேன். பின், அவனது சிவந்த இதழ்களுக்கு உருகி நிற்பேன். உள்ளம் கரைந்து தேடுவேன். தேடி அந்தச் சிவனது கழலே நினைத்திருப்பேன். அது கிடையாத போது வாட்டமுறுவேல்; அதனை அடைந்ததும் மீண்டும் மகிழ் வேன். நெருப்பைக் கையில் ஏந்தி ஆடுகின்றவனின திருந்தடி களைப் பாடுவோம் அம்மானைப் பெண்ணே!

கிளி போன்ற மெல்லிய மொழியினை உடைய உமையம் மையை, ஒளிவிளங்கும் உடற்பங்காக உடையவனை, யாம் காண் போம் என்று புறப்பட்ட மாலும் அயனும் காண முடியா அறிவு ருவை, தெளிந்த தேனை, சிறப்பு உடைய திருப்பெருந்துறைக்கண் எளிமையாக வந்திருந்து இரக்கம் காட்டி, நினைத்துப் பார்க்க முடியா இனிய அருளால் ஒளியாக வந்து என் உள்ளத்தில் உள்ளே ஒளி விளங்குமாறு அருள் செய்த அழகிய குளிர்ந்த அறவோனைப், பாடுவோம் அம்மானை ஆடும் பெண்ணே!

19. முன்னானை மூவர்க்கும் முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானை பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாது இயலும் பாதியனை
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை என்னப்பன் என்பார்கட்கு இன்னமுதை
அன்னானை அம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய்

20. பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணம் கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்பு அறுப்பான் தொல்புகழே
பற்றிஇப் பாசத்தைத் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபேர் ஆனந்தம் பாடுங்காண் அம்மானாய்

திருச்சிற்றம்பலம்

ஒன்பது

## திருப் பொற் சுண்ணம்

'பொற் சுண்ணம் இடித்தும் நாமே' என்ற முடிப்புத் தொடர் கொண்டனவாக அமைந்த ஆசிரிய விருத்தம் பத்து அடங்கிய இப்பதிகம் தில்லையில் அருளப் பெற்றது. 'ஆனந்த மனோலயம் அதாவது தானன்றி நிற்றல்' இதன் உட்கிடை என்ப. ''சக்திகளால் தனுகரண புவன போகங்கள் தம்மை அத் தனுக்குச் சுண்ணமவை யாயிடிக்கக் கூவுதலே ஒத்த திருச் சுண்ணம்'' என்று ஒன்பது சக்திகளால் உடல் கருவி உலகு நுகர்வுகள் ஆகிய பொருள்களை இட்டுக் கடவுட்குச் சுண்ணம் இடிக்கத் தோழிகளை அழைத்தல் இதன் மையக் கருத்து என்பது திருவாசக உண்மை கூறும் கருத்து.

கடவுளர் மூவர்க்கும் முற்பட்டவனை, எல்லாப் பொருள்களும் ஆகி, அவை யாவற்றுக்கும் முடிவானவனும் ஆகி, தலைக்கோலம் உடையவனாக, விரும்பும் திருப் பெருந்துறையில் நிலையாக இருப்பவனை அறிவெளியாக இருப்பானை, இறைவியைப் பாகமாக உடையவனை இனிய திருவானைக்காவில் இருப்பவனை தென்பாண்டி நாட்டானை, என்னவனை 'என் தந்தையே!' என்று போற்றுவார்க்கு இனிய அமுதம் போன்றவனை, தந்தையைப் பாடுவோம் அம்மானை ஆடும் பெண்ணே!

தன் தன்மை இன்னதென்று தன் அடியார் அல்லார்க்கு அறிதற்கு அரிய பெருமான், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருப்பவன், வெற்றி பொருந்திய குதிரையின் மேல் வந்தருளித் தன் அடியாரின் குற்றங்களைக் களைந்து குணத்தை ஏற்றுச் சீராட்டி, சூழ்ந்திருக்கிற சுற்றத்தின் பிணிப்பை அறுக்கிறவனை, தன் பழம் புகழைப் பற்றி இந்தப் பாசமாகிய பற்று ஒழிய நாம் பற்றிக் கொள்வதற்காக நம்மைப் பற்றிக் கொண்ட பேரின்பத்தைப் பாடுவோம் அம்மானை ஆடும் பெண்ணே!

○

உலக்கைப் பாட்டு உரல் பாட்டு என்ற வகையினது சுண்ணம் இடித்தல். அது இங்கேஇறைவனுக்குத் திருநீராட்டுக்குப் பொடி இடிக்கும் மகளிர் பாடுவதாக அமைந்துள்ளது. சுண்ணம் இடித்தற்கு முன்னேற்பாடுகள், அயன் அரி முதலியோர்க்கு முந்திச் செய்ய வேண்டும் என்பது, ஆரவாரம் ஆனந்தம் ஆடல் என்றாங்கு இடிப்பது வருணனை பெறுகின்றன. 'ஆடகம் தோள். வளை ஆர்ப்ப ஆர்ப்ப' என்று 'சித்தம் சிவனோடும் ஆட ஆட' என்று அடுக்குமொழிகளும் பின்வரு நிலையும் இனிமை கூட்டுகின்றன. வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு என்று தொடங்கி இருமைகளாகக் கூறி எல்லாம் ஆயினார்க்குச் சுண்ணம் இடித்தும் என்று பாடுவது சிறப்பாக இருக்கிறது.

○

திருச்சிற்றம்பலம்

1\. முத்துநல் தாழம்பூ மாலைதூக்கி
முளைக்குடம் தூபநல் தீபம்வைம்மின்
சத்தியும் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டுஇசைமின்
சித்தியும் கௌரியும் பார்ப்பதியும்
கங்கையும் வந்து கவரிகொள்மின்
அத்தன் ஐயாறன்அம் மானைப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்து[ம்] நாமே!

2\. பூவியல் வார்சடை எம்பிராற்குப்
பொன்திருச் சுண்ணம் இடிக்கவேண்டும்
மாவின் வடுவகிர் அன்ன கண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறம்நிலாமே
குனிமின் தொழுமின்எம் கோன்எம் கூத்தன்
தேவியும் தானும்வந்து எம்மையாளச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே!

3\. சுந்தர நீறு அணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பகம் நாட்டிஎங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடிஎடுமின்
அந்தரர் கோன்அயன் தன்பெருமான்
ஆழியான் நாதன்நல் வேலன்தாதை
எந்தரம் ஆள்உமை யான்கொழுநற்கு
ஏய்ந்த பொற்சுண்ணம் இடித்துநாமே

கார்சணி மின்கள் உலக்கைஎல்லாம்;
காம்புஅணி மின்கள் கறைஉரலை;
நேசம் உடைய அடியவர்கள்
நின்று நிலாவுக என்று வாழ்த்தித்
தேசம்எல் லாம்புகழ்ந் தாடும்கச்சித்
திருவேகம் பனசெம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்துநின்று
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

அழகிய முத்துமாலைகளையும் மலர்மாலைகளையும் தொங்கக் கட்டி, பயிர்கள் முளைவிட்டு எழுந்த குடங்களையும் நறும்புகைக் கலசங்களையும் நல்ல விளக்குகளையும் வையுங்கள்! சத்தி சோமி நிலமகள் கலைமகள் ஆகியோரொடு திருப்பல் லாண்டு பாடுங்கள்! சித்தி கௌரி பார்வதி கங்கை ஆகியோர் வந்து சாமரை வீச முன்வாருங்கள்! அப்பனும் திருவையாற்றில் வீற்றிருப்பவனும் பெருமானுமாகிய இறைவனைப் பாடி, அவன் நீராட நாம் அழகிய நறுமணப் பொடியை இடிப்போம்

அழகு வாய்ந்த நீண்ட சடையை உடைய எம் பெருமானுக்கு அழகிய திருச்சுண்ணம் இடிக்க வேண்டும் மாவடுவைப் பிளந்தால் ஒத்த கண்களை உடையீர்! வாருங்கள். கூடச் சேர்ந்து பாடுங்கள் தொண்டர்கள் வெளியே நின்றிராவாறு அவர்களைக் கூப்பிடுங்கள் ஆடுங்கள் வணங்குங்கள். எம்இறைவனும் கூத்தனும் ஆன சிவபெருமான் உமையம்மையும் தானும் ஆக எழுந்தருளி எம்மை ஆளும் பொருட்டுச் செம்பொன் நிறம் காட்டும் வண்ணப் பொடியை இடிப்போம்.

அழகிய திருநீறு பூசி, சுண்ணம் இடிக்கும் இடத்தை மெழுகித் தூய பொற்பொடிகளைத் தூவி நிதியாகிய மணி களைப் பரப்பி, இந்திரனின் கற்பகத்தை நாட்டி வைத்து எவ் விடத்தும் அழகிய விளக்குகள் வைத்து, கொடிகளை உயர்த்துக் கட்டுங்கள். வானவர்க்குத் தலைவன் ஆனவனும் பிரமனுக்குத் தலைவனாகிய சக்கரம் ஏந்திய திருமாலுக்குத் தலைவனாக உள்ளவனும் முருகற்குத் தந்தையும் எம்போன்றவர்களை ஆளும் உமையம்மையின் கணவனும் ஆன சிவபெருமானுக்கு இசைந்த பொற்சுண்ணம் இடிப்போம்.

உலக்கைகளுக்கு எல்லாம் மணிவடங்கள் அணியுங்கள். நிறம் உள்ள உரல்களுக்குப் பட்டாடை சுற்றுங்கள். இறையன்பு உடைய அடியார்கள் நிலைபெற்று விளங்குக என்று வாழ்த் துரைத்து நாடெல்லாம் புகழ்ந்து கொண்டாடும் காஞ்சி நகரத்துத் திருவேகம்பம் உடையானது செம்பொன்னால் ஆன திருக்கோயிலைப் புகழ்ந்து பாடி வினையால் விளையும் கட்டி னைக் களைந்தெறிந்து பாடி அழகிய சுண்ணம் இடிப்போம்.

5. அறுகெடுப் பார்அய னும்அரியும்
அன்றிமற் றிந்திர னோடுஅமரர்
நறுமுறு தேவர் கணங்கள் எல்லாம்
நம்மிற்பின்பு அல்லது எடுக்கவொட்டோம்
செறிவுடை மும்மதில் எய்தவில்லி
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
முறுவற்செவ் வாயினீர் முக்கண் அப்பற்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே!

6. உலக்கை பலஓச்சு வார்பெரியர்
உலகம்எ லாம்உரல் போதாதென்றே
கலக்க அடியவர் வந்துநின்றார்
காண உலகங்கள் போதாதென்றே
நலக்க அடியோமை ஆண்டுகொண்டு
நாள்மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருமகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்து பொற்சுண்ணம் இடித்துநாமே!

7. சூடகம் தோள்வளை ஆர்ப்பஆர்ப்பத்
தொண்டர் குழாம் எழுந்து ஆர்ப்பஆர்ப்ப
நாடவர் நந்தம்மை ஆர்ப்பஆர்ப்ப
நாமும் அவர்தம்மை ஆர்ப்பஆர்ப்ப
பாடகம் மெல்லடி ஆர்க்குமங்கை
பங்கினன் எங்கள் பராபரனுக்கு
ஆடக மாமலை அன்ன கோவுக்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே!

8. வாள்தடங் கண்மட மங்கைநல்லீர்
வரிவளை ஆர்ப்பவண் கொங்கைபொங்கத்
தோள்திரு முண்டம் துதைந்திலங்க
'சோத்தம்பி ரான்' என்று சொல்லிச்சொல்லி
நாள்கொண்ட நாண்மலர்ப் பாதம்காட்டி
நாயின் கடைப்பட்ட நம்மை இம்மை
ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே!

பிரமனும் திருமாலும் குடவிளக்கு எடுப்பார்கள். அவர்கள் அன்றி வேறு, இந்திரன் உடனாய அமரர்களும் முணுமுணுக்கும் தேவர் குழாத்தினரும் ஆகியவர்கள் நமக்கும் பின்னாக அன்றி முன்னாக மங்கலப் பொருள்களை எடுக்க இசையோம். நெருக்கமான முப்புரங்களை எய்த வில்லையுடையான், திருவேகம்பனது செம்பொன்னால் ஆன கோயிலைப் பாடி முக்கண் உடைய தந்தை நீராட அழகிய மணப்பொடி இடிப்போம்.

உலகம் எல்லாம் உரலாகக் கொண்டமையால் உள்ள உலக்கைகள் போதா என்று பல உலக்கைகளை வரவிடுவார்கள் காண்பதற்கு உலகங்கள்போதா என்றுசொல்லும் படிஅடியார்கள் கூட வந்து நின்றார்கள். நன்மை உண்டாக அடியேம் ஆகிய எம்மை ஆட்கொண்டு புதுமலர் போன்ற தன் திருவடிகளை நாங்கள் தலைமேல் அணியத் தந்த, மலை அரையன் மருமகனாகிய சிவபெருமானைப் பாடிப் பாடிக் களித்து நாம் பொற்சுண்ணம் இடிப்போம்.

கைவளைகளும் தோள்வளைகளும் ஒலி செய்யவும் அடியவர் கூட்டம் எழுச்சியுடன் மகிழ்ந்து ஆரவாரம் செய்யவும் நாட்டு மக்கள் அருள்வந்த நம்மை ஏளனம் செய்து ஒலி செய்யவும் நாமும் அவர்களின் நிலை எண்ணி ஒலி செய்யவும் மெல்லிய பாதங்களில் அணிந்த பாடகம் ஒலிக்கப் பெற்ற உமையம்மையைப் பாகமாகக் கொண்டவன் எங்கள் மேலான சிவபெருமான், பொன்மலை போன்ற அரசன்—அவன் நீராடப் பொற்சுண்ணம் இடிப்போம் நாம்.

ஒளிவீசும் பெரிய கண்கள் உள்ள இளமங்கையரே! கை; வளைகள் ஒலிக்கவும் வளமான மார்பு பூரிக்கவும் தோளில் மூன்று வரிகளாகப் பூசப்பெற்ற திருநீறு படிந்து விளங்கவும் ''வணக்கம் இறைவா!'' என்று சொல்லிச் சொல்லி அவனது புதிதாகப் பூத்த தாமரையும் நாணும் படியான அழகிய திருவடிகளைப் பாடி, நாயினும் கீழான நம்மை இப் பிறப்பிலேயே ஆட்கொண்ட அழகிய தன்மைகளைப் பாடிப் பாடி அவன் நீராடப் பொற்பொடி இடிப்போம்.

9. வையகம் எல்லாம் உரலதாக
மாமேரு என்னும் உலக்கைநாட்டி
மெய்யெனும் மஞ்சள் நிறையஅட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
ஐயன் அணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே

10. முத்துஅணி கொங்கைகள் ஆடஆட
மொய்குழல் வண்டுஇனம் ஆடஆடச்
சித்தம் சிவனொடும் ஆடஆடச்
செங்கயல் கண்பனி ஆடஆடப்
பத்துஎம் பிரானொடும் ஆடஆடப்
பிறவி பிறரொடும் ஆடஆட
அத்தன் கருணையொடு ஆடஆட
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

11. மாடு நகைவாள் நிலாஎறிப்ப
வாய்திறந்து அம்பவ ளம்துடிப்பப்
பாடுமின் நந்தம்மை ஆண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்
தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தம் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத் தாடினானுக்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

12. மைஅமர் கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன்தன்னை
ஐயனை ஐயர்பி ரானைநம்மை
அகப்படுத்து ஆட்கொண்டு அருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதுஅரிக் கண்ணிணை பொற்றொடித்தோள்
பையரவு அல்குல் மடந்தைநல்லீர்!
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே!

உலகம் உரலாக இருக்க, பெரிய மேருமலையை உலக்கை யாக நட்டு நாம் உண்மை என்ற மஞ்சளை உரல் நிறைய இட்டு மேன்மை மிக்க இனிய நல்ல பெருந்துறைப் பெருமானின் செம்மையான திருவடியை மீட்டும் புகழ்ந்து பாடிச் செம்பொன் னால் ஆன உலக்கையை வலக்கையிற் பிடித்து நம் தலைவன் அழகிய தில்லையில் வாழ்வோனாகிய சிவபெருமானுக்கு நீராடற் பொருட்டுப் பொற்சுண்ணம் இடிப்போம்.

முத்து மாலைகள் அணியப்பெற்ற மார்பு அசைந்தாடவும், செறிந்த கூந்தலில் வண்டுகள் கூட்டம் ஒலிக்கவும், உள்ளம் சிவபிரானோடு நெருங்கிப் பயிலவும் செவ்வரியுள்ள கயல்போன்ற கண்களில் நீர்த்துளிகள் உவகையில் அரும்பவும், நம் உறைத்த அன்பு இறைவனொடு பொருந்தி நிற்கவும் அன்பரல்லா மற்ற வர்க்குப் பிறப்புகள் வந்துவந்து தோன்றவும் தந்தையாகிய சிவனின் திருவருளோடுகூடி விளங்கவும் அவன் நீராடப் பொற் பொடி இடிப்போம்.

பக்கங்களில் உங்களின் பற்களாகிய நிலவொளி வீசவும். அழகிய பவளம் போன்ற உதடுகள் அசையவும் நீங்கள் வாய் திறந்து, நம்மை ஏவல் கொண்ட அழகையும் பன்முறை பாடுங்கள், எம்பெருமானைத் தேடுங்கள். மனம் இன்புற்று இன்பத்தில் திகைத்துப் பின் தெளிந்து ஆடுங்கள். அம்பலத்தில் ஆடுதல், செய்தவனுக்கு நீராடற்காகப் பொற்சுண்ணம் இடிப்போம்.

கருமை நிறம் தாங்கிய மிடறு உடையவனை வானுலகத் தவர்க்கு அமுதாக இருப்பவனை, மாணிக்கம் போலும் கூத்து உடையவனை, தலைவனை தலைவர்க்கும் பெருமகனாக இருப் பவனை, நம்மைத் தன்னொடு சேர்த்து ஆட்கொண்டு தன் அரிதாம் பண்பினைக் காண்பிக்கும் பொய்யரின் பொய்யைப் பொய்யாக்குபவனை, மெய்யர்க்கு மெய்யாக விளங்குபவனை, தாமரை போன்ற அரிபரந்த இரு கண்களொடு பொன்வளை அணிந்த தோள்களையும் பாம்பின் படம் போன்ற வயிற்றின் அடியையும் உடைய மாதர்களே, பாடிப் பொற்சுண்ணம் இடிப் போம்.

13. மின்இடைச் செந்துவர் வாய்க்கருங்கண்
வெண்நகைப் பண்அமர் மென்மொழியீர்
என்னுடை ஆரமுது எங்களப்பன்
எம்பெரு மான்இம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்
தமையன்எம் ஐயன் தாள்கள்பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்!
பொன்திருச் சுண்ணம் இடித்துநாமே!

14. சங்கம் அரற்றச் சிலம்பொலிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலைஆடச்
செங்கனி வாயித ழுந்துடிப்பச்
சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்
கங்கை இரைப்ப அராஇரைக்கும்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலில் கொங்கைபொங்கப்
பொன்திருச் சுண்ணம் இடித்துநாமே.

15. ஞானக் கரும்பின் தெளிவைப்பாகை
நாடற் கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை ஆயினானைச்
சித்தம் புகுந்துதித் திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும்பு ஏறவாழ்த்திப்
பானல் தடங்கண் மடந்தைநல்லீர்!
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

16. ஆவகை நாமும்வந்துஅன் பர்தம்மோடு
ஆட்செயும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர்க னாவிலும் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவலன் ஏந்தியவெல் கொடியான்
சிவபெரு மான்புரம் செற்றகொற்றச்
சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன் செய்சுண்ணம் இடித்துநாமே,

மின்னல் போன்ற இடையினையும் சிவந்த பவளம் போன்ற வாயினையும் கருங்கண்களையும் வெள்ளிய பற்களையும் பண் தங்கிய மெல்லிய மொழியினையும் உடைய இளமகளிரே, என்னுடைய அரிய அமுதம், எங்களுக்குத் தந்தை, எம் இறைவன், இமைய மலையரசனின் மகளான பார்வதிக்குக் கணவன், மகன், தகப்பன், தமையன் என்று விளங்கும் எங்கள் தலைவனாம் பெருமானின் திருவடிகளைப் பாடி, பொன்னால் இயன்ற அணிகள் தரித்த மார்பினை உடைய பெண்டிரே, அழகிய பொற்சுண்ணம் நாம் இடிப்போம்.

○ உமையம்மையோடு ஓர் உருவாய் இருத்தலின் கணவன்; பராசத்தியில் சிவம் தோன்றியதால் மகன்; சத்திக்குப் பிறப்பிடம் ஆகலின் தந்தை, சத்திக்கு முன்னோன் என்பதால் தமையன் என்றார்.

கைகளில் சங்கு வளையல்கள் ஒலிக்க, காலில் சிலம்பு ஒலி செய்ய, தாழ்ந்த நெடுங்கூந்தலில் சுற்றிய பூமாலை அசைய, சிவந்த கனி போலும் வாயின் இதழ்கள் துடிக்க, செவ்வையான இழை அணிந்த பெண்களே, சிவவுலகினைப் பாடி. கங்கை ஆர வாரிக்கப் பாம்பு ஓசையிடும் திரண்ட சடைமுடியை உடைய பெருமானின் திருவடிக்குக் கூடிய அன்பினால் மார்பு. விம்ம, நாம் திருப்பொற் சுண்ணம் இடிப்போம்.

இறையறிவாம் கருப்பஞ் சாற்றினை, அதன் பாகினை, தேடுதற்கு அரிய நன்மையை, என்றும் கெடாத தேனை, முக்கனிச் சுவை ஆனவனை, மனத்துட் புகுந்து இனிக்கவல்ல மன்னவனை, பிறவிப் பிணிப்பை அறுத்து ஆண்டு கொண்ட ஆடவல்லானை நாவில் தழும்பு உண்டாகும் அளவுக்கு விடாது வாழ்த்தி, கருங்குவளை மலர்போன்ற அகன்ற கண்களையுடைய மங்கையரே! பாடிநின்று பொற்சுண்ணம் இடிப்போம் நாம்.

உய்தி அடைதற்கு ஆகும் வகையில் நாமும் வந்து அன்பர்களோடு கூடி அடிமை செய்யும் முறைகளைப்பாடி, விண்ணகத்தில் உள்ள தேவர்கள் தம் கனவிலும் கண்டறிந்திராத செந்தாமரைப் பூப்போன்ற பாதங்களை எமக்குக் காட்டுகின்ற, வளமான காளை வடிவம் எழுதப்பெற்ற கொடியை உடையவன், சிவபெருமான், முப்புரங்களை அழித்த வெற்றிவீரன், ஆகிய இறைவனின் பெயர்களைப் பாடிப் பாடிச் செவ்விய பொற்சுண்ணத்தை இடிப்போம்.

17. தேன்அக மாமலர்க் கொன்றைபாடி
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்
வானக மாமதிப் பிள்ளைபாடி
மால்விடை பாடிவ லக்கைஏந்தும்
ஊன்அக மாமழுச் சூலம்பாடி
உம்பரும் இம்பரும் உய்யஅன்று
போனக மாகநஞ்சு உண்டல்பாடி
பொன்திருச் சுண்ணம் இடித்துநாமே.

18. அயன்தலை கொண்டுசெண்டு ஆடல்பாடி
அருக்கன் எயிறுப றித்தல்பாடிக்
கயந்தனைக் கொன்றுஉரி போர்த்தல்பாடிக்
காலனைக் காலால் உதைத்தல்பாடி
இயைந்தன முப்புரம் எய்தல்பாடி
ஏழை அடியோமை ஆண்டுகொண்ட
நயந்தனைப் பாடிநின்று ஆடிஆடி
நாதற்குச் சுண்ணம் இடித்துநாமே

19. வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி
மத்தமும் பாடி மதியும்பாடிச்
சிட்டர்கள் வாழும்தென் தில்லைபாடிச்
சிற்றம் பலத்தெங்கள் செல்வம்பாடிக்
கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவிந்தகைம்மேல்
இட்டுநின்று ஆடும் அரவம் பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்துநாமே.

20. வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியும் ஆய்,இருள் ஆயினார்க்குத்
துன்பமும் ஆய்,இன்பம் ஆயினார்க்குப்
பாதியும் ஆய்,முற்றும் ஆயினார்க்குப்
பந்தமும் ஆய் வீடும் ஆயினார்க்கு
ஆதியும் அந்தமும் ஆயினாருக்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

திருச்சிற்றம்பலம்

தேன் பொதிந்த சிறந்த மலரான கொன்றையைப் பாடி, சிவனின் பேரூரைப் பாடி, அவனது அழகிய சடைமேல் விளங்கும் வானில் இடம் கொண்ட சிறந்த பிறைத் திஙகளைப் பாடி. அவனது ஊர்தியாகிய உயர்ந்த காளையைப்பாடி, இறைவன் தன் வலக்கையில் ஏந்தும் ஊன்பொதிந்த பெரிய மழு, சூலம் ஆகியவற்றைப் பாடி, மேலுலகத்தாரும் இவ்வுலகத்தாரும் உய்தற் காக முன்பு உணவாக நஞ்சினை உண்டதனைப்பாடி, அழகிய பொற்சுண்ணத்தை நாம் இடிப்போம்.

பிரமனின் தலையைக் கொய்து பந்தாடியதைப் பாடி, கதிரவனின் பல்லைத் தகர்த்த செயலைப் பாடி, யானை உரு வத்து அசுரனைக் கொன்று அந்த யானையின் தோலைப் போர்த்துக் கொண்டதைப் பாடி, இயமனைத் தன் காலால் உதைத்தருளியதைப் பாடி, ஒருங்கு சேர்ந்து வந்த முப்புரங்களை ஒரு கணையால் எய்தமையைப் பாடி அறிவிலராகிய அடியோ மாகிய எம்மை ஆட்கொண்ட நன்மையைப் பாடிக் கொண்டு அசைந்து அசைந்து நாம் இறைவனுக்குச் சுண்ணம் இடிப்போம்

இறைவன் அணிந்திருக்கும் வட்டவடிவமான கொன்றைப் பூமாலையைப் பாடி, அவன் சூடும் ஊமத்தம் பூவையும் பாடி' பிறையையும் பாடி, நல்லோர்கள் வாழும் அழகிய தில்லையம் பதியைப் பாடி, அங்குள்ள திருச்சிற்றம்பலமாம் மன்றில் ஆடும் எங்கள் செல்வமாம் சிவபெருமானைப் பாடி, அவன் இடுப்பில் கட்டியுள்ள பாம்பாகிய கச்சையைப் பாடி, கையில் உள்ள பாம்புக் காப்பைப் பாடி, மூடிய கையின் மேல் வைக்கப்பட்டுப் படம் எடுத்து ஆடும் பாம்பினைப் பாடி, நம்மை உடைய பெருமானுக்குச் சுண்ணம் இடிப்போம் நாம்.

மறைகளும் வேள்விகளும் சுட்டும் பொருள் ஆனவர்க்கு, உண்மையும் இன்மையும் ஆக உள்ளவர்க்கு, ஒளியாகவும் இரு ளாகவும் ஆனவர்க்கு, துன்பமாகவும் இன்பமாகவும் அமைந்த வர்க்கு, பாதியும் முற்றும் ஆனவர்க்கு, கட்டும் விடுதலையும் ஆனவர்க்கு, முதலும் முடிவும் ஆக உள்ளவர்க்கு, சிவபெரு மானுக்கு, நீராட நாம் பொற்சுண்ணம் இடிப்போம்.

○

### பத்து

## திருக்கோத் தும்பி

வண்டுகளில் ஒரு வகையான அரசவண்டு எனப்படும் கோத்தும்பியை விளித்து, நீங்காத பேரின்பத் தேன் மல்கும் இறைவன் திருவடிகளாகிய மலர்களில் சென்று தேன் உண்ண விடுக்கும் முறையில் ஆங்குச் சென்று ஊதுக என்று கூறும் பாவகை இது.

நாலடித்தரவு கொச்சகக் கலிப்பாக்கள் பத்து இத் திருப் பதிகத்தில் அடங்கியுள்ளன. இவை தில்லையில் அருளப்பெற்றவை. 'சென்றூதாய் கோத்தும்பி' என்று பாடல்தோறும் முடிவுபெறும் பாங்குடையவை.

ஆன்மாவைத் தும்பியாக உருவகம் செய்து உரைப்பதாக விளக்கம் தருவர். வண்டுபோல் சுற்றி விளையாடும் மகளிர் விளையாட்டு 'கோத்தும்பி' எனவும் கூறுப.

திருச்சிற்றம்பலம்

1. பூஏறு கோனும் புரந்தரனும் பொற்(பு)அமைந்த
நாஏறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும் வானவரும் தாம்அறியாச்
சேஏறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

2. நானார்?என் உள்ளம்ஆர்? ஞானங்கள் ஆர்?என்னை யார் அறிவார்?
வான்ஆர் பிரான்என்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
ஊன்ஆர் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேன்ஆர் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ!

3. தினைத்தனை உள்ளதாம் பூவினில் தேன்உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசும்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புஉடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

'சிவனொடு ஐக்கியம் - சிவனோடு இடையறாது நிற்றல்' இதன் உட்கிடை என்ப. ''உயர்போதம் ஒரு வண்டாக [தம்] சித்தவிகாரத் தூது செப்பிவிடல் கோத்தும்பி''யின் மையக்கருத்து எனப் பழைய திருப்பெருந்துறைப் புராணம் கூறும் திருவாசக உண்மையாகும்.

''நானார் என் உள்ளம் ஆர் ஞானங்கள் ஆர் என்னை யார் அறிவார்''. ''தினைத்தனை உள்ளதாம் பூவினில் தேன் உண்ணாதே'' ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்ட பின்'' 'பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே'' ''சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த வித்தகத் தேவன்'' ''சிட்டாய சிட்டன்'' ''தாயான ஈசற்கே'' ''வான்கருணை வெள்ளப்பிரான்'', போல்வன இத்திருப்பதிகத்தில் உள்ள இனிமை ததும்பும் ஒளித் தொடர்களில் சில.

○

அரச வண்டே! தாமரை மலர்மேல் அமர்ந்த தேவனாகிய பிரமனும், இந்திரனும், அழகு பொருந்திய நாவில் தங்கிய செல்வியாகிய கலைமகளும் நான்கு மறைகளும் பெருமை பொருந்திய ஞாயிறு திங்கள் நெருப்பு என்ற முச்சுடர்களும் மற்றும் உள்ள தேவர்களும் பிறரும் அறியவொண்ணாத காளை ஊர்தியனாகிய பெருமானின் செவ்விய திருவடிக்கண் சென்று ஊதுவாயாக.

அரச வண்டே! தேவர் பெருமானாகிய இறைவன், வலிய வந்து எளியேனை ஆண்டருள் புரியாதிருந்தால் நான் எத்தகைய னாக இருப்பேன்? என் உள்ளம் எத்தகையதாக இருக்கும்! என் அறிவு எத்தகையது ஆமோ? மதிமயங்கினவன் போலப் புலால் பொருந்திய உடைந்த மண்டையோட்டில் உணவு ஏற்கின்ற, அறிவுப் பரவெளியில் இருப்போனின் தேன் மிக்க திருவடித் தாமரையிற் சென்று ஊதுவாயாக.

தினை என்னும் சிறிய அளவினதாக மலரிடத்திருக்கின்ற தேனை [அலைந்து அலைந்து தேடி] உண்ணாமல், நினைக்கும் போதும் காணும் போதும் பேசும் போதும் மற்று எல்லாப் பொழுதிலும் வலிய எலும்புகள் எல்லாமும் உள்ளே உருக இன்பத் தேன் பொழிகின்ற கூத்துடைப் பெருமானின் திருவடி மலர்க்கண் சென்று ஊதுவாயாக.

4. கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்ஒப்பில் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்துஎன்னை 'வா'என்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ!

5. அத்தேவர் தேவர் அவர்தேவர் என்றுஇங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதேன் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ!

6. வைத்த நிதிபெண்டிர் மக்கள்குலம் கல்வி என்னும்
பித்த உலகில் பிறப்போடு இறப்பு என்னும்
சித்த விகாரக் கலக்கம் தெளிவித்த
வித்தகத் தேவற்கே சென்றுதாய் கோத்தும்பீ!

7. சட்டோ நினைக்க மனத்துஅமுதாம் சங்கரனைக்
கெட்டேன் மறப்பனோ? கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரை நாம் உருவறியோம்
சிட்டாய சிட்டற்கே சென்றுதாய் கோத்தும்பீ!

8. ஒன்றாய் முளைத்தெழுந்து எத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை, தாதைக்கும் எம்அனைக்கும் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ!

*கண்ணப்பரின் அன்பைப் போன்ற ஒப்பற்ற அன்பு, அடியேனிடம் இல்லாமையை அறிந்த பின்பும், என் தந்தையாகிய இறைவன், எவ்வகையாலும் [தன் அடிமைத் தகுதிக்கு] ஒப்புக் கூற இயலாத சிறியேனையும் அடிமையாக் கொண்டருளி அதற்கு ஏற்ப நலம் உண்டாக எனக்குக் கட்டளை தந்து 'வா' என்று இரக்கம் காட்டிய மேலாம் அருள் செய்த, அழகிய பொற்பொடி போலும் திருநீற்றினை அணிந்திருக்கும் பெருமானின் திருவடி மலர்க்குச் சென்று ஊதுவாயாக, அரசவண்டே!*

*அரச வண்டே! [சிற்சிலர்] அத் தேவரே இறையவர் எனவும் [வேறு சிலர்] அவரே இறையவர் எனவும் [வேறு வேறாக] இவ்வாறு உண்மை யில்லாத தேவர்களைப் புகழ்ந்து பேசிப் போற்றிப் புலம்புதல் செய்கிற இந்நிலவுலகத்தே, மற்றுப் பற்று எதுவும் இன்றி, எல்லாப் பற்றும் இல்லாது ஒழியுமாறு எளியேன் பற்றிக் கொண்டுள்ள மெய்ப் பொருளாம் பெருந் தேவர்க்கே அவர் திருவடி மலர்க்கண் சென்று ஊதுவாயாக!*

*அரச வண்டே! ஈட்டி வைத்த செல்வம் மனைவி மக்கள் குலம் கல்வி என்கிற இவை காரணமாக மயக்கமடைந்து கிடக்கும் இவ்வுலகில், பிறப்பு இறப்புகளுக்குக் காரணமான மனவேறுபாட்டினால் வரும் மருட்சியை அறிவூட்டித் தெளியுமாறு செய்த பேரறிவு வடிவான பெருமானின் திருவடி மலர்க் கண் சென்று ஊதுவாயாக!*

*அரச வண்டே! சற்றே நினைத்தாலும் மனத்தின்கண் அமுதாக இனிக்கின்ற மங்கலப் பொருளாம் இனியவனை அடியேன் மறந்து விடுவேனோ? மாசுபடாத இறைவனின் திருவடியைச் சாராத பாவமுள்ள அடியார்களின் உருவத்தை அடியேங்கள் காண மாட்டோம். மேலாயவற்றின் மேலாயவனின் திருவடி மலர்க்கண் சென்று ஊதுவாயாக.*

*அரச வண்டே! மூலப் பொருள் ஆகிய தான் ஒரு முதற் பொருளாகத் தோன்றி விரிந்து எத்தனையோ கிளைகள் பரப்பி. உலகினுக்கு நன்மையுண்டாகச் செய்து, நாய் போன்ற சிறுமை யுடையேன் ஆகிய என்னைப் பல்லக்கில் ஏற்றுவித்தாற் போன்று உயர்வு அளித்து மெய்யடியார் நடுவில் இருக்க வைத்த என் தந்தையாகிய இறைவன் என் தந்தைதாய்க்கும் இறைவன் ஆகிய அழிவிலாச் செல்வனாம் பெருமானின் திருவடிக்கண் சென்று ஊதுவாயாக.*

9. கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தான்எனக்கு
மரணம் பிறப்பென்று இவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

10. நோயுற்று மூத்துநான் நுந்துகன்றாய் இங்கிருந்து
நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணம் எல்லாம்
தாயுற்று வந்தென்னை ஆண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ!

11. வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கன்னெஞ்சு உருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட
அன்னம் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

12. நாயேனைத் தன்அடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேனது உள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேதும் இல்லாதுஎன் செய்பணிகள் கொண்டருளும்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ!

13. நான்தனக்கு அன்பின்மை நானும்தானும் அறிவோம்:
தான்என்னை ஆட்கொண்டது,எல்லாரும் தாம் அறிவார்;
ஆன கருணையும் அங்குற்றே தான்,அவனே
கோன்என்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!

14. கருவாய் உலகினுக்கு அப்புறமாய் இப்புறத்தே
மருஆர் மலர்க்குழல் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய்; கோத்தும்பீ!

அகக் கருவிகள் புறக் கருவிகள் ஆகிய யாவற்றையும் கடந்து நிலைபெற்ற நஞ்சின் கருமை நிறம் பொருந்திய கழுத்து உடையவனின் திருவடிகளே அடைக்கலம் என்று அடைந்ததும் எளியேனாகிய எனக்கு இறப்பு பிறப்பு என்னும் இரண்டற்குக் காரணமான மயக்கத்தைக் களைந்தருளிய அருளே வடிவான கடல் போன்ற பெருமானின் திருவடி மலர்களிற் சென்று ஊது வாயாக, அரச வண்டே!

அரச வண்டே! சிறியேன் நோய் மிக்கு மூப்பு எய்தி, நடக்க இயலாது தள்ளிக்கொண்டு செல்லப்படும் கன்று போன்று இவ்வுலகில் இருந்து நாய் பெற்ற செல்வம் போல் யாவற்றையும் விரும்பி நுகரமுடியாத வண்ணம் இருக்கத் தான் தாயாக வந்து அடியேனை ஆட்கொண்டருளிய அருள்ஒளிச் செல்வனாகிய பெருமானின் திருவடி மலர்களில் சென்று ஊதுவாயாக.

அரச வண்டே! அடியேன் வன்மையான நெஞ்சு உடைய பொய்யன், மனம் உருகுதல் அறியாத கொடியன் என்று கருதித் தள்ளிவிடாமல் தன் கருணை காரணமாக ஆட்கொண்டருளிய அன்னம் நெருங்கியிருக்கும் அழகிய தில்லைப் பொதுவில் உள்ள பெருமானின் பொன் போலும் அழகிய திருவடி மலர்களில் சென்று ஊதுவாயாக,

நாய் போன்ற சிறுமையுடையேனைத் தன் திருவடிகளைப் போற்றிப் பாடுமாறு செய்த தலைவனை, பேய் போன்று உள்ளம் கொண்ட அடியேனின் குற்றங்களைப் பொறுத்தருளும் பெருமை மிக்கவனை, எளியேன் செய்யும் பணிகளை இகழ்தல் எதுவும் செய்யாது, ஏற்றருள்கின்ற தாயாக விளங்கும் ஆண்டவனின் திருவடி மலர்களில் சென்று ஊதுவாயாக, அரசவண்டே!

அரச வண்டே! அடியேனுக்கு அவனிடம் அன்பு இல்லை என்பதனை அடியேனும் ஆண்டவனாகிய அவனும் அறிவோம். அவன் அடியேனை ஆட்கொண்டதை உலகத்தார் எலலாரும் அறிவார்; உண்டான கருணையும் அவ்விடத்ததே; ஆண்டவனாகிய அவனே என்னிடம் வந்து கூடும்படியாக அவன் திருவடி மலர்களில் மென்மையாக ஊதுவாயாக!

அரசே வண்டே! உலகம் யாவினுக்கும் பிறப்பிடமாகவும் அதற்கு அப்பாற் பட்டவனாகவும் இங்கு இவ் வுலகில் மணம் பொருந்திய மலர்க் கூந்தல் உள்ள உமையம்மையோடும் எழுந்தருளி, அருவாக இருந்தும் மறைகள் ஓதும் குளிர்ந்த ஆசிரியனாக வந்து எளியேனை ஆண்டு கொண்டருளிய மேன்மையே உருவான இறைவன் திருவடி மலர்களிலே சென்று ஊதுவாயாக,

15. நானும்என் சிந்தையும் நாயகனுக்கு எவ்விடத்தோம்!
தானும்தன் தையலும் தாழ்சடையான் ஆண்டிலனேல்!
வானும் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேன்உந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ;

16. உள்ளப் படாத திருவுருவை உள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரான்எம் பிரான்என்னை வேறேஆட்
கொள்அப் பிரானுக்கே சென்றூதாய்! கோத்தும்பீ!

17. பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட
ஐயா! என் ஆருயிரே; அம்பலவா! என்றுஅவன்தான்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

18. தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!

19. கள்ளன் கடியன் கலதிஇவன் என்னாதே
வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே!
உள்ளத்து உறுதுயர் ஒன்றொழியா வண்ணம் எல்லாம்
தெள்ளும் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ

20. பூமேல் அயனோடு மாலும் புகல்அரிது என்று
ஏமாறி நிற்க, அடியேன் இறுமாக்க,
நாய்மேல் தவிசுஇட்டு நன்றாய்ப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!

திருச்சிற்றம்பலம்

அரச வண்டே! நீண்ட சடைமுடியுடைய சிவபெருமான் தானும் தன் சக்தியாம் அழகமைந்த உமையம்மையும் வந்து என்னை ஆட்கொண்டு அருளவில்லையானால் எளியேனும் என் உள்ளமும் எவ்விடத்தே கிடந்திருப்போம்! விண்ணும் திசைகளும் பெருங்கடலும் ஆகிய பெருமானின் தேன் எறியும் திருவடி மலர்களில் சென்று ஊதுவாயாக!

அரச வண்டே! எண்ணத்திற்கு அடங்கா இறைவனின் மேலாம் வடிவத்தை ஆழ்ந்து நினைத்தலும் ஒளித்தல் இல்லாத களிப்புப் பொருந்திய பேரருள் வெள்ளம் ஆகிய வள்ளல் எம் பெருமான் என்னைத் தனித்து ஆட்கொண்டருளுமாறு அப் பெருமானிடத்தே சென்று அவன் திருவடி மலர்களில் ஊதுவாயாக!

அரச வண்டே! நிலையுதல் இல்லாத பொருள்களை நிலையுதல் உள்ளனவாகப் பிழைபட நாளும் நினைத்து அவற்றுள் திளைத்துக் கிடந்த சிறியேனை அடிமை கொண்ட தலைவனே! அடியேனின் உயிர்க்குயிராக இருப்போனே! சிற்றம்பலத்தில் காட்சி தருவோனே என்று எளியேன் போற்றும் அப்பெருமானின் செம்மை நிறைந்த திருவடி மலர்களிடத்தே சென்று ஊதுவாயாக.

அரச வண்டே! புலித்தோலும் மெல்லாடையும் குண்டலமும் வட்டத்தோடும் பால் போலும் வெண்ணிறமான திருநீறும் பசுமையான சந்தனமும் பச்சைக் கிளியும் முத்தலைவேலும் தொகுதியான வளையலும் உடையனாகக் காட்சி அளிக்கும் பழமையான அம்மையப்பர் தோற்றமாகிய அதனையே பார்த்துக் குளிர்மையுடன் ஊதுவாயாக.

அரச வண்டே! சிறியேன் ஆகிய என்னை "இவன் வஞ்சகன் நெகிழ்ச்சியற்றவன், தீயவன்" என்று கருதித் தள்ளிவிடாமல் வள்ளலாகிய பெருமான் அடியேனின் உள்ளத்தே மெல்ல மெல்ல வந்து புகுந்து விட்டான். ஆகலின் நெஞ்சில் உள்ள பெருந்துயரம் ஒன்றும் எஞ்சாவாறு எல்லாவற்றையும் தெளிவித்துக் களைந்து எறியும் கழல் அணிந்த திருவடி மலர்க்கே சென்று ஊதுவாயாக.

அரச வண்டே! தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் "இறைவன் பால் செல்லுதல் அருமை உடைத்து" என்று மனம் கலங்கியிருக்க, உயர்ந்த இருக்கையை நாயினுக்கு இடுதல் போல் சிறியேனாகிய எனக்கு ஏற்றம் தந்து நன்கு சிறப்பு அளிக்க அதனால் அடியேன் களிப்படைய வைத்த நெருப்புப் போலும் சிவந்த நிறமுடைய பெருமானிடத்தே சென்று ஊதுவாயாக!

○

## பதினொன்று

# திருத் தெள்ளேணம்

நாலடித் தரவு கொச்சகக் கலிப்பாக்கள் 'தெள்ளேணம் கொட்டாமோ' என்ற இறுதிச் சீர்களுடன், இருபது எண்ணிக்கையில் அமையப்பெற்றது இத்திருப்பதிகம். தாளத்திற்கு ஒப்பப் பாடிக்கொண்டு கைகொட்டி அல்லது பறை கொட்டி மகளிர் ஆடும் விளையாட்டு தெள்ளேணம் ஆகும்.

"சிவனோடு அடைவு: சிவனுடனே சென்று கூடுதல்" இதன் உட்கிடை என்ப. "பொன்னார் மெய் அண்ணல்அருும் போத இன்பமே மிகுந்து தென்னாதென் னாஎனவே தெள்ளேணம் கொட்டியதாம்" என்பது திருவாசக உண்மை சுட்டும் அடிக் கருத்து. "ஓர் உருவம் ஒருநாமம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமா" என்பது அழகிய தெள்ளுரை.

திருச்சிற்றம்பலம்

1. திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம் அறிய ஓர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்
ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ

2. திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேர் அறுத்தபின் யாவரையும் கண்டதில்லை
அருவாய் உருவமும் ஆயபிரான் அவன் மருவும்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ

3. அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்துஅன்றி நின்ற சிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பதுகேட்டு உலகம் எல்லாம்
சிரிக்கும் திறம்பாடித் தெள்ளேணம் கொட்டாமோ.

4. அவம் ஆய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயம் காத்து என்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ?

''கயல் மாண்ட கண்ணிதன் பங்கன் எனைக் கலந்து ஆண்டலுமே, அயல்மாண்டு அருவினைச் சுற்றமும் மாண்டு அவனியின் மயல் மாண்டு மற்றுள்ள வாசகம் மாண்டு என்னுடைய செயல் மாண்ட வாபாடித் தெள்ளேணம் காட்டாமோ'' என்பது கவிச்சுவையுடன் இறையுறவின் பெற்றியினை விளக்குகிறது. 'கறங்கு ஓலை போல்வது ஓர் காயப்பிறப்பு', 'கல்நார் உரித்து என்ன' 'பத்திக் கடலுள் பதித்த பரஞ்சோதி' 'பருகற்கு இனிய பரம் கருணைத் தடம் கடலை' 'உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரம்' 'நான் கெட்டவா பாடி' என்பன கருத்தாழமிக்க தொடர்கள்.

○

திருமால் தானும் பன்றி உருக்கொண்டு நிலத்தைப் பிளந்து சென்றும் கண்டறிய முடியாத திருவடிகளை நாம் அறியுமாறு ஓர் அந்தண வடிவம் கொண்டு, ஆசானாக வந்து எளியோமை ஆட்கொண்டான் ஒரு பெயரோ ஓர் உருவமோ யாதொன்றும் இல்லாத அப்பெருமானுக்கு நாம் ஆயிரம் அழகிய பெயர்களால் பாடித் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

நன்மை மிக்க திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள இறைவன் அடியேனது பிறவியின் அடிப்படையான வேரை அறுத்த பின்னர் யான் வேறு எவரையும் கருதியல்லை. அருவாகவும் உருவாகவும் இருந்து உதவிய பெருமான் விரும்பி உறையும் திருவாரூரைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

திருமால் அயன் ஆகியோர்க்கும் மற்றுமுள்ள தேவர்களுக்கும் விளங்கத் தெரிவிக்கும் தரத்தில் இல்லாது திகழும் செம்பொருள் தானே வலிய வந்து நம் மனத்தை உருகச் செய்யும் ஏவல் கொண்டருளும் என்பது கேட்டு உலகத்தார் எல்லாரும் சிரிக்கின்ற தன்மை பற்றிப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

பயனற்ற தேவர்களின் பயனற்ற போக்குகளில் அழுந்தி விடாவாறு பிறப்பாகிய மாயையினின்றும் என்னைக் காப்பாற்றி ஆண்டு கொண்ட உயர்ந்த ஒளிப் பிழம்பான இறைவன் புதிதாகிய செவ்விய அறிவொளியை எனக்கு நல்குதலால் நாம் என்பது (சீவத்துவம்) கெட்டுச் சிவமாகிய பேற்றை அடைந்த வகையைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

5. அருமந்த தேவர் அயன் திருமாற்கு அரிய சிவம்
உருவந்து பூதலத்தோர் உகப் பெய்தக்
கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் உளம் புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ!

6. அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும் வந்து ஆண்ட திறம்
உரையாட உள்ளொளியாட ஒண்மாமலர்க் கண்களினீர்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ!

7. ஆஆ அரிஅயன்இந் திரன்வானோர்க்கு அரியசிவன்
வாவாஎன்று என்னையும் பூதலத்தேவலித்து
ஆண்டுகொண்டான்
பூவார் அடிச்சுவடு என்தலைமேல் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ!

8. கறங்குஓலை போல்வதோர் காயப்பிறப்பொடு இறப்பு
என்னும்
அறம்பாவம் என்று இரண்டு அச்சம் தவிர்த்தென்னை
ஆண்டுகொண்டான்
மறந்தேயும் தன்கழல்நான் மறவா வண்ணம் நல்கியஅத்
திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ

9. கல்நார் உரித்தென்ன என்னையும்தன் கருணையினால்
பொன்னார் கழல்பணிந்து ஆண்டபிரான் புகழ்பாடி
மின்னேர் நுடங்கு இடைச் செந்துவர்வாய்
வெண்ணகையீர்
தென்னா! தென்னா! என்றுதெள்ளேணம் கொட்டாமோ!

அருமருந்தன்ன வானவர்க்கும் பிரமன் திருமால் ஆகி யோர்க்கும் காண்பதற்கு அரிய சிவப் பரம்பொருள், உருவு கொண்டு உலகோர் மகிழ்ச்சியடைய வந்து என்னை ஆண்டு கொண்டு, என் பிறவியின் மூலம் எல்லாம் வெந்து வீழுமாறு கடைக்கண் பார்வை தந்து என் உள்ளத்திற் புகுந்த அருட் செல்வம் வந்த விதத்தைப் பாடித் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

ஆடும் பாம்பினை இடுப்பில் கட்டியுள்ள பெருமான், மலையில் விளையாடும் மாதாகிய உமையம்மையைத் தன் பங் காகக் கொண்டு உலகில் வந்து எம்மை ஆண்டருளின திறத்தை, சொல் தடுமாறவும் உள்ளத்துள் ஒளி விளங்கவும், ஒள்ளிய பெரிய மலர் போன்ற கண்களில் நீர் அலை தவழுமாறு பாடித் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

வியப்பு!வியப்பு! திருமால் பிரமன் இந்திரன் விண்ணகத் தோர் யாவரும் அடைதற்கு அரிய சிவபெருமான் நிலவுலகில் வந்து என்னையும் வாவா என்று தானே வலிய அழைத்து ஆட் கொண்டான். அவனது பூப்போலும் திருவடியின் சுவட்டை என் தலைமேல் பதித்த அளவிலே அடியேன் தெய்விக நிலை யாம் சிவத்தன்மை எய்திய வகையைப் பாடித் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

சுழலும் காற்றாடி ஓலை போன்றிருக்கும் உடம்பின் தோற்றமும் மறைவும் என்பவற்றின் காரணமான நல்வினை தீவினையாம் இரண்டு அச்சங்களை நீக்கி என்னை ஆண்டு கொண்ட சிவபெருமானை, நான் மறந்தும் கூட அவனது திரு வடியை மறவாது இருக்குமாறு எனக்கு அருள் தந்த அந்த அருளாற்றலைப் பாடல்களாகப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

கல்லில் நார் உரித்தாற்போல [அன்பற்ற] சிறியேனையும் தன் அருளினால் பொன் போன்ற திருவடிகளில் பணியச் செய்து ஆண்ட பெருமானின் புகழைப் பாடி, மின் போலத் துவளும் இடையும் சிறந்த பவளம் போன்ற உதடுகளும் வெள்ளிய பற் களும் உடைய தோழியரே, மகிழ்ச்சியால் 'தென்னா ! தென்னா!' என்று இசைத்துத் தெள்ளேணம் கொட்டி ஆடுவோம்.

10. கனவேயும் தேவர்கள் காண்புஅரிய கனைகழலோன்
புனவேய் அனவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே எனைப்பிடித்து ஆட்கொண்டவா நயந்து நெஞ்சம்
சினவேல்கண் நீர்மல்கத் தெள்ளேணம் தொட்டாமோ!

11. கயல்மாண்ட கண்ணிதன் பங்கன்எனைக் கலந்து ஆண்டலுமே
அயன்மாண்டு அருவினைச் சுற்றமுமாண்டு அவனியின் மேல்
மயல் மாண்டு மற்றுள்ள வாசகம் மாண்டு என்னுடைய
செயல் மாண்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ!

12. முத்திக்கு உழன்று முனிவர்குழாம் நனிவாட
அத்திக்கு அருளி அடியேனை ஆண்டுகொண்டு
பத்திக் கடலுள் பதித்த பரஞ்சோதி
தித்திக்கு மாபாடிக் தெள்ளேணம் கொட்டாமோ!

13. பார்பாடும் பாதாளர் பாடும்விண்ணோர் தம்பாடும்
ஆர்பாடும் சாரா வழியருளி ஆண்டுகொண்ட
நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ!

14. மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவு அரிய நுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்
சேல்ஏர்க்கண் நீர்மல்கத் தெள்ளேணம் கொட்டாமோ!

15. உருகிப் பெருகி உளம்குளிர முகந்துகொண்டு
பருகற்கு இனிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாம் தெள்ளேணம் கொட்டாமோ!

வானோர்கள் தம் கனவிற் கூடக் காண்பதற்கு இயலாத ஒலிக்கும் கழல் அணிந்தவன் காட்டு மூங்கில் போன்றவும் வளையல் அணிந்தவும் ஆன தோள்களுடைய உமையம்மை யோடும் எழுந்தருளி என்னை விழிப்பு நிலையில் கரம் பற்றி ஆட் கொண்ட வகையினை நெஞ்சம் விரும்பி, சினந்த வேல் போன்ற கண்களில் நீர் துளும்பத் தெள்ளேணம் கொட்டி ஆடுவோம்.

கயல்மீன் போன்ற, மாட்சிமையுள்ள கண்களை உடைய உமையம்மையை ஒரு பாதி உடம்பாகக் கொண்டவன் என்னுள் சேர்ந்து ஆண்டு கொண்ட அளவில் எனக்கு அருகில் உள்ள யாவற்றின் தொடர்பும் ஒழிந்து, அருவினைத் தொடர்பால் வந்த சுற்றம் மறைந்து உலகின்பால் இருந்த மயக்கமும் தீர்ந்து மேலும் உள்ளதாம் சொல் ஒழிந்து என்னுடைய செய்கையும் தவிர்ந்த வகையைப் பாடித் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

வீடுபேற்றின் பொருட்டு அலைந்து துன்புற்று முனிவர் கூட்டம் மிகவும் வாடி நிற்கவும் [அவர்கள் பக்கம் செல்லாமல்] யானைக்கு அருள்புரிந்து அடியேனாகிய என்னை ஆட்கொண்டு பேரன்புக் கடலில் என்னைத் திளைக்கச் செய்த பேரொளி யானது இனித்திருக்கும் வகையைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி ஆடுவோம்.

உலகத்தாரிடத்தும் கீழுலகத்தாரிடத்தும் விண்ணுலகத் தாரிடத்தும் நான் சார்ந்திரா வழியை எனக்குக் காட்டி ஆண்டு கொண்ட நேர்ச்சியைப் பாடலாகப் பாடி நினைப்பிற்கு எட்டாத ஒப்பற்ற பெருமானின் புகழைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

திருமாலும் அயனும் மற்றும் உள்ள தேவர்களும் சாத்திரங் களும் ஆய்ந்த அறிய முடியாத நுண்மையனாக வந்து அடியே னிடம் புகுந்து இரக்கம் கொண்டு உள்ளத்தை உருகச் செய்யும் இயல்பினால் அவனை, கெண்டை போன்ற அழகிய கண்களில் நீர் நிறைய நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

உள்ளம் உருகி அன்பிற் பெருகி மனம் குளிர முகந்து குடிப்பதற்கு இனிய மேலான அருட்பெருங்கடலை அடைந்து, விளங்கும் தென்னவனாகிய அப் பெருமானின் நீண்ட கழல்களை நினைந்து, அடியோமாகிய நாம் அந்த அருட் செல்வத்தைப் போற்றித் தெள்ளேணங் கொட்டி ஆடுவோம்.

16. புத்தன் புரந்தராதிய அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணம் கொட்டாமோ!

17. உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடல்உளனாய்க் கிடந்து தடுமாறும்
கவலைக் கெடுத்துக் கழல்இணைகள் தந்தருளும்
செயலைப் பரவிநாம் தெள்ளேணம் கொட்டாமோ!

18. வான்கெட்டு மாருதம்மாய்ந்து அழல்நீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என்
உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ!

19. விண்ணோர் முழுமுதல்; பாதாளத் தார்வித்து;
மண்ணோர் மருந்து; அயன்மால் உடைய வைப்பு,
அடியோம்
கண்ணார வந்து நின்றான் கருணைக் கழல் பாடித்
''தென்னா தென் னா''என்று தெள்ளேணம்
கொட்டாமோ!

20. குலம் பாடிக் கொக்கிற கும்பாடிக் கோல்வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாடோறும்
அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ!

திருச்சிற்றம்பலம்

என்றும் புதுமையானவன், இந்திரன் முதலான தேவர்களும் அயன்மால் ஆகியோரும் வணங்குதல் செய்யும் பேரன்பினன், திருப்பெருந்துறையில் உறையும் பெருமான், எம் பிறப்பைத் தொலைத்த தந்தை அழகிய தில்லைக்கண் பொதுவினில் திகழ் பவன் ஆகிய, இறைவனின் அருள்வடிவான திருத்தாள்கள் அடி யேனின் உள்ளத்துள் புகுந்த வகையினைச் சொல்லித் தெள் ளேணம் கொட்டி ஆடுவோமாக.

பொய்யான சமயங்களின், ஒன்றை ஒன்று பொருந்தாத சாத்திரங்களாகிய இளைத்தற்கு இடமான கடலுள்ளே கிடந்து தடுமாறும் துன்பத்தை ஓழித்துத் தன் திருவடித் துணையைக் கொடுத்தருளும் திருவருட் செய்கையைப் புகழ்ந்து நாம் தெள் ளேணம் கொட்டி விளையாடுவோம்.

வானம் அழிந்து காற்று அழிந்து நெருப்பு நீர் மண் என் பனவும் ஆகிய ஐந்தும் அழிந்தாலும் கேடுஇன்றித் தான் மட்டும் அசைதலும் அறியாத தன்மையை உடையனான இறைவனைக் குறித்து, உடல் அழிந்து உயிர் அழிந்து அறிவழிந்து என் மனமும் அழிந்து நான் என்பதும் ஆகிய ஐந்தும் அழிந்தவாற்றைப் பாடித் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோம்.

வானத்து அமரர்களுக்கு முழுமுதற் கடவுளாக இருப்பவன், கீழுலகத்தார்க்கு வித்தாக விளங்குபவன்; மண்ணுலகத்தார்க்கு மருந்தாகவும் பிரமன் திருமால் ஆகியோர்க்கு வைப்பு நிதியாக வும் உள்ள பெருமான் அடியோங்களுடைய கண் நிரம்ப வந்து ஆசானாக முன் நின்றான். அவனது அருள் உருவாகிய திருவடி களைப் பாடித் 'தென்னா தென்னா' என்று இசைத்துத் தெள் ளேணம் கொட்டி விளையாடுவோம்.

இறைவனது அடியார் திருக்கூட்டத்தைப் பாடி, அவன் தலையில் அணிசெய்யும் கொக்கிறகினையும் பாடி, திரண்ட வளையல்களை அணிந்த அம்மையின் நன்மைகளைப் பாடி, அவன் நஞ்சை உண்ட வரலாற்றைப் பாடி, நாள்தோறும் ஒலித்தல் பொருந்திய நீர் சூழ்ந்த தில்லையம்பலத்தில் ஆடுதல் தொழில் நிகழ்த்தும் திருவடிச் சிலம்பின் வெற்றியைப் பாடி நாம் தெள்ளேணம் கொட்டி ஆடுவோம்.

○

## பன்னிரண்டு

# திருச் சாழல்

நாலடித் தரவு கொச்சகக் கலிப்பா இருபது கொண்ட இத் திருப்பதிகம் தில்லையில் அருளப் பெற்றது. மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று, வரிக் கூத்தினுள் ஒன்று 'சாழல்' என்ப. ஒருவர் வினா வகையில் இகழ்ந்து உரைக்க மற்றொருவர் விடைவகையில் உண்மை துலக்குவதான பாங்கில் அஃது அமையும். ஈழ நாட்டு ஊமை இளவரசியைப் பேச வைத்த அடிகள், புத்தர்கள் முன்பு எழுப்பிய வினாக்களை அவள் முன் வினவ, அவள் விடையிறுத்தனள். அதன் பாவடிவம் திருச் சாழல் என்ப.

இத் திருப்பதிகத்தின் உட்கிடை ''சிவனுடைய காருணியம் அதாவது அருட்சத்தி விளையாட்டு'' என்றனர் முன்னையோர். ''முன் நாற்கலையும் உணரா மூகையாமேடி, தன்னால் பதி முதன்மை சாற்றியதாம் திருச்சாழல்'' என்று திருவாசக உண்மை இதன் மையக கருத்தைத் தெரிவிக்கிறது. 'ஏடீ, என்ற வினாவிலும் 'சாழலோ' என்று விடையிலும் ஈறு அமைந்துள்ளது.

திருச்சிற்றம்பலம்

1. பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கு அரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலும்! காணேடீ;
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டு என்னை?
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ.

2. என்அப்பன் எம்பிரான் எல்லார்க்கும் தான்ஈசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளும், அது என்னேடீ?
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ!

3 கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயும்இலி தந்தைஇலி தான்தனியன் காணேடீ!
தாயும்இலி தந்தைஇலி தான்தனியன் ஆயிடினும்
காயில்உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ!

4. அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கள் மாயா வடுச்செய்தான்; என்னேடி?
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயம் அன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய்! சாழலோ!

பத்தாம் பாடலில் மட்டும் வினாவில் இகழ்ச்சிக் கூற்று இன்றி இயல்புக் கூற்றாக உள்ளது. தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன் பெண்பால் உகந்த காரணமும் கோவணம் அணிந்தது ஏன் என்பதற்கு விடையும் சிறப்பும் புதுமையும் உடையன. 'தான் அந்தம் இல்லாதான் தனை அடைந்த நாயேனை ஆனந்த வெள்ளத்து அழுந்துவித்தான் காண்' என்பது அடிகளின் பேரின்ப உணர்வைப் புலப்படுத்துவது ஆகும்.

○

இறைவன் தன் திருமேனியில் பூசிக் கொள்வதோ சீறும் பாம்பு, தன் அழகிய வாயினால் மொழிவது மறைபொருள்கள் காண்பாயாக, தோழீ, இவற்றைப் பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டு என்ன நன்மை ஆகும்? அவற்றால் அவன் [திருநீற்றால் நிலையாமை சுட்டி அருளுணர்த்தி, பாம்பினால் ஆற்றலை உணர்த்தி மறை மொழியால் மெய்யை உணர்த்தலால்] எல்லா உயிர்களுக்கும் ஏற்புடைய பயன் அளித்தலில் இயல்பாக இருக்கிறான்; சாழலோ!

எனக்குத் தந்தையாகவும் எங்கள் பெருமானாகவும் எல்லார்க்கும் தானே இறைவனாக இருப்பவன், தைத்த துணியைக் கோவணமாகக் கொண்டிருப்பது என்ன காரணத்தால் தோழீ! நான்கு மறைகள் அரைஞாண் கயிறாக இருக்க என்றும் அழியா ஞானக்கலை கூறும் செறிந்த பொருளைக் கோவணமாகக் கட்டியிருக்கிறான் சாழலோ.

பெருமானுக்குச் சுடுகாடு கோயிலாகவும், புலியின் தோல் நல்ல ஆடையாகவும் இருக்க. அவனுக்குத் தாயும் இல்லை தந்தையும் இல்லை தனியனாக இருக்கிறான், தோழீ! அவன் தாய் தந்தை இல்லாதவன் [பிறப்பற்றவன்] தனியாக இருப்பவன்; ஆனாலும் அவன் சினந்தால் உலகம் முழுவதும் கல்லின் பொடியாக நொறுங்கிப் போகும், சாழலோ!

பிரமனை, மன்மதனை, இயமனை, சந்திரனைப் பழிச் சொல்லுடன் அழியாத வடு உண்டாக்கினான் இறைவன்; அது எதனால் தோழீ! கண் மூன்று உடைய இறைவனே தண்டித்தான் என்றால் அது வானவருக்கு வெற்றி அல்லவா? தாழ்ந்த கூந்தலை உடையவளே! சாழலே!

5, தக்கனையும் எச்சனையும் தலைஅறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர் தம்மைத் தொலைத்ததுதான்
என்னேடீ?
தொக்கனவந் தவர் தம்மைத் தொலைத்தருளி
அருள்கொடுத்தங்கு
எச்சனுக்கு மிகைத்தலைமற்று அருளினன்காண்;
சாழலோ!

6. அலரவனும் மாலவனும் அறியாமே அழல் உருவாய்
நிலமுதற் கீழ் அண்டம் உற நின்றதுதான்
என்னேடீ?
நிலமுதற் கீழ் அண்டம் உற நின்றிலனேல் இருவரும்தம்
சலமுகத்தால் ஆங்காரம் தவிரார்காண் சாழலோ!

7, மலைமகளை ஒருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன் சடையில் பாயும் அது என்னேடீ?
சலமுகத்தால் அவன் சடையில் பாய்ந்திலளேல்
தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ!

8. கோலாலம் ஆகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலாலம் உண்டான் அவன் சதுர்தான் என்னேடீ?
ஆலாலம் உண்டிலனேல் அன்றுஅயன்மால், உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ!

9. தென்பால் உகந்துஆடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ!
பெண்பால் உகந்திலனேல், பேதாய்! இருநிலத்தோர்
விண்பாலி யோகுஎய்தி வீடுவர்காண் சாழலோ!

10. தான்அந்தம் இல்லான் தனை அடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத்து அழுந்துவித்தான் காணேடீ?
ஆனந்த வெள்ளத்து அழுந்துவித்த திருவடிகள்
வான்உந்து தேவர்கட்கு ஓர் வான்பொருள்காண்
சாழலோ!

தக்கனையும் வேள்வி நடத்துநனையும் தலையை அறுக்துத் தேவர் கூட்டத் தொகுதியைஒறுத்துத் தொலைத்தான் பெருமான். அது என்ன காரணத்தால் தோழீ? கூட்டமாக வந்த தேவர்களை ஒறுத்துத் தொலைத்தது அவர்களுக்கு அருள் கொடுத்து அவ் விடத்துத் தக்கனுக்குத் தாழ்ந்த ஆட்டுத் தலையைக் கொடுத்து அருளினான் சாழலோ,

பூமேல் இருக்கும் அயனும் திருமாலும் அறியா வண்ணம் பெருமான் நெருப்புப் பிழம்பாக நில முதலாகக் கீழே பாதாளம் வரையிலும் மேலே உயர் அண்டம் வரை அண்டங்களிலும் பொருந்த நின்றது என்ன கருதி, தோழீ? நில முதலாகக் கீழ் உலகும் மேல் உலகும் பொருந்த அப் பெருமான் நின்றிராவிடில் அயன் மால் ஆகிய இருவரும் சீற்றம் காரணமாகச் செருக்கு நீங்கப் பெறார், சாழலோ!

இமயமாகிய மலையரசனின் மகளான பார்வதியம்மை யைத் தன் உடம்பின் ஒரு பாகத்தில் வைத்ததும் மற்றொரு பெண் ஆகிய கங்கை நீர் உருவாக அவனது சடையில் பாய்வது எதனால் தோழீ? நீர் உருவில் அவள் சடையகத்துப் பாய்ந் திலள் ஆயின் உலகம் யாவும் பாதாலத்தில் விழும்படி பெரிய கெடுதி உண்டாகி விடும், சாழலோ!

ஒலிக்கின்ற பாற்கடலில் பண்டொரு நாள் ஆரவாரத்தோடு எழுந்த கொடிய நெஞ்சினை இறைவன் உண்டான். அவனது திறமை இருந்தவாறு என்னே, தோழீ! அவன் கொடிய நெஞ் சினைப் பருகியிராவிடில் அப்பொழுதே மால் அயன் உள்ளிட்ட உயரிய தேவர்கள் யாவரும் அழிந்திருப்பார்கள், சாழலோ!

தென்திசையை விரும்பி நடனமிடும் தில்லைச் சிற்றம்பலம் உடையவன் பெண்பங்கினை விரும்பினன். இவன் பெரிய பித்தன் போல் உள்ளான் தோழீ! பெண்பங்கினை அவன் விரும்பாவிடில் அறிவில்லாதவளே, பெரிய நிலவுலகத்தோர் யாவரும் விண் உலகை அடைதற்கான யோகம் இயற்றி ஒழிவடைவர் சாழலோ!

தான் முடிவற்றவன் ஆதலால் தன்னை வந்து சேர்ந்த நாய் போன்ற என்னைப் பேரின்பப் பெருக்கில் அழுந்துமாறு செய் தான் சிவபெருமான் தோழீ! பேரின்பப் பெருக்கில் அங்ஙனம் என்னை அழுந்துமாறு செய்த திருவடிகள் வானில் உள்ள உயர்ந்த தேவர்கட்கும் மிக உயர்ந்த ஒப்பற்ற பொருளாகும், சாழலோ!

11. நங்காய் இது என்னதவம்? நரம்போடு எலும்பு அணிந்து
கங்காளம் தோள்மேலே காதலித்தான்; காணேடீ!
கங்காளம் ஆமாகேள், காலாந்தரத்து இருவர்
தம் காலம் செய்யத் தரித்தனன்காண்; சாழலோ!

12. கான்ஆர் புலித்தோல் உடைதலை ஊண் காடுபதி
ஆனால் அவனுக்கிங்கு ஆட்படுவார் ஆர்?ஏடி!
ஆனாலும் கேளாய் அயனும் திருமாலும்
வான்நாடர் கோவும் வழியடியார் சாழலோ!

13. மலைஅரையன் பொற்பாவை வாள்நுதவாள்
பெண்திருவை
உலகறியத் தீவேட்டான் என்னும் அது என்?ஏடீ!;
உலகறியத் தீவேளாது ஒழிந்தனனேல் உலகு அனைத்தும்
கலைநவின்ற பொருள்கள் எல்லாம் கலங்கிடுங்காண்;
சாழலோ!

14. தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலும்அது என்; ஏடீ!
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணிஎல்லாம்
ஊன்புக்க வேல்காளிக்கு ஊட்டாம் காண்;சாழலோ!

15. கடகரியும் பரிமாவும் தேரும்உகந்து ஏறாதே
இடபம் உகந்து ஏறியவாறு எனக்கு அறிய இயம்பு;ஏடீ!
தடமதில்கள் அவை மூன்றும் தழல்எரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண்; சாழலோ!

16. நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை
அன்று ஆலின் கீழ்இருந்து அங்கு அறம் உரைத்தான்;
காண்ஏடீ!
அன்று ஆலின் கீழ்இருந்தங்கு அறம் உரைத்தான்
ஆயிடினும்
கொன்றனன்காண் புரம்மூன்றும் கூட்டோடே சாழலோ!

பெண்ணே! இது என்ன தவமோ? நரம்புடன் எலும்பை அணிந்து முழுஎலும்புக் கூட்டினைத் தண்டமாகத் தோள்மேல் விரும்பித் தரித்திருக்கிறான்; தோழீ! எலும்புக் கூடு வந்த வகையைக் கேள்; ஊழிக் கால எல்லையில் மாலும் அயனும் காலமாக அவர்களின் எலும்புக் கூட்டைத் தரித்தான் சாழலோ!

காட்டில் வாழும் புலியின் தோல் அவனுக்கு உடை; மண்டை ஓடு அவனுக்கு உண்கலம்; மயானம் அவன் உறைவிடம். இவ்வாறு இருக்க அவனுக்கு அடியாராவர் யார் தோழீ! பெருமான் அவ்வாறு இருப்பினும் கேட்பாயாக. பிரமனும் திருமாலும் வானுலகத்தவர்க்குத் தலைவனான் இந்திரனும் அப் பெருமானுக்கு வழிவழித் தொண்டர்களே, சாழலோ!

இமயமலையரசன் பெற்ற பொன்னால் இயன்ற பாவை போல்வான் ஒளி பொருந்தும் நெற்றியினயுடையாள் ஆகிய உமையம்மை என்னும் திருமகளை இறைவன், உலகத்தார் அறியும் வண்ணம் மணம் புரிந்த செயல் யாது காரணம் பற்றி? தோழீ! அவ்வாறு பெருமான் உலகு அறியத் திருமணம் புரியாது தவிர் வானேல் உலகங்கள் எல்லாமும், நூல்கள் உரைக்கும் பொருள் கள் எல்லாமும் நிலை திரிந்து போகும், சாழலோ!

தேன் பெருகிய குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த தில்லையில் நுண்ணிய பரவெளியினை உடையவன் தானேதிருவாலங்காட்டில் போய்க் கூத்துப் புரிந்தமை என்ன காரணத்தால் தோழீ? பெரு மான் அங்குச் சென்று அந்தக் கூத்தினை நிகழ்த்தியிரா விட்டால் உலகம் யாவும் ஊன் பொருந்திய வேல் ஏந்திய காளிக்கு உண வாகிவிடும், சாழலோ?

மதயானையையும் குதிரையையும் தேரினையும் தனக்கு ஊர்தியாக விரும்பி ஏறாமல் எருதை விரும்பி அதன்மேல் ஏறிக் கொண்ட வரலாற்றை எனக்கு அறியலாம்படி கூறுவாயாக; தோழீ! பெரிய மதில்கள் சூழ்ந்த புரங்கள் மூன்றையும் நெருப் பால் சுட்ட அந்தக் காலத்தில் திருமால் காளை ஊர்தியாக வந்து இறைவனைத் தாங்கினான் காண; சாழலோ!

முன்னாளில் கல்லால மரத்தின் கீழ் இருந்து அங்கு நான்கு முனிவர்க்கு [சனகர் முதலியோர்க்கு] நான்கு மறைகளின் மெய்ப் பொருளை நன்மை விளையுமாறு அறமாக உரைத் தருளினான், தோழீ! அந்நாளில் கல்லாலின் கீழ் இருந்து பெரு மான் அறம் உரைத்தான் ஆனாலும் அப் பெருமான் முப்புரங் களை முற்றாக அழித்தான், சாழலோ.

17. அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையும் தேவன் என்று நண்ணும் அது என்? ஏடி!
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாம் அறியா
எம்பெருமான் ஈசா என்று ஏத்தினகாண் சாழலோ!

18. சலம் உடைய சலந்தரன்தன் உடல்தடிந்த நல் ஆழி
நலம் உடைய நாரணற்கு அன்று அருளியவாறு என்? ஏடி!
நலம் உடைய நாரணன்தன் நயனம் இடந்து அரன் அடிக் கீழ்
அலர்ஆக இட, ஆழி அருளினன்காண்; சாழலோ!

19. அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமான் உண்டசதுர் எனக்குஅறிய இயம்பு; ஏடீ!
எம்பெருமான் ஏதுஉடுத்து ஏதுஅமுது செய்திடினும்
தம்பெருமை தான்அறியாத் தன்மையன்காண்; சாழலோ!

20. அருந்தவருக்கு ஆலின்கீழ் அறம் முதலா நான்கினையும்
இருந்துஅவர்க்கு அருளும்அது எனக்கறிய இயம்பு; ஏடீ!
அருந்தவருக்கு அறம்முதல் நான்கு அன்று அருளிச் செய்திலனேல்
திருந்தவருக்கு உலகுஇயற்கை தெரியாகாண் சாழலோ

திருச்சிற்றம்பலம்

பதின்மூன்று

## திருப் பூ வல்லி

மகளிர்பூக் கொய்யும்போது பாடுவதாக அமைந்து இறைவனது மாட்சியையும் தம்மை அவன் ஆண்டகொண்ட அருள் மேன்மையையும் புகழ்ந்து பாடும் நாலடித்தரவு கொச்சகக் கலிப்பா இருபது கொண்ட இத்திருப்பதிகம் அடிகளால் தில்லையில் அருளப்பெற்றதாகும்.

''இணையடி என் தலைமேல் வைத்தலுமே சுற்றங்கள் அத்தனையும் துறந்தேன், என்னை ஆண்டுகொண்ட பாண்டிப் பிரான், மாயப்பிறப்பு அறுத்து ஆண்டான், ஊன்நாடி வந்து உட்புகுந்தான், என்னை ஆண்ட பிரான், பாதமலர் என் ஆகம் துன்னவைத்த பெரியோன், திருவடி என் தலைமேல் வைத்த

[தில்லை] பொதுமன்றில் கூத்து ஆடி உண்பதற்காகப் பிச்சை எடுத்து அலையும் சிவபெருமானையும் தேவன் என்று அடைவது என்ன அறியாமை? தோழீ! நம்பற்குரிய சிவபெருமானையும் புகல் என்று அடைவது எவ்விதத்தான் என்று கேட்பாயாக. நான்கு மறைகளும் தாம் அறியமாட்டாத எங்கள் பெருமானை "உடையவனே, இறைவா!" என்று வழிபட்டன, சாழலோ!

சினம் மிக்க சலந்தரன் என்ற அசுரனின் உடம்பை வெட்டிய நல்ல சக்கரத்தை நன்மை பொருந்திய திருமாலுக்கு முற்காலத்தில் வழங்கியது எதனால்? தோழீ! நன்மை உடைய திருமால் தன் கண்ணைத் தோண்டிச் சிவபெருமானின் திருவடியில் மலராக வைத்து வழிபட உவந்து அப்பெருமான் சக்கர ஆயுதம் வழங்கி அருளினன், சாழலோ!

புள்ளிகள் உள்ள புலித்தோல் எம்பெருமானுக்கு ஆடையாக இருக்க, கொடிய நஞ்சினை அரிய அமுதாக உண்ட திறமையை எனக்கு நன்கு எடுத்துச் சொல்லுக, தோழீ! எம்பெருமான் அவ்வாறு எதனை உடுத்து எதனை உண்டாலும் தன் பெருமை காரணத்தால் அன்று; அப்பெருமான் தன் பெருமையைத் தான் அறியாத இயல்பினன் ஆவன், சாழலோ!

அரிய தவத்தினராகிய சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய முனிவர் நால்வருக்கும் அறம்பொருள் இன்பம் வீடு ஆகிய நாற்பொருளைக் கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து உரைத்தருளின காரணத்தை எனக்கு நன்கு உணரப் பாயாக, தோழீ! அரிய தவத்தினர்க்கு அறமுதலிய நான்கினையும் அன்று பெருமான் உரைத்தருளாவிட்டால் திருத்தமாக அவர்களுக்கு உலக இயல்பு தெரியமாட்டா, சாழலோ! ○

பிரான், உள்ளம் கொண்ட பிரான்; என் உள்ளே தன் இணைப் போது அவை அளித்து இடம்கொண்ட பிரான்'' என்று இறைவன் ஆட்கொண்ட அருமை இப்பதிகத்தில் அதிகமும் இடம்பெற்றிருக்கிறது. அதை நினைந்து உருகும் அடிகள் 'புணை யாளன் ஆனந்தத்தேன் தில்லைப் பதிக்கு அரசு வானாடர்கோ' என்று புகழ்கிறார். பழங்கதைக் குறிப்புகளை நினைவு படுத்து கிறார்.

''வணங்கத் தலை வைத்து வார்கழல்கள் வாழ்த்த வாய் தந்து இணங்க அடியார் கூட்டமும் தந்த எம்பெருமான் அணங் கோடு அணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற குணத்தை மிகுதி யாகப் பாடிப் பூவல்லி கொய்வோம்'' என்று கொண்டாடுகிறார்.

திருச்சிற்றம்பலம்

1. இணைஆர் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்
அணைஆர் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ!

2. எந்தைஎந் தாய்சுற்றம் மற்றும்எல்லாம் என்னுடைய
பந்தம்அறுத்து என்னைஆண்டுகொண்டபாண்டிப்பிரான்
அந்த இடைமருதில் ஆனந்தத் தேன் இருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ!

3. நாயின் கடைப்பட்ட நம்மையும் ஓர் பொருட்படுத்துத்
தாயின் பெரிதும் தயாவுடைய தம்பெருமான்
மாயப் பிறப்பறுத்து ஆண்டான்என் வல்வினையின்
வாயில் பொடிஅட்டிப் பூவல்லி கொய்யாமோ!

4. பண்பட்ட தில்லைப் பதிக்கு அரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கன் எச்சன் இந்து அனல்
விண்பட்ட பூதம் படைவீர பத்திரரால்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ!

5. தேன் ஆடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊன் நாடி நாடிவந்து உள்புகுந்தான் உலகர் முன்னே
நான் நாடி ஆடி நின்று ஓலம் இட நடம்பயிலும்
வான்நாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ!

பாலும் அமுதமும் தேனுடன் ஆம் பராபரம் ஆய், கோலம் குளிர்ந்த உள்ளம் கொண்ட பிரானின் கழல்கள் பரவுவார் நெறி நல்ல நெறியாகும். அந்நெறியே புகழ்ந்து பாடிப் பூவல்லி கொய் வோம் என்று தாம் சார்ந்து உய்ந்த உயர்நெறியை இனிமை ததும்பப் புகழ்கிறார். ''மாயா விசயம் நீக்குதல் அதாவது மாயை யில் பலத்தை மறுத்தல், மாயா விஷயம் அறுத்தல்'' இதன் உட் கிடை என்ப. ''தேவர் அறியாத சிவன் தேடியே ஆண்ட நலம் ஆவலொடும் கூடி அடியாரொடும் கூடிப் பூவியந்து கொய்தல்'' இதன் மையக் கருத்து. ○

தாமே தமக்கு ஒப்பான திருவடிகளைப் பெருமான் என் தலைமேல் வைத்த அளவில் இதுகாறும் துணையாக இருந்த உறவுகள் யாவற்றையும் விட்டு நீங்கினேன்; தடுக்கும் கரை அமைந்த நீர்வளம் மிக்க தில்லை மன்றிலே ஆடுகின்ற பிறவிக் கடலுக்கு மிதவையாக இருக்கின்ற சிவபெருமானின் பெருமை யைப் பாடி நாம் கொடிகளில் மலர் பறிப்போம்.

எமக்குத் தந்தை தாய் உறவு பிற எல்லாம் ஆகி அடி யேனின் கட்டுகளை அறுத்தெறிந்து அடியேனை ஆண்டு கொண்ட பாண்டிப்பிரான் ஆகிய இன்பத் தேன் பொதிந்திருந்த திருவிடை மருதூர்த் திருக்கோயிலை வணங்கி நாம் கொடிகளில் மலர்களைப் பறிப்போம்.

நாயினும் தாழ்வான நம்மையும் கருதத்தக்க ஒரு பொருளாக எண்ணித் தாயினும் மிக்க பரிவிரக்கம் உடைய தம்பிரானானவன் என் வலிமையான வினையின் வாயில் புழுதி (மண்ணை) யைப் போட்டு என் மாயமான பிறவியை அறுத்து ஆண்டருளினான் அந்தப் பெருமானைப் பரவிக் கொடிகளில் மலர் பறிப்போம்.

அலங்காரம் பெற்ற தில்லை ஆகிய நகர்க்கு அரசனாகிய சிவபெருமானைப் போற்றாது, எண்ணத் தக்க தக்கன் கதிரவன் எச்சன் சந்திரன் அக்கினி ஆதிய தேவர்கள் வானில் உள்ள பூதப் படை உடைய வீரபத்திரரால் காயம்பட்ட வகையை எடுத்துப் பாடிக் கொடி மலர்கள் பறித்து ஆடுவோம்.

வண்டுகள் ஆடுகின்ற மலர்க் கொன்றையைச் சடையில் வைத்த சிவபெருமான் மானிட உடம்பை விரும்பி எடுத்து, உலகத் தார் முன்னிலையில் என்னுள் புகுந்தான். நான் அவனை நாடி ஆடி 'ஓலம்!' என்று கூவ, நடனம் செய்யும் வானுலகின் அரசனுக் காக நாம் கொடிகளில் மலர்கள் பறிப்போம்,

6 எரிமூன்று தேவர்க்கு இரங்கிஅருள் செய்தருளிச்
சிரம்மூன்று அறத் தன் திருப்புருவம் நெரித்தருளி
உருமூன்றும் ஆகி உணர்வுஅரிதாம் ஒருவனுமே
புரம்மூன்றும் எரித்தவா பூவல்லி கொய்யாமோ!

7. வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து
இணங்கத் தன் சீரடியார் கூட்டமும் வைத்து
அணங்கொடு அணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ!

8. நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே
குறிசெய்து கொண்டென்னை ஆண்டபிரான் குணம்பரவி
முறிசெய்து நம்மை முழுது உடற்றும் பழவினையைக்
கிறிசெய்த வாயாடிப் பூவல்லி கொய்யாமோ !

9. பன்னாள் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என் ஆகம் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்
கல்நார் உரித்துஎன்னை ஆண்டுகொண்டான்
கழலிணைகள்
பொன்னான வாபாடிப் பூவல்லி கொய்யாமோ!

10. பேராசை யாம்இந்தப் பிண்டம் அறப் பெருந்துறையான்
சீரார் திருவடி என்தலைமேல் வைத்தபிரான்
காரார் கடல்நஞ்சை உண்டு உகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ!

11. பாலும் அமுதும் தேன்உடனாம் பராபரமாய்க்
கோலம் குளிர்ந்துள்ளம் கொண்டபிரான்
குரைகழல்கள்
ஞாலம் பரவுவார் நன்னெறியாம் அந்நெறியே
போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ!

முத்தியை விரும்புவோராகிய தேவர்களுக்கு இரங்கி அருள் செய்து, தக்கன் எச்சன் இந்திரன் ஆகிய மூவரின் தலை அற்று வீழத் தன் அழகிய புருவத்தைச் சினத்தில் நெரித்து, அரு வுரு அருவுரு என்ற மூன்றும் ஆகி, உணர்தற்கு அரிய ஒப்பற்ற மெய்ப்பொருளாகவுள்ளவன் புரங்கள் மூன்றையும் எரித்த வகைமை பாடி நாம் கொடிகளில் மலர்கள் பறிப்போம்.

எம் இறைவன் தன்னை வணங்குதற்கு அடியேனுக்குத் தலையைத் தந்து, நெடிய கழல் அணிந்த தன் திருவடிகளை வாழ்த்துதற்கு வாயைத் தந்து, பழகுதற்குத் தன் சிறப்பான அடியார் குழாத்தைத் தந்து, உமையம்மையோடு இருப்பவன், அழகிய தில்லை மன்றிலே ஆடுகின்ற பெருங்குணத்தை மிகவும் பாடி நாம் கொடிமலர்கள் பறிப்போம்.

அடியேனுக்கு நல்ல வழி வகுத்தருளித் தன் சிறப்பான அடியாரின் பொன்போன்ற அடிகட்குப் பணி செய்வதை இலக்காக்கி அடியேனை ஆட்கொண்ட பெருமானின் மங்கலத் தன்மைகளைப் போற்றி செய்து நாம் முழுமையாக அடிமையாதற்கு ஓலை எழுதுவித்து, வருத்தும் பழவினையைப் பொய்யாக்கிய வகையைப் பாடி நாம் கொடிமலர்கள் பறிப்போம்.

பலநாள் வணங்கிப் பணிசெய்யும்படி தன் திருவடி மலர்களை என் நெஞ்சில் சேர வைத்து கல்லில் நாரை உரித்தல் போன்று என் வலிய நெஞ்சைக் குழைவித்து எம்பெருமான் அழகிய சுடராக என்னை ஆண்டுகொண்டான். அப்பெருமானது திருவடித்துணை நமக்குப் பொன் போல் சிறந்து இலங்கும் வகையைப் பாடிக் கொடி மலர்கள் கொய்வோம்.

பேராசை காரணமாக உண்டான இந்த உடம்பின் தொடர்பு அற்றுப் போக, திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் பெருமான் தன் சிறப்பார்ந்த திருவடிகளை என் தலைமேல் வைத்த தலைவன் ஆவன். கருமை நிறம் பொருந்திய கடலில் தோன்றிய நஞ்சை விரும்பி உண்டவனும் தலை ஓட்டைக் கையில் கொண்டவனும் ஆகிய இறைவனது போருக்கு இலக்கான முப்புரத்தின் நிலை பாடிக் கொடியில் மலர்கள் பறிப்போம்.

பாலும் அமுதும் தேனும் உடன்கலந்தாற் போன்ற மிக உயர்ந்த பொருளான சிவபெருமான் குளிர்மையான தோற்றத்துடன் என் உள்ளம் கொள்ளை கொண்டான். அந்தப் பெருமானின் ஒலிக்கும் வீரக் கழல்களை உலகிற் போற்றுவாரின் வழியே நல்ல வழி அவ்வழியில் அவனது புகழைப் பாடிக் கொடிகளில் பூப் பறிப்போம்.

12. வானவன் மால்அயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்
கோனவனாய் நின்று கூடல் இலாக் குணக்குறியோன்
ஆன நெடுங்கடல் ஆலாலம் அமுதுசெய்யப்
போனகம் ஆனவா பூவல்லி கொய்யாமோ!

13. அன்றுஆல நிழற்கீழ் அருமறைகள் தான்அருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாடோறும்
நின்றார் ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்
பொன்தாது பாடிநாம் பூவல்லி கொய்யாமோ!

14. படமாக என்உள்ளே தன்இணைப்போது அவை அளித்திங்கு
இடமாகக் கொண்டிருந்து ஏகம்பம் மேயபிரான்
தடம்ஆர் மதில்தில்லை அம்பலமே தான்இடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ!

15. அங்கி அருக்கன் இராவணன்அந் தகன்கூற்றன்
செங்கண் அரிஅயன் இந்திரனும் சந்திரனும்
பங்கம்இல் தக்கனும் எச்சனும்தம் பரிசுஅழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ!

16. திண்போர் விடையான் சிவபுரத்தார் போர்ஏறு
மண்பால் மதுரையில் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ!

17 முன் ஆய மலர் அயனும் வானவரும் தானவரும்
பொன்ஆர் திருவடி தாம் அறியார் போற்றுவதே
என்ஆகம் உள்புகுந்து ஆண்டு கொண்டான் இலங்கு அணியாம்
பல்நாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ!

இந்திரன் திருமால்பிரமன் ஆகியவர்களோடு மற்றத் தேவர்களுக்கும் தலைவனாக இருந்தும் குணமோ அடையாளமோ, அடைதல் இல்லாதவன் ஆகிய இறைவன், நெடிய பாற்கடலில் உண்டான கொடிய நஞ்சை அவன் உண்ணலும் அது அவனுக்கு உணவு ஆன விதத்தைப் பாடிக் கொடிகளில் பூப் பறிப்போம்.

அன்று ஒரு சமயம் கல்லால மரத்தின் நிழலின் கீழ் எழுந்தருளி அரிய மறைகளின் பொருளை உரைத்தருளி, செப்பமுடன் தேவரும் சிறந்த முனிவரும் நாள்தோறும் நிலையாக வாயாரப் போற்றும் நிறைவான கழல்களை உடையோன் சூடியிருக்கும் கொன்றை மலரின் பூந்துகள்களைப் பாடி நாம் கொடிகளில் பூப் பறிப்போம்.

என் உள்ளத்தில் ஓவியம் போல் தன் இரு திருவடி மலர்களைப் பதியவைத்து எனது நெஞ்சமே இடமாகக் கொண்டிருந்து திருவேகம்பத்திலும் அமர்ந்த பெருமான் இடம் அகன்ற மதில் சூழ்ந்த தில்லைப் பரவெளியையே தான் ஆடும் இடமாகக் கொண்டு அங்கு நடனம் இடும் வகையைப்பாடி நாம் கொடிகளில் பூப் பறிப்போம்.

அக்கினி, கதிரவன், இராவணன், இயமன், காலன், சிவந்த கண்கள் உடைய திருமால், பிரமன், இந்திரன், சந்திரன்,குறை வற்ற தக்கன், அவனுக்கு வேள்வி நடத்துவோன் ஆகியோர் பெருமை கெடும்படி சிவபெருமான் சினம் கொண்ட சிறப்பைப் பாடி நாம் கொடிகளில் மலர் பறிப்போம்.

வலிய போர்க்காளையை ஊர்தியாக உடையவன், சிவ புரத்தாராகிய அடியார்க்குப் போர்ச்சிங்கம் போல்பவன், ஆகிய பெருமான் நிலவுலகில் மதுரையில் பிட்டினைச் சாப்பிட்டுக் கைத்தடியால் பாண்டியன் தன்னை வேலை கொண்ட துன்பத்தைக் கூறும் பாடலைப் பாடி நாம் கொடிகளில் மலர்கள் கொய்வோம்.

முதல் தேவர்களாகிய திருமால் பிரமன் ஆகியோரும், மற்றும் உள்ள தேவர்களும் அசுரரும் சிவபெருமானின் பொன் போலும் அரிய திருவடிகளை அறிய மாட்டார்கள். அப்படி இருக்க நாம் எப்படிப் போற்றுவோம்? ஆனால் அப்பெருமான் என் உள்ளத்துள் புகுந்து ஆட்கொண்டான். அவனுக்கு விளங்கும் அணியாக உள்ள பலவான பாம்புகளைப் பாடி நாம் கொடிகளில் மலர்கள் பறிப்போம்.

18. சீரார் திருவடித் திண் சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகம்மகிழக்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ!

19. அத்தி உரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்
பித்த வடிவு கொண்டு இவ்வுலகில் பிள்ளையுமாம்
முத்தி முழுமுதல் உத் தரகோச மங்கை வள்ளல்
புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ

திருச்சிற்றம்பலம்

## பதினான்கு

# திருவுந்தியார்

'உந்தி' என்பது உந்தி எழுந்து பறத்தல் போன்ற செய்கையுடன், 'உந்தீபற!' என்று பாடி ஆடும் மகளிர் விளையாட்டு. அந்த விளையாட்டின் முறைமையில் இறைவனின் பெருமைகளைக் கூறிப் பாட அமைந்தது இந்தத் திருப்பாட்டு. **திருவுந்தியாரில்** பத்தொன்பது கலித்தாழிசைகள் உள்ளன. ''ஞானவெற்றி-அருட் சத்தியின் சாமர்த்தியம்' இதன் மையக்கருத்து எனக் கூறப்பட்டுள்ளது. முப்புரம் வென்றமை, தக்கனின் வேள்வியைத் தகர்த்தமை, பாலுக்கு அழுத பாலகனுக்குப் பாற்கடல் தந்தமை, பிரமனின் தலையைக் கிள்ளியமை, இராவணன் கைகளை நெரித்தமை ஆகியன இதில் வீறுபெறப் பேசப்படுகின்றன. புறத்தே கதைகளாகவும் அகத்தே ஆருயிர்க் கருத்துக்களாகவும் இவை இலங்குகின்றன. தில்லையில் அருளப் பெற்றது இத்திருப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்

1. வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற!
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற!

2. ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தம்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற!
ஒன்றும் பெருமிகை உந்தீபற!

சிறப்புப் பொருந்திய திருவடிகளில் அணிந்த சிலம்புகள் எழுப்பும் ஒலிக்கு நிறையாத ஆசை உடைய அடியேனை எனது உள்ளம்மகிழ, தேர்ஓடுகின்ற வீதிகளை உடைய திருப்பெருந்துறையில் அமர்ந்த பெருமான் அவன் அழகு நடனம் புரியும் பேரானந்தத்தைப் பாடி நாம் கொடி மலர்களைக் கொய்வோம்.

யானையின் (அசுரனின்) தோலை உரித்து அத் தோலினைப் போர்வையாகக் கொள்ளும் திருப்பெருந்துறை அண்ணல் பித்தன் போன்ற வடிவம் கொண்டதோடு இவ்வுலகில் பிள்ளையாகவும் பிறந்ததுண்டு. முத்திக்கு முழுமுதலாக இருக்கும் அவன் திருவுத்தரமங்கையில் வதியும் அருள்வள்ளலாவான். அவன் நம் மதியினுள் புகுந்த வகையைப் பாடிக் கொடிமலர்கள் கொய்வோம் நாம்.

○

''அரன்சீர் பாவமுறு தீமையறப் பாடல் திருவுந்தியதே' என்பது **திருவாசக உண்மை** காட்டும் இதன் உட்பொருளாகும். பாவம் காரணமாக விளையும் பெருந்தீமை யாவும் அழிந்தொழியச் சிவபெருமானின் சிறப்பினைப் பாடுவது திருவுந்தி என்பது இதன் பொருள்.

''தொடர்ந்த பிறப்பு அற,'' ''கருக்கெட'' '' தொல்லை' வினைகெட'' உந்தீபறத்தல் இத் திருப்பாடற்கண் வந்துள்ளன.

○

இறைவனின் மேருமலையாகிய வில்லானது வளைந்தது; போர் மூண்டது. முப்புரங்கள் வருந்தின என்று பாடி உந்தீபற; அவ்வளவில் அவை ஒருமிக்க வெந்து நீறாயினது என்ன வியப்பு! என்று பாடி உந்தீபற!

திருவேகம்பம் உடையவனாகிய சிவபெருமான் திருக்கையில் இரண்டு அம்புகள் இருக்க நாம் பார்த்திலேம். மற்று என்ன என்றால் ஓர் அம்பே முப்புரங்களை எரித்துவிடக் காரணமாக இருந்தது என்று உந்தீபற! அந்த ஓரம்பும் கூட வேண்டப் பெறாதது என்று பாடி உந்தீபற!

3 தச்சு விடுத்தலும் தாம்அடி யிட்டலும்
அச்சு விடுத்ததென் று உந்தீபற!
அழிந்தன மூப்புரம் உந்தீபற!

4. உய்ய வல்லார்ஒரு மூவரைக் காவல்கொண்டு
எய்ய வல்லானுக்கே உந்தீபற!
இளமுலை பொங்கநின் றுந்தீபற!

5. சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வா பாடி உந்தீபற!
உருத்திர நாதனுக்கு உந்தீபற!

6 ஆவா! திருமால் அவிப்பாகம் கொண்டன்று
சாவா திருந்தான்என் று உந்தீபற!
சதுர்முகன் தாதை என் று உந்தீபற!

7. வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தானென் று உந்தீபற!
கலங்கிற்று வேள்விஎன் று உந்தீபற!

8. பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்பதென் னே?ஏடி! உந்தீபற!
பணைமுலை பாகனுக்கு உந்தீபற!

9. புரந்தர னார்ஒரு பூங்குயில் ஆகி
மரந்தனில் ஏறினார் உந்தீபற!
வானவர் கோன்என்றே உந்தீபற!

10. வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை
துஞ்சின வாபாடி உந்தீபற!
தொடர்ந்த பிறப்புஅற உந்தீபற;

11. ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி உந்தீபற!
கொங்கை குலுங்கநின் றுந்தீபற!

[தேர் சமைத்தற்குத்] தச்சு வேலை முடிந்ததும் இறைவன் அதில் ஏறித் திருவடி வைத்தலும் அச்சு முறிந்தது என்று பாடி உந்தீபற! முப்புரமும் இறைவனின் நகைப்பால் அழிந்தன என்று உந்தீபற!

இறைவனைப் பணிந்து பிழைத்துக் கொள்ள வல்லவராக இருந்த அசுரர் மூவரை வாயிற் காவலராக வைத்து விட்டு, பிறர்மேல் அம்பு எய்ய வல்லமை உடையவன் ஆகிய இறைவனுக்கே உந்தீபற! இளம் மார்பு பூரிக்க உந்தீபற!

[வீரபத்திரர்] தாக்கிய வேள்வியானது அழிந்து போகவும் வானோர் ஓடிய தன்மையைப் பாடி உந்தீபற! உருத்திரர்களின் தலைவனான சிவபெருமானுக்கு உந்தீபற!

அந்தோ! அன்று வேள்வியில் தனக்கு உரிய உணவைப் பெற்றுத் திருமால் அடிபட்டு மூச்சற்று இறவாது கிடந்தான் என்று உந்தீபற! அவன் நான்முகனாகிய பிரமனின் தந்தை என்று உந்தீபற!

வெம்மை உடையவனான நெருப்புக் கடவுள், வேள்வியில் அவி உணவை உட்கொள்ள வளைத்த கையை [வீரபத்திரர்] வெட்டினார் என்று உந்தீபற! வேள்வி கலங்கியது என்று உந்தீபற!

உமையம்மையைப் பகைத்துக்கொண்டு பேசிய தக்கனை ஒரு பொருளாகப் பார்ப்பது ஒவ்வாது என்று உந்தீபற! உமையம்மையின் பங்கனுக்கு உந்தீபற!

தக்கனின் வேள்வியில் வீரபத்திரர் தேவர்களைத் தண்டித்த போது அஞ்சிய இந்திரன் ஓர் அழகிய குயில் வடிவு கொண்டு மரத்தில் ஏறினான் என்று உந்தீபற! அவன் தேவர்களுக்கு அரசன் என்று உந்தீபற!

இறைவனுக்குக் கொடிய சினம் உண்டாகுமாறு தக்கன் வேள்விக்கு அதிதேவனாக இருந்த எச்சனின் தலை சாய்ந்த தன்மையைப் பாடி உந்தீபற! தொடர்ச்சியாக வரும் நம் பிறவி அடியோடு ஒழிய உந்தீபற!

சிறுவிதியாகிய தக்கனுக்கு அவன் பறிகொடுத்த தலைக்குப் பதிலாக ஆட்டின் தலையைப் பொருத்திய வகையினைப் பாடி உந்தீபற! கொங்கை குலுங்கும்படி நின்று பாடி உந்தீபற!

○ விதி - பிரமன்; சிறுவிதி - பிரமனின் மக்கள். அவருள் தக்கனும் ஒருவன். சிறுவிதியாகிய தக்கனையே இங்கு விதி என்ற பெயரால் சுட்டியுள்ளார் அடிகள்.

12. உண்ணப் புகுந்த பகன்ஒளித்து ஓடாமே
கண்ணைப் பறித்தவாறு உந்தீபற!
கருக்கெட நாமெலாம் உந்தீபற!

13. நாமகள் நாசி சிரம்பிர மன்பட
சோமன் முகம்நெரித்து உந்தீபற!
தொல்லை வினைகெட உந்தீபற!

14. நான்மறை யோனும் மகத்து இய மான்படப்
போம்வழி தேடுமாறு உந்தீபற!
புரந்தரன் வேள்வியில் உந்தீபற!

15. சூரிய னார் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவாறு உந்தீபற!
மயங்கிற்று வேள்விஎன்று உந்தீபற!

16. தக்கனார் அன்றேதலைஇழந்தார் தக்கன்
மக்களைச் சூழநின்று உந்தீபற!
மடிந்தது வேள்விஎன்று உந்தீபற!

17. பாலக னார்க்குஅன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையற்கே உந்தீபற!
குமரன்தன் தாதைக்கே உந்தீபற!

18. நல்ல மலரின்மேல் நான்முக னார்தலை
ஒல்லை அரிந்தது என்று உந்தீபற!
உகிரால் அரிந்தது என்று உந்தீபற!

19. தேரை நிறுத்தி மலைஎடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவாறு உந்தீபற!
இருபதும் இற்றவாறு உந்தீபற!

வேள்வியில் அவிர்ப்பாகத்தை உட்கொள்ள வந்த பகன் (என்ற ஒரு சூரியன்) வீர பத்திரரைக் கண்டதும் ஒளிய முற்பட. அவன் அவ்வாறு ஒளிந்துவிடாமல் இருக்க அவனது கண்களை அவர் பிடுங்கிய தன்மையைப்பாடி உந்தீபற! நமக்குப் பிறவியின் மூலம் கெட்டொழிய உந்தீபற!

(வீர பத்திரரால்) கலைமகளின் மூக்கு அறுபடவும், பிரமனின் தலையில் குட்டு விழவும், சந்திரனுக்கு முகம் நெரித்துத் தேய்த்து விடவும் நேர்ந்ததைப் பாடி உந்தீபற! நம் முன்னை வினைகள் எல்லாம் அழிந்தொழிய உந்தீபற!

பிரமதேவனும் வேள்வித் தலைவனும் தண்டனைக்கு உட் படவும், இந்திரன் வேள்விக் களத்தினின்றும் தப்பிஓடும் வழி யினைத் தேடும் தன்மையினைப் பாடி உந்தீபற!

கதிரவனின் சிவந்த வாயிலுள்ள பற்கள் எல்லாம் விழ அவற்றைத் தகர்த்த தன்மையைப் பாடி உந்தீபற! வேள்வி கலங் கியது என்று உந்தீபற!

தன் மக்கள் தன்னைச் சுற்றி இருந்த போதிலும் தக்கன் தன் தலையை இழந்தான் என்று உந்தீபற! வேள்வி அழிந்தது என்று உந்தீபற!

உபமன்னியு [முனிவர்] ஆகிய குழந்தை அன்று ஒரு நாள் பசித்து அழ, அது பருகப் பாற்கடலைக் கொடுத்தருளியவனான அழகிய சடையை உடைய பெருமானுக்கு உந்தீபற! முருகப் பிரானின் தந்தையாகிய சிவபெருமானுக்கு உந்தீபற!

அழகிய தாமரை மலரின்மேல் உள்ள பிரமனின் தலை களில் ஒன்று விரைவாகக் கிள்ளி எடுக்கப்பட்டது என்று உந்தீபற! பெருமானின் நகத்தால் அது கிள்ளி எடுக்கப்பட்டது என்று உந்தீபற!

இராவணன் தன் தேரைக் கயிலை மலைமேல் செலுத்தத் தடை உண்டாகலும், தேரை நிறுத்தி விட்டுத் தன் தோள்களால் மலையைப் பெயர்க்க முற்பட்டான். அவன் தலைகள் பத்தும் அப்போது நெரிபட்ட தன்மையைப் பாடி உந்தீபற! தோள்கள் இருபதும் நெரிபட்ட தன்மையைப் பாடி உந்தீபற!

## பதினைந்து

# திருத் தோள் நோக்கம்

''கூத்தா! உன் சேவடி கூடும் வண்ணம் தோள் நோக்கம்'' என்ற குறிக்கோளுடன் ஆடுவதாக இயன்ற இத்திருப்பதிகம் தில்லையில் ஆறடித்தரவு கொச்சகக் கலிப்பா பதினான்கு கொண்டு அருளப் பெற்றதாகும்.

தோள் நோக்கம் என்பது மகளிர் பாடி ஆடும் ஆடல்களில் ஒன்று. தோள் தொட்டு ஆடுதல், தோள் தட்டி ஆடுதல், தோள் கொட்டி ஆடுதல், தோள் நோக்கி ஆடுதல், கைவீசி ஆடுதல், என்றெல்லாம் இதன் செயல்முறைகள் கூறப்படுகின்றன. நோக்கு என்ற கூத்துடன் சார்ந்தது இது எனவும் கூறுப.

''சித்தம் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய் அத்தன் செயும் கருணைக்கு ஆராமை உள்மிகுந்து பொத்திய கை கொட்டிப் புகழ்தல் தோள்நோக்கம்'' என்று திருவாசக உண்மை தெரிவிக்கிறது. ''பிரபஞ்ச சுத்தி; அதாவது ஆன்மாக்களைச் சுத்திகரித்தல் இதன் உட்கிடை'' என்ப.

கண்ணப்பர் சண்டீசர் வரலாற்றுச் செய்திகளும் அசுரர் மூவர் எரிபிழைத்தமை, மால் சக்கரம் பெற்றமை போன்ற கதைக்குறிப்புகளும் இதில் வருகின்றன.

திருச்சிற்றம்பலம்

1. பூத்துஆரும் பொய்கைப் புனல்இதுவே எனக்கருதி
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம் ஆகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை அம்பலத்தே திருநடஞ்செய்
கூத்தா! உன்சேவடி கூடும் வண்ணம் தோள்நோக்கம்!

2. என்றும் பிறந்திறந்து ஆழாமே ஆண்டுகொண்டான்
கன்றால் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய
குன்றாத சீர்த்தில்லை அம்பலவன் குணம்பரவித்
துன்றார் குழலினீர் தோள்நோக்கம் ஆடாமோ!

3. பொருள்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊன்அமுதம்
விருப்புற்று வேடனார் சேடுஅறிய மெய்குளிர்ந்துஅங்கு
அருள்பெற்று நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ!

சென்ற காலத்தில் தாம் வறும் பொழுது கழித்ததையும் இறைவன் வந்து பிணிப்பு அறுத்து ஆட்படுத்தியதையும் கூறு வாராக மக்களினத்துக்கு வழிகாட்டும் அடிகள் ''எத்தனையோ காலம் ஏழைத் தொண்டனேன் இறைவனைப் பணியாது பாழுக்கு இறைத்தேன்; ஊழி முதல்வனான அவன் சிந்தாத நன்மணியாக, வந்து என் பிறவித் தாழைப் பறித்த வரலாற்றைப் பாடித் தோள் நோக்கம் ஆடுவோம்'' என்று எளிய சொற்களில் உயரிய பொது உண்மையை உரைக்கிறார். ○

மலர்கள் பூத்து நிரம்பியிருக்கிற தடாகத்தின் நீர் இது வாகும் என்று நினைத்து, கானலை முகக்கின்ற அறிவிலியாகிய ஒருவனது குணம் இச்சிறியேனின் குணம் ஆகாமல் ஒழித்தனை. விளங்கும் தில்லை அம்பலமாகிய நுண்ணிய அறிவுப் பரவெளியில் உயர்நடம் புரியும் கூத்தனே! உன் செவ்விய திருவடிகளை அடையும் பொருட்டு நாங்கள் தோள்நோக்கம் ஆடுவோம்.

எல்லாக் காலத்தும் பிறந்தும் இறந்தும் துன்பக்கடலில் அழுந்தாவண்ணம் அடியேமை அடிமை கொண்டவன், கன்றைக் கொண்டு விளங்கனியை எறிந்தவன் ஆகிய (கண்ணன்) திருமாலும் பிரமனும் காணுதல் அரிய குறைவிலாப் பெருமையை உடைய தில்லை அம்பலமாகிய நுண்ணிய ஞானப் பரவெளியில் இருப் போன் ஆகிய பெருமானின் இரக்கப் பண்பினைப் போற்றி செய்து நெருக்கமான நீண்ட கூந்தலை உடைய மகளிரே! தோள் நோக்கம் ஆடுவோம்!

ஆகமப்படி செய்வதற்கான பொருள்களைக் கொண்டு செய்யும் பூசை போல் விளங்குமாறு செருப்பு அணிந்த சீரான பாதத்துடன் வாயாகிய கலசம், புலால் உணவு ஆகியவற்றை விரும்பிய வேடராகிய கண்ணப்பர் பேரின்பப் பெருமையை உணரலும் உடம்பு குளிர்ந்து அங்குப் பெருமானின் திருவருளைப் பெற்ற தன்மைகளைப் பாடித் தோள் நோக்கம் ஆடுவோமாக.

4. கற்போலும் நெஞ்சம் கசிந்துருகக் கருணையினால்
நிற்பானைப் போலஎன் நெஞ்சினுள் புகுந்தருளி
நற்பாற் படுத்தென்னை நாடறியத் தான் இங்ஙன்
சொற்பாலது ஆனவா தோள்நோக்கம் ஆடாமோ!

5. நிலம் நீர் நெருப்பு உயிர் நீள்விசும்பு
நிலாப் பகலோன்
புலன் ஆய மைந்தனோடு எண்வகையாய்ப்
புணர்ந்து நின்றான்
உலகு ஏழ் எனத்திசை பத்து எனத்தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோள் நோக்கம் ஆடாமோ!

6. புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவம் ஆக்கும்
அத்தன் கருணையினால் தோள்நோக்கம் ஆடாமோ!

7. தீதில்லை மாணி சிவகருமம் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாள்இரண்டும்
சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழ
பாதகமே சோறு பற்றியவா தோள்நோக்கம்!

8. மானம் அழிந்தோம் மதிமறந்தோம் மங்கைநல்லீர்!
வானம் தொழும்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
ஆனந்தக் கூத்தன் அருள்பெறில் நாம் அவ்வணமே
ஆனந்த மாகிநின்று ஆடாமோ தோள்நோக்கம்!

9. எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்
கண்ணுதல் எந்தை கடைத்தலை முன் நின்றதன்பின்
எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டார்காண் தோள்நோக்கம்

வலிய கல்போன்ற அடியேன் மனமானது நெகிழ்ந்துஉருக, இறைவன் தன் அருள் காரணமாக அடியேன் முன் நிற்பவன் போல இருந்து அடியேனின் உள்ளத்தினுள் யாரும் அறியா வகை புகுந்தருளி, அடியேனை நன்மையின் பாற் சேர்த்து இதனை ஊர்உலகம் அறியும் வண்ணம் இவ்விடத்தில் புகழ்ந் தேத்துதற்கான வகையினைக் குறித்துத் தோள் நோக்கம் ஆடுவோம்.

நிலம் நீர் நெருப்பு காற்று பெரிய ஆகாயம் திங்கள் கதிரவன், அறிவுருவாம் ஆன்மா ஆகிய பத்துடன் கூடி எட்டு வகையாகக் கலந்து நின்ற ஒப்பற்ற பெருமானே ஏழ் உலகுகள் எனவும் பத்துத் திக்குகள் எனவும் நிலை நிற்கின்ற தன்மையைப் பாடித் தோள் நோக்கம் ஆடுவோமாக!

புத்த சமயத்தார் முதலாகச் சிற்றறிவுடைய பல சமயத் தாரும் தத்தம் சமயங்கள் காட்டும் நெறிகளால் முடிவு காணாது சீடுமாற்றம் அடைந்து நிற்க, அடியேனின் உள்ளத்தைச் சிவ மாக்கி அடியேன் செய்த செயல்களைத் தவச் செயல்கள் ஆமாறு தன் கருணை காரணமாகச் செய்தருளும் இறைவன் திரு வருளைப் புகழ்ந்து பாடித் தோள் நோக்கம் ஆடுவோம்.

தீது அறியாப் பிரமச்சாரியான சண்டேசர் தம் சிவ வழிபாடு சிதையுமாறு செய்தவனை - அவன் சாதியால் வேதம் ஓதுபவன், முறையால் தகப்பன் என்பதை எண்ணாமல், அவனது கால்கள் இரண்டையும் வெட்டித்தள்ள, தேவர்கள் வணங்கு மாறு சண்டேசர் செய்த பாவச்செய்கை நற்செய்கை ஆக ஈசன் திருவருள் காரணமாக ஏற்றுக் கொண்டருளிய தன்மையைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோமாக!

மங்கையராகிய நல்லோரே! நாம் செருக்கு அழியப் பெற் றோம்; பொய்யான அறிவு நீங்கப் பெற்றோம். விண்ணவர் வணங்கும் தென்னவனாம் சிவபெருமானின் நீண்ட கழல் அணிந்த திருவடிகளே நினைந்து அடியோம் அப் பேரின்பக் கூத்தனின் திருவருள் கைகூடப் பெறுவோமாயின் அவ்வாறே பேரின்பம் உடையவராக நிலைத்துத் தோள் நோக்கம் ஆடுவோம்.

[காலத்தால்] மதிப்புடைய முப்புரத்து அசுரர்கள் மூவரும் முப்புரம் எரிந்த காலை அதனின்றும் உய்ந்து நெற்றிக் கண்ணை உடைய எம் தந்தையாம் பெருமானின் தலைவாயிலில் காப்போ ராக நின்ற பின்பு எத்தனையோ பிரமர்களும் மண் உண்ட திருமால் பலரும் நற்கதி பெறாது மடிந்தார்கள். இதனைப் பாடித் தோள்நோக்கம் ஆடுவோம்.

10. பங்கயம் ஆயிரம் பூவினில் ஓர் பூக்குறையத்
தங்கண் இடந்துஅரன் சேவடிமேல் சாத்தலுமே
சங்கரன் எம்பிரான் சக்கரம்மாற்கு அருளியவாறு
எங்கும் பரவிநாம் தோள்நோக்கம் ஆடாமோ!

11. காமன் உடல், உயிர்காலன், பல் காய்கதிரோன்
நாமகள் நாசி, சிரம் பிரமன், கரம்எரியைச்,
சோமன் கலை, தலை தக்கனையும் எச்சனையும்
தூய்மைகள் செய்தவா தோள்நோக்கம் ஆடாமோ!

12. பிரமன் அரிஎன்று இருவரும்தம் பேதைமையால்
'பரமம், யாம்பரமம்' என்றவர்கள் பதைப்புஒடுங்க
அரனார் அழல் உருவாம் அங்கே அளவிறந்து
பரமாகி நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ!

13. ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலம் எல்லாம்
பாழுக்கு இறைத்தேன் பரம்பரனைப் பணியாதே;
ஊழிமுதல் சிந்தாதே நன்மணிவந்து என்பிறவித்
தாழைப் பறித்தவா தோள்நோக்கம் ஆடாமோ!

14. உரைமாண்ட உள்ளொளி உத்தமன்வந்து உளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோள்நோக்கம் ஆடாமோ!

திருச்சிற்றம்பலம்

பதினாறு

## திருப் பொன்னூசல்

பவளக் காலும் முத்துக் கயிறும் பொற்பலகையும் உடைய அழகிய ஊஞ்சலில் மயிலன்ன மாதர் அமர்ந்து அன்னத்தின் மேலேறி அணிமயில் ஆடுவது போல் காட்சி தர இறைவன் புகழ் பாடி உத்தர கோச மங்கை ஊரையும் பாடல்தோறும் சொல்லிப் "பொன்னூசல் ஆடாமோ" என்று அழகாக முடியும் தரவு கொச்சகக் கலிப்பா ஒன்பது கொண்டது இத்திருப்பதிகம். தில்லையில் அருளப் பெற்றது. ஊசல் ஆடுவது பாடுவது இயற்கையோடு இயைந்த தமிழர் வாழ்வின் இனிய இளைய பொழுது

ஆயிரம் தாமரை மலர்களால் இறைவனை வழிபடத் தொடங்கிய திருமால் அவற்றில் ஒன்று குறைவுபடக் கண்டதும், கண்ணாகிய மலரைத் தோண்டி இறைவனின் திருவடிக்கண் சாத்திய அளவில் மெய்யடியார்க்கு இன்பம் செய்பவனாகிய எம் ஆண்டவன் திருமாலுக்கு (அவன் விரும்பியவாறு) சக்கரம் அருளிய வரலாற்றை நாம் எங்கும் புகழ்ந்து பாடித் தோள் நோக்கம் ஆடுவோமாக.

மன்மதனின் உடம்பையும், இயமனின் உயிரையும், சுடு கதிர்களை உடைய பகலவனின் பற்களையும், கலைமகளின் மூக்கையும், பிரமனின் தலையையும், நெருப்புக் கடவுளின் கை யையும், சந்திரனின் கலையையும் தக்கன் எச்சன் ஆகியோர்தம் தலையினையும் துப்புரவு ஆக்கிய வரலாறு என்னே! என்று தோள்நோக்கம் ஆடுவோம்.

தம் அறியாமையால் 'யாம் பரம்பொருள், யாம் பரம் பொருள்' என்று வாதாடியவர்களாகிய பிரமன் திருமால் ஆகிய இருவரும் தம் நெஞ்சத் துடிப்பு அடங்கும்படி சிவபெருமான் நெருப்புப் பிழம்பாகி அவர்கள் வாதாடிய இடத்தில் எல்லை இகந்து ஓங்கிய உயர்பொருளாகி நிலை கொண்ட தன்மையைக் குறித்துத் தோள்நோக்கம் ஆடுவோமாக.

அறிவற்ற தொண்டன் ஆகிய அடியேன் எவ்வளவோ காலங்கள் எல்லாம் மிக மேலாம் பொருளாகிய சிவபெருமானைப் பணியாமல் பாழுக்குநீர் இறைப்பவன் போல் வீணாக்கினேன். ஊழிகட்கு எல்லாம் முதற்பொருளாக, கெடாத நல்ல மாணிக்க மணியாக விளங்கும் பெருமான் வந்து அடியேனின் பிறவியின் வேரைப் பறித்த வகையைப் பாடி தோள்நோக்கம் ஆடுவோமாக.

சொற்களாகிய அளவைக் கடந்த உள்ளொளியாக மே லோனாம் இறைவன் வந்து என் உள்ளத்தில் புகுந்த அளவில், கரையற்ற ஆசையாகிய பெருங்கடலைத் தாண்டலும் அதனால் தமக்கு உரிய தீனி கிடைக்கப் பெறாத பொறிபுலன் ஆம் பறவை அஞ்சி ஓட, நம் நெறி மாட்சிமைப்பட்ட தன்மையைப் பாடி ஆடுவோமாக

போக்கு. ஊசல்வரி என்பதும் ஊஞ்சற்பாட்டு என்பதும் எல்லா நிலையிலும் வழக்கில் இருந்து வருவன. ''அருட் சுத்தி அதாவது அருளொடு கலத்தல்'' என்பது இதன் உட்கிடை என்ப. 'அருட் சுத்தி இருந்தாடத் தாலாட்டிடுதல்' இதன் மையக் கருத்து என்பது திருவாசக உண்மை.

இறைவன் பெருமைகளை வியந்தும் நயந்தும் ஊசற் பாட்டாக மகளிர் ஆடுவதாக அடிகள் மகளிர் வாழ்வோடுஆன் மிகத்தை இயைத்து அமைப்பது, அஃது இலக்கிய மரபை ஒட்டியது என்பதோடு, பரிபாகம் உற்ற ஆன்மாவைப் பெண்

திருச்சிற்றம்பலம்

1. சீராரும் பொற்பவளம் கால் முத்தம் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாரா யணன் அறியா நாள்மலர்த்தாள் நாய் அடியேற்கு
ஊராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா அமுதின் அருள்தாள் இணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூசல் ஆடாமோ.

2. மூன்றுஅங்கு இலங்கு நயனத்தன் மூவாத
வான்தங்கு தேவர்களும் காணா மலரடிகள்
தேன்தங்கித் தித்தித்து அமுதூறித் தான்தெளிந்துஅங்கு
ஊன்தங்கி நின்றுருக்கும் உத்தரகோசமங்கைக்
கோன்தங்கு இடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றுஅங்கு அனநடையீர் பொன்னூசல்
ஆடாமோ.

3. முன்ஈறும் ஆதியும் இல்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி இமையோர்கள் தாம்நிற்பத்
தன்னீறு எனக்கருளித் தன் கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

4. நஞ்சுஅமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்
மஞ்சுதோய் மாடம்அணி உத்தர கோசமங்கை
அஞ்சொலாள் தன்னோடும்கூடி அடியவர்கள்
நெஞ்சுளே நின்று அமுதம் ஊறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்
புஞ்சம்ஆர் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ.

ணாகப் பாடுவது என்பதோடு மகளிரிடைச் சைவ நூற் கருத்தும் கடைப்பிடியும் வழிபாட்டின்பமும் வேரூன்றி நிற்க வேண்டும் என்பதும் அடிகளின் கருத்து ஆகும் என்று எண்ணுமாறு உளது. இவ்வாறே மகளிர் விளையாட்டுக்களில் இறையுணர்வைப் புகுத்திய அடிகளின் பெருநோக்கு மிகவும் மதித்தற்கு உரியது.

○

சிறப்புப் பொருந்திய பவளத்தால் கால்களும் முத்து மாலைகள் கயிறாகவும் அமைந்த ஊஞ்சலில் அழகு மிக்க பொற் பலகையில் ஏறி இனிதாக அமர்ந்து நாராயணனும் அறிந்திராத புதிய தாமரை மலர் போன்ற திருவடியை அடியேனாகிய நாயினேனுக்கு இருக்கும் இடமாகத் தந்தருளும் உத்தரகோச மங்கையில் உறையும் தெவிட்டாத அமுதம் போன்ற பெருமானின் தாள் இரண்டையும் புகழ்ந்து பாடி, போர்ச்செயல் பொருந்திய வேல் போன்ற கண்களை உடைய இளம்பெண்டிரே, பொன்னூஞ்சல் ஆடுவோம்.

மூன்றாக விளங்கும் கண்களை உடையவனின் - விண்ணில் தங்கியுள்ள மூப்பில்லாத் தேவர்களும் காணாத் திருவடிகள், தேன் பொருந்தி இனித்து அமுதம் சுரந்து தெளிவாகி அவ்வண்ணமே என் உடம்பில் தங்கி அதனை உருகச் செய்யும் உத்தரகோச மங்கைக்கு அரசனாகிய இறைவன் தங்கியிருக்கும் திருவிடை மருதூரைப்பாடி, சாயலில் உயர்ந்த மயில்களை ஒத்து நடையில் அன்னத்தை ஒத்திருக்கும் இளம்பெண்களே! பொன் ஊஞ்சல் ஆடுவோம்.

எண்ணப் படுகின்ற முதலும் இறுதியும் இல்லாத முதல்வன், முனிவர் கூட்டமும் பல நூறு கோடிகளான தேவர்களும் திருவருளை எதிர்பார்த்து நிற்கத் தன் அருளை-திருநீற்றை-எனக்குத் தந்து தன் அருள்பெருக்கில் நான் நிலைபெற்றிருக்க நீங்கா அழகு உடைய உத்தரகோச மங்கையில் உள்ள மின்னொளி வீசும் மேலடுக்குகள் கொண்ட பெரிய மாளிகைகளைப் பாடிப் பொன்னால் உயர்ந்த அணி அணிந்த மார்பினை உடையீர், பொன்னூஞ்சல் ஆடுவோம்.

நஞ்சு தங்கிய கழுத்தினை உடையவன், மேகங்கள் படியும் மாடங்கள் இருக்கும் அழகிய உத்தரகோச மங்கையில் அழகிய மொழி பேசும் உமையம்மையோடு எழுந்தருளி அடியவர்களின் நெஞ்சின் உள்ளே நின்று அமுதம் உண்டாக அருள்செய்து இறப்புப் பிறப்புக்களை அழிக்க வல்லவனின் தூய புகழைப் பாடி, தொகுதியான வெள்ளிய சங்கு வளையல்களை அணிந்த இளம் பெண்களே! பொன் ஊஞ்சல் ஆடுவோம்,

5. ஆணோ அலியோ அரிவையோ என்று இருவர்
காணாக் கடவுள் கருணையினால் தேவர்குழாம்
நாணாமே உய்யஆட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக உண்டருளும் உத்தர கோசமங்கைக்
கோனார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ

6. மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை ஆட்கொண்டுஎன் தொல் பிறவித்
தீதோடா வண்ணம் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்து அன்பால்
போதாடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

7. உன்னற்கு அரியதிரு உத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடும் அணிமயில்போல்
என்னத்தன் என்னையும் ஆட்கொண்டான் எழில்பாடிப்
பொன்ஒத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

8. கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால அமுதுண்டு தாழ்கடலின் மீதுஎழுந்து
ஞாலம் மிகப்பரிமேல் கொண்டு நமை ஆண்டான்
சீலம் திகழும் திருவுத்தர கோசமங்கை
மாலுக்கு அரியானை வாயார நாம்பாடிப்
பூலித்து அகம் குழைந்து பொன்னூசல் ஆடாமோ.

9. தெங்கு உலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குஉலவு சோதித் தனிஉருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தரமும் ஆட்கொள்வான்
பங்குஉலவு கோதையும் தானும் பணி கொண்ட
கொங்குஉலவு கொன்றைச் சடையான் குணம் பரவிப்
பொங்குஉலவு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

திருச்சிற்றம்பலம்

அவன் ஆண்வடிவினனோ பெண்வடிவினனோ அல்லாத வடிவினனோ என்று மால் அயன் காண முடியாத, யாவும் கடந்த பெருமான் அருள் காரணமாகத் தேவர் கூட்டம் வெட்கி மடியாமல் அவர் பிழைக்குமாறு அடிமை கொண்டு நஞ்சை உண்டருளிய உத்தர கோச மங்கையில் வீற்றிருக்கும், வளைவு பொருந்திய பிறையைத் தலையில் அணிந்த கூத்தப்பனின் குணங்களைப் புகழ்ந்து, அணிகலம் பொருந்திய அழகிய மார்புடைய பெண்டிரே, பொன் ஊஞ்சல் ஆடுவோம்.

உமையம்மையைத் தன் உடம்பிற் பாகமாக உடைய, உத்தர கோச மங்கையில் எழுந்தருளப் பெற்ற, பூந்துகள் பொருந்திய கொன்றை மலர்மாலை அணிந்த சடைமுடியை உடைய பெருமான், தன் அடியாருள் நாய் போன்று இழிதகை யேனைக் குற்றம் களைந்து ஆட்கொண்டு என் பழம்பிறப்புத் தீமைகள் மேலே நடவாறு அடியேன் விளங்கப் பிறவியை அழிக்கின்ற அப் பெருமானின் காதில் அசையும் குண்டலங்களைப் பாடி அன்பினால் உருகி, மலர்மாலை அசையும் அணிகலன் அணிந்த மார்பினையுடையீர், பொன்னூஞ்சல் ஆடுவோம்.

நினைப்பினுக்கு அரிய, அழகிய உத்தர கோச மங்கையில் தங்கிய, பொலிவுடன் திகழ்ந்த பெரிய மறைப் பொருள் ஆனவனின் புகழைச் சொல்லிச் சொல்லிப் பணிந்து வழி படப் பாவங்கள் யாவும் ஓட்டுதலை ஒழிப்பவன், என் தந்தை, என்னையும் ஆட்கொண்டவன் ஆகிய பெருமானின் உயரிய அழகைப் பாடி, அன்னத்தின் மேல் ஏறி ஆடும் அழகு மயில் போல் [பொற்பலகையின் மேல் ஏறி] பொன் ஆபரணம் தரித்த மார் பினையுடைய இளம் பெண்டிரே, பொன் ஊஞ்சல் ஆடுவோம்.

அழகிய கைலைமலையின் உச்சியினின்றும் குருவடிவத் துடன் நிலவுலகு வந்து நிறைவான உணவு உண்டு, தாழ்ந்த கடல் அலையைப் போல் தாவி வரும் குதிரை மேல் உலகம் உயர எழுந்து நம்மை ஆட்கொண்டவனின் ஒழுங்கு விளங்கும் நல்ல உத்தரகோச மங்கையில் வீற்றிருப்போன், மாலால் அறிதற்கு அரியவன், அவனை வாயாரப் பாடி உள்ளம் பூரித்துக் குழைவுற்றுப் பொன் ஊஞ்சல் ஆடுவோம்.

தென்னைகள் அசைகின்ற சோலைகள் சூழ்ந்த திருஉத்தர கோச மங்கையில் ஒளிப் பிழம்பாக நின்று திகழும் ஒப்பற்ற வடிவமாக வந்தருளி, எங்கள் பிறப்பு வேரைப் பறித்து எந் நிலையிலும் ஆட்கொள்பவனாகப் பாதியிற் கோதை போன்ற

பதினேழு

# அன்னைப் பத்து

''அன்னே! என்னும்'' என்ற இறுதிச் சீர்களுடன் கூடிய பத்துக் கலிவிருத்தம் கொண்ட இத் திருப்பதிகம் தில்லையில் அருளப்பெற்றது. பேரின்ப நிலையில் நின்ற அடிகள் வையத்தாரொடு அதனைப் பகிர்ந்துகொள்வாராக, அன்னையிடம் அப்பாவி மகள் ஒருத்தி தான் கண்ட பெருமானின் காட்சியையும் அவர் தன் உள்ளம் கவர்ந்து சித்தம் புகுந்து அங்கே மன்னியதையும் பிரிவால் வாடுவதையும் அவர் பிச்சை ஏற்கப் போவதையும் அவரால் தனக்குப் பெரும் பித்து உண்டானதையும் கூறுகிற பாங்கில் நிகழ்த்துகிறார். தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கும் பாங்கில் இஃது உளது எனவும் கூறுவர்.

''நித்த மணாளர் நிரம்ப அழகியர் நீண்ட கரத்தர் பாண்டி நன்னாடர் வெள்ளைக் கலிங்கத்தர், பள்ளிக் குப்பாயத்தர் சந்தனச் சாந்தினர், அடிகளார்'' என்று இறைவனை அடிகள் வருணிப்பது நம் நெஞ்சைக் கவர்கிறது.

திருச்சிற்றம்பலம்

1\. வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையினர் அன்னே என்னும்;
நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கும்
நாதர்இந் நாதனார் அன்னே என்னும்.

2\. கண்அஞ் சனத்தர் கருணைக் கடலினர்
உள்நின்று உருக்குவர் அன்னே என்னும்;
உள்நின்று உருக்கி உலப்பிலா ஆனந்தம்
கண்ணீர் தருவரால் அன்னே என்னும்.

3\. நித்தம் மணாளர் நிரம்ப அழகியர்
சித்தத்து இருப்பரால் அன்னே என்னும்;
சித்தத்து இருப்பவர் தென்னன் பெருந்துறை
அத்தர்ஆ னந்தரால் அன்னே என்னும்.

4\. ஆடுஅரப் பூண்உடைத் தோல்பொடிப் பூசிற்றோர்
வேடம் இருந்தவாறு அன்னே என்னும்;
வேடம் இருந்தவா கண்டுகண்டு என்னுள்ளம்
வாடும்இது என்னே அன்னே என்னும்,

உமையம்மையோடு தானும் தோன்றிக் காட்சி நல்கி ஏவல் கொண்ட, மணம் கமழும் கொன்றை மாலை சூடிய சடை முடியுடைய பெருமானின் இனிய குணங்களைப் போற்றி, விளக்கம் அமைந்த அணிகள் அணிந்த மார்பினையுடையீர், பொன் ஊஞ்சல் ஆடுவோம்.

○

''ஆத்தும பூரணம் அதாவது ஆன்மா சிவனொடு நிறைதல்;' என்பது இதன் உட்கிடை என்ப. ''நேயம் மிகுந்த நிலைகுலையக் கூடுதலை ஆய அருள்தாய்க்கு அங்கு அறைதல் அன்னைப் பத்தாகும்'' என்பது திருவாசக உண்மை தெரிவிக்கும் மையக் கருத்து ஆகும்.

○

''அன்னையே! பெருமானாகிய அவர் திருமறைகளை அருளியவர், வெண்ணீறு அணிந்தவர், செந்நிற மேனியர், நாதப் பொருளாம் பறையை உடையவர்'' என்று (தன் தாயிடம்) மகள் சொல்வாள். மேலும் ''ஓங்கார ஒலிப்பறை முழக்கினராகிய அப்பெருமான் நான்முகனுக்கும் திருமாலுக்கும் தலைவரானவர் அன்னையே!'' என்று அவள் கூறுவாள்.

''அன்னையே! பெருமானாகிய அவர் [இறைவி ஒரு பாகத்தர் ஆகையால்] கண்ணில் மை உடையவர், அருட்கடலாக இருப்பவர் உள்ளத்துள், நிலைத்திருந்து அதனை உருகச்செய்பவர்'' என்று மகள் கூறுவாள். ''உள்ளத்துள் நிலைத்து அதனை உருக்கி முடிதலில்லா இன்பக் கண்ணீர் வரச் செய்வர், அன்னையே'' என்று மேலும் அவர் தெரிவிப்பாள்.

''அன்னையே! அவர் எந்நாளும் மணாளராக இருப்பர், மிகவும், அழகியவர் என் உள்ளத்துள் இருப்பர்'' என்பாள். மேலும் அவள் ''அவ்வாறு என் உள்ளத்துள் உள்ளவர் தெற்கில் உள்ள நல்ல பெருந்துறைக்குத் தலைவர், இன்ப வடிவினர், அன்னையே'' என்பாள்.

''அன்னையே! பெருமானாகிய அவர்க்கு அணிகலம் ஆடும் பாம்பு, ஆடை தோல், பூசியது திருநீறு. இவ்வாறாக அவரது வேடம் இருந்தது. அன்னையே'' என்று மகள் உரைப்பாள். மேலும், ''வேடன்இருந்த வகையைப் பார்த்துப் பார்த்து என் மனம் வாடுகிறது. இது என்ன காரணத்தால், அன்னையே?'' என்பாள்.

5. நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்
பாண்டிநன் னாடரால் அன்னே என்னும்;
பாண்டிநன் னாடர் பரந்தெழு சிந்தையை
ஆண்டு அன்பு செய்வரால் அன்னே என்னும்.

6. உன்னற்கு அரியசீர் உத்தர மங்கையர்
மன்னுவது என்நெஞ்சில் அன்னே என்னும்;
மன்னுவது என்நெஞ்சில் மால்அயன் காண்கிலார்
என்ன அதிசயம் அன்னே அன்னே என்னும்.

7. வெள்ளைக் கலிங்கத்தர் வெண்திரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே என்னும்;
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரி மேல்கொண்டு என்
உள்ளங் கவர்வரால் அன்னே என்னும்.

8. தாளி அறுகினர் சந்தனச் சாந்தினர்
ஆள்எம்மை ஆள்வரால் அன்னே என்னும்;
ஆள்எம்மை ஆளும் அடிகளார் தம் கையில்
தாளம் இருந்தவாறு என்னே என்னும்.

9, தையல்ஓர் பங்கினர் தாபத வேடத்தர்
ஐயம் புகுவரால் அன்னே என்னும்;
ஐயம் புகுந்தவர் போதலும் என்னுள்ளம்
நையும் இதுஎன்னே அன்னே என்னும்.

10. கொன்றை மதியமும் கூவிளம் மத்தமும்
துன்றிய சென்னியர் அன்னே என்னும்;
துன்றிய சென்னியர் மத்தம்உன் மத்தமே
இன்றைக்கு ஆனவாறு அன்னே என்னும்.

திருச்சிற்றம்பலம்

''அன்னையே! அவர் நீண்ட கைகள் உடையவர், நெறிந்த தலைமுடி கொண்டவர், நல்ல பாண்டிய நாட்டினர், அன்னையே!'' என்பாள். ''நல்ல பாண்டிய நாட்டினராகிய அப் பெருமான் பரந்து எழுகின்ற என் மனத்தை ஆட்கொண்டு அன்பு செய்குவர், அன்னையே!'' என்பாள்.

''அன்னையே! பெருமானாகிய அவர், நினைப்பதற்கு அரிய புகழ் உடைய திருவுத்தரகோச மங்கையில் இருப்பவர். அவர் நிலை பெற்றிருப்பது என் நெஞ்சில் ஆகும்''. என்று மகள் உரைப்பாள். மேலும் அவள் ''அவ்வாறு என் நெஞ்சில் நிலை பெற்றிருக்கிறார் ஆயினும் அப்பெருமானை மால் அயன் காண முடியாதிருக்கின்றனர். இஃது என்ன புதுமை! அன்னையே''! என்பாள்.

''பெருமானாகிய அவர் வெண்ணிற ஆடை உடுத்தவர்; வெண்ணீறு துலங்கும் நெற்றி உடையவர்; அறச் சாலைக்கு உரிய சட்டை அணிந்தவர், அன்னையே! என்று மகள் கூறுவாள். ''அறச்சாலைக்கு ஏற்ற சட்டை அணிந்தவர், பாய்ந்து செல்லும் குதிரை மேல் ஏறிக்கொண்டு வந்து உள்ளம் கவர்ந்து கொள்வர், அன்னையே!'' என்று மேலும் கூறுவாள்.

''அன்னையே! பெருமானாகிய அவர் தாளிக் கொடியும் அறுகும் புனைந்தவர், சந்தனச் சாந்து பூசியவர், எம்மை ஆட் கொண்டு ஆள்பவர்'', என்று மகள் கூறுவாள். ''எம்மை ஆளாக ஆண்டு அருள் புரியும் அத் தலைவரது கையில் தாளம் இருந்தது எவ்விதம், அன்னையே!'' என்று மேலும் உரைப்பாள்.

''அன்னையே! அவர் பெண் அமர்ந்த பாகத்தர் ஆயினும் பெருமான் தவவேடம் தாங்கியவர், பிச்சைக்குச் செல்பவர்'' என்று கூறுவாள். ''பிச்சைக்குச் செல்பவர் அவ்வாறு செல்லவே என்உள்ளம் வருந்தும். இஃது என்னகாரணத்தால்? அன்னையே!'' என்று மேலும் உரைப்பாள்.

பெருமான் அவர் கொன்றைப் பூ மாலையும் பிறையும் வில்வமும் ஊமத்தம் பூவும் செறிந்த தலையினராக உள்ளார், அன்னையே!'' என்பாள். ''அவ்வாறு அவை செறிந்த தலையினில் உள்ள ஊமத்தம்பூ இப்பொழுது எனக்குப் பைத்தியம் உண்டாக் கியது, அன்னையே!'' என்று மேலும் கூறுவாள்.

o

## பதினெட்டு

# குயிற் பத்து

இனிய அழகு மொழியில் குயிலை விளித்துப் பேசும் பத்து ஆசிரிய விருத்தங்கள் அமைந்த இத்திருப்பதிகம் தில்லையில் அருளப்பெற்றதாகும்.

"ஆத்தும இரக்கம்; அதாவது சிவனைக் கண்டு இரங்குதல்" இதன் உட்கிடை என்ப. பெருமானைக் கூடப் பெறாமையால் ஆன்மா துன்பமிகுந்து இரங்கிக் குயிலிடம் கூறுவதாகத் திருப் பதிகம் அமைந்துள்ளது.

"தூய அருள் குயிலே சோதிளனைக் கூடுதற்கு உன்வாயினால் கூவென முன் வாழ்த்தல் குயிற்பத்தாம்" என்பது திருப்பெருந் துறைப் புராணம் கூறும் திருவாசக உண்மைப் பொருள் ஆகும்.

திருச்சிற்றம்பலம்

1. கீதம் இனிய குயிலே!
கேட்டியேல், எங்கள் பெருமான்
பாதம் இரண்டும் வினவில்
பாதாளம் ஏழினுக்கு அப்பால்;
சோதி மணிமுடி சொல்லில்,
சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதி குணம்ஒன்றும் இல்லான்
அந்தமி லான்வரக் கூவாய்!

2. ஏர்தரும் ஏழுலகு ஏத்த
எவ்வுரு வும்தன் உருவாய்
ஆர்கலி சூழ்தென் னிலங்கை
அழகமர் வண்டோ தரிக்குப்
பேரருள் இன்பம் அளித்த
பெருந்துறை மேய பிரானைச்
சீரிய வாயாற், குயிலே!
தென்பாண்டி நாடனைக் கூவாய்!

3. நீல உருவிற் குயிலே!
நீண்மணி மாடம் நிலாவும்
கோல உருவில் திகழும்
கொடிமங்கை உள்ளுறை கோயில்
சீலம் பெரிதும் இனிய
திருவுத் தரகோச மங்கை
ஞாலம் விளங்க இருந்த
நாயக னைவரக் கூவாய்!

''ஆதி, குணம் இல்லான், அந்தமிலான் தென்பாண்டி நாடன், ஞாலம் விளங்க இருந்த நாயகன், மென்நோக்கி மணாளன், சிந்துரச் சேவடியான், தென்னவன் சேரலன் சோழன் வீரப்புயங்கன் அம்பொனின் மேனி அமுது'' ஆகிய இறைவன் வரக் கூவுமாறு ஆன்மாவாகிய தலைவி வேண்டுகிறாள். அவன் ''அழகிய சேவடி காட்டி, எந்தமர் ஆம் இவன் என்று இங்கு என்னையும் ஆட்கொண்ட பிரான்'' என்று தமக்கும் அவனுக்கும் உள்ள நெருக்கத்தைக் கூறித் தனக்கு மிக இனியன் என்பதையும் கூறுகிறாள் ஆன்மிகத் தலைவி. ○

இனிய இசைபாடும் குயிலே! [யான் கூறுவன் கேட்பாயாக] கேட்பாயாகில் [வருமாறு:] அடியேங்களின் இறைவனது திருவடி இரண்டும் யாண்டு உள என்று வினவினால் அவை கீழ் உலகங்கள் ஏழினுக்கும் அப்பாலன. அவனது ஒளி பொருந்திய முடியைச் சொல்வதாயின் அது சொல்லளவைக் கடந்த பழமை யானது. அவனே யாவற்றுக்கும் முதன்மையானவன்; குணம் எதுவும் இல்லாதவன்; முடிவற்றவன்; அப்பெருமான் இங்கே வருமாறு கூவுவாயாக.

எழுதல் பொருந்திய உலகங்கள் ஏழும் போற்றுமாறு எவ் வுருவமும் தன் உருவமாக உள்ளவன் சிவபெருமான்; கடல் சூழ்ந்த தென்னிலங்கையில் பக்தியாகிய அழகு பொருந்திய வண்டோ தரிக்குப் பேரருள் கொண்டு சிவ இன்பம் அளித்தவன்; திருப் பெருந்துறையில் விரும்பித் தங்கிய ஆண்டவன். தென்பாண்டி நாட்டுக்குச் சிறப்புரிமை உடையவன். அவனை உன் சீரான வாயினால் கூவி அழைப்பாயாக!

நீல நிறம் உடைய குயிலே! உயர்ந்த அழகிய மாடங்கள் விளங்குகின்ற நற்பண்புகளால் மிகவும் இனிதான திருவுத்தர கோச மங்கையாகிய பதியில் உமையம்மை உள்ளே தங்கியருளும் கோயிலில், உலகம் விளங்கும்படி வீற்றிருக்கும் தலைவனை அவன் வருமாறு கூவி அழைப்பாயாக.

4. தேன்பழச் சோலை பயிலும்
சிறுகுயிலே! இது கேள் நீ
வான்பழித் திம்மண் புகுந்து
மனிதரை ஆட்கொண்ட வள்ளல்
ஊன் பழித்(து) உள்ளம் புகுந்தென்
உணர்வது வாய ஒருத்தன்
மான் பழித்து ஆண்டமெல் நோக்கி
மணாளனை நீவரக் கூவாய்!

5. சுந்தரத் தின்பக் குயிலே!
சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின்று இழிந்திங்கு
அடியவர் ஆசை அறுப்பான்
முந்தும் நடுவும் முடிவும்
ஆகிய மூவர் அறியாச்
சிந்துரச் சேவடி யானைச்
சேவக னைவரக் கூவாய்!

6. இன்பம் தருவன் குயிலே
ஏழுல கும்முழுது ஆளி
அன்பன் அமுதளித்து ஊறும்
ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவடு ஒத்த
நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றும் குயிலே !
கோகழி நாதனைக் கூவாய்!

7. உன்னை உகப்பன் குயிலே!
உன்துணைத் தோழியும் ஆவன்
பொன்னை அழித்தநன் மேனிப்
புகழில் திகழும் அழகன்
மன்னன் பரிமிசை வந்த
வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன்
சீர்ப்புயங் கன்வரக் கூவாய்!

தேனும் கனியும் மிகுந்த சோலையில் பழகும் சிறிய குயிலே! இது கேட்பாயாக. விண்ணுலகைப் புறக்கணித்து இம் மண்ணுலகிற்கு வந்து மனிதர்களைக் கருணையால் ஆட்கொண்ட வள்ளலும் உடம்பை ஒதுக்கி என் உள்ளத்துள் புகுந்து அறிவினில் வேறறக் கலந்த ஒப்பற்றவனும் ஆகிய பெருமான் மானின் விழியை வென்ற மெல்லிய விழி உடைய உமையம்மை யின் கொழுநனை இங்கு வருமாறு நீ கூவுவாயாக

இன்பம் தரும் அழகிய குயிலே! கதிர்களால் சூழ்ந்திருக்கப் பெற்ற பகலவனைப் போல வானிலே நிலைத்திருந்து இம் மண்ணுலகில் அடியார்களின் ஆசைக் கயிற்றை அறுக்கும் பொருட்டு இறங்கியருளும், முதல் நடு முடிவு என்ற மூன்று நிலைகட்கு காரணராகிய [ஆக்கல் அளித்தல் அழித்தல் புரிவோரா கிய] மும் மூர்த்திகளும் அறிய மாட்டாச் சிவந்த திருவடிகளை உடைய வீரனாகிய பெருமானை இங்கு வருமாறு நீ கூவுவாயாக.

குயிலே! உனக்கு இனிய பொருள்கள் தருவேன். ஏழ் உலகங்களையும் ஆள்பவனும் உயிர்களுக்கு அன்பு காட்டு பவனும் அமுதம் அளித்து மெய்யன்பர்களுக்கு அவர்களின் உள்ளே ஊறும் பேரின்ப மயமானவனும், வானின்று இறங்கி வந்த விண்ணவனும், நல்ல பொன்னால் செய்து (சேணத்தோடு இணைக்கப் பெற்று காலடி வைத்துக்கொள்ள இருபுறமும் தொங்கும்படி உள்ள) ஒத்த மணிச் சுவடுகள் உடைய நல்ல குதிரைமேல் வருபவனை, கோகழித் தலைவனை, மரக்கிளையி லிருந்து பாடும் குயிலே, வரக்கூவுவாயாக.

குயிலே! உன்னை விரும்புவேன். உனக்கு உயிர்த் துணை யாம் தோழியும் ஆவேன். பொன்னை வென்ற அழகிய மேனி உடையவனும் உண்மைப் புகழால் உயர்ந்து விளங்கும் அழகு உடையவனும் நிலையானவனும் குதிரைமேல் வந்த வள்ளலும், திருப்பெருந்துறையில் விரும்பி அமர்ந்த தென்னவனும் சேரன் சோழனும் சீர்மிகப் பாம்பை அணிந்தவனும் ஆகிய பெருமான் இங்கு வருமாறு நீ கூவுவாயாக!

8. வா இங்கே நீ குயிற் பிள்ளாய்!
மாலொடு நான்முகன் தேடி
ஓவி அவர் உன்னி நிற்ப
ஒண்தழல் விண்பிளந்து ஓங்கி
மேவி அன்று அண்டம் கடந்து
விரிசுட ராய்நின்ற மெய்யன்
தாவி வரும்பரிப் பாகன்
தாழ்சடை யோன்வரக் கூவாய்.

9. காருடைப் பொன்திகழ் மேனிக்
கடிபொழில் வாழுங் குயிலே!
சீருடைச் செங்கம லத்தில்
திகழ்உரு வாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப்
பாசம் அறுத்தெனை ஆண்ட
ஆருடை அம்பொனின் மேனி
அமுதினை நீவரக் கூவுவாய்

10. கொந்தண வும்பொழில் சோலையில்
கூங்குயி லே!இது கேள்நீ!
அந்தணன் ஆகிவந்து இங்கே
அழகிய சேவடி காட்டி
எந்தம ராம்இவன் என்றிங்கு
என்னையும் ஆட்கொண் டருளும்
செந்தழல் போல்திரு மேனித்
தேவர் பிரான்வரக் கூவாய்.

திருச்சிற்றம்பலம்

## பத்தொன்பது

## திருத் தசாங்கம்

நாடாளும் மன்னற்கு உரைக்கப்பட்ட மரபுகள் சில பின்பு உயிராளும் இறைவற்கு உரியனவாக ஏற்கப்பட்டன. தசாங்கம் திருப்பள்ளியெழுச்சி போல்வன அவை. பின்னாளில் நாட்டுக்கும் உரியவாகப் பாடப்பட்டன. பெயர் ஊர் நாடு ஆறு மலை குதிரை படை பறை மாலை கொடி என்ற பத்து உறுப்புக்கள் தசஅங்கம் ஆகும். அவற்றோடு இறைவன் தோன்றித்

குயிற் பிள்ளையே! நீ இவ்விடம் வருவாயாக, திருமாலும் பிரமனும் தேடி முடியாமல், தேடும் தொழில் ஒழிந்து அதை நினைந்து நிற்க, ஒள்ளிய நெருப்புப் பிழம்பாக வானைப் பிளந்து உயர்ந்து அப்பொழுது உலகங்களை எல்லாம் கடந்து பரந்த ஒளி வடிவாகி நின்ற மெய்ப்பொருளாம் இறைவன், பாய்ந்து வரும் குதிரை மேல் அமர்ந்தோன், நீண்ட சடையுடையவன் ஆகிய சிவபெருமான் இங்கு வருமாறு கூவுவாயாக.

மணம் பொருந்திய சோலையில் வாழும் கரிய நிறம் உடைய அழகு விளங்கும் மேனியுள்ள குயிலே! சிறப்புடைய செந்தாமரை நிறம் விளங்கும் முத்திச் செல்வனாகிய பெருமான் மண்ணுலகில் தன் திருவடிக் காட்சி தந்து கட்டுகளை அறுத்து என்னை ஆண்டு கொண்ட, ஆத்தி மாலை அணிந்த. அழகிய பொன்போலும் மேனியுடைய அமுத வடிவினனை இங்கு வருமாறு நீ கூவுவாயாக.

பூங்கொத்துக்கள் நிறைந்த பெரிய சோலையிலே கூவும் குயிலே! இது கேட்பாயாக. அழகிய குளிர்ந்த அறவோனாக வந்து இந் நிலவுலகில் தன் அழகிய சிவந்த திருவடிகளைக் காட்டியருளி, இவன் எம் அடியாருள் ஒருவனாகும் என்று இவ்விடத்து ஆட்கொண்டருளும் சிவந்த நெருப்புப் போன்ற அழகிய மேனியை உடையவன் தேவர்களின் தலைவன் ஆகிய பெருமான் இங்கு வரக் கூவுவாயாக.

○

தம்மை ஆட்கொண்டதாக இறைவன் புகழைப் பாடும் இத் திருப் பதிகம் தில்லையில் அருளப்பெற்றது. வெண்பா யாப்பில் அமைந்தது.

முன்னர்க் கீர்த்தித் திருவகவலிலும் இறைவனின் தசாங்கம் சுருக்கமாக இசைக்கப் பெற்றது.

"அடிமை கொண்ட முறைமை, அதாவது பத்து அடையாளத்தான் ஆண்டது. பத்துவகையான் அடிமை கொண்டது" இதன் உட்கிடை என்ப. 'பேர் ஊர் நாடு மலை பேணூர்தி படைமுரசு தார்கொடி எலாம்அரற்குச் சாற்றல் தசாங்க மதாம்' என்பது இதன் மையக் கருத்தென திருவாசக உண்மை தெரிவிக்கிறது.

திருச்சிற்றம்பலம்

### 1. பெயர்

ஏரார் இளங்கிளியே! எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று

### 2. நாடு

ஏதம்இலா இன்சொல் மரகதமே ஏழ்பொழிற்கும்
நாதன் நமை ஆளுடையான் நாடுரையாய்—காதலர்க்கு
அன்பு ஆண்டு மீளா அருள்புரிவான் நாடு என்றும்
தென்பாண்டி நாடே தெளி.

### 3. ஊர்

தாதாடு பூஞ்சோலைத் தத்தாய்! நமையாளும்
மாதாடு பாகத்தான் வாழ்பதி என்? கோதாட்டிப்
பத்தரெலாம் பார்மேல் சிவபுரம் போல் கொண்டாடும்.
உத்தர கோசமங்கை ஊர்

### 4 ஆறு

செய்யவாய்ப் பைஞ்சிறகில் செல்வீ! நம் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையான் ஆறுஉரையாய்-தையலாய்!
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தம் காண்உடையான் ஆறு.

வினாவிடையாகக் கிளியை முன்னிலைப்படுத்தி பாடப் பெறுதலின் கிளியை அழைப்பது கவிநயம் சால அமைகிறது. 'ஏர்ஆர் இளங்கிளியே, இன்சொல் மரகதமே, தாதாடு பூஞ் சோலைத் தத்தாய்'போல இனிமை ததும்ப விளிஇலங்க, தசாங்க வருணனை பெருமிதம் பொலிய விளங்குகிறது.

''ஆனந்தம் காண்உடையான் ஆறு; முத்தி அருளுமலை என்பது காண்; வான்புரவி ஊரும் மகிழ்ந்து; பிறவிப் பகை கலங்கப் பேரின்பத்து ஓங்கும் பருமிக்க நாதப்பறை; கோதுஇலா ஏறாங்கொடி.''என்பன கருதற்கு உரியனவாம்உயர்ந்தஉருவகங்கள்

○

அழகு பொருந்திய இளங்கிளியே! எங்கள் இறைவன் தேவர்க்குத் தலைவன் திருவாரூரில் எழுந்தருளியுள்ளவன், சிவந்த திருமேனி உடைய பெருமான் என்று தாமரை மலர் மேல் இருக்கும் பிரமனும் பாற்கடல்மேல் பள்ளி கொண்டுள்ள திருமாலும் புகழ்ந்து உரைப்பது போல எங்கள் திருப்பெருந் துறை மன்னவனின் சிறப்புள்ள திருப்பெயரைத் தெளிந்து செப்புவாயாக.

குற்றம் இல்லாத இனிய மொழி பேசும் பச்சை மணி போன்ற கிளியே! ஏழ் ஆகிய உலகங்களுக்கும் தலைவன், நம்மை ஆளாக உடையவன், அவனது நாட்டினைப் புகழ்ந்து கூறுவாயாக. தன்பால் அன்புள்ளவர்களை அன்பால் ஆட் கொண்டருளி, மீண்டும் பிறவாதிருக்க அருள் செய்பவனது நாடு, எக்காலத்தும் தென்பாண்டி நாடேயாம். இதனைத் தெளிவாயாக.

பூந்துகள் பரந்த மலர்ச் சோலைக்கண் உறையும் கிள்ளை யே! அடியேமை ஆட்கொண்டருள்கின்ற, உமையம்மை சேர்ந் திருக்கும் கூற்றினை உடைய] பெருமான் வாழ்கின்ற ஊர் எது என விளம்புவாயாக. அது,பாராட்டி அன்பரெல்லாம் நிலவுலகில் உள்ள சிவநகர் ஆகக் கொண்டாடுகின்ற திருவுத்தர கோச மங்கையாகிய ஊராகும்.

சிவந்த வாயும் பசுமையான சிறகும் உடைய செல்வக் கிளியே! நம் நெஞ்சில் இருக்கும் இறைவன் திருப்பெருந்துறை உடையானது ஆற்றினைப் புழ்ந்து சொல்வாயாக! பெண்ணே! மிக உயர்ந்த சிந்தையில் உள்ள [ஆணவம் கன்மம் மாயை என்ற] மூன்று அழுக்கு நீங்கப்பெற அவ்வளவில் அதில் வந்து பாயும் பேரின்பப் பெருக்கே நம்மை எல்லாம் உடையவனின் ஆறு ஆகும்.

5. மலை

கிஞ்சுகவாய் அஞ்சுகமே! கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவும் மலைபகராய் - நெஞ்சத்து
இருள்அகல வாள்வீசி இன்பு அமரும் முத்தி
அருளுமலை என்பதுகாண் ஆய்ந்து.

6. புரவி

இப்பாடே வந்தியம்பு, கூடுபுகல், என்கிளியே
ஒப்பாடாச் சீருடையான் ஊர்வது என்னே - எப்போதும்
தேன்புரையும் சிந்தையராய்த் தெய்வப்பெண் ஏத்
திசைப்ப
வான்புரவி ஊரும் மகிழ்ந்து.

7. படை

கோல்தேன் மொழிக்கிள்ளாய்! கோதில் பெருந்
துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய் - ஏற்றார்
அழுக்கு அடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்
கழுக்கடை காண் கைக்கொள் படை.

8. பறை

இன்பால் மொழிக்கிள்ளாய்! எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பால் முழங்கும் முரசுஇயம்பாய் - அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத்து ஓங்கும்
பருமிக்க நாதப் பறை.

9. மாலை

ஆய மொழிக்கிள்ளாய்! அள்ளூறும் அன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தார் என்? — தீயவினை
நாளும்அணு காவண்ணம் நாயேனை ஆளுடையான்
தாளிஅறு காம்உவந்த தார்.

10. கொடி

சோலைப் பசுங்கிளியே, தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியும் கொடி கூறாய் - சாலவும்
ஏதிலார் 'துண்' என்ன மேல்விளங்கி ஏர்காட்டு
கோதிலா ஏறாங் கொடி.

திருச்சிற்றம்பலம்

முள்முருக்கம் பூப் போலும் சிவந்த வாயினை யுடைய அழகிய கிளியே! அழிவில்லாத திருப்பெருந்துறைக் கண் எழுந் தருளிய இறைவன் அழகன் சேரும் மலையினை ஆய்ந்து கூறுவாயாக. அடியார் தம் உள்ளத்தின் இருள் விலகுமாறு ஒளி வீசி இன்பத்தில் நிலைத்திருக்குமாறு வீடுபேற்றை அளிக்க வல்ல மலை தான் அவனது மலையாகும்.

எனது கிள்ளையே! கூட்டினுள் புகுந்து விடாதே! இவ் விடத்தே வந்து ஒப்பற்ற சிறப்புடையவனாகிய பெருமான் ஏறி வரும் ஊர்தி யாது என்று கூறுவாயாக. அது, எக்காலத்தும் தேன் போன்ற இனிய நெஞ்சம் உடையராக, தெய்வத்தன்மை கொண்ட பெண்கள் போற்றி இசை பாட அவன் மகிழ்ந்து வானப் புரவியில் ஏறி வருவான்.

கொம்புத் தேன் போலும் இனிய மொழி பேசும்கிள்ளையே! குற்றம் இல்லாத் திருப்பெருந்துறை இறைவன் பகைவர் வெற்றி கொள்ளும் படையினைக் கூறுவாயாக. அது, தன்னைக் குறை யிரந்து கொண்ட அன்பரை மாசு பற்றாது அவர்களின் நெஞ்சம் உருக, மும்மலங்களின் மேல் பாய்ந்து அழிக்கின்ற சூலப்படையே அவன் கைக்கொள்ளும் படையாம்.

இனிய பால் போலும் சொற்களைப் பேசும் கிள்ளையே! எங்கள் பெருந்துறைப் பெருமான் திருமுன்பு முழங்கும் முரசு யாது என்று இயம்புவாயாக. அது அவனது பேரன்பினால் பிறவியாகிய பகை நடுங்குமாறு பேரின்பத்தில் திளைத்து ஓங்கச் செய்யும் நாதத் தத்துவமான மிகப் பருத்த பறை அவனுக்கு உரியது ஆகும்.

ஆய்வான சொற்களைப் பேசும் கிளியே! உள்ளம் உருகும் அன்பரிடத்து விரும்பிப் பொருந்துகின்ற திருப்பெருந்துறைப் பெருமான் திருமேனியில் அணியப் பெற்றுள்ள தார் எது எனச் சொல்வாயா? கொடிய வினைப்பயன்கள் நாய் அனைய இழிந்த என்னை அடையாவாறு நாளும் என்னை ஆளாக உடையவன், விரும்பி அணிவது கொடி அறுகு மாலை ஆகும்.

சோலையில் உறையும் பசிய கிளியே! நன்னீர் வளம் மிக்க பெருந்துறையின் கோமான் ஆகிய இறைவனின் அழகு விளங்கும் கொடி யாது'' என உரைப்பாயாக. அது, பகைவர் திடுக்கிட்டு நடுங்குமாறு உயரத்தில் விளங்கி அழகு திகழ இருக்கும் குற்றமிலா எருது எழுதப் பெற்ற கொடியாகும். ○

## இருபது
# திருப்பள்ளியெழுச்சி

''எம்பெருமான் பள்ளிஎழுந்தருளாயே; அலைகடலே, ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே'' என்று பத்து ஆசிரிய விருத்தங்களால் இறைவனைத் துயில் எழுப்புகிற முறையில் அவன் புகழ் பாடும் இத்திருப்பதிகம், அடிகளால் திருப்பெருந்துறையில் அருளப்பெற்றதாகும்.

'போற்றி! என் வாழ்முதல் ஆகிய பொருளே!' என்ற தொடக்கமே பெருமிதமாக உள்ளது. விடியலின் இயற்கைக் காட்சி, அடியார்களின் அன்புச் செய்கைகள் இதில் மிக அழகாக இயைபு பெற்றுள்ளன.

பாடல் ஒவ்வொன்றும் அதில் அடிகள் ஒவ்வொன்றும் சொற்கள் ஒவ்வொன்றும் சுவை மலிந்து பண்பும் பயனும் மிக்கதாக, பெருமானை உள்நினைந்து ஓதும் வீடுகளில் எல்லாம் ஓதப்பட்டு வந்த திருப்பதிகம் இதுவாகும். 'அதுபழச் சுவைஎன

திருச்சிற்றம்பலம்

1. போற்றி!என் வாழ்முதல் ஆகிய பொருளே!
புலர்ந்தது பூங்கழற்கு இணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத்து எமக்கருள் மலரும்
எழில்நகை கண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறைஉறை சிவபெருமானே
ஏற்றுயர் கொடியுடை யாய்எமை உடையாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே!

2. அருணன்இந் திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நயனக்
கடிமலர் மலரமற்று அண்ணல்அம் கண்ணாம்
திரள்நிரை அறுபதம் முரல்வன இவைஓர்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே!
அலைகடலே! பள்ளி எழுந்தருளாயே!

அமுதென, அரிதென எளிதென' என்ற இறைமை இலக்கணங்கள் இத் திருப்பதிகத்திற்கும் பொருந்தி, ஓதஓத நெஞ்சிற் பதிந்து ஆன்ம உணர்வு விழிப்புறச் செய்யுமாறு இருப்பது தமிழ் செய்த தவப்பேறு எனல் வேண்டும். ''திரோதான சுத்தி; அதாவது மறைப்பான மலத்தை நீக்கல்'' இதன் உட்கிடை என்றனர் முன்னையோர்.

'' ஏர்மருவு திருப்பள்ளி எழுச்சிபணி விடைகேட்டு
ஆர்வமுடன் ஆண்ட அரற்கு அன்புசெயும் இயல்பே''

என்பது இதன் மையக்கருத்து எனத் திருவாசக உண்மை செப்பும்.

துயிலெடை நிலையாக மன்னற்குப் பாணர்கள் சூதர்கள் விடியலில் அவன் பீடும் பெருமையும் கூறிப் பாடி அவனை அன்றன்று குன்றாக் கிளர்ச்சியுடன் இருக்கச் செய்வர். துயிலெடை நிலை திருப்பள்ளி எழுச்சியாகி இறைவனை மாந்தர் எழுப்புவதாகப் பாடும் பெரிய மாற்றம் ஆன்மிக வளர்ச்சியின் கூர்தலைக் காட்டுகிறது. இறைவனைத் துயிலெழச் செய்வதாகப் பாடுவோர் மறைப்பு நீங்கித் தாமட்டுமன்றி வாழையடி வாழை எனத் திருவருட்பேற்றுக்கு உரியராக மாந்தர் அனைவரையும் மாறச் செய்கின்றனர் அடிகள். ○

என் வாழ்க்கைக்கு மூலப் பொருளாக உள்ள இறைவனே! வணக்கம். பொழுது விடிந்தது. உன் அழகிய திருவடிகளுக்குப் பொருந்த, தமக்குத் தாமே ஒப்பாகிய மலர்களைக் கொண்டு தூவி, உன் திருமுகத்தில் எமக்கு அருள்புரிகின்ற அழகிய புன்னகையைப் பெற்று உன் திருவடிகளை வணங்குவோம்.

சேற்றினிடத்து இதழ்களோடு கூடிய தாமரைகள் மலர்கின்ற குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் என்றும் வீற்றிருக்கும் சிவபெருமானே! எருது எழுதப் பெற்ற உயர்ந்த கொடியை உடையவனே! எம் இறைவனே! துயில் நீங்கித் திருப்பள்ளியினின்றும் எழுந்தருள்வாயாக!

கதிரவனின் தேர்ப்பாகனாகிய அருணன் இந்திரன் திசையாகிய கீழ்த்திசையை அடைந்தான். இருள் நீங்கி விடியல் பரந்தது. தாமரை மலர் போன்ற அழகிய முகத்தின் அருள் போலக் கதிரவன் எழுந்துவரக், கண்கள் போன்ற மணம் பொருந்திய தாமரை மலர்கள் மலர, பெருந்தகையே! அழகிய இடங்களில் கூட்டமாக வரிசையான வண்டுகள் மொய்யொலி செய்கின்றன. இவற்றைத் திருவுளம் கொள்வாயாக! எழுந்தருளித் திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே! அருளாகிய செல்வத்தை வழங்க வரும் பேரின்ப மலையானவனே! இன்ப அலை வீசும் கடலே !துயில் விட்டு எழுந்தருள்வாயாக!

3. கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளிஒளி உதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவ!நற் செறிகழல் தாள்இணை காட்டாய்!
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!
யாவரும் அறிவரி யாய்!எமக்கு எளியாய்!
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

4. இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே!
என்னையும் ஆண்டு கொண்டு இன்னருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே!

5. பூதங்கள் தோறும்நின் றாய்எனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா!
சிந்தனைக்கும் அரியாய் எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்தெம்மை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே!

6. பப்பர வீட்டிருந்து உணரும்நின் அடியார்
பந்தனை வந்தறுத் தார்அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றார்ஆரணங் கின்மண வாளா!
செப்புறு கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!
இப்பிறப்பு அறுத்துஎமை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தருளாயே!

அழகிய குயில்கள் கூவின. பறவை இனங்கள் யாவும் ஒலி எழுப்பின. சங்குகள் முழங்கின. விண்மீன்கள் ஒளிநீங்கின. விடியலின் ஒளி ஒருப்பட்டு எழுகின்றது. தேவனே! எமக்கு விருப் பத்தோடு நல்ல கழல் செறிந்த உன் திருவடித் துணையைக் காட்டியருள்வாயாக! திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவ பெருமானே! யாவரானும் அறிதற்கு அரியவனே! ஆயினும் அடி யோமாகிய எங்களுக்கு எளிவந்தருள்பவனே! எம்பெருமானே! துயில் உணர்ந்து எழுந்தருள்வாயாக!

புலரிக் காலத்து வழிபாட்டுக்காக இனிய இசை பயிலும் வீணை ஏந்தியவர்களும் யாழ் ஏந்தியவர்களும் ஒரு பக்கம் அவற்றை இசைத்தவாறு இருக்கிறார்கள். இருக்காகிய மறை யினை ஓதுவோரும் போற்றிப் பாக்கள் பாடுவோரும் ஒரு பக்கம் இருக்கிறார்கள். நெருக்கமான மலர்களைக் கட்டிய மாலைகளைக் கைகளில் ஏந்தியவர்கள் ஒரு பக்கம் உள்ளார்கள். தொழுவோரும் அழுவோரும் துவள்வோருமாக அன்பு செலுத்து வோர் ஒரு பக்கம் இருக்கிறார்கள். தலை மேல் அஞ்சலியாகக் கைகுவித்தவர்கள் ஒரு பக்கம் நிறைந்து நின்றார்கள். திருப் பெருந்துறைக்கண் வீற்றிருக்கும் சிவபெருமானே! சிறியேனை யும் ஆட்கொண்டு இனிய அருள் புரிகின்ற எங்கள் தலைவனே! துயில் விட்டு எழுந்தருள்வாயாக!

நீ ஐம்பூதங்களிலும் நிலைத்திருக்கிறாய் என்று உரைத்தல் அல்லது 'போதல் இல்லாதவன், வருதல் இல்லாதவன்' என்று கூறி உன்னை இசைப் பாக்களால் வல்லோர் பாடுதலும் ஆடு தலும் தவிர உன்னைக் கண்டறிவோரைக் கேட்டறிந்திலேம். குளிர்ச்சி பொருந்திய வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் நிலையாக இருப்போனே! நினைப்பிற்கும் எட்டாத அரும் பொருள் ஆனவனே! எங்கள் கண்களுக்கு எதிரில் எழுந்தருளி எங்கள் குற்றம் கடிந்து எம்மை ஆண்டு அருள்புரியும் எங்கள் தலைவனே! பள்ளி எழுந்தருள்வாயாக!

மனத்திற்குள் பரபரப்பு ஒழிய, கட்டுகள் விடுபட்டு இருந்து மெய்யுணர்தல் வல்ல உன் அடியார் பலரும் உன்முன் வந்து தத்தம் பிறவிப் பிணியை அறுத்தொழித்தார்கள். மைதீற்றிய விழியுடைய மகளிர் மானுட இயல்பில் உன்னை வணங்கு கின்றார்கள். உமையம்மையின் மணவாளா! கிண்ணங்கள் போலத் தாமரை மலர்ந்திருக்கும் குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருப் பெருந் துறையில் மன்னியிருக்கும் சிவபெருமானே! இந்தப் பிறவியின் கட்டுகளை நீக்கி எங்களை ஆண்டு அருள் புரியும் எங்கள் பெரு மானே! துயில் நீங்கிப் பள்ளி எழுந்தருள்வாயாக!

7. அதுபழச் சுவைஎன அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவன்அவன் எனவே
எங்களை ஆண்டுகொண்டு இங்கெழுந்து அருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா!
எதுஎமைப் பணிகொளும் ஆறு அது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

8. முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்
மூவரும் அறிகிலர் யாவர்மற்று அறிவார்?
பந்தணை விரலியும் நீயும்நின் அடியார்
பழங்குடில் தொறும்எழுந் தருளிய பரனே!
செந்தழல் புரைதிரு மேனியும் காட்டித்
திருப்பெருந் துறை உறை கோயிலும் காட்டி
அந்தணன் ஆவதும் காட்டிவந்து ஆண்டாய்
ஆரமு தே!பள்ளி எழுந்தருளாயே!

9. விண்ணகத் தேவரும் நண்ணவும் மாட்டா
விழுப்பொரு ளேஉனது தொழுப்பு அடியோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய்தானே
வண்திருப் பெருந்துறை யாய்! வழி அடியோம்!
கண்ணகத் தேநின்று களிதரு தேனே!
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாய்உல குக்குயிர் ஆனாய்!
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

சிவ இன்பமானது பழத்தின் சுவையாக இனிப்பது அமுதாக நிலையின்பம் அளிப்பது எனவும் சிவப்பரம் பொரு ளானது தமக்குச் சாண்பதற்கு அரியது, அடியார்க்கு எளியது என வானவரும் அறிய மாட்டார்கள். அவ்வாறிருக்க, இது அவன் திருவுருவம், இங்கே காட்சி தருபவனே அச் சிவப்பொரு ளாம் பெருமான் என்று நாங்கள் கண்டு சொல்லும்படி காட்சி தந்து எங்களை ஆட்கொண்டு இங்கு எம் கண்முன் எழுந்தரு ளும் திருப்பெருந்துறை மன்னவனே!

தேன் வளரும் சோலை சூழ்ந்த திருவுத்தர கோச மங்கை யில் வீற்றிருப்பவனே! எங்களை ஏவல் கொள்ளும் முறை யாது? அதைக் கேட்டு அவ்வாறே நடப்போம் எம்பெருமானே! துயில் நீங்கி எழுந்தருள்வாயாக!

முற்பட்ட யாவற்றினும் முதலாக நடுவாக முடிவாக ஆக்கல் காத்தல் அழிப்பவன் ஆக விளங்குவோனே! மும்மூர்த்தி களும் உன்னை அறியவல்லார் அல்லர். அவ்வாறு இருக்க வேறு யாவர் தாம் உன்னை அறிகுவார்? பூப் பந்து போன்ற விரலினை உடைய உமையம்மையும் நீயுமாக உன் அடியாரது பழங் குடிசை கள் தோறும் அவர்களின்பொருட்டு எழுந்தருளிய மேலானவனே!

சிவந்த நெருப்புப் போன்ற திருமேனியனாய்க் காட்சி தந்து திருப்பெருந்துறையில் நீ உறையும் கோயிலும் காட்டிக் குளிர்ந்த அறவோன் ஆக இருப்பதும் காட்டி வந்து ஆண்டு கொண்டாய், நிறைந்த அமுதம் ஆனவனே! துயில் உணர்ந்து எழுந்தருள் வாயாக!

வானுலகத்துத் தேவர்களும் அணுகவும் முடியாத மேன்மையான பொருளே! உன் தொண்டினைச் செய்து வரும் அடியார்களாகிய எங்கள் பொருட்டு இம் மண்ணுலகத்தில் எழுந்தருளி வந்து நாங்கள் உய்யுமாறு செய்தவனே!

வளம் மிக்க திருப்பெருந்துறையில் வீற்றிருப்போனே! உனக்கு வழிவழித் தொண்டராகிய எங்கள் கண்ணகத்தே நின்று களிப்பைத் தருகின்ற தேன்போல்பவனே! பாற்கடலில் தோன்றிய அமுதம் அனையானே! கரும்பின் சுவையாய் இனிப்போனே! வேண்டும் அடியாரது உள்ளத்துள் இருப்பவனே! உலகு அனைத் துக்கும் உயிராக உள்ளோனே! எம் இறைவா! பள்ளி எழுந்தருள் வாயாக!

10. புவனியில் போய்ப்பிற வாமையில்நாள் நாம்
போக்கு கின்றோம் அவ மேஇந்தப் பூமி
சிவன் உய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய் திருமாலாம்
அவன் விருப் பெய்தவும் அலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்துஎமை ஆட்கொள்ள வல்லாய்!
ஆர்அமு தே! பள்ளி எழுந்தரு ளாயே!

திருச்சிற்றம்பலம்

## இருபத்தொன்று

## கோயில் மூத்த திருப்பதிகம்

கோயில் என்பது சைவ உலகில் தில்லைத் திருக்கோயில் ஆகும். கோயில் திருப்பதிகம் என்று அடுத்துவரும் திருப்பதி கத்துக்கு முந்தியது இது என்பதால் மூத்த திருப்பதிகம் என்று பெயர் பெற்றிருத்தல் கூடும். தில்லையில் அடிகள் அருளிய இதில் ஆசிரிய விருத்தம் பத்து முடிமுதல் தொடையாக 'உடையாள்' என்று தொடங்கி 'உடையானே' என்று நிறைவு பெறுகின்றன. ''பொன்னம்பலம்'' பத்துப்பாக்களிலும் அமைந்து ஒளிர்கின்றது.

தம் நெடுநாளைய விருப்பம் ஒன்று நிறைவேற இறைவனை அடிகள் முதல் திருப்பாட்டில் வேண்டுகிறார். ''உடையவளாகிய அன்னை உன்னுள் இருக்கிறாள், உடையவனாகிய நீ அவளுள் இருக்கிறாய். நீவிர் இருவீரும் அடியேனுள் இருப்பது உண்மை யாயின் அடியேன் உன் அடியார் நடுவுள் இருப்பதாகிய வரத்தை அருளவேண்டும்'' என்பதே அவரது விருப்பம்.

திருச்சிற்றம்பலம்

1. உடையாள் உன்தன் நடுவிருக்கும்,
உடையாள் நடுவுள் நீஇருத்தி,
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும்அரு
ளைப்புரி யாய்பொன்னம்பலத்துஎம்
முடியா முதலே! என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே!

திருப் பெருந் துறையில் எழுந்தருளியிருக்கும் இறைவா! ''நிலவுலகிற் போய்ப் பிறவாமையினால் நாம் நாள் எல்லாம் வறிதே போக்குகின்றோம்; இந்தப் புவியானது சிவபெருமான் உயிர்களை ஆட் கொண்டு உய்யுமாறு செய்கின்ற தன்மையில் உள்ளதாகும்'' என்று எண்ணித் திருமால் விருப்பம் கொள்ளவும் மலர் மேல் உள்ள பிரமன் ஆசை கொள்ளவும் நீயும் உன் விரிந்த அழிவிலாப் பேரருளும் உலகிற்கு வந்து எம்மை எல்லாம் ஆட்கொள்ள வல்லவனே! நிறைந்த அமுதம் போல்பவனே! துயில் உணர்ந்து எழுந்தருள்வாயாக!

○

இரவுபகல் தாம் இரைதேர் கொக்குப் போல ஏசற்று வேசற்றதை (வருந்தி வாடியதை)ப் புலப்படுத்தி ''ஒல்கா நிற்கும் உயிர்க்கு இரங்கி அருளாய் என்னை உடையானே'' என்று வேண்டுவது அடிகளின் இறைக்காதல் உறைப்பினைக் காட்டு கிறது. ''அனாதியாகிய சற்காரியம் சிவனாந்தத் திகைப்பு'' இப் பதிகத்தின் உட்கிடை என்ப.

'கோயில் மூத்த திருப்பதிகம் சிதம்பரத்தில் அருள்அமையும் குறிப்பதாகும்'' என்று திருவாசக உண்மை கூறும் பழைய திருப் பெருந்துறைப் புராணங் காட்டும் மையக் கருத்து. திருச்சிற்றம் பலம் என்பது முற்பட்ட நுண்மொழி; சிதம்பரம் என்பது பிற் பட்ட வழக்கு என்பது கருதத்தக்கது.

○

பொன்னம்பலத்தில் எழுந்தருளியுள்ள முடிவிலா முதற் பொருளே! எல்லாம் உடையவளாகிய இறைவி உன்னுள் இருக் கிறாள். உடையவளாகிய இறைவியினுள் நீ இருக்கிறாய்" நீங்கள் இருவரும் அடியேனுள் இருக்கிற காரணத்தால் அடியேன் உன் அடியாரிடை இருத்தலாகிய பேரின்பம் எய்தும் என் எண்ணம் நிறைவேறுமாறு [திருக்காட்சி தந்து] அருள்வாயாக.

2 முன்நின்று ஆண்டாய் எனைமுன்னும்,
யானும் அதுவே முயல்வுற்றுப்
பின்நின்று ஏவல் செய்கிறேன்,
பிற்பட்டு ஒழிந்தேன், பெம்மானே !
'என்?' என்று அருள்இ வரநின்று
'போந்திடு!' என்னா விடில் அடியார்
உன் நின்று 'இவன்ஆர்?' என்னாரோ?
பொன்னம் பலக்கூத்து உகந்தானே !

3. உகந்தானே அன்புடை அடிமைக்கு!
உருகா உள்ளத்து உணர்விலியேன்
சகம்தான் அறிய முறையிட்டால்
'தக்க வாறுஅன்று' என்னாரோ?
மகம்தான் செய்து வழிவந்தார்
வாழ வாழ்ந்தாய் அடியேற்குஉன்
முகம்தான் தாரா விடில்முடிவேன்
பொன்னம் பலத்துஎம் முழுமுதலே!

4. முழுமுத லே!ஐம் புலனுக்கும்
மூவர்க்கும் என்த னக்கும்
வழிமுத லே!நின் பழஅடியார்
திரள் வான் குழுமிக்
கெழுமுத லே! அருள் தந்திருக்க
இரங்கும் கொல் லோஎன்று
அழும்அது வேஅன்றி மற்றுஎன்
செய்கேன்? பொன்னம் பலத்தரைசே!

5. ''அரைசே! பொன்னம் பலத்தாடும்
அமுதே!'' என்றுஉன் அருள்நோக்கி
இரைதேர் கொக்குஒத் திரவுபகல்
ஏசற்று இருந்தே வேசற்றேன்
கரைசேர் அடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் அடியேன்பால்
பிரைசேர் பாலின் நெய்போலப்
பேசாது இருந்தால் ஏசாரோ?

பொன்னம்பலம் ஆகிய நுண்ணிய பரவெளியில் ஆடுதலை விரும்பிக் கொண்டவனே! உனக்கு அடிமையாகும் முதிர்வு அடியேற்கு வரும் முன்பே திருவடிக் காட்சி தந்து ஆட்கொண்டாய். அடியேன் உன் அடிமையாதற்கு முயன்று பின் தொண்டு செய்யா நின்றேன்; ஆனால் அவ்வாறு செய்தலில் பின்னிட்டுக் கெட்டேன் பெருமானே! எளியேன் மூன் தோன்றி அருள் மீக்கூர நின்று. 'வருக!' என்று நீ அருள் புரியாவிடில் உன் அருகில் நிற்கும் மெய்யடியார் 'இவன் யார்?, என்று கேட்கமாட்டார்களா?

பொன்னம்பலத்தில் திகழும் எங்கள் முழுமுதற் பொருளே! அன்பு பொருந்திய அடிமைத் திறத்தை விரும்பி ஏற்றுக் கொண்டவனே! உருகாத உள்ளம் உடைய, மெய்யுணர்வு சிறிதும் இல்லாதவனாகிய அடியேன் உலகம் அறியும் படி முறையிட்டுக் கொண்டால் பெருமானாகிய உனக்கு இது தகாது என்று கூற மாட்டார்களா? வேள்வி செய்து நல்வழி வந்தோர் வாழ வாழ்ந்தோயே! அடியேனுக்கு உன் திருமுகம் காட்டாவிடில் இறந்துபடுவேன்.

பொன்னம்பலம் ஆகிய அழகிய உயர்வெளியில் திருநடம் செய்யும் தலைவனே! எல்லாவற்றுக்கும் முழுமுதற் பொருளாக உள்ளவனே! ஐம்புலன்களாகிய அறிவுக்கும் மூன்று அந்தக் கரணங்களுக்கும் அடியேனுக்கும் நிமித்தகாரணமான பொருளே! உன் பழைய அடியார் கூட்டம் அறிவாகிய வானில் கூடியிருக்க ஆங்குப் பொருந்தும் முதற்பொருளே! அருள் புரிந்து, அடியேன் சிவபோகத்து இருக்க, நீ இரங்குவையோ என்று அழுதல் ஆகிய செயலன்றி வேறு என்ன எளியேன் செய்தல் கூடும்?

"இறைவா! அழகிய அம்பலத்தில் ஆடும் அமுதம் போல் பவனே!" என்று போற்றி உன் அருள் கிடைக்கும் என்று எதிர் பார்த்து, இரையை நாடி நிற்கும் கொக்குப் போன்று இரவும் பகலும் ஆக அடியேன் வருந்தி வாடினேன். வீடுபேறாகிய கரையினை அடைந்த உன் மெய்யடியார் சிவப்பேரின்பம் கூர்ந்திருக்க அவர்கட்குக் காட்சி தந்தருளி, உன் அடியேன் ஆகிய சிறியேனிடத்தில் பிரை தோய்ந்த பாலின்கண் உள்ள நெய் போல மறைந்திருந்தால் உலகத்தார் இகழ்ந்துரைக்க மாட்டாரா?

6. ஏசா நிற்பர் என்னை உனக்கு
அடியான் என்று பிறர்எல்லாம்
பேசா நிற்பர் யான்தானும்
பேணா நிற்பேன் நின் அருளே;
தேசா! நேசர் சூழ்ந்திருக்கும்
திருவோ லக்கம் சேவிக்க
ஈசா! பொன்னம் பலத்து ஆடும்
எந்தாய்! இனித்தான் இரங்காயோ?

7. இரங்கும் நமக்கு அம் பலக்கூத்தன்
என்றென்று ஏமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்து ஆண்டாய்;
ஆள்வார் இலிமாடு ஆவேனோ
நெருங்கும் அடியார் களும் நீயும்
நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வர எங்கள்
வாழ்வே! 'வா'என்று அருளாயே!

8. அருளாது ஒழிந்தால் அடியேனை
'அஞ்சேல்' என்பார் ஆர்?இங்குப்
பொருளா என்னைப் புகுந்துஆண்ட
பொன்னே! பொன்னம் பலக்கூத்தா!
மருளார் மனத்தோடு உனைப்பிரிந்து
வருந்து வேனை 'வா'என்று உன்
தெருள்ஆர் கூட்டம் காட்டாயேல்
செத்தே போனால் சிரியாரோ?

9. சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்
திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார்
வெவ்வேறு இருந்துஉன் திருநாமம்
தரிப்பார் ''பொன்னம் பலத்துஆடும்
தலைவா!'' என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனே?
நம்பீ! இனித்தான் நல்காயே?

ஒளி வடிவாகத் திகழ்பவனே! ஆண்டவனே! எந்தையே! [அடியேன் அன்பிலாதவன் என்று] என்னை அன்பர்கள் பழிப் பார்கள்; மற்றவர்கள் எளியேனாகிய நான் உனக்கு அடியவன் என்று பேசுவார்கள் அடியேனும் உன் அருளையே விரும்பி நிற்கிறேன். மெய்யன்பர் சூழ்ந்திருக்கும் உன் திருவீற்றிருக்கை யினை [கொலு விருத்தலைச்] சிறியேனும் பார்த்து வணங்குதற்கு இனியாகிலும் இரங்கியருள மாட்டாயா?

பொதுமன்றில் ஆடும் கூத்தப் பெருமான் நமக்கு இரங்கி அருள்புரிவான் என்று பலவாறாக மகிழ்ந்திருப்பவன் ஆகிய அடி னுக்கு உனக்கு ஆட்படும் தன்மை வருமுன்பே அடியேனை ஆட் கொள்ளுதலாகிய கிடைத்தற்கரிய ஏற்பாட்டைச் செய்து ஆட் கொண்டாய். இப்போது அடியேன், உரிமையாளன் இல்லாத (பட்டி) மாடுபோல் ஆகிவிடுவேனோ? எங்கள் வாழ்வின் மூல காரணமே! நீயும் உன் மெய்யடியாரும் நிலையாக மகிழ்ந் திருக்கும் பக்கலில் அடியேனும் அணுக வருமாறு 'வா' என்று அருள் செய்வாயாக!

பொன்னம்பலத்தில் அருட்கூத்து ஆடுவோனே! நீ அருளாது தவிர்ந்தால் அடியேனை 'அஞ்சாதே!' என்று ஆதரிப்பார் யார் உளர்? என்னையும் ஒரு பொருளாகக் கொண்டு அருளி வலிய என்னுட் புகுந்து ஆட்கொண்ட பொன்போல்வானே!

மயக்கம் பொருந்திய மனத்துடன் உன்னை விட்டு நீங்கி வருந்துகிற அடியேனை 'வா' என்று அழைத்து உன் ஞானத் தெளிவுடைய அடியார் கூட்டத்தைக் காட்டாவிடில் அடியேன் இறந்து போக, உலகத்தார் அதனால் நகைக்க மாட்டார்களா?

உன் மெய்யன்பர் இன்பப் பெருக்கினால் சிரித் திருப்பார் கள். அக மகிழ்ந்திருப்பார்கள். தனித் தனியே தியானிப்பார்கள். கூடிக் கூடி உன் திருப் பெருமைகளைப் பலபடப் பேசுவார்கள். அங்ஙனம் பேசுவதைக் கேட்பார்கள், பாராட்டுவார்கள், வேறு வேறாக இருந்து உன் திருப்பெயரை நினைப்பார்கள். 'பொன்னம் பலத்து ஆடும் தலைவா!' என்று புகழ்வார்கள்! அவர்களின் முன் சிறியேன் இகழ்ச்சியுண்டாக இருப்பேனோ? சிறந்தோனே! இனியாகிலும் எளியேனுக்கு அருள் வழங்குவாயாக.

10. நல்காது ஒழியான் நமக்கென்று உன்
நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறா
வணங்கா மனத்தால் நினைந்துருகிப்
பல்கால் உன்னைப் பாவித்துப்
பரவிப் பொன்னம் பலம் என்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கு இரங்கி
அருளாய்! என்னை உடையானே!

திருச்சிற்றம்பலம்

## இருபத்திரண்டு

# கோயில் திருப்பதிகம்

தினமும் திருவாசகம் ஓதுவார் அதிகமும் ஓதும் பதிகங்களுள் இதுவும் ஒன்று. இறைவனின் திருவருளோடு ஒன்று படுங்கால் உளதாகும் பேரின்பத்தை ஒருவாறு உரைத்தல் கருத்தாக உள்ள பத்து ஆசிரிய விருத்தங்கள் கொண்ட இப்பதிகம் தில்லையில் அருளப் பெற்றதாகும். முடிமுதல் தொடையால் அமைந்துள்ளது. 'மாறிநின்று' என்று தொடங்கிக் 'கைம் மாறே' என்று முடிவுறுகின்றது. "அனுபோக இலக்கணம்; அதாவது சிவானுபூதிக்கு அடையாளம்" இதன் உட்கிடை என்பர்.

பெருமானை, "அன்பாக, தேறலின் தெளிவாக, உரையுணர்வு இறந்து நின்று உணரும் உணர்வாக, இன்பமாக, குறைவிலா நிறைவாக, கோதிலா அமுதாக, மனத்திடை மன்னிய மன்னாக" அனுபவித்து அனுபவித்து ஆனந்தம் கொள்கிறார் அடிகள். சிவானந்த அனுபவத்தின் குறிப்பாக இஃது உளது.

திருச்சிற்றம்பலம்

1. மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப்
புலன்ஐந்தின் வழியடைத்து, அமுதே
ஊறிநின்று என்னுள் எழுபரஞ் சோதி!
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே! சிவபெரு மானே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே என்னுடை அன்பே!

என்னை ஆளாக உடைய ஆண்டவனே! 'நமக்கு அருள் தாராது கைவிட மாட்டான், என்று சிறியேன் உன் திருப்பெய ரைத் திரும்பத் திரும்பக் கூறிக் கண்ணீர் பெருக வாழ்த்தி, வாய்ச் சொற்கள் தடுமாற வணங்கி, உள்ளத்தால் உள்ளி உருகிப் பல முறையும் உன்னை உள்ளூற உருச் செய்து உணர்ந்து துதித்துப் 'பொன்னம்பலம்' என்று பற்றிக் கொண்டு, எய்த்துப் போயி ருக்கும் சிறியேனின் உயிர்க்கு இரங்கிப் பேரின்பப் பேறு அருள் வாயாக.

○

''கோயில் திருப்பதிகம் பெருந்துறைத் தேசிகர் மோகம் இயம்பு வதாகும்'' என்பது திருவாசக உண்மை கூறும் பதிகக் கருத்து. திருப்பெருந்துறைப் பெருமான் மேல் கொண்ட ஆராக் காத லொடு தில்லையில் இது பாடப் பெற்றது என்பது இதனால் புலனாகிறது.

அனுபோகப் பொருளை- உன்னை—அடியேற்குத் தந்தாய் அனுபவிக்க என்னை ஏற்றுக் கொண்டாய், சங்கரா! ஆர் கொ லோ சதுரர்? என்று வினவும் அடிகள் 'ஆனந்தம் பெற்றேன்' என்று சாற்றுகிறார்.

○

அடியேனுக்கு மாறுபட்டு நின்று அடியேனை மயக்குகின்ற வஞ்சம் உள்ள ஐம்புலன்களின் வாயில்களை-பொறிகளை- அடைத்து, அமுதம் ஊறிப் பெருகுமாறு நிலைத்து என்னுள் எழுகின்ற மேலான ஒளிப் பிழம்பே! யான் உன்னை உள்ளபடி யான உன் வடிவில் காணும் பொருட்டு வந்தருளுவாயாக! தேனின் தெளிவு போன்றவனே! சிவ பெருமானே! திருப்பெருந்துறையில் வாழ்கின்ற செம்பொருளே! முடிவில்லாப் பதவிகள் எல்லாவற் றையும் கடந்து நிற்கும் இன்ப வடிவே! என்னுடைய அன்பு மயமே!

2. அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை
ஆனந்த மாய்க்கசிந் துருக
என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்
யான் இதற்கு இலன்ஓர் கைம்மாறு
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
முத்தனே! முடிவிலா முதலே!
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே!
சீருடைச் சிவபுரத்து அரைசே!

3. அரைசனே அன்பருக்கு அடியனேன் உடைய
அப்பனே ஆவியோடு ஆக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின்று உருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே!
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
உரையுணர்வு இறந்துநின்று உணர்வதோர் உணர்வே
யான்உன்னை உரைக்குமாறு உணர்த்தே!

4. உணர்ந்தமா முனிவர் உம்பரோடு ஒழிந்தார்
உணர்வுக்கும் தெரிவரும் பொருளே!
இணங்கிலி எல்லா உயிர்கட்கும் உயிரே!
எனைப்பிறப்பு அறுக்கும்எம் மருந்தே!
திணிந்ததுஓர் இருளில் தெளிந்ததூ வெளியே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
குணங்கள்தாம் இல்லா இன்பமே உன்னைக்
குறுகினேற்கு இனிஎன்ன குறையே!

5. குறைவிலா நிறைவே கோதுஇலா அமுதே
ஈறுஇலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்து என்
மனத்திடை மன்னிய மன்னே!
சிறைபெறா நீர்போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறைஉறை சிவனே!
இறைவனே நீ என் உடலிடம் கொண்டாய்
இனிஉன்னை என்இரக்கேனே!

அன்புப் பெருக்கால் அடியேனின் உயிரும் உடம்பும் இன்பப் பெருக்கில் கசிந்து உருக என் தகுதிக்கு மேலான இனிய அருளை வழங்கினாய். அடியேன் இதற்குக் கைம்மாறு தர யாதும் இல்லேன் முன்புமாகவும் பின்பு முழுதுமாகவும் பரந்துள்ள, முத்திக்கு உரியவனே! முடிவில்லாத முழுப்பொருளே! தெற்கே உள்ள திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருப்போனே!சிவ பெருமானே! சிறப்பு மிக்க சிவப்பேரின்ப உலகின் மன்னவனே!

அன்பு மிக்கவரின் அரசனாக விளங்குபவனே! அடியனேனின் தந்தையே! உயிரோடு உடம்பு மயிர்க்கால் தொறும் கனிய என்னுள் புகுந்து நின்று உருகப் பண்ணிப் பொய்யாகிய அறியாமையைப் போக்கிய மெய்ப் பொருளாம் ஒளியே! அலை மோதாது நிலைத்த தெளிவாகிய அமுதக்கடலே, திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே! சொல்லும் அறிவும் நசித்து நின்று அறியத் தகுவதாகிய ஒப்பற்ற அறிவே! அடியேன் உன்னியல்பைப் புகழ்ந்துரைக்கும் வகையை உணர்த்துவாயாக.

அறிவறிந்த பெரிய முனிவர்கள் தேவர்களோடு மற்றவர்களும் தம் அறிவுக்கும் தெரிதற்கு அருமையாகிய பொருளே! ஒப்பற்றவனே! எல்லா உயிர்கட்கும் உயிராயிருப்பவனே! அடியேனின் பிறவிப் பிணியை ஒழிக்கும் எம் சாவா மருந்தே; அடர்ந்த ஓர் இருளின் கண் தெளிந்திருப்பதாகிய தூய்மையான வெளியே! திருப்பெருந்துறைக்கண் உறையும் சிவப்பரம்பொருளே! குணங்களின் தொடர்பு இல்லாத இன்பமயமே! உன்னை அடைந்த அடியனேற்கு இனி என்ன குறையுளது?

எங்கும் எதிலும் குறைவற்று இருக்கும் நிறைவே! குற்றமற்ற அமுதமே! இறுதியில்லாச் செழுமையாகிய ஒளிக் குன்றமே! வேதம் ஆகி வேதத்தின் பொருளும் ஆகி வந்தருளி அடியேனின் உள்ளத்தில் நிலை பெற்றிருக்கும் தலைவனே! கரையற்ற நீர்ப் பெருக்காக என் மனத்தின் கண் பாய்ந்து வரும், திருப்பெருந்துறைக்கண் உள்ள இன்பப் பெருமானே! தலைவனே! நீ அடியேனின் உடம்பை இடமாகக் கொண்டனை, இனியான் உன்னிடம் என்ன வேண்டி இரத்தல் கூடும்?

6. இரந்திரந்து உருக என்மனத் துள்ளே
எழுகின்ற சோதியே இமையோர்
சிரம்தனில் பொலியும் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறைஉறை சிவனே!
நிரந்த ஆ காயம் நீர்நிலம் தீகால்
ஆயவை அல்லையாய் ஆங்கே
கரந்ததோர் உருவே! களித்தனன் உன்னைக்
கண்ணுறக் கண்டுகொண்டு இன்றே!

7. இன்றெனக்கு அருளி இருள்கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீஅலால் பிறிதுமற்று இன்மை
சென்று சென்று அணுவாய்த்
தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்
திருப்பெருந் துறை உறை சிவனே!
ஒன்றும்நீ அல்லை அன்றிஒன்று அல்லை
யார் உன்னை அறியகிற் பாரே?

8. பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படர்ஒளிப் பரப்பே!
நீர் உறு தீயே! நினைவதேல் அரிய
நின்மலா! நின்னருள் வெள்ளச்
சீர் உறு சிந்தை எழுந்ததோர் தேனே!
திருப்பெருந் துறையுறை சிவனே!
யார் உறவு எனக்கு இங்கு? ஆர் அயல் உள்ளார்?
ஆனந்தம் ஆக்கும் என் சோதீ!

9. சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்
ஒருவனே! சொல்லுதற்கு அரிய
ஆதியே! நடுவே! அந்தமே! பந்தம்
அறுக்கும்ஆ னந்தமா கடலே!
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே!
திருப்பெருந் துறையுறை சிவனே!
யாதுநீ போவது ஓர் வகை எனக்கு அருளாய்!
வந்துநின் இணையடி தந்தே!

இறைவனே! உன் அருளை வேண்டி வேண்டி உருகவும் என் உள்ளத்தினுள் எழுகின்ற ஒளியே! தேவர்களுடைய தலை மேல் விளங்கும் தாமரை மலர் போன்ற திருவடிகள் உடையாய்! திருப்பெருந்துறைக்கண் வீற்றிருக்கும் சிவபெருமானே! பரந்த விண்ணும் நீரும் நிலமும் நெருப்பும் காற்றும் என்று அவை யாகவும் அவை அல்லையாகவும் அவ்வாறே மறைந்தும் திகழுந் ஒப்பற்ற உருவமே! இப்பொழுது என் கண் நிரம்பக் கண்டு கொண்டு களிப்படைந்தேன்.

இப்பொழுது அடியேற்கு அருள்புரிந்து அறியாமை இருளைப் போக்கி மனத்திலே உதிக்கின்ற கதிரோன் போல எழுந்து நின்ற உன் தன்மையை, நினைப்பும் அழிய நினைந் தேன். நீ அன்றி வேறு பொருள் இல்லையாக, போய்ப் போய் அணுவாகத் தேய்ந்து தேய்ந்து அணுவிலும் அணுவாம் ஒரு தன் மையாகும், திருப் பெருந்துறை அமர்ந்த சிவபெருமானே! ஒரு பொருளும் நீ இல்லை. நீ அன்றி ஒரு பொருளும் இல்லை. உன்னை அறிய வல்லார் யாவர்?

நிலவுலகாகவும் இந்திர பதவி போன்ற நிலைகளாகவும் எல்லாவற்றையும் அடக்கி அண்ட மாகவும் மற்றுமுள எல்லாமும் ஆகித் தோன்றிப் பரந்ததாகிய ஒப்பற்ற மேற்செலும் ஒளிப் பரப்பே! நீரிற் பொருந்திய நெருப்பாக விளங்குபவனே! நினைப் பதனால் அந்த நினைப்புக்கும் அரிய, மாசு அணுகப் பெறாதவ னே! உன் அருட் பெருக்கின் சிறப்பு வாய்ந்த மனத்தின்கண் உண்டாகிய ஒப்பற்றதேனே! திருப்பெருந்துறைக்கண் வீற்றிருக்கும் சிவபெருமானே! எளியேனுக்கு [நீ யன்றி] உயர்வாக இருப்போர் யாவர்? அயலாக இருப்போர் யாவர்? [எல்லாம் நீயே, இறை வா!] பேரின்பம் தோற்றும் என் ஒளி உருவே!

ஒளிப் பிழம்பாகக் காட்சி தரும் திருவுருவே! உருவமற்ற தனிப் பரம் பொருளே! சொல்லுதற்கு அரிய முதலே இடையே முடிவாம் முழுப் பொருளே! கட்டினை அறுக்கும் கடலனைய பேரின்பமே! தீமை கலவாத நன்மை மயமான திருவருள் மலை யே! அடியேன் பால் வந்து நின் இரு திருவடிகளை வழங்கிப் பின் இவ் எளியேனை விட்டு நீங்கிச் செல்வது எவ்வாறு என்று கூறி யருள்வாயாக.

10. தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னைச்
சங்கரா! ஆர்கொலோ சதுரர்?
அந்தம் ஒன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்றதொன்று என்பால்?
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறைஉறை சிவனே!
எந்தையே! ஈசா! உடலிடம் கொண்டாய்
யான் இதற்கு இலன்ஓர் கைம்மாறே!

திருச்சிற்றம்பலம்

## இருபத்துமூன்று
## செத்திலாப் பத்து

எண்சீர் விருத்தங்கள் பத்து அடங்கிய இத் திருப்பதிகம் இறைவனின் இணையடி பிரிந்தும் இன்னும் வறிதே உயிரோடு இருத்தற்கு வருந்தி ''இன்னும் செத்திலேன், உடலைச் செற்றிலேன், இன்னும் திரிதருகின்றேன். செத்திடப் பணியாய், தூரத்திலிருந்து யான் அலறுவது அழகோ? வந்திடப் பணியாய்'' என்று அடிகள் திருப் பெருந்துறையில் அருளியது ஆகும். ''சிவானந்தம் அளவறுக்க ஒண்ணாமை; என்பது சிவானந்தம் அணுகிச் செயிக்கப்படாமை'' இதன் உட்கிடை என்ப. ''மாய பசுபோதம் முற்றும் கெடவேண்டலே செத்திலாப் பத்தாகும்'' என்று திருவாசக உண்மை கூறுகிறது. இறைமையோடு உறையத் தடையாயுள்ள உடல் உயிர்ப்பற்றை நீக்குதல் கருத்தாக உள்ளது

திருச்சிற்றம்பலம்

1. பொய்யனேன் அகம்நெகப் புகுந்தமுதூறும்
புதும லர்க்கழல் இணையடி பிரிந்தும்
கையனேன் இன்னும் செத்திலேன் அந்தோ!
விழித்திருந்து உள்ளக் கருத்தினை இழந்தேன்
ஐயனே! அரசே! அருட்பெருங் கடலே!
அத்த னே!அயன் மாற்குஅறி யொண்ணாச்
செய்யமே னியனே செய்வகை அறியேன்;
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

அறப்பெரிய நீ அடியேற்குத் தந்தது உன்னை; அதற்குப் பதிலாக அறச்சிறிய என்னை ஏற்றுக் கொண்டாய், நன்மையே வடிவானவனே! நம் இருவரில் சமர்த்தர் யாவர்? முடிவு என்பதே சிறிதும் இல்லாத பேரின்பம் அடைந்தேன். பதிலாக நீ அடியேனி டத்துப் பெற்றுக் கொண்ட பொருள் ஒன்றேனும் உள்ளதா? என் நெஞ்சையே கோயிலாகக் கொண்டு எழுந்தருளின எம் பெருமானே! திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானே! எம் தந்தையே! எளியேனின் உடம்பை உனக்கு இடமாகக் கொண்டாய். இந்த ஒன்றிற்கு யான் செய்தற்கு உளதாகிய கைம்மாறு ஒன்றையும் காண்கிலேன்.

○

"என்னைஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றினாய்" என்று இறைவனிடம் உரைக்கும் அடிகள்தம் வரலாற்றுக் குறிப்பு கருதற்குரியது. 'களிப்பு மிகக் கலங்குகின்றேன், அச்சத்தைப் போக்கியநின் அருளாகிய பெரிய கடலிலே மூழ்கியும் திளைத்தும் குடித்தும் உருகாதிருக்கிறேனே என் செய்வேன்' என்பதும் அவர் தம் உயர்ந்த நிலையைக் காட்டுகிறது. முதல் ஒன்பது திருப் பாடல்கள் "திருப்பெருந்துறை மேவிய சிவனே" என்று முடி கின்றன. பத்தாவது, அதனோடு கூட முடிவில் 'கயிலை மலை மேவிய கடலே' என்று நிறைவு செய்கிறது.

○

திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! பொய்யன் ஆகிய அடியேனின் உள்ளம் நெகிழும்படியாக அதிற் புகுந்து அமுதம் சுரத்தற்கு ஏதுவாகிய அன்றலர்ந்த தாமரை மலர் போன்ற வீரக் கழல் அணிந்த உன் துணையாகிய திரு வடிகளைப் பிரிந்தும் சிறுமையேன் இன்னமும் இறவாதிருக் கிறேன். ஐயோ! விழித்திருந்தும் மனக்கருத்தை இழந்துவிட்டேன். தலைவனே! மன்னவனே! பெரிய அருட்கடலே! எம் தந்தையே! பிரமன் மால் ஆகியோர் உணர இயலாத, சிவந்த மேனியை உடையவனே! இனிச் செய்யும் வகை இன்னது என்று அறிந்திலேன்.

2. புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டி யாய்அண்ட வாணரும் பிறரும்
வற்றி யாரும்நின் மலரடி காணா
மன்ன! என்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றினாய் பதையேன் மனமிக வுருகேன்
பரிகி லேன்பரி யாஉடல் தன்னைச்
செற்றிலேன் இன்னும் திரிதரு கின்றேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

3. புலைய னேனையும் பொருள்என நினைந்து உன்
அருள்பு ரிந்தனை புரிதலும் களித்துத்
தலையி னால்நடந் தேன்விடைப் பாகா!
சங்கரா! எண்ணில் வானவர்க்கு எல்லாம்
நிலைய னே! அலை நீர்விடம் உண்ட
நித்த னே! அடை யார்புரம் எரித்த
சிலைய னே! எனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

4. அன்ப ராகிமற்று அருந்தவம் முயல்வார்
அயனும் மாலும்மற்று அழலுறும் மெழுகாம்
என்பர் ஆய்நினை வார்எ னைப்பலர்
நிற்க இங்குஎனை எத்தினுக்கு ஆண்டாய்?
வன்ப ராய்முருடு ஒக்கும்என் சிந்தை
மரக்கண் என்செவி இரும்பினும் வலிது
தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா!
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

5. ஆட்டுத் தேவர்தம் விதிஒழித்து அன்பால்
ஐயனே! என்றுன் அருள்வழி இருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
நாத னே!உனைப் பிரிவுறா அருளைக்
காட்டித் தேவ!நின் கழல்இணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்துஅருள் செய்யாய்!
சேட்டைத் தேவர்தம் தேவர்பி ரானே!
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

வான் உலகத்தில் வாழ்வோரும் மற்றையோரும் புற்று வளரப் பெற்றும் மரம் போல் ஆகியும் நீரையும் காற்றையுமே உணவாகக் கொண்டு தவம் செய்து உடல் குறைந்து ஒருவரும் உன் தாமரை மலர் போன்ற திருவடிகளைக் காண வொண்ணாத தலைவனே! அடியேனை ஒரு சொல்லில் அகப்படுத்திப் பற்றிக் கொண்டாய். அந்தப் பேரருள் கருதி அடியேன் பதைத்திலேன்; மனம் மிகவும் உருகப் பெற்றிலேன், அன்பு செய்யப் பெறாத உடம்பை வெறுத்திலேன், இன்னமும் உழன்று திரிந்து கொண்டிருக்கிறேன்.

திருப் பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமானே! புலையனாகிய என்னையும் ஒரு பொருளாக எண்ணி உன் திருவருளை விரும்பிச் செய்தனை! அவ்வாறு செய்தலும் சிறியேன் களிப்படைந்து தலையாலே நடந்தேன். எருதினை ஊர்தியாகக் கொண்டவனே! நன்மை செய்வோனே! எண்ணிறந்த தேவர்களுக் கெல்லாம் நிலைக்களனாயிருப்போனே! அலைகளை உடைய கடலிற் பிறந்த நஞ்சை உண்ட, என்றும் இருப்போனே! சேராதார் ஆகிய அசுரர்களின் முப்புரத்தை நீறாக்கின வில்லை உடையோனே! அடியேனைச் செத்திடப் பணிப்பாயாக.

திருப்பெருந்துறையில் விரும்பி வீற்றிருக்கும் சிவபெருமானே! அழகிய திருப்பராய்த் துறையில் அமர்ந்த இறைவனே! சிவப்பேருலகின் தலைவனே! உன்னிடத்து மிக்க அன்பு உடையவர்களாகி அயனும் திருமாலும் செய்தற்கு அரிய தவம் முயல்பவர் ஆனார்கள். இன்னும் நெருப்பைச் சார்ந்த மெழுகு ஆகி எலும்பு மட்டும் உடையவர் ஆக உன்னை உள்ளியவராகத் தவத்திருப்பார் வேறு பலர். அவர்கள் உன்னருள் வேண்டி நிற்கவும், இங்கு அன்பு முதலியன எதுவும் இல்லாத எளியேனை எதன் பொருட்டு ஆண்டருளினை? என் உள்ளம் வலிய பருத்த முரட்டு மரக்கட்டை போல்வதாகும். என் கண் (பெயரளவில் கண் எனப்படும்) மரக்கணுவை நிகர்ப்பதாகும். என் செவியோ இரும்பினும் வலியதாகும்.

திருப்பெருந் துறைக்கண் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! பெருமையுள்ள தேவாதி தேவர்க்கும் தலைவனாகத் திகழ்வோனே! உலகை நடத்தும் தேவர்களின் கட்டளையை ஒழித்து அன்பினால், 'ஐயனே' என்று உன் திருவருள் நெறியில் இருப்பேன். நாட்டவர் வணங்கும் தெய்வங்களும் நாடுதற்கு அரிய பொருளாக இருப்போனே! உன்னை விட்டு நீங்காத திருவருளை அடியேற்குக் காட்டி, மாதேவா!, உன் திருவடி இணையையும் காட்டி உடம்பாகிய மாயப் பொருளைக் கழித்து அருள்புரிவாயாக!

6. அறுக்கி லேன்உடல் துணிபடத் தீப்புக்கு
ஆர்கி லேன்திரு வருள்வகை அறியேன்
பொறுக்கி லேன்உடல் போக்கிடங் காணேன்
போற்றி போற்றிஎன் போர்விடைப் பாகா!
இறக்கி லேன்உனைப் பிரிந்தினிது இருக்க
என்செய் கேன்?இது செய்கஎன்று அருளாய்
சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

7. மாய னே!மறி கடல்விடம் உண்ட
வான வா!மணி கண்டத்துஎம் அமுதே!
நாயி னேன் உனை நினையவும் மாட்டேன்
நமச்சி வாய என்று உன்னடி பணியாப்
பேயன் ஆகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞகனேயோ!
சேயன் ஆகிநின்று அலறுவது அழகோ?
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

8. போது சேர்அயன் பொருகடல் கிடந்தோன்
புரந்த ராதிகள் நிற்கமற்று என்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள் கென்றுநின் தொண்டரில் கூட்டாய்
யாது செய்வதுஎன் றிருந்தனன், மருந்தே!
அடிய னேன்இடர்ப் படுவதும் இனிதோ?
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

9. ஞாலம் இந்திரன் நான்முகன் வானவர்
நிற்க மற்றெனை நயந்தினிது ஆண்டாய்
காலன் ஆருயிர் கொண்டபூங் கழலாய்!
கங்கை யாய்! அங்கி தங்கிய கையாய்!
மாலும் ஓலமிட்டு அலறும்அம் மலர்க்கே
மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்;
சேலும் நீலமும் நிலவிய வயல் சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!

அணைகளுக்குள் நீர் நிலை பெற்றிருக்கும் வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறைக் கண் அமர்ந்தருளிய சிவபெருமானே! உன்னை விட்டுப் பிரிதலால் அடியேன் உடம்பு துண்டு படும்படி அறுக்கிலேன்; தீயிற் புக்கு அமைதியடையாமல் இருக்கிறேன், திருவருள் கூடும் வகையையும் உணர்ந்திலேன், உடம்பைத் தாங்கியிருக்கவும் இயலாதேன்; போகும் இடமும் கண்டிலேன், ''வணக்கம், காப்பாற்றுவாயாக!'' என்று துதிப்போர்க்கு உரிமையாக உள்ள, காளை ஊர்தியனே! இறக்க மாட்டாத அடியேன் இன்னமும் இனிமையுற்று இருப்பதற்கு என் செய்யக் கடவேன்? இதனைச் செய்க என்று பணித்தருள்வாயாக.

திருப்பெருந்துறைக்கண் விரும்பி அமர்ந்துள்ள சிவபெருமானே! மாயஞ் செய்வோனே! அலைகள் மடங்கி வீழும் கடலின் கண் தோன்றிய நஞ்சை உட்கொண்டருளின தேவனே! நீல மணி போலும் நிறமுள்ள கழுத்தை உடைய, எம் சாவா மருந்தே! நாய் போன்ற சிறுமையேன் உன்னை நினைக்கவும் மாட்டேன்; 'நமச்சிவாய' என்று உன் திருவடியை வணங்காத பேயன் யான் ஆயினும் வீட்டுலகத்துக்கான உயர் வழியினை அடியேற்குக் காட்டியருள்வாயாக! பிறை விளங்கும் சடையைத் தலைக்கோல மாக உடையவனே! ஓ! தொலைவின்கண் உள்ளவன் ஆகி நின்று அடியேன் அலறுவது நினக்கு அழகாகுமோ?

தண்மையாக நீண்ட நீர் தங்கிய வயல்கள் சூழ்ந்திருக்கும் திருப்பெருந்துறைக்கண் எழுந்தருளிய சிவபெருமானே! தாமரைப் பூவில் அமர்ந்த அயனும் அலைகள் மோதும் கடலில் துயிலும் திருமாலும் இந்திரன் முதலிய வானவர்களும் உன் திருவருள் வேண்டியிருக்கவும் பெருமானாகிய நீ எளியேனைக் குற்றங்கள் மாள்வித்து உன் ஒலிக்கும் வீரக் கழல் புனைந்த திருவடிகளைக் காட்டி ''உறுதியாகப் பற்றிக்கொள்க!'' என்று உன் மெய்யடியார் கூட்டத்துள் கூட்டுவாயாக. யாது செய்யத் தக்கது என்று இருந்தேன். பிறவிப் பிணிக்கு மருந்தாக விளங்குவோனே! அடியேன் துன்பப் படுவதும் உனக்கு இனிதாகுமா?

கெண்டை மீனும் குவளை மலர்களும் நிலைபெற்ற வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறைக் கண் உள்ள சிவபெருமானே! நிலவுலகத்தவரும் இந்திரன் நான்முகன் ஆகிய மேலுலகத்தவரும் உன்னருள் நாடி இருக்க எளியேனை விரும்பி இனிதாக ஆட்கொண்டாய். இயமனது அரிய உயிரைக் கவர்ந்த தாமரைப்பூப்

10. அளித்து வந்தெனக்கு ஆவ ! என் றருளி
அச்சம் தீர்த்தநின் அருள்பெருங் கடலில்
திளைத்துத் தேக்கியும் பருகியும் உருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!
வளைக்கை யானொடு மலரவன் அறியா
வான வா ! மலை மாதொரு பாகா!
களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே!

திருச்சிற்றம்பலம்

## இருபத்து நான்கு
## அடைக்கலப் பத்து

'உடையாய் அடியேன் உன் அடைக்கலமே' என்று பெருமான்பால் தாம் அடைக்கலம் புகுவதை அடிகள் திருப்பெருந்துறையில் கலவைப் பாட்டுப் பத்தால் அருளியது இத்திருப்பதிகம். அடியார் பலரும் பழுத்த மனத்தால் பேரின்பம் பெறத் தாம் மட்டும் அழுக்கு மனத்தாலும் சிற்றின்ப விருப்பாலும் உலகில் தறியில் உள்ள குழல் போல அலைபடுகின்ற நிலையில் தம்மை நரகத்தில் இட்டாலும் குற்றமில்லை பெருமானே! அடைக்கலம். அருள் புரிந்து காக்க வேண்டும் என்கிறார். இறைவனை அடிகள் பெரும்பெருமான் பிறவியை வேர் அறுக்கும் பெரும் பிச்சுத் தரும் பெருமான், சதுரப்பெருமான், என் மனத்தினுள்ளே வரும் பெருமான் என்று போற்றுவது நம் உள்ளத்தை மதிப்பால் நிரப்புகிறது. அருளார் அமுதத்தை நீ வழங்க நான் வாரிக்

திருச்சிற்றம்பலம்

1. செழுக்கமலத் திரள்அனநின் சேவடி சேர்ந்துஅமைந்த
பழுத்தமனத்து அடியர் உடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கண்உடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்குமனத்து அடியேன் உடையாய்! உன்அடைக் கலமே

போலும் திருவடிகளை உடையவனே! கங்கையைச் சடை முடியில் தாங்கியவனே! நெருப்புத் தங்கிய கையை உடையவனே! திருமால் தானும் அறிய ஒண்ணாது முறையிட்டு அலறுதற்கு உரிய அந்தத் திருவடி மலர்க்கே மரக் கண்போன்ற, உருகி நீர் துளும்பாத கண்ணை உடைய அடியேனையும் வந்திடும்படி பணித்தருள்வாயாக,

திருப் பெருந்துறைக் கண் எழுந்தருளிய சிவபெருமானே நீ அடியேனுக்கு அருள்புரிந்து ஆ! ஆ! என்று இரக்கம் காட்டி, அச்சம் தீர்த்த திருவருளாகிய பெருங்கடலில் மகிழ்ந்து உண்டும் உருகாதிருக்கிறேன், சங்கு ஏந்திய கையினையுடைய திருமாலும் மலர் மேல் அமர்ந்த பிரமனும் அறிதற்கு முடியாப் பெருந்தேவனே! மலைமகளாம் உமையம்மையைப் பாகமாக உடையவனே; களிப்பு எல்லாம் மிகக் கலங்கி நிற்கிறேன். பெரிய கயிலை மலையில் வீற்றிருக்கும் கருணைக் கடலே! உன்னையன்றி வேறு புகல் இல்லேன். இரங்கியருளுக.

கொண்டு விழுங்குகின்றேன்; தேன் அன்ன தண்ணீர் பருகத் தந்து உய்யக் கொள் என்று அவர் வேண்டுவது அவரது மெய்யறிவு முதிர்வையும் இறையருள் பெறும் மேலாம் பக்குவ நிலையையும் காட்டுகிறது. ''பக்குவ நிண்ணயம் அதாவது வித்தும் முளையும் போல என்றல்'' இதன் உட்கிடை என்ப. ''ஓதும் வாதனைகள் வந்து அணுகாமல் அடைக்கலப் பத்து உரைத்த தாமே'' என்பது திருவாசக உண்மை தரும் இதன் மையக் கருத்து ஆகும்.

○

எல்லாம் உடையவனே! செழுமையான தாமரை இதழ்த் தொகுதி போன்ற உன் செவ்விய திருவடியை அடையப்பெற்ற கனிந்த நெஞ்சம் உடைய அடியார்கள் உன்னுடன் சென்று விட்டார்கள். பாவியேன் ஆகிய யான் புழுக்கள் தமக்கு இடமாக உள்ள புல்லிய உடம்பையும் கல்விஅறிவு இல்லாத பொல்லாத அழுக்கு உள்ள மனத்தையும் உடைய அடியேன்; உனக்கு அடைக்கலப் பொருள், காத்தருள்க.

2. வெறுப்பன வேசெய்யும்என்
சிறுமையை நின் பெருமையினால்
பொறுப்ப வனே! அராப்பூண்
பவனே!பொங்கு கங்கைசடைச்
செறுப்ப வனே!நின் திருவரு
ளால்என் பிறவியைவேர்
அறுப்ப வனே!உடை யாய்!அடி
யேன்உன் அடைக்கலமே!

3. பெரும்பெருமான் என்பிறவியை
வேர்அறுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெருமான் சதுரப்
பெருமான்என் மனத்தினுள்ளே
வரும்பெருமான் மலரோன்நெடு
மாலறியா மல்நின்ற
அரும்பெருமான்! உடையாய்!
அடியேன் உன் அடைக்கலமே!

4. பொழிகின்ற துன்பப் புயல்வெள்
ளத்தில் கழல்புணை கொண்டு
இழிகின்ற அன்பர்கள் ஏறினர்
வான்; யான் இடர்க்கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக்
காமச் சுறவுஎறிய
அழுகின்ற னன்உடை யாய்!அடி
யேன் உன் அடைக்கலமே!

5. சுருள்புரி கூழையர் சூழலில்
பட்டுஉன் திறம்மறந்துஇங்கு
இருள்புரி யாக்கையி லேகிடந்து
எய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மான்அன்ன நோக்கிதன்
பங்க!விண் ணோர்பெருமான்!
அருள்புரி யாய்!உடை யாய்!அடி
யேன்உன் அடைக்கலமே!

இறைவனே! வெறுக்கத் தக்கவற்றையே செய்கின்ற என் இழிவை உன் பெருங்குணத்தால் மன்னித்தருள்பவனே! பெருகி வரும் கங்கையினைச் சடையின்கண் ஒடுக்கி வைப்பவனே! உன் திருவருளாகிய வாளால் என பிறவியாகிய மரத்தை வேரோடு வெட்டி எறிபவனே! அடியேன் உன் அடைக்கலப், பொருள், காத்தருள்க.

யாவரினும் பெருமை மிக்க பெருமானே! அடியேனின் பிறவியின் வேரினை அறுத்தெறிந்து உன் மேல் மிகுதியான பித்துப் பிடித்தது போன்ற மயக்கத்தை அடியேனுக்குத் தரும் பெருமான்! அறிவு வடிவான பெருமானே! அடியேனின் சித்தத்தில் உள்ளே எழுந்தருளும் பெருமானே! பிரமனும் மாலும் அறிய வொண்ணாத அரிய பெருமானே! அடியேன் உன் அடைக்கலம் ஏற்றருள்க.

இறைவனே! சொரிகின்ற துன்பமாகிய மழையினால் உண்டாகிய வெள்ளத்தில் உன் திருவடியாகிய தெப்பத்தைத் துணையாகக் கொண்டு இறங்கும் அடியவர்கள் உயர் வெளியில் ஏறிக் கொண்டார்கள். அடியேன் துன்பக் கடலில் சுழியில் சிக்கி மாதர்களாகிய அலை மோதக் காமமாகிய சுறாமீன் எறிதலால் அழிந்தவாறுள்ளேன். அடியேன் உன் அடைக்கலம். ஏற்றருள்க.

எம்மை உடையவனே! மை எழுதிய அகலமான கண்களும் வெருண்ட மானின் விழிநோக்குப் போன்ற நோக்கும் உடைய உமையம்மையைப் பாகமாக உடையவனே! சுருளாகச் செய்யப்பட்ட கூந்தலையுடைய மாதரது கூட்டத்தில் அகப்பட்டு இங்கு உன் அருள் திறத்தை மறந்து மயக்கத்தை உண்டாக்கும் உடம்பிலே கிடந்து இளைத்துப் போனேன். வானோர் தலைவனே! அடியேன் உன் அடைக்கலம். அருள்செய்வாயாக.

6. மாழைமைப் பாவிய கண்ணியர்
வன்மத் திடஉடைந்து
தாழியைப் பாவு தயிர்போல்
தளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழி!எப் போதுவந்து எந்நாள்
வணங்குவன்! வல்வினையேன்!
ஆழிஅப் பா!உடை யாய்அடி
யேன்உன் அடைக்கலமே!

7. மின்கணினார் நுடங்குமிடையார்
வெகுளிவலையில் அகப்பட்டுப்
புன்கண்ணாய்ப் புரள்வேனைப்
புரளாமல் புகுந்தருளி
என்கணிலே அமுதூறித்
தித்தித்து, என் பிழைக்கு இரங்கும்
அங்கணனே! உடையாய்!
அடியேன் உன் அடைக்கலமே!

8. மாவடு வகிர்அன்ன கண்ணிபங்
கா!நின் மலர் அடிக்கே
கூவிடு வாய், கும்பிக் கேஇடு
வாய்நின் குறிப்பறியேன்;
பாவிடை யாடு குழல்போல்
கரந்து பரந்துள்ளம்
ஆ!கெடு வேன் உடை யாய்!அடி
யேன் உன் அடைக்கலமே!

9. பிறிவு அறி யாஅன்பர் நின்னருள்
பெய்கழல் தாள் இணைக்கீழ்
மறிவு அறி யாச்செல்வம் வந்துபெற்
றாருன்னை வந்திப்பதோர்
நெறியறி யேன் நின்னை யேஅறி
யேன் நின்னை யேஅறியும்
அறிவறி யேன், உடை யாய்!அடி
யேன் உன் அடைக்கலமே.

எல்லாம் உடையவனே! மாம்பிஞ்சின் பிளவைப் போன்ற மைதீட்டிய கண்களை உடைய மாதர், வலிய மத்து இட்டுக் கடைதலும் சிதறி மிடாவில் பரவிய தயிர் போல் சுழன்று தளர்ந்தேன். பெருமை பொருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகளை, வலிய தீவினை உடையவனான அடியேன், வந்து எந்நாளில் எப்பொழுது வணங்கப் பெறுவேன்? அருட் கடலான அப்பனே! வாழ்க! அடியேன் உன் அடைக்கலம். காத்தருள்வாயாக!

எல்லாம் உடையவனே! மின்னுகின்ற கண்களை உடையவரும் துவள்கின்ற இடையை உடையவரும் ஆகிய மாதர் உடைய கோப வலையில் சிக்கித் துன்பத்தை உடையேனாய்ப் புரளுகின்ற அடியேனை அங்ஙனம் புரளாமல் வலியவந்து என்னுள் புகுந்து என்னிடத்தில் அமுதம் ஆகச் சுரந்து இனித்து, என் குற்றங்களுக்கு இரங்கி அவற்றைப் பொறுத்தருளும் அழகிய அருட்கண்ணனே! அடியேன் உன் அடைக்கலம். காத்தருள்க.

எல்லாம் உடையவனே!மாவடுவின் பிளவு போலும் கண்களை உடைய உமையம்மையின் பங்கனே! உன் மலர் போன்ற திருவடிகளுக்கு அழைத்துக் கொள்வாயா? அல்லது நரகத்தில் தள்ளுவாயா? உன் திருவுளக் கருத்தினை அறியேன். நூல் நெய்பாவின் ஊடே இங்கும் அங்குமாக ஓடுகின்ற குழல் போல் என் உள்ளமானது மறைந்து பரந்து ஓடுகின்றது! அந்தோ! கெடுவேன். அடியேன் உன் அடைக்கலம். காத்தருள்வாயாக!

எம்மை உடையவனே! உன் அருட்பார்வையினின்று விட்டு விலகுதல் அறியாத உன் மெய்யன்பர் உன் திருவருள் கூட்டும் கழல் அணிந்த திருவடித் துணைக் கீழ் வந்து அதனின்றும் நீங்குதல் அறியா வீடுபேறாம் செல்வத்தைப் பெற்றார்கள். சிறியேன் உன்னை வணங்குதற்கான வழி அறியேன். உன்னையும் எளியேன் அறிந்திலேன். உன்னை அறிதற்கான மெய்யறிவில்லாதேன். அடியேன் உன் அடைக்கலம், காத்தருள்க.

10. வழங்குகின் றாய்க்குஉன் அருளார்
அமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை
யேன்என் விதியின்மையால்
தழங்குஅருந் தேன்அன்ன தண்ணீர்
பருகத்தந்து உய்யக்கொள்ளாய்;
அழுங்குகின் றேன்உடை யாய்அடி
யேன்உன் அடைக்கலமே!

திருச்சிற்றம்பலம்

## இருபத்தைந்து

## ஆசைப் பத்து

ஆசிரிய விருத்தங்கள் பத்து 'ஆசைப் பட்டேன் அம்மானே' என்ற தொடர்மணியை ஈற்றில் கொண்டு விளங்கும் இத் திருப் பதிகம் திருப்பெருந்துறையில் அருளப் பெற்றதாகும். "ஆத்தும இலக்கணம்; அதாவது ஆன்ம ரூபத்தை அறிதல்" இதன் உட் கிடை என்று எடுத்து ஓதுப. உணர்த்த உணரும் உயிர், திரு வருளால் சிவத்தைப் பொருந்திப் பேரின்பம் பெறுதல் என்ற முறைமை உணர்த்துவது ஆகலின் ஆத்தும இலக்கணம் கூறுதல் ஆகும்.

திருச்சிற்றம்பலம்

1. கருளக் கொடியோன் காண
மாட்டாக் கழற்சே வடிஎன்னும்
பொருளைத் தந்திங்கு என்னை
ஆண்ட பொல்லா மணியேயோ
இருளைத் துரந்திட் டங்கே
வாவென்று அங்கே கூவும்
அருளைப் பெறுவான் ஆசைப்
பட்டேன் கண்டாய்; அம்மானே!

2. மொய்ப்பால் நரம்பு கயிறாக
மூளை என்பு தோல்போர்த்த
குப்பா யம்புக் கிருக்ககில்லேன்
கூவிக் கொள்ளாய் கோவேயோ!
எப்பா லவர்க்கும் அப்பா
லாம்என் ஆரமு தே! ஓ!
அப்பா! காண ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே

பேரின்பப் பெருவாழ்வை வழங்குகின்ற உன் திருவருளால் கிடைத்த அரிய அமுதத்தை வாரி உட்கொண்டு விழுங்குகின்றேன். தீவினையேன் எனக்கு நல்லூழ் இல்லாததால் விக்குள் (விக்கல்) வரப்பெற்றேன். ஆகவே, இனிதாக ஒலித்துவரும் தேன் போலும் தண்ணருளாம் தண்ணீர் பருகத் தந்து அடியேன் பிழைத்துக் கொள்ளுமாறு செய்வாயாக. வருந்துகின்றேன். அடியேன் உன் அடைக்கலம். அருள்புரிவாயாக.

○

"அருளைப் பெறுவான் ஆசைப்பட்டேன், அப்பா காண ஆசைப்பட்டேன் மலர்ப்பாதம் அடைந்து நின்றிடுவான் ஆசைப் பட்டேன், பழ அடியார் கூட்டம் காண ஆசைப்பட்டேன்" என்றாங்கு அடிகள் தெரிவிக்கும் பெருவிருப்பம் இறைவனையும் அவன் திருவடியார் கூட்டத்தையும் காணப்பெறுதலே ஆகும். "அரசே, கைகளால் தொழுது வீரக்கழல் அணிந்த உன் சேவடி களை நிரம்பத் தழுவிக்கொண்டு இடைவிடாமல் அவற்றை என் தலைமேல் தரித்துக் கொண்டு "ஐயா என் வாயாற் புலம்பி அழல் சேர் மெழுகாக உருக ஆசைப்பட்டேன்" என்று அடிகள் கூறுவது ஓதுவார் தம் உள்ளத்தையும் உருக்குவதாக உள்ளது.

"கருவியுறும் ஊன் உடற்கண் வாராமல் திருவருளில் கலப்பதற்கே, அரனடியைப் புகழ்ந்து பெருகு ஆர்வமொடு பாடுதலே ஆசைப் பத்தாம்" என்பது திருவாசக உண்மை கூறும் மையக் கருத்தாகும் ○

கருடக் கொடியை உடைய திருமாலும் காணமுடியாத வீரக் கழல் அணிந்த உன் செவ்விய திருவடி என்னும் அறிவுக்காட்சி யாகிய மெய்ப் பொருளை இங்கு அடியேற்குத் தந்து ஆண்டு கொண்ட தொளைக்கப்படாத முழு மாணிக்க மணியே! [ஓல மிடுகிறேன்] ஓ! அடியேன் பால் உள்ள அறியாமை இருளை ஓட்டி அங்கே நின் சிவபுரத்துக்கு வருக என்று அழைக்கும் உன் திருவருளைப் பெற ஆசைப்பட்டேன், ஐயனே!

ஐயனே! நெருங்கிய வெள்ளிய நரம்புகள் கயிறாகக் கொண்டு மூளை எலும்பு என்பவற்றைக் கட்டித் தோல் போர்த்த சட்டைக்குள் புகுந்து இருக்க முடியாதேன், அடியேன்; அரசனே! என்னை அழைத்துக் கொள்வாயாக! எவ்வகையோர்க்கும் அப்பா லாக இருக்கின்ற, என் அரிய அமுதம் போல்பவனே! ஓ! அப்பனே, உன்னைக் காண அடியேன் ஆசைப்பட்டேன்.

3. சீவார்ந்து ஈமொய்த்து அழுக்கொடு
திரியும் சிறுகுடில் இதுசிதையக்
கூவாய் கோவே! கூத்தா!
காத்து ஆட்கொள்ளும் குருமணியே!
தேவா! தேவர்க்கு அரியானே!
சிவனே! சிறிதுஎன் முகம் நோக்கி
ஆவா! என்ன ஆசைப்
பட்டேன் கண்டாய், அம்மானே!

4. மிடைந்து எலும்பு ஊத்தை மிக்கு அழுக்கு
ஊறல் வீறுஇலி நடைக்கூடம்
தொடர்ந்து எனை நலியத் துயர்உறு
கின்றேன், சோத்தம்!எம் பெருமானே!
உடைந்து நைந்து உருகி உன்னொளி
நோக்கி உன்திரு மலர்ப்பாதம்
அடைந்துநின் றிடுவான் ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே!

5. அளிபுண் அகத்துப் புறந்தோல்
மூடி அடியேன் உடையாக்கை
புளியம் பழம்ஒத் திருந்தேன்
இருந்தும் விடையாய்! பொடிஆடி!
எளிவந்து என்னை ஆண்டுகொண்ட
என்னார் அமுதே!ஓ!
''அளியேன்!'' என்ன ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே!

6. எய்த்தேன் நாயேன்இனி இங்கு
இருக்க கில்லேன் இவ்வாழ்க்கை
வைத்தாய் வாங்காய் வானோர்
அறியா மலர்ச்சே வடியானே
முத்தா! உன்தன் முகவொளி
நோக்கி முறுவல் நகை காண
அத்தா! சால ஆசைப்
பட்டேன் கண்டாய், அம்மானே!

எல்லாவற்றுக்கும் மேலான அரசே! திருக்கூத்து நிகழ்த்துவோனே! அடியேனை நல்வழிக் கண் செலுத்திக் காத்து ஆட்படுத்தும் ஆசிரிய மாணிக்கமே! தேவர் பிரானே! தேவர்கட்கு அருமையானவனே! சிவபெருமானே! சீ ஒழுகி ஈக்கள் மொய்த்து அழுக்குடன் கூடி அலைகின்ற சிறு குடிசையாகிய இவ்வுடம்பு அழிய, அடியேனைக் கூவி அழைத்துக் கொள் வாயாக. சற்றே என் முகம் பார்த்து "ஐயோ, வா!" என்று பெருமானே, நீ இரக்கம் கொள்ள அடியேன் ஆசைப்பட்டேன்.

எங்கள் பெருமானே! எலும்பு நெருங்கி ஊத்தை மிகுந்து அழுக்கு ஊறலாகவும் சிறப்பு இல்லதும் ஆக உள்ள இந்த நடையாடும் கூடம் ஆகிய உடம்பு ஆசை பற்றிக் கொண்டு அடியேன் நலியுமாறு செய்தலால் துன்புறுகின்றேன். ஐயனே! வணக்கம். மனம் நெகிழ்ந்து கரைந்து உருகி உன் திருவருள் ஒளிப் பார்வையை எதிர்பார்த்து உன் மலர் போன்ற திருவடிகளைச் சேர்ந்து நிற்க ஆசைப்பட்டேன்.

உள்ளே குழைந்த புண் உடையதாக வெளியே தோலால் மூடப்பட்டிருப்பதான அடியேன் உடைய உடம்பினொடு யான் புளியம் பழம் போல ஒட்டின்றி இருந்தேன் என்றாலும், காளை ஊர்தியனே; திருவெண்நீறு பூசியோனே! எளிதாக வந்து என்னை ஆட்கொண்டருளிய என் அரிய அமுதமே! "ஓ அளிக்கத் தக்கவன்" என்று நீ திருவுளம் கொள்ள ஆசைப் பட்டேன், அழகிய பெருமானே!

தேவரும் அறிந்திரா மலர் போன்ற செவ்விய திருவடிகளை உடையவனே! யாவற்றினின்றும் நீங்கியவனே! நாய் போன்ற சிறுமையேனாகிய யான் இங்கு வாழமுடியாதவனானேன்; தளர்ந்து விட்டேன், இவ்வுலக வாழ்க்கையில் என்னை இருக்கச் செய்தாய். அதனின்றும் அடியேனை விடுவிக்க மாட்டாயா? உன்னுடைய அழகிய முகவொளியைக் காணவும் புன்முறுவல் பூத்திருப்பதைக் காணவும், தந்தையே! மிகவும் ஆசைப்பட்டேன். ஐயனே!

7. பாரோர் விண்ணோர் பரவி
ஏத்தும் பரனே பரஞ்சோதீ
வாராய் வாரா உலகம்
தந்து வந்தாய் கொள்வானே
பேரா யிரமும் பரவித்
திரிந்துஎம் பெருமான் எனவேத்த
ஆரா அமுதே ஆசைப்
பட்டேன் கண்டாய்; அம்மானே!

8. கையால் தொழுதுஉன் கழற்சே வடிகள்
கழுமத் தழுவிக் கொண்டு
எய்யாது என்றன் தலைமேல் வைத்தெம்
'பெருமான்! பெருமான்!' என்று
ஐயா! என்றன் வாயால் அரற்றி
அழல்சேர் மெழுகுஒப்ப
ஐயாற்று அரசே! ஆசைப்
பட்டேன் கண்டாய்; அம்மானே!

9. செடிஆர் ஆக்கைத் திறம் அறவீசிச்
சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டுஎன்
கண் இணை களிகூரப்
படிதான் இல்லாப் பரம்பர னே!உன்
பழஅடி யார் கூட்டம்
அடியேன் காண ஆசைப்
பட்டேன் கண்டாய் அம்மானே!

10. வெஞ்சேல் அனைய கண்ணார்தம்
வெகுளி வலையில் அகப்பட்டு
நைஞ்சேன் நாயேன் ஞானச்சுடரே!
நான்ஓர் துணைகாணேன்;
பஞ்சேர் அடியாள் பாகத்து ஒருவா!
பவளத் திருவாயால்
'அஞ்சேல்!' என்ன ஆசைப்
பட்டேன் கண்டாய், அம்மானே!

திருச்சிற்றம்பலம்

நிலவுலகத்தாரும் மேலுலகத்தாரும் வழிபட்டுப் போற்றும் மேலானவனே! மேலான ஒளிப்பிழம்பே! வருவாயாக! மறுபடி பிறவிக்கு வாராமைக்குக் காரணம் ஆகிய வீட்டுலகைக் கொடுத்து அடியேனை ஆட்கொள்பவனே! உன் ஆயிரம் திருப்பெயர்களைப் போற்றி, அலைந்து திரிந்து, எம் பெருமானே! என்று வணங்க, தெவிட்டாத அமுதமே! நான் ஆசைப்பட்டேன். ஐயனே!

அம்மானே! வீரக்கழல் அணிந்த உன் திருவடிகளைக் கைகளால் தொழுது பொருந்தத் தழுவிக் கொண்டு இளைக்காமல் என் தலைமேல் அவற்றை வைத்து எம் இறைவனே! இறைவனே! என்று, ஐயனே, என் வாயால் கதறி அழல் சேர்ந்த மெழுகு போல் ஆகிவிடத் திருவையாற்று மன்னவனே! அடியேன் ஆசைப் பட்டேன்.

ஒப்பில்லாத மிக மேலாம் இறைவனே! குற்றம் பொருந்திய இந்த உடம்பின் திறத்தை அடியோடு எறிந்து சிவானந்த புரமாகிய நகருள் புகுந்து விளக்கம் மிகுந்த ஒளிவடிவைக் கண்டு என் கண்கள் இரண்டும் மகிழ்ச்சி மீதூரவும் உன் பழ அடியார் திருக்கூட்டத்தினைக் காணப் பெறவும் ஆசைப் பட்டேன், ஐயனே!

விருப்பம் தரும் அழகிய மீன் போன்ற கண்களையுடைய மாதரது கோபம் ஆகிய வலையில் சிக்குண்டு நாயனைய சிறுமையேன் நைந்தேன், மெய்யறிவுக் கதிரே! அடியேனுக்குத் துணை பிறிது ஒன்றும் காண்கிலேன். செம்பஞ்சு ஊட்டிய அழகிய பாதத்தை உடைய உமையம்மையை ஒரு கூற்றில் உடைய ஒப்பற்ற பெருமானே! உன் பவளம் போன்ற திருவாயால் அடியேனை நீ 'அஞ்சேல்' என்று உரைத்தருள ஆசைப் பட்டேன்

## இருப்பத்தாறு

# அதிசயப் பத்து

தம்மையும் அடியார்களுள் ஒருவராக இறைவன் கூட்டிய திருவருளை நினைந்து அடிகள் வியப்புறுதலை விளம்பும் ஆசிரிய விருத்தம் பத்து அமைந்த இத்திருப்பதிகம் திருப்பெருந்துறையில் அருளப் பெற்றதாகும். நீதி ஆவன ஒன்றையும் நினையாதவன், நினைப்பவரொடும் கூடாதவன், பிறந்திறந்து உழல்பவன் ஆகிய எளியேனைப் பெருமான் ஆண்டு அடியரிற் கூட்டியது அதிசயமே என்று கூறுகிறார் அடிகள். ''தன் அடியரிற் கூட்டிய பொய்ந்நெறி நீக்கிய, அதிசயம் கண்டாமே'' என்பது மகுடமாகப் பாக்கள் விளங்குகின்றன.

திருச்சிற்றம்பலம்

1. வைப்புமாடு என்றும் மாணிக்கத்து
   ஒளிஎன்றும் மனத்திடை உருகாதே
   செப்பு நேர்முலை மடவர
   லியர்தங்கள் திறத்திடை நைவேனை
   ஒப்புஇ லாதன உவமனில் இறந்தன
   ஒண்மலர்த் திருப்பாதத்து
   அப்பன் ஆண்டுதன் அடியரில் கூட்டிய
   அதிசயம் கண்டாமே!

2. நீதி யாவன யாவையும் நினைக்கிலேன்
   நினைப்பவ ரொடும் கூடேன்
   ஏத மேபிறந்து இறந்துழல் வேன்தனை
   என்னடி யான்என்று
   பாதி மாதொடும் கூடிய பரம்பரன்
   நிரந்தர மாய்நின்ற
   ஆதி ஆண்டுதன் அடியரில் கூட்டிய
   அதிசயம் கண்டாமே!

3. முன்னை என்னுடை வல்வினைபோயிட
   முக்கண துடைஎந்தை
   தன்னை யாவரும் அறிவதற்கு அரியவன்
   எளியவன் அடியார்க்குப்
   பொன்னை வென்றதோர் புரிசடை முடிதனில்
   இளமதி யதுவைத்த
   அன்னை, ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
   அதிசயம் கண்டாமே!

"முத்தி இலக்கணம்; அதாவது மோட்ச அனுபவம்; மோட்சத்தின் அடையாளம்" இதன் உட்கிடை என்று முன்னையோர் குறித்தனர். "வெருவிமலத்தினை, சீலத்துஒன்றாகும் அடியர் குழாத்துடனே கூட்டும், பரமர் அருட் பெருமை மிகுதியைப் புகழ்ந்து பாடல் அதிசயமே" என்று திருவாசக உண்மை சுட்டுகிறது.

○

நமக்கு நிலையான இடமும் செல்வமும் எனவும் மாணிக்கத்தின் ஒளியாம் எனவும் சிவபெருமானை நினைத்து உருகாமல், சிமிழ் போன்ற கொங்கைகளை உடைய மாதரார் வகையில் மனம் உருகுவேனை, ஒப்பற்றனவும், உவமை கூறப்படும் பொருள்களைக் கடந்தனவும் ஆகிய ஒளி பொருந்திய மலர் அனைய திருவடிகளையுடைய தந்தையாகிய சிவபெருமான் அடியேனை வலிய ஆண்டு கொண்டு தன் அடியார் கூட்டத்திற் சேர்த்த புதுமையைக் கண்டோம்.

நீதியாக இருப்பன எவற்றையும் சிறியேன் நினைப்பதில்லை. அவற்றை நினைப்பவரோடும் நான் சேர மாட்டேன். துன்பப்படுகின்ற என்னை இவன் என் தொண்டன் என்று, திருமேனியிற் பாதி உமையம்மையுடன் கூடி இருக்கப்பெற்ற மிக மேலான இறைவன், இடையீடின்றி நிலைபெற்ற முதல்வன், வலிய வந்து அடியேனை ஆட்கொண்டு தன் அடியார் திருக்கூட்டத்தில் சேர்த்த வியப்பான செய்தியைக் கண்டோம்.

பழைய என் வலிய தீவினைகளை ஒழியும்படி மூன்று கண்களை உடைய எம் தந்தை, தன்னை எல்லாரும் அறிவதற்கு அருமையானவன் ஆயினும் அடியவர்க்கு எளியவன், பொன்னின் ஒளியை வென்று மேம்பட்ட புரிகளாக உள்ள சடையாகிய முடிமேல் பிறையை அணிந்தவன், எம் அன்னையாயிருப்பவன் ஆகிய சிவபெருமான் அடியேனை ஆட் கொண்டருளித் தன் அடியாரொடு சேர்த்த விந்தையைக் கண்டோம்.

4. பித்தன் என்று என்ன உலகவர் பகர்வதோர்
காரணம் இது கேளீர்
ஒத்துச் சென்றுதன் திருவருள் கூடிடும்
உபாயம தறியாமே
செத்துப் போய்அரு நரகிடை வீழ்வதற்கு
ஒருப்படு கின்றேனை
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயம் கண்டாமே!

5. பரவு வாரவர் பாடுசென்று அணைகிலேன்
பன்மலர் பறித்தேத்தேன்
குரவு வார்குழ லார்திறத் தேநின்று
குடிகெடு கின்றேனை
இரவு நின்றெரி ஆடிய எம்இறை
எரிசடை மிளிர்கின்ற
அரவன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயம் கண்டாமே!

6. எண்ணி லேன்திரு நாமம்அஞ் செழுத்தும்என்
ஏழைமை அதனாலே
நண்ண லேன்கலைஞானிகள் தம்மொடு
நல்வினை நயவாதே
மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற்கு
ஒருப்படு கின்றேனை
அண்ணல் ஆண்டுதன் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டாமே!

7. பொத்தை ஊன்சுவர் புழுப்பொதிந்து உளுத்துஅசும்பு
ஒழுகிய பொய்க்கூரை;
இத்தை மெய்யெனக் கருதிநின்று இடர்க்கடலே
சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரில்கூட்டிய
அதிசயம் கண்டாமே!

8. நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்பெய்து
நுகமின்றி விளாக்கைத்து;
தூக்கி முன்செய்த பொய்யறத் துகள் அறுத்து
எழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதான் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டாமே!

அடியேனைப் பித்துப் பிடித்தவன் என்று உலகத்தினர் உரைப்பதற்குக் காரணம் இதுவாகும் கேட்பீர்களாக. இறைவனின் திருத்தொண்டு நெறியில் இணங்கிச் சென்று அவன் திருவருள் சேர்தற்கான வழி அறியாமல் இறந்து போய்ப் பொறுத்தற்கு அரிய நரகினில் சென்று வீழ்வதற்கு மனம் ஒப்பி இருப்பவனைத் தந்தையான சிவபெருமான் ஆண்டருளித் தன் அடியாரோடு சேர்ப்பித்த விந்தையைக் கண்டோம்,

இறைவனைப் போற்றி வழிபாடு செய்பவர் பக்கம் சென்று சேர்ந்திலேன். பலவகை மலர்களைப் பறித்துத் தூவிப் புகழ்ந்து பாடேன். குராமலர் அணிந்த கூந்தலையுடைய மாதர்தம் வழியில் நின்று குடிப்பெருமை அழிகின்ற அடியேனை முடிவுக்காலமாகிய பேரிரவில்நின்று அழல் ஏந்தி ஆடிய எம்பெருமான் நெருப்புப் போன்ற சடை ஒளிவீசுகின்ற, பாம்பணி உடைய இறைவன் அடியேனை ஆண்டு கொண்டருள் புரிந்து தன் அடியாருள் சேர்த்த விந்தையைக் கண்டோம்.

எளியேன் என் அறியாமையினால் இறைவனின் திருப் பெயராகிய ஐந்தெழுத்து மந்திரத்தை நினைந்தேனில்லை. கலை களை உணர்ந்த மெய்யறிஞருடன் சேர்ந்தேனில்லை. பயன்கருதா நல்வினைகளை யான் விரும்பாமல் நிலவுலகில் பிறந்து இறந்து மண்ணாவதற்கு இசைபவனாக இருக்கின்றவனைப் பெருமை மிக்க தலைவனான பெருமான் அடியாரோடு சேர்த்துக்கொண்ட விந்தையைக் கண்டோம்.

துளைகளை உடைய, மாமிசச் சுவர் கொண்டு புழுக்கள் அடங்கி சிதைந்து நிண நீர் பொசிந்து ஒழுகும் பொய் ஆகிய கூரை வீடு [இந்தப் பொய்யுடம்பு] இதனை, மெய் என்று நினைத்து நின்று துன்பக் கடலில் சுழியின் கண் சிக்கிக் கிடப் பேனை, பருமையுள்ள முத்து மாணிக்கம் வயிரம் பவளம் ஆகியவற்றின் ஒளியனைத்தும் திரண்ட முழுவொளியை உடைய எம் தந்தை சேர்த்துக் கொண்ட அதிசயம் கண்டோம்.

எழுகின்ற சுடரான ஒளி வடிவாக விளங்கும் சிவபெருமான் முன்னே தன்னுடன் சேர்ந்திராவண்ணம் என்னை விலக்கி உடம் பாகிய இந்தக் குடிலில் புக வைத்து பக்குவ காலத்தைப் பார்த்து நுட்பமான சொல்லால் எனக்கு அறிவுறுத்து நுகத்தடியில்லாமலே பூட்டி உழுது பிறவியினின்றும் மேலே எடுத்து முன்னே யான் செய்த வீண் செயல்கள் அற்று ஒழியுமாறு குற்றங்கள் நீக்கி என்னைப் பேரின்பத்திற்கு உரியவன் ஆக்கி ஆட்கொண்டு தன் அடியாருள் சேர்த்த அதிசயத்தைக் கண்டோம்.

9. உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்ற வாபெற்ற பயன்அது நுகர்ந்திடும்
பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டாமே!

10. இருள்தி ணிந்தெழுந் திட்டதோர் வல்வினைச்
சிறுகுடில் இது இத்தைப்
பொருள்எ னக்களித்து அருநர கத்திடை
விழப்புகு கின்றேனைத்
தெருளும் மும்மதில் நொடிவரை இடிதரச்
சினப்பதத் தொடுசெந்தீ
அருளும் மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய
அதிசயம் கண்டாமே!

## இருபத்தேழு
## புணர்ச்சிப் பத்து

இறைவனுடன் வேறறக் கலந்திருக்கும் அடிகளின் வேட்கையை, ஆசிரிய விருத்தம் பத்தால் அமைந்த இத்திருப்பதிகம் இயம்புகிறது. திருப்பெருந்துறையில் அருளப் பெற்றது இது. 'என் பொல்லா மணியைப் புணர்ந்தே, புடைபட்டிருப்பது என்று கொலோ? போற்றி நிற்பது என்று கொலோ? பூண்டு கிடப்பது என்று கொலோ? புல்லிப்புணர்வது என்று கொல்லோ'' என்று திருப்பாடல் தோறும் மிளிரும் இறுதியடிகள் பதிகக் கருத்தை விளம்பி நிற்கின்றன. ''நெக்குநெக்கு உள் உருகிஉருகி நின்றும்

திருச்சிற்றம்பலம்

1. சுடர்பொற் குன்றைத் தோளா
முத்தை வாளா தொழும்புஉகந்து
கடைபட் டேனை ஆண்டுகொண்ட
கருணா லயனைக் கருமால்பிரமன்
தடைபட் டின்னும் சார மாட்டாத்
தன்னைத் தந்தஎன் ஆரமுதைப்
புடைபட் டிருப்பது என்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே?

வினைவயத்தால் வந்து சேர்ந்த இவ் உடம்பினால் மிக்க பயனாவது, மணம் உள்ள மலரில் எழுகின்ற மணம் போலப் புலன்களால் பற்றுதற்கு முடியாத நிலைமைத்தான பரம்பொருளை உணர்தலேயாகும். அந்தப் பரம்பொருளைக் கண்டு நுகராது, தாம் தம் வினைக்கு ஈடாக அடையக் கூடிய வழியில் அடைந்த பயனை நுகர்கின்ற அறிவிலிகளாகிய பித்தர்களின் சொல்லை அடியேன் நம்பிவிடாமல் எம் தந்தையாகிய சிவ பெருமான் அடியேனை ஆண்டருளித் தன் அடியாரில் சேர்த்த அதிசயத்தைக் கண்டோம்.

அறியாமைச் செறிவினால் விளைந்த வலிய வினைகளின் காரணமாக எழுந்தது இந்தச் சிறு குடிலாகிய உடம்பு. இதனை நிலையான பொருள் எனக் கருதிக் களிப்புக் கொண்டு, பொறுத்தற்கு அரிய நரகத்திடை விழப் போகின்ற சிறியேனைத் தெளிவு சான்ற, மதில் சூழ்ந்த முப்புரங்களை நொடிப் பொழுது ஆகிய அளவினில் தகர்ந்து போகு வெகுளிக் குறிப்புடன் செந்தீக் கதுவ அருளிய மெய்ந்நெறி காட்டும் பெருமான், அடியேனை நிலையாமை வழியினின்று விடுவித்த அதிசயத்தைக் கண்டோம்,

○

கிடந்தும் எழுந்தும் நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தியும் பலவகையாகக் கூத்தாடியும் பெருமானின் செக்கர் மேனியைத் திகழ நோக்கிச் சிலிர்த்துச் சிலிர்ப்புக்கு நிற்பது என்று கொலோ?'' என்ற உணர்ச்சிச் சித்திரம் அடிகளின் ஆழ்ந்த உயர் விருப்பை நம் மனத்தில் அழுத்தமாக சுவடு பதித்து விடுகிறது.

''அத்துவித இலக்கணம்; அதாவது பதியும் பசுவும் (இறைவனும் உயிரும்) ஒன்றும் அல்ல இரண்டும் அல்ல என்றல்; அத்துவிதானந்த இலக்கணம்'' என்பது பதிக உட்கிடை என்ப. ''ஆண்ட குருவைப் பிரியாது அணைந்து பணிபுரிந்து மிகும் அன்போடு இன்பம் பூண்டு கிடக்கப் பெறுவது என்று கொலோ எனும் புணர்ச்சிப் பத்தாம்'' என்பது திருவாசக உண்மை கூறும் அடிக்கருத்து.

○

ஒளிர்கின்ற பொன்மலை போல்வானை, தொளைக்கப் படாத முத்துப் போல்வானை, பயனற்ற அடியேனின் தொண்டினை ஏற்றுக் கொண்டு கடையான எளியேனை ஆட் கொண்டருளின அருள்நிலையம் ஆனவனை, கரிய திருமாலும் பிரமனும் இன்னமும் தடையுற்றுச் சார்தற்கு இயலாத தன்னை அடியேற்குத் தந்தருளிய என் கிடைத்தற்கு அரிய அமுதம் ஆனவனை, என் முழுமணி போல்வானை இரண்டறச் சேர்ந்து அணுகி யிருப்பது எந்நாளோ?

2. ஆற்ற கில்லேன் அடியேன்; அரசே!
அவனி தலத்துஐம் புலன்ஆய
சேற்றில் அழுந்தாச் சிந்தை செய்து
சிவன்எம் பெருமான் என்றேத்தி
ஊற்று மணல்போல் நெக்குநெக் குள்ளே
உருகி ஓலம் இட்டுப்
போற்றிப் புகழ்வது என்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே,

3. நீண்ட மாலும் அயனும் வெருவ
நீண்ட நெருப்பை, விருப்பிலேனை
ஆண்டு கொண்ட என்னா ரமுதை
அள்ளூறு உள்ளத்து அடியார்முன்
வேண்டும் தன்னையும் வாய்விட் டலறி
விரையார் மலர்தூவிப்
பூண்டு கிடப்பது என்றுகொல் லொஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே

4. அல்லிக் கமலத்து அயனும் மாலும்
அல்லா தவரும் அமரர் கோனும்
சொல்லிப் பரவும் நாமத் தோனைச்
சொல்லும் பொருளும் இறந்த சுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறைஇன் அமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வது என்று கொல்லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

5. திகழத் திகழும் அடியும் முடியும்
காண்பான் கீழ்மேல் அயனும் மாலும்
அகழப் பறந்தும் காண மாட்டா
அம்மான் இம்மா நிலமுழுதும்
நிகழப் பணிகொண்டு என்னை ஆட்கொண்டு
ஆ!ஆ! என்ன நீர்மை எல்லாம்
புகழப் பெறுவது என்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே

இறைவா! அடியேன் பொறுக்க இயலாதேன், நிலவுலகில் ஐம்புலப் பொருள்களாகிய சேற்றில் அழுந்தி நொந்து சிவபெருமானே எம்பெருமான் என்று சிந்தை செய்து துதித்து, மணல் ஊற்றுப் போல் உள்ளே நெகிழ்ந்து மனம் உருகி, ஓலம் என்று முறையிட்டு என் முழுமணியாகிய உன்னைச் சேர்ந்து வணங்கிப் புகழ்வது எந்த நாளிலோ?

திரிவிக்கிரமனாக நீண்டு உயர்ந்த திருமாலும் அயனும் அஞ்சுமாறு ஓங்கி நின்று அனல் மலையானவனை, தன்னிடம் சற்றும் விருப்பம் இல்லாதிருந்த எளியேனை ஆண்டுகொண்டருளின என் கிடைத்தற்கு அரிய அமுதம் போல்வானை, மிகுதியாக இன்பம் ஊறும் மனத்தினை உடைய அடியார்களின் முன்னால் வேண்டும் அளவும் வாய்விட்டுக் கதறி மணம் பொருந்து மலர்களைத் தூவி அவனிடம் அடிமைத்திறம் பூண்டு என் முழு மணியாகிய பெருமானோடு கூடிச் செயலற்றிருப்பது எந்நாளோ?

அகவிதழ்கள் உடைய தாமரையை இருப்பிடமாகக் கொண்ட பிரமனும், திருமாலும், அவர்கள் அல்லாத தேவர்களும், அவர்களின் தலைவன் ஆகிய இந்திரனும் புகழ்ந்து போற்றுதற்கு உரிய திருப்பெயர் உடையவனை, சொல்லும் பொருளும் கடந்து நின்ற ஒளிவண்ணனை, நெல்லிக் கனியும் தேனும் பாலும் நிறைந்த இனிய அமுதமும் போல்வானை, அமுதின் சுவையனையானை, என் முழுமாணிக்கத்தை, இறைவனைத், தழுவிச் சேர்ந்திருப்பது எக்காலமோ?

மிக உயர்ந்து விளங்கும் பெருமானின் திருவடியையும் திருமுடியையும் காணும் பொருட்டுக் கீழும் மேலும் ஆகத் திருமாலும் பிரமனும் மண்ணை அகழ்ந்தும் விண்ணில் பரந்தும் காண ஒண்ணாதிருந்த அழகிய பெரியோன் இப் பேருலகம் எல்லாம் நிகழுமாறு பணிகொண்டருளி அடியேனை ஆட்கொண்டு 'அந்தோ!' என்று இரங்கி அருளின தன்மைகள் யாவற்றையும் என் பொல்லா மணியாகிய இறைவனைச் சேர்ந்து புகழ்ந்து பேசப் பெறுவது எந்நாளோ?

6 பரிந்து வந்து பரமா னந்தம்
பண்டே அடியேற்கு அருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தில்
அருமால் உற்றேன் என்றென்று
சொரிந்த கண்ணீர் சொரிய உண்ணீர்
உரோமம் சிலிர்ப்ப உகந்தன்பாய்
புரிந்து நிற்பது என்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே

7. நினையப் பிறருக்கு அரிய நெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பை
தனைஒப் பாரை இல்லாத் தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்த கண்டம்
கனையக் கண்ணீர் அருவிபாயக்
கையும் கூப்பிக் கடிமலரால்
புனையப் பெறுவது என்றுகொல் லோஎன்
பொல்ல r மணியைப் புணர்ந்தே

8 நெக்கு நெக்குள் ளுருகியுருகி
நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்துநவிற்றிச்
செக்கர் போலும் திருமேனி
திகழ நோக்கிச் சிலிர்சிலிர்த்துப்
புக்கு நிற்ப தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே

9 தாதாய் மூவேழ் உலகுக்கும்
தாயே! நாயேன் தனைஆண்ட
பேதாய்! பிறவிப் பிணிக்கோர் மருந்தே!
பெருந்தேன் பில்க எப்போதும்
ஏதாம் மணியே! என்றுஎன்று ஏத்தி.
இரவும் பகலும் எழிலார்பாதம்
போதாய்ந்து அணைவது என்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே

10. காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதும்
கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கு எல்லாம்
மூப்பாய் மூவா முதலாய் நின்ற
முதல்வா முன்னே எனைஆண்ட
பார்ப்பா னே ! எம் பரமா என்று
பாடிப் பாடிப் பணிந்து பாதப்
பூப்போது அணைவது என்றுகொல்லோஎண்
பொல்லா மணியைப் புணர்ந்தே.

திருச்சிற்றம்பலம்

இறைவன் பரிவு கொண்டு ஆசானாக எழுந்தருளி மேலான இன்பத்தை முன்னமே அடியேனுக்கு அருள் செய்யவும் அவனைப் பிரிந்து வந்து பெரிய இந்த நிலவுலகில் போக்குதற்கு அரிய மயக்கத்தை அடைந்தேன் எனப் பல முறை வருந்திச் சிந்தும் கண்ணீரொடு மனத்தின் இயல்புகளும் சொரிய மெய்ம்மயிர் சிலிர்ப்ப விரும்பி அன்புருவமாகி என் முழுமணியைச் சேர்ந்து இடைவிடா விருப்பத்தோடு நிற்பது எந்நாளோ?

அடியரல்லாத பிறர்க்கு நினைத்தற்கும் அரிய நெருப்பு நீர் காற்று நிலம் வானம் என்று இருப்பவனை, தனக்கு ஒப்பா வார் எவரும் இல்லாத் தனிப் பொருளாம் பெருமானைக் கண்டு உடல் பூரித்துத் தொண்டை தழுதழுக்கக் குரல் மிகத் தோன்ற, கண்ணீர் அருவியாய்ப் பொழியக் கைகளையும் குவித்து, மணம் தங்கிய மாலைகளைக் கொண்டு என் முழுமணியைக் கூடி அலங் கரிக்கப் பெறுதல் எந்நாளோ?

மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகி அதனால் நின்று கொண்டும் அமர்ந்தும் தாழக் கிடந்து எழுந்தும் நகைத்தும் அழுதும் தொழுதும் எம்பெருமானைப் புகழ்ந்து பல வகையாகக் கூத்தாடியும் செவ்வானம் போன்ற அவனது மேனி அழகை உள்ளத்தில் விளங்க நோக்கி உடம்பு சிலிர்க்கப் பெற்று என் முழுமணியை அடைந்து வேறறக் கூடியிருப்பது எக்காலமோ?

பழமையான ஏழு உலகங்களுக்கும் தந்தையே! தாயாகவும் இருப்பவனே! நாய் போன்ற சிறுமைக் குணமுள்ள என்னை ஆட் கொண்ட பெரிய பேதையே! பிறவியாகிய நோய்க்கு ஒப்பற்ற மருந்தே! ஒளிகட்குக் காரணமான மாணிக்க மணியே! என்று பலகால் போற்றி இரவிலும் பகலிலும் அழகு நிறைந்த திருவடித் தாமரையை ஆராய்ந்து என் முழுமணியைக் கூடிப் பேரின்பத் தேன் எப்போதும் சிந்த அடைவது எக்காலமோ?

யாவற்றையும் படைத்துக் காத்து மறைப்பவனே! பெருமை அமைந்த வானிலுள்ள தேவர்கள் எல்லார்க்கும் மூத்தவனாக, முதிராத முதற் பொருளாக நிலைபெற்றிருந்த முதல்வனே! ஆட் படும் தன்மை வருதற்கு முன்பே என்னை ஆண்டருளின அறி ஞனே! எங்கள் மேலோனே! என்று பலகால் பாடி வணங்கி என் முழுமணியைக் கூடி, திருவடியாகிய பொலிவினையுடைய தாமரை மலரை அடையப் பெறுவது எக் காலமோ?

## இருபத்தெட்டு

# வாழாப் பத்து

ஆசிரிய விருத்தம் பத்து அடங்கிய இத் திருப்பதிகம் திருப்பெருந்துறையில் அருளப் பெற்றதாகும். ''புகழொடு பொலிபவனே, சிவபுரத்து அரசே, திருப்பெருந்துறையுறை சிவனே, அடியேனுக்கு வேறு ஒரு பற்றும் இல்லை. ஆண்ட நீ அருளவில்லை என்றால் யான் யாரொடு நோகேன் ஆரிடம் சொல்வேன்; இவ்வுலகில் வாழ்கிலேன்; வருக என்று அழைத்தருள்க'' என்று வேண்டுகிறார் அடிகள். ''பற்றுநான் மற்றிலேன் கண்டாய்'' என்ற உறுதிமொழி பாடல்தொறும் வருகின்றது. அவ்வாறே ''வாழ்கிலேன் கண்டாய், வருக என்றருள் புரியாயே'' என்பது ஒன்பது பாடல்களில் முடியடியாகவும் விளங்குகின்றது. அவை அடிகளின் உளப்பாங்கை உயிரோவியமாகக் காட்டுகின்றன

திருச்சிற்றம்பலம்

1. பாரொடு விண்ணாய்ப் பரந்தஎம் பரனே!
 பற்றுநான் மற்றிலேன் கண்டாய்!
சீரொடு பொலிவாய்! சிவபுரத்து அரசே!
 திருப் பெருந் துறைஉறை சிவனே!
ஆரொடு நோகேன், ஆர்க்கெடுத்து உரைக்கேன்,
 ஆண்டநீ அருளிலை யானால்?
வார்கடல் உலகில் வாழ்கிலன் கண்டாய்;
 வருகஎன் றருள்புரி யாயே!

2 வம்பனேன் தன்னை ஆண்டமா மணியே!
 மற்றுநான் பற்றிலேன் கண்டாய்;
உம்பரும் அறியா ஒருவனே! இருவர்க்கு
 உணர்விறந்து உலகம்ஊ டுருவும்
செம்பெரு மானே சிவபுரத்து அரசே;
 திருப்பெருந் துறைஉறை சிவனே!
எம்பெரு மானே! என்னைஆள் வானே!
 என்னைநீ கூவிக்கொண் டருளே!

3. பாடிமால் புகழும் பாதமே அல்லால்
 பற்றுநான் மற்றிலேன் கண்டாய்;
தேடிநீ ஆண்டாய், சிவபுரத்து அரசே!
 திருப்பெருந் துறையுறை சிவனே!
ஊடுவது உன்னோடு உவப்பதும் உன்னை
 உணர்த்துவது உனக்குஎனக்கு உறுதி
வாடினேன இங்கு வாழ்கிலேன் கண்டாய்
 வருக என்று அருள்புரி யாயே!

''நீண்டஉலக கத்தினிற்பற்று ஒன்றிலேன் இவ் வுடற்கண் நின்று வாழேன், மாண்தகுநின் பதநிழற்கீழ் வருக அருள்புரி எனும்சொல் வாழாப் பத்தே'' என்பது திருவாசக உண்மை தரும் மையக்கருத்து. ''முத்தி உபாயம்; அதாவது பிரபஞ்ச மயல்நீங்கி முத்தியை அடைதற்கு உபாயம் உணர்த்தல்'' என்பது இதன் உட்கிடை என்றனர் முந்தையோர்.

O

மண்ணும் விண்ணுமாகி எங்கும் பரந்திருக்கும் எங்கள் மேலோனே! அடியேன் வேறு பற்றுக் கோடு இல்லாதவன்; சிறப்புடன் திகழ்பவனே! சிவமா நகரின் தலைவனே! திருப் பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! எளியேனை ஆண்டருளிய நீயே அருள் செய்யா விடில் யான் யாரிடம் நொந்து கொள்வேன்? யாரிடம் எடுத்துச் சொல்லுவேன்? நெடிய கடல் சூழ்ந்த நிலவுலகில் யான் வாழ்தற்கு இயலாதேன் ஆகலின் அடியேனை 'வருவாய்!' என்று உன்னிடம் அழைத்து அருள் செய்வாயாக!

பயனும் பக்குவமும் இல்லாத எளியேனை ஆண்டு கொண்ட சிறந்த மாணிக்க மணி போல்பவனே! அடியேன் வேறு பற்றுக் கோடு இல்லாதவன். வானோரும் அறிய முடியாத ஒப்பற்ற பெருமானே! திருமால் அயன் ஆகிய இருவரது அறிவைக் கடந்து ஊடுருவி மேற் சென்ற செம்மேனிப் பெரும் பொருளே! சிவ வுலகின் தலைவனே! திருப்பெருந்துறைக் கண் வீற்றிருக்கும் சிவபெருமானே! எங்களுக்குத் தனியுரிமையுள்ள இறையவனே! எளியேனை ஆள்வோனே! 'வருக!' என்று இவ் எளியேனை அழைத்தருள்வாயாக.

திருமால் பாடிப் புகழும் உன் திருவடிகளை அன்றி அடி யேனுக்கு வேறு ஆதரவு இல்லை. அடியேனைத் தேடி வலிய வந்து ஆட்கொண்டாய்; சிவ வுலகின் மன்னவனே! திருப்பெருந் துறைக்கண் வீற்றிருக்கும் சிவபெருமானே! அடியேன் பிணங்கு வதும் உன்னோடே; மகிழ்வதும் உன்னாலே; அடியேனுக்கு உறுதி உணர்த்துவது உனக்கு உரியதே. வாட்டம் உற்றேன், இம் மண்ணுலகில் வாழ முடியாதவன் ஆயினேன், 'வருக' என்று அழைத்தருள் புரிவாயாக!

4. வல்லைவாள் அரக்கர் புரம்எரித் தானே!
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்;
தில்லைவாழ் கூத்தா! சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
எல்லைமூ வுலகும் உருவிஅன்று இருவர்
காணுநாள் ஆதிஈறு இன்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரி யாயே!

5. பண்ணினேர் மொழியாள் பங்கநீ அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே ஆண்டாய்; சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
எண்ணமே உடல் வாய் மூக்கொடு செவிகண்
என்றுஇவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரி யாயே.

6. பஞ்சின்மெல் அடியாள் பங்க! நீ அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்;
செஞ்செவே கண்டாய், சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ அளித்த
அருளினை மருளினால் மறந்த
வஞ்சனேன் இங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரியாயே!

7. பருதிவாழ் ஒளியாய்! பாதமே அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருஉயர் கோலச் சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
கருணையே நோக்கிக் கசிந்துளம் உருகக்
கலந்துநான் வாழுமாறு அறியா
மருளனேன் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரி யாயே!

வாளேந்திய அசுரரின் ஊர்மூன்றையும் விரைவாக அழித்த வனே! அடியேற்கு வேறு பற்றுக்கோடு இல்லை. தில்லையில் வாழும் கூத்தப் பிரானே! சிவவுலகின் மன்னவனே! திருப்பெருந் துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே! முன்பு மூவுலகின் எல்லைகளையும் ஊடுருவி மால் அயன் இருவரும் உன்னைக் காண முயன்ற போது உனக்கு முதலும் முடிவும் இல்லை என்று விளங்க வலிமையுடன் வளர்ந்தாய்; இப் புவியில் வாழ விருப்பமில்லேன். ஆகலின் அடியேனை 'வருக' என்று அழைத்தருள்வாயாக!

பண்போன்று இனிய மொழி பேசும் உமையம்மையைப் பாகமாக உடையவனே! உன்னைத் தவிர வேறு பற்று இல்லா தவன் அடியேன். உறுதியுற அடியேனை ஆட்கொண்டாய். சிவ வுலகின் தலைவனே! திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவ பெருமானே! எளியேன் எண்ணம் உடல் சொல் மூக்கு காது கண் என்ற அகப்புறக் கருவிகளாகிய இவற்றை உன்னிடத்தே வைத்தேன். இம் மண்ணுலகில் வாழ முடியாதேன்; ஆகலின்'வருக' என்று அடியேனை அழைத்தருள்வாயாக.

பஞ்சுபோன்ற மெல்லிய பாதங்கள் உள்ள உமையம்மை யினை ஒரு கூறாக உடையவனே! உன்னையன்றி வேறு ஆதரவு இல்லாதவன் அடியேன். என்னை மிகச் செவ்விதாக ஆட்கொண் டாய். சிவவுலகின் கோமானே! திருப்பெருந்துறை அமர்ந்த சிவ பெருமானே! எளியேனை நீ ஆட்கொண்டு காத்தற்குக் காரண மான உன் அருளினை மயக்கத்தால் மறந்த நாயனைய இழிந்த தகைமையுடையேன் அஞ்சினேன். வஞ்சம் உடையவன். இவ் வுலகில் வாழ இயலாதேன், 'வருக!' என்று எளியேற்கு அருள் செய்வாயாக!

கதிரவனுக்கு வாழும் ஒளியாய் விளங்குபவனே! உன் அடிகள் அல்லாது வேறு பற்றுக்கோடு இல்லாதவன், மேன்மை யால் உயர்ந்த அழகுடைய சிவபுரத்துக் கோமானே! திருப்பெருந் துறைக்கண் வீற்றிருக்கும் சிவபெருமானே! உன் திருவருளை நினைந்து கசிந்து உருகி, உன்னோடு கலந்து வாழும் வகை தெரியாத மயக்கம் உடையவன் அடியேன். இவ்வுலகில் வாழ் தற்கு இயலாதேன், 'வருக' என்று அடியேனை அழைத்தருள் புரி வாயாக.

8. பந்துஅணை விரலாள் பங்க!நீ அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்;
செந்தழல் போல்வாய் சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
அந்தமில் அமுதே! அரும்பெரும் பொருளே!
ஆரமு தேஅடி யேனை
வந்துய ஆண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரி யாயே

9. பாவநா சா!உன் பாதமே அல்லால்
பற்றுநான் மற்றுஇலேன் கண்டாய்
தேவர்தம் தேவே; சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
மூவுலகு உருவ இருவர்கீழ் மேலாய்!
முழங்குஅழ லாய்நிமிர்ந் தோனே!
மாவுரி யானே! வாழ்கிலேன் கண்டாய்;
வருகஎன்று அருள்புரியாயே!

10. பழுதில் தொல் புகழாள் பங்க!நீ அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்;
செழுமதி அணிந்தாய்! சிவபுரத்து அரசே!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணைஎன நினைவனோ கண்டாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன்று அருள்புரி யாயே!

திருச்சிற்றம்பலம்

## இருபத்தொன்பது
## அருட் பத்து

பத்து ஆசிரிய விருத்தங்கள் கொண்ட இத்திருப்பதிகம் திருப்பெருந்துறைக்கண் அருளப் பெற்றதாகும். ஆங்கு ஆசானாக எழுந்தருளித் தம்மை ஆட்கொண்ட பெருமானைச் ''சோதியே, சுடரே, சூழ்ஒளிவிளக்கே, நீதியே, ஆதியே, நிருத்தனே, நிமலா, நாயகனே, உயிர்த்தலைவா'' என்றெல்லாம் ஆர்வமாக அழைக்கும் அடிகள் ''அடியேன் விரும்பி அழைத்தால் அது என்ன

பந்து சேர்ந்த விரல்களை உடைய உமையம்மையின் பங்கனே! உன்னை அன்றி அடியேற்குப் பற்று வேறு இல்லை. சிவந்த நெருப்புப் போல்பவனே, சிவ வுலகின் அரசனே! திருப் பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமானே! முடிவிலா நிலை யுதலே! அடைதற்கு அரிய பெரிய பொருளாக விளங்குபவனே! நிறைவாகிய சாவா மருந்தே! எளியேன் கடைத்தேறுமாறு எளி வந்து தோன்றி ஆட்கொண்டனை. இவ்வுலகில் வாழ்தற்கு ஒருப்படேன் யான், பெருமானே! 'வருக' என்று எளியேனை அழைத்தருள்வாயாக!

பாவங்களை அழிப்போனே! உன் திருவடிகள் அன்றி வேறு பற்றுதல் இல்லாதவன். தேவதேவனே! சிவவுலகின் மன்னவனே! திருப்பெருந்துறை மேவிய சிவபெருமானே! உலகம் மூன்றையும் ஊடுருவி மாலும் அயனும் கீழும் மேலும் சென்று தேட, ஓலிட்டு எரியும் தீ வடிவமாக ஓங்கி நின்றவனே யானைத்தோல் போர்த்தவனே! அடியேனை 'வருக' என்று அருள்புரிவாயாக!

கெடுதல் இல்லாத பழம் புகழ் உடையவனே! அடியேனுக்கு உன்னையன்றி வேறு பற்றுக்கோடு இல்லை, செழுமையான பிறையை அணிந்தவனே! திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே! உன்னை யன்றிப் பிறரை அடியேன் வணங்கு வனோ, வாழ்த்துவனோ? எனக்கு ஒருதுணை என்ற கருதுவனோ? உரைப்பாயாக. இளங்காளையை ஊர்தியாக உடையவனே, அடியேனை நின்பால் 'வருக' என்று அழைத்தருள் புரிவாயாக!

○

என்று கேட்டருள வேண்டாவா?'' என்று குறையிரந்து கொள் கிறார். ''அடியேன் ஆதரித்து அழைத்தால் அதெந்துவே என்று அருளாயே,' என்பது மகுடமாகப் ஒன்பது பாடல் தோறும் மிளிர்கிறது, 'ஆதரித்து அழைத்தால் கயிலை புகுநெறி இதுகாண் என்றருளாயே' என்பது முடிமணி உரை. ''மகாமாயாசுத்தி; அதாவது மாயையினின்றும் விலகுதல்'' இதன் உட்கிடை என்பது முந்தைக்குறிப்பு. ''சோதி அருள் சுடர்விளக்கே துயர் பிறவிக் கடல் விடுத்து உன் தாள் சேர்தற்கு, ஆதரித்து இங்கு உனை அழைத்தால் அதெந்து எனக்கேள் எனும் சொல் அருட்பத்தாம்'' என்பது திருவாசக உண்மை தெரிவிக்கும் மையக்கருத்து. ○

திருச்சிற்றம்பலம்

1. சோதியே! சுடரே! சூழ்ஒளி விளக்கே!
சுரிகுழல் பணைமுலை மடந்தை
பாதியே! பரனே! பால்கொள்வெண் ணீற்றாய்!
பங்கயத்து அயனுமால் அறியா
நீதியே! செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே! அடியேன் ஆதரித்து அழைத்தால்
'அதெந்துவே?' என்றுஅரு ளாயே.

2. நிருத்தனே! நிமலா! நீற்றனே! நெற்றிக்
கண்ணனே! விண்ணுளோர் பிரானே!
ஒருத்தனே! உன்னை ஓலமிட்டு அலறி
உலகெலாம் தேடியும் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே! அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே!' என்றரு ளாயே.

3. எங்கள்நா யகனே! என்னுயிர்த் தலைவா!
ஏலவார் குழலிமார் இருவர்
தங்கள்நா யகனே! தக்கநற் காமன்
தனதுடல் தழல்எழ விழித்து
செங்கண்நா யகனே ! திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே?' என்றரு ளாயே!

4. கமலநான் முகனும் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற்கு அரிய
விமலனே 'எமக்கு வெளிப்படாய்' என்ன
வியன்தழல் வெளிப்பட்ட எந்தாய்!
திமிலநான் மறைசேர் திருப்பெருந்துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே! அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே!' என்றரு ளாயே!

ஒளிப் பிழம்பே; சுடரே; சூழ்ந்த ஒளியுடைய விளக்கே! சுருள் கூந்தலும் பருத்த மார்பும் உடைய இளைய மாதாகிய உமையம்மையின் பங்கனே! மேலோனே! பால் போலும் நிறம் உடைய வெண்ணீறு அணிந்தவனே! தாமரை மலர் மேல் இருக்கும் பிரமனும் திருமாலும் அறிந்திரா நீதி வடிவே! செல்வம் மிக்க திருப்பெருந் துறையில் மலர் நிறைந்த குருந்த மரத்தின் கீழ் அமர்ந்த சிறப்புடைய முதற் பொருளே! எளியேன் உன்னை வேண்டி அழைத்தால் 'அது என்ன? என்று கேட்டருள்வாயாக.

கூத்தப் பெருமானே. மாசிலனே, திருநீறு அணிந்தவனே, நெற்றியில் விழியுடையவனே! வானவர் தலைவனே, ஒப்பற்றவனே! முறையிட்டு அழைத்து ஊரெலாம் தேடியும் உன்னைக் காண்கிலேன். செவ்விய திருக்குளங்கள் அமைந்திருக்கும் திருப்பெருந்துறையில் வளமாக மலர்கள் உள்ள குருந்த மரத்தின் கீழ் எழுந்தருளிய மெய்ப் பொருளே! அடியேன் விரும்பி உன்னை அழைத்தால்; அது என்ன? என்று கேட்டருள்வாயாக.

எங்கள் இறைவனே! என் ஆருயிர்த் தலைவனே! மயிர்ச் சாந்து அணிந்த நெடுங் கூந்தல் மாதரார் உமையம்மை, கங்கை ஆகியோரின் கணவனே! நல்ல அழகனான காமனின் உடல் தீப் பற்றுமாறு விழித்த செங்கண் இறைவனே! திருப்பெருந் துறையில் வளமான மலர்கள் மிகுந்த குருந்த மரத்தின் கீழ் தங்கிய சிறப்புள்ள அருள்நோக்கம் உடைய பெருமானே, அடியேன் விரும்பி அழைத்தால் 'அது என்ன' என்று கேட்டு அருள் வாயாக.

தாமரை மலர்மேல் அமர்ந்திருக்கும் நான்முகனாகிய பிரம தேவனும் கரியமுகில் போலும் வண்ணம் உடைய கண்ணனும் அடைதற்கு அரிய, என்றும் மாசணுகாப் பெருமானே! அவர்கள் தம் பொருட்டுக் "காட்சி தருக" என்று வேண்டிக் கொள்ளப் பெரிய நெருப்பாக வெளிப்பட்ட எங்கள் தந்தையே! மறை நான்கு முழங்கும் பேரொலி கேட்கும் திருப்பெருந்துறையில் வளமலர் நிறைந்த குருந்த மரத்தின் கீழ் அமர்ந்த சீருடைத் தூயவனே/ அடியேன் விரும்பி அழைக்க, 'அது என்ன? ' என்று கேட்டருள்வாயாக.

5. துடிகொள்நேர் இடையாள் சுரிகுழல்மடந்தை
துணைமுலைக் கண்கள்தோய்சுவடு
பொடிகொள்வான் தழலில் புள்ளிபோல்இரண்டு
பொங்கொளி தங்குமார் பினனே!
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந்துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே! அடியேன் ஆதரித்தழைத்தால்
'அதெந்துவே?' என்றரு ளாயே!

6. துப்பனே! தூயாய்! தூயவெண் ணீறு
துதைந்துஎழு துளங்கொளி வயிரத்து
ஒப்பனே! உன்னை உள்குவார் மனத்தின்
உறுசுவை அளிக்கும் ஆரமுதே!
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையின்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே! அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே? என்றரு ளாயே.

7. மெய்யனே! விகிர்தா! மேருவே வில்லா
மேவலர் புரங்கள்மூன்று எரித்த
கையனே! காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்புஅன்ன மேனிச்
செய்யனே! செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே! அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே?' என்றரு ளாயே.

8. முத்தனே! முதல்வா! முக்கணா! முனிவா!
மொட்டறா மலர்பறித்து இறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார்
பரகதி கொடுத்தருள் செய்யும்
சித்தனே! செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே! அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே?' என்றரு ளாயே.

உடுக்கையின் இடைபோன்ற இடையினையும் சுருள் கூந்தலையும் உடைய உமையம்மையின் இரண்டாகிய மார்புக் கண்களின் அடையாளம் நீறு பூத்த நெருப்பில் புள்ளி போல் தங்கும் ஒளிமிக்க மார்பினனே! புதர்கள் உள்ள பெரிய சோலைகள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் வளமான மலர்கள் உள்ள குருந்தமரத்தின் கீழ் அமர்ந்த அண்ணலே! அடியேன் விரும்பி அழைத்தால் 'அது என்ன?' என்று கேட்டருள்வாயாக.

பவளம் போன்ற மேனியனே! தூயவனே! நல்ல வெண்ணிறத் திருநீறு படிந்து மின் ஒளிர் வயிரம் போல்பவனே! உன்னை விடாது உள்ளத்துள் நினைப்பவர் மனத்தில் நிலைத்த சுவை தந்து இனிக்கும் அரிய அமுதமே! செம்மையான மறைகள் சேர்ந்து ஒலிக்கும் திருப்பெருந்துறையில் வளமான மலர்கள் விளங்கும் குருந்த மரத்தின் கீழ் அமர்ந்த அப்பனே! அடியேன் விரும்பி அழைத்தால் 'அது என்ன?' என்று அருள்வாயாக.

மெய்ம்மையே வடிவானவனே! வேறுவேறு வடிவம் கொள்பவனே! மேருமலையை வில்லாகக் கொண்டு மாற்றாரின் ஊர்கள் மூன்றை நீறு ஆக்கின கையனே! காலனைக் காலினாற் கடிந்த கடுநெருப்புத் திரள் போன்ற நிறம் உடைய செம்மையனே! வளம்மிக்க திருப்பெருந்துறையில் மலர்கள் மிகுந்த மரத்தின் கீழ் அமர்ந்த தந்தையே, அடியேன் விரும்பி அழைத்தால் 'அது என்ன?; என்று கேட்டருள்வாயாக.

இயல்பாகவே கட்டுகளின்றும் விடுபட்டவனே! முதன்மையானவனே! கண் மூன்று உடையவனே! முனிவனே! அரும்புத் தன்மை மாறா மலர்களைக் கொய்து அவற்றைத் தூவி வணங்கி அன்புடன் நினைந்து வழிபடுவார்க்கு மேனிலை தந்து அருள் புரியும் பேரறிஞனே; வளமிக்க திருப்பெருந் துறையில் மலர் மிக்க குருந்த மரத்தின் கீழ் அமர்ந்த தந்தையே! அடியேன் விரும்பி அழைத்தால் 'அது என்ன?' என்று கேட்டருள்வாயாக.

9 மருளனேன் மனத்தை மயக்குஅற நோக்கி
மறுமையோடு இம்மையும் கெடுத்த
பொருளனே! புனிதா! பொங்குவாள் அரவம்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்!
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே! அடியேன் ஆதரித் தழைத்தால்
'அதெந்துவே' என்றரு ளாயே!

10 திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
இருந்தவாறு எண்ணி ஏசறா நினைந்திட்டு
என்னுடை எம்பிரான் என்றென்று
அருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்
அலைகடல் அதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி இதுகாண்
போதராய் என்றரு ளாயே

திருச்சிற்றம்பலம்

முப்பது

## திருக்கழுக்குன்றப் பதிகம்

ஏழு ஆசிரிய விருத்தங்கள் உள்ள இப்பதிகம் அருளப் பெற்ற தலத்தால் பெயர் பெற்றிருக்கிறது; 'காட்சிப் பத்து' என்று இது பெயர் பெற்றிருக்கக்கூடும்; பத்துத் திருப்பாக்கள் இருந்திருக்கக் கூடும் எனவும் கருத இடமுண்டு.

'வந்து காட்டினாய் கழுக்குன்றிலே' என்று ஒவ்வொரு பாடற்கும் மகுடம் அமைந்துள்ளது. உண்மையே வடிவெடுத்த ஆசான் 'ஆகியவனின் காட்சி-சற்குரு தரிசனம் மறுபடி அடிகட்குத்

திருச்சிற்றம்பலம்

1. பிணக்குஇ லாதபெ ருந்துறைப்பெரு
மான்!உன் நாமங்கள் பேசுவோர்க்கு
இணக்குஇ லாததோர் இன்ப மேவரும்;
துன்ப மேதுடைத்து எம்பிரான்!
உணக்குஇ லாததோர் வித்து மேல்விளை
யாமல் என்வினை ஒத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீ வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

மயக்கம் உடையேனாகிய அடியேன் மனத்தின் மயக்கம் அற்றுப் போக அருட்பார்வை செலுத்தி மறுமை இம்மைப் பிறவி களைப் போக்கியருளும் மெய்ப் பொருள் ஆனவனே! தூயனே! சீறும் ஒளியுடைப் பாம்பும் கங்கையும் தங்கும் சிவந்த நிறமுள்ள சடைமுடி உடையவனே! தெளிவு தரும் நான்கு மறைகளும் தங்கி ஒலிக்கும் திருப்பெருந் துறைக் கண் மலர்மிக்க குருந்த மரத்தின் அடியில் அமர்ந்த சிறப்புள்ள அருளாளனே! பெரு மானே! அடியேன் விரும்பி அழைத்தால் 'அது என்ன?' என்று கேட்டு அருள்வாயாக.

செம்மையான நெடிய சோலைகள் சூழ்ந்த திருப்பெருந் துறையில் வளமலர் பொலியும் குருந்த மரத்தின் கீழ் அமர்ந்த சிறப்பே வடிவான சிவபரம் பொருள் இருந்த தன்மையை நினைந்து துயருடன் மீட்டும் அதனை எண்ணி, 'என்னை ஆளாக உடையவனே, எம் பெருமானே' என்று பலவாறாக அரிய தவ வடிவான இறைவனே! உன்னை அன்பு கூர விரும்பி அழைத்தால் ''அலையெறியும் பிறவிக் கடற்குள் இருந்து விடுபட்டு என்னிடம் சேரவா; கயிலைக்குப் போகும் வழி இதுவே, காண்பாயாக அதிற் செல்லுக'' என்று உரைத்தருள்வாயாக.

○

திருக்கழுக்குன்றில் கிட்டியது. அதனைக் ''கணக்கிலாத் திருக் கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே, ஆட்கொள்வான் வந்து காட்டினாய் கழுக்குன்றிலே; மலங்கினேன், கலங்கினேன் காட்டினாய் வந்து கழுக்குன்றிலே' என்றாங்குத் தம்மை இழந் தவராக அடிகள் புகழ்ந்து மகிழ்ந்து பாடுகிறார்.

''குருதரிசனம்; என்பது பசுத்துவம் கெட்ட இடம்'' இதன் இதன் உட்கிடை என்ப, ''நீதி மறைபரவு திருப்பெருந் துறையில் குருவடிவில் நிகழ்ந்த கோலம், காதலொடும் காட்டினையே எனும் களிப்புப் பகர்தல் திருக்கழுக்குன்றமே'' என்பது திருவாசக உண்மை காட்டும் மையக் கருத்து. சைவசித்தாந்தச் சொற்றொ டர்களும் கருத்தும் இதில் வந்துள்ளன. ○

எக்காலத்தும் மாறுபாடு இல்லாத திருப்பெருந்துறைப் பெரு மானே! உன் திருப்பெயர்களை உரைப்பவர்களுக்கு ஒப்பற்ற சிறந்த பேரின்பமே வரும். மேல்வரக் கூடிய துன்பங்களை அழித்து எம்பெருமானே! வற்றுதல் இல்லாத தனித்தன்மையுள்ள பிறவி விதையானது இனிமேல் முளையாத வண்ணம், என் நல்வினை

2. பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே!
சட்ட நேர்பட வந்தி லாத
சழக்க னேன்உனைச் சார்ந்திலேன்
சிட்ட னே!சிவ லோக னே!சிறு
நாயி னுங்கடை யாயவெம்
கட்ட னேனையும் ஆட்கொள் வான்வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

3. மலங்கி னேன்கண்ணி னீரை மாற்றி
மலங்கெ டுத்தபெ ருந்துறை
விலங்கி னேன்வினைக் கேட னேன்இனி
மேல்வி ளைவ தறிந்திலேன்
இலங்கு கின்றநின் சேவ டிகளி
ரண்டும் வைப்பிடம் இன்றியே
கலங்கி னேன்கலங் காம லேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

4. பூண்ஒ ணாததோர் அன்பு பூண்டு
பொருந்தி நாடொறும் போற்றவும்
நாண்ஒ ணாததோர் நாணம் எய்தி
நடுக்க டல்உளம் அழுந்திநான்
பேண்ஒ ணாதபெ ருந்து றைப்பெருந்
தோணி பற்றி உகைத்தலும்
காண்ஒ ணாத்திருக் கோலம் நீவந்து
காட்டி னாய் கழுக்குன்றிலே.

5. கோல மேனிவ ராக மே!குணம்
ஆம்பெ ருந்துறைக் கொண்டலே!
சீல மேதும் அறிந்தி லாதஎன்
சிந்தை வைத்த சிகாமணி!
ஞால மேகரி யாக நான் உனை
நச்சி நச்சிட வந்திடும்
காலமே! உனை ஓத நீ வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.

தீவினைகளின் பயன்களை ஒப்பக் கருதும் இருவினை ஒப்பு வந்த பின்பு நீ திருக்கழுக்குன்றில் எழுந்தருளி அளவற்ற திருக் கோலங்களைக் காட்டியருளினாய் உன் பேரருள் இருந்தவாறு என்னே!

பிட்டு கிடைப்பதற்கு மண் சுமந்தருளின, திருப்பெருந் துறையில் வீற்றிருந்த பெரிய அருட்பித்தனே! உன் கட்டளை முறைகளுக்கு இணங்கி வராத குற்றத்தையுடைய அடியேன் உன்னை அடைந்திலேன். பெரியோனே! சிவலோகத்தை உடை யவனே! சிறுமையுள்ள நாயினும் கடைப்பட்ட கொடிய துன் பங்களை உடையேனையும் ஆட்கொள்ளும் பொருட்டுத் திருக் கோலம் காட்டியருளினாய். உன் பேரருள் இருந்தவாறு என்னே!

சலிப்பு அடைந்த அடியேனது கண்ணீரைக் துடைத்துப் பிறவிக்குக் காரணமான குற்றங்களின் தொடர்பு அழித்த திருப் பெருந்துறையை விட்டு நீங்கினேன்; தீவினையுடையேன். இனி மேல் உண்டாகும் பயனை உணர்ந்திலேன். விளங்குகின்ற உன் செய்ய திருவடிகள் இரண்டையும் [வழிபட] இருத்தி வைத்ததற் கான இடம் இல்லாமல் கலக்கம் அடைந்தேன். அப்படி நான் கலங்காதிருக்கும் வண்ணமாகவே திருக் கழுக் குன்றில் எழுந்தருளி உன் திருக்கோலத்தைக் காட்டியருளினாய்; உன் பேரருள் திறம் இருந்தவாறு என்னே!

பிறரால் மேற்கொள்ள இயலாததாகிய ஒப்பற்ற அன்பு பூண்டு உன் அடியார் நாள்தோறும் பொருந்தி வணங்கவும் அதைக் கண்டு அடியேன் நாணக் கூடாத தாகிய மிக்க நாணத் தை அடைந்து துன்பக் கடலின் நடுவில் முழுகி, யான் போற்று தற்கு அரிய திருப்பெருந்துறையாகிய பெரிய தெப்பத்தைப் பற்றிக் கொண்டு செலுத்துதலும் சிறியேன் காண வொண்ணாத திருக்கோலத்தை நீ திருக்கழுக் குன்றிலே காட்டியருளினை, உன் பேரருள் திறம் இருந்தவாறு என்னே!

அழகிய பொன்மேனிப் பெருமானே! திருப் பெருந்துறைக் கண் வீற்றிருக்கும் அருட்குணமே வடிவான மழைமுகிலே! நல்ல நெறி எதுவும் அறியப் பெற்றிராத அடியேன் மனத்தில் வைக்கப் பெற்ற முடிமணியே! உலகம் சாட்சியாக எளியேன் உன்னை மிகமிக விரும்ப, வந்தருள் செய்கின்ற காலதத்துவனே! உன்னைப் போற்றிப் புகழ நீ திருக்கழுக் குன்றிலே எழுந்தருளி உன் திருக்கோலத்தை அடியேற்குக் காட்டியருளினை. உன் பேரருள் திறம் இருந்தவாறு என்னே!

6. பேதம் இல்லதோர் கற்ப ளித்த
   பெருந்து றைப்பெரு வெள்ளமே!
ஏத மேபல பேச நீஎனை
   ஏதி லார்முனம் என் செய்தாய்?
சாதல் சாதல்பொல் லாமை அற்ற
   தனிச்ச ரண் சர ணாம்எனக்
சூத லால் உனை ஓத நீவந்து
   காட்டி னாய்கழுக் குன்றிலே.

7. இயக்கி மார்அறு பத்து நால்வரை
   எண்குணம் செய்த ஈசனே!
மயக்கம் ஆயது ஓர் மும்ம லப்பழ
   வல்வி னைக்குள் அழுந்தவும்
துயக்குஅ றுத்தெனை ஆண்டு கொண்டுநின்
   தூம லர்க்கழல் தந்துஎனைக்
கயக்க வைத்துஅடி யார்முனேவந்து
   காட்டி னாய் கழுக் குன்றிலே.

திருச்சிற்றம்பலம்

## முப்பத்தொன்று

## கண்ட பத்து

கொச்சகக் கலிப்பாக்கள் பத்து அமைந்த இத்திருப்பதிகம் தில்லையில் அருளப்பட்டதாகும். பெருமானின் பேரின்பக் கூத்தை அகக்கண் கொண்டு பார்த்தல் இதன் கருத்தாக உள்ளது ''நிருத்த தரிசனம்'' இதன் உட்கிடை என்றனர் முந்தையோர்.

திருச்சிற்றம்பலம்

1. இந்திரிய வயமயங்கி
   இறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய்
   அருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச்
   சிவமாக்கி எனைஆண்ட
அந்தம்இலா ஆனந்தம்
   அணிகொள் தில்லை கண்டேனே.

வேறுபாடு இல்லாத ஒப்பற்ற கல்வியை அடியேற்கு அளித்த பெருந்துறையில் உள்ள பேரின்பப் பெருக்கே! தீமைகள் பலவற்றைப் பேசுமாறு நீ அடியேனை அயலார் முன் என்ன காரியம் செய்தாய்! அழிவின்மையும் தீங்கற்றவையும் ஆகிய உன் திருவடிகளே புகல் என்று அன்பினால் அடியேன் உன்னைப் போற்றும் படி நீ வந்து திருக்கழுக் குன்றிலே திருக்கோலத்தைக் காட்சி தந்தருளினை. உன் பேரருள் திறம் இருந்தவாறு என்னே!

[திருவுத்தர கோச மங்கையில்] இயக்கப் பெண்கள் அறு பத்து நால்வரை அறிவுறுத்து எட்டு வகைத் திருக்குணங்களின் வயமாக்கிய இறைவனே! அறியாமைக்கு ஏதுவாகிய மும்மலத் தொடர்பினால் வரும் பழைய வினைக் கடலுக்குள் அடியேன். மூழ்கவும், என் தளர்ச்சி நீக்கி எளியேனை ஆண்டு கொண்டருளி உன் தூய தாமரை மலர் போலும் திருவடிகளைக் கொடுத்து அடியார்களுக்கு எதிரில் திருக்கழுக்குன்றிலே உன் திருக்கோலம் காட்டியருளினை, உன் பேரருள் திறம் இருந்தவாறு என்னே!

○

''அந்த மிலா ஆனந்தம் அணிகொள் தில்லைகண்டேனே'' என்று முதல் பாட்டு நிறைவு பெறுகிறது. அணிகொள் தில்லை, தில்லை அம்பலம், குலாத் தில்லை, திருச்சிற்றம்பலம், விளங்கு தில்லை, தொழும் தில்லை, பயில் தில்லை என்றாற் போலத் தில்லையும் அம்பலமும் விளங்க இறைவன் கிளர்ஒளியாக மரகத மாகக் காட்சி தந்ததைக் கண்ட மாட்சியையும் தமக்கு அருளிய பெருந்தன்மையையும் மகிழ்ந்து போற்றுகிறார் அடிகள்.

''இந்திரிய வயம்மயங்காதே எடுத்துத் தான்ஆக்கும் எழில் ஆனந்தம், கந்தமலி தில்லையினுள் கண்டேன் என்று உவந் துரைத்தல் கண்ட பத்தாம்'' என்று திருவாசக உண்மை உரைக் கிறது.

○

ஐம்பொறிகளின் வழிச்சென்று மயக்கமுற்று இறந்து போதற்குக் காரணம் ஆகி, வேறுபட்டுத் திரிந்து மீள்தற்கு அரிய நரகில் வீழ்கின்ற அடியேற்கு உள்ளம் தெளிய வைத்து, அடியேனைச் சிவமே யாக்கி ஆண்டுகொண்ட எல்லையில்லா இன்பமானவனை அழகு உடைய தில்லையில் கண்டு கொண்டேன்.

2. வினைப் பிறவி என்கின்ற
வேதனையில் அகப்பட்டுத்
தனைச்சிறிதும் நினையாதே
தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப் பெரிதும் ஆண்டுகொண்டுஎன்
பிறப்பறுத்த இணையிலியை
அனைத்துலகும் தொழும் தில்லை
அம்பலத்தே கண்டேனே.

3. உருத்தெரியாக் காலத்தே
உள்புகுந்துஎன் உளம் மன்னிக்
கருத்து இருத்தி ஊன்புக்குக்
கருணையினால் ஆண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத்
தித்திக்கும் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன்
அணிகொள்தில்லை கண்டேனே.

4. கல்லாத புல்லறிவில்
கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து
வனப்புஎய்தி இருக்கும்வண்ணம்
பல்லோரும் காணஎன்றன்
பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சுதில்லை
அம்பலத்தே கண்டேனே.

5. சாதிகுலம் பிறப்பு என்னும்
சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதம்இலி நாயேனை
அல்லல்அறுத்து ஆட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம்
யான்எனதுஎன் உரைமாய்த்துக்
கோதில்அமுது ஆனானைக்
குலாவுதில்லை கண்டேனே.

6. பிறவி தனை அறமாற்றிப்
பிணிமூப்புஎன்று இவைஇரண்டும்
உறவினொடும் ஒழியச்சென்று
உலகு உடைய ஒருமுதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்
திருச்சிற்றம் பலம் மன்னி
மறையவரும் வானவரும்
வணங்கிட நான் கண்டேனே.

வினையினால் விளையும் பிறவி என்னும் துன்பத்தில் சிக்கி, பெருமானாகிய தன்னை நினையாமல் சோர்வு அடைந்து கிடக்கின்ற எளியேனை எவ்வளவோ பெரிய அளவில் ஆட்கொண்டு என் பிறவித் தளையை அறுத்த நிகரில்லாதவனை, எல்லா உலகும் வணங்கும் தில்லையின்கண் நுண்பர வெளியில் கண்டு கொண்டேன்.

உருத் தெரியாத மிக இளம் பருவத்தே என் உணர்வினுள் புகுந்து உயிரில் நிலைத்து என்பால் அன்பு வைத்து உடம்பில் இடம் கொண்டு அருளொடும் ஆண்டுகொண்ட திருத்துருத்தியில் பொருந்தியிருக்கும் பெருமானை, இனித்திருக்கும் சிவஅமுதை ஆசையினால் நாய்போலும் சிறுமையுடைய அடியேன் அழகுடைய தில்லை மன்றில் கண்டு கொண்டேன்.

இறைமையறிவு கைவரப் பெறாத சிறிய அறிவுடைமையால் கீழ்ப்பட்ட நாய் போன்ற யான் வலிமை உடையவனாக வந்து நல்லழகு பெற்று இருக்குமாறு பலருங் காண அடியேனது பசுத்தன்மையையும் பாசத்தையும் அறுத்தெறிந்தவனை யாவரும் வணங்கும் தில்லை நுண்பரவெளியில் கண்டு கொண்டேன்.

சாதிகுலம் குடிப்பிறப்பு என்கிற சுழியில் அகப்பட்டுத் தடுமாறுகின்றவன், ஆதரவற்றவன், நாய் போன்ற சிறுமையேன் ஆகிய அடியேனைத் துன்பத் தளை அறுத்து ஆட்கொண்டு, அறியாமை அதனால் வரும் குணம், பிற தெய்வம் கருதுதல், யான் என்னும் செருக்கு மொழி என்பவற்றைக் கெடுத்து, எப்போதும் குற்றமற்ற அமுதாக இருப்பவனாகிய பெருமானை, விளங்கும் தில்லை அம்பலத்தே கண்டேன்.

பிறவியை அடியோடு நீக்கி நோய் மூப்பு ஆகியவை வினைக் கூட்டத்தோடு ஒழிய, சென்று, உலகின் முதற் பொருளை, நெருங்கிய சோலை சூழ்ந்த தில்லை நகரில் உள்ள நுண்ணிய உயர்வெளியை அணுகி மறையவரும் வானவரும் தொழுது நிற்க அடியேன் கண்டேன்.

7. பத்திமையும் பரிசும்இலாப்
பசுபாசம் அறுந்தருளிப்
பித்தன் இவன் எனஎன்னை
ஆக்குவித்துப் பேராமே
சித்தம் எனும் திண்கயிற்றால்
திருப்பாதம் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல்
விளங்கு தில்லை கண்டேனே.

8. அளவிலாப் பாவகத்தால்
அழுக்குண்டுஇங்கு அறிவின்றி
விளைவு ஒன்றும் அறியாதே
வெறுவியனாய்க் கிடப்பேனுக்கு
அளவிலாத ஆனந்தம்
அளித்தென்னை ஆண்டானைக்
களவிலா வானவரும்
தொழும்தில்லை கண்டேனே.

9. பாங்கினொடு பரிசுஒன்றும்
அறியாத நாயேனை
ஓங்கிஉளத்து ஒளிவளர
உவப்புஇலா அன்பருளி
வாங்கிவினை மலமறுத்து
வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை
அம்பலத்தே கண்டேனே.

10. பூதங்கள் ஐந்தாகிப்
புலனாய்ப் பொருளாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப்
பேதம் இலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட
கிளர் ஒளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும்
விளங்குதில்லை கண்டேனே.

என் உயிர்க் கட்டினை அறுத்தலாகிய அருளைப் புரிந்து, அன்பும் குணமும் இல்லாத பித்தன் இவன் என்று கண்டோர் கூறுமாறு என்னை ஆக வைத்து, பெயர்ந்து போகாமல் திருவுளம் என்கிற வலிய கயிற்றால் தன் திருவடியிற் கட்டுவித்த அறிவாளராகிய இறைவனது திருவிளையாடலை, விளங்கும் தில்லையில் கண்டேன்.

எண்ணிலா மனத் தோற்றங்களால் அமுக்கப்பட்டு இங்கு அறிவில்லாமல் மேல்விளைவு எதுவும் அறியாமல் பயனற்றவனாகக் கிடக்கின்ற அடியேனுக்கு அளவில்லா நல்லின்பம் தந்து என்னை ஆண்டு கொண்டவனை, வஞ்சம் இல்லாத் தேவர்களும் வணங்கும் தில்லையில் கண்டேன்.

முறையும் பயனும் சிறிதும் தெரிந்திராத நாய் அனைய சிறியேனுக்கு உள்ளத்தில் ஒளி ஓங்கி வளர முடிவிலா அன்பைத் தந்து வினைகளைக் களைந்து, கட்டினை அறுத்து மேலான அருள் தந்தவனாகிய பெருமானை மறை நான்கும் ஓதப்படும் தில்லை அம்பலத்தே கண்டேன்.

ஐம் பெரும் பூதங்கள் ஆகி, ஐம்புலன்களும் ஆகி எல்லாப் பொருள்களும் ஆகி, பொருள்களின் வேறுபாடுகள் ஆகி, தான் வேறுபடாத பெருமையாகிய பண்பு உடையவனை, எளியேனின் துன்பங்களை அழித்து ஆண்டருளிய, தானே விளங்கும் ஒளியை பச்சை மணி போல்வானை, மறைகள் வணங்கிப் போற்றும் விளங்குகின்ற தில்லையில் கண்டேன்

முப்பத்திரண்டு

## பிரார்த்தனைப் பத்து

ஆசிரிய விருத்தங்கள் பதினொன்று உடைய இத் திருப் பதிகம் திருப்பெருந்துறையில் [அல்லது தில்லையில்] அருளப் பெற்றதாகும். ‘கலந்து’ என்று தொடங்கி ‘கலந்தே’ என்று மண்டலித்து, முடிமுதல் தொடையாக இஃது அமைந்துள்ளது. வேண்டுதலைப் பிரார்த்தனை என்ப. ‘உலவா இன்பமே வடிவான ஒளியைக் காண்டற்கு அலந்து போனேன், அன்பு மிகும்படி அடியேற்கு அருள் செய்க’ என்று முதல் திருப்பாட்டு அடிகளின்

திருச்சிற்றம்பலம்

1. கலந்து நின்அடியா ரோடுஅன்று
   வாளா களித்திருந்தேன்;
   புலர்ந்து போன காலங்கள்;
   புகுந்து நின்றது இடர்பின்நாள்;
   உலர்ந்து போனேன் உடையானே!
   உலவா இன்பச் சுடர்காண்பான்
   அலந்து போனேன் அருள் செய்வாய்
   ஆர்வங் கூர அடியேற்கே!

2. அடியார் சிலர்உன் அருள்பெற்றார்
   ஆர்வம் கூர யான்அவமே
   முடையார் பிணத்தின் முடிவின்றி
   முனிவால் அடியேன் மூக்கின்றேன்
   கடியேன் உடைய கடுவினையைக்
   களைந்துன் கருணைக் கடல்பொங்க
   உடையாய்! அடியேன் உள்ளத்தே
   ஓவா துருக அருளாயே.

3. அருள் ஆர் அமுதப் பெருங்கடல்வாய்
   அடியார் எல்லாம் புக்கு அழுந்த,
   இருள் ஆர் ஆக்கை இதுபொறுத்தே
   எய்த்தேன் கண்டாய்; எம்மானே!
   மருள் ஆர் மனத்தோ(டு) உன்மத்தன்
   வருமால் என்றிங்கு எனைக் கண்டார்
   வெருளா வண்ணம் மெய்யன்பை
   உடையாய்! பெறநான் வேண்டுமே!

வேண்டுதலைத் தெரிவிக்கிறது. ''சதாமுத்தி; அதாவது ஆன்மக் களுக்கு முத்தி நிச்சயம் பண்ணுதல்'' இதன் உட்கிடை என்ப. நிலையாக வீட்டின்பம் அருளுமாறு வேண்டுதல் இதன் கருத்து என்பதாகிறது. ''அந்தம் இலா ஆனந்தத்து அகலாமல் எனை அழுத்தி ஆள்வாய் என்று சிந்தைகலந்து உரைத்ததுவே பிரார்த்த னைப்பத் தாய்ப்புகலும் செய்கையாமே'' என்பது திருவாசக உண்மை தரும் கருத்தாகும். 'அடியார் சிலர் உன் அருள் பெற் றார். அடியனேன் பயனின்றி மூக்கிறேன்' என்று வருந்தும் அடி கள் 'கருணைக் கடல் பொங்க அருள்' என்று உள்ளத்தை உருக் கும் திருப்பாக்களில் வேண்டுகோள் புரிகிறார்.

○

[நீ அடியேனை ஆட்கொண்ட] அந்நாளில் உன் அடிய வருடன் கூடி, செயல் மறந்து மகிழ்ந்திருந்தேன். காலங்கள் எல்லாம் கழிந்து சென்றன. பிற்காலத்தில் துன்பம் புகுந்து நிலைத்திருந்தது. வாடிப் போனேன். எல்லாம் உடைய பெருமானே! அழியாத இன்ப ஒளியைக் காணும் பொருட்டுத் துன்பப் பட்டேன். அடி யேனுக்கு உன்னிடத்து அன்பு மிகும்படி அருள் செய்ய வேண்டும்.

அடியார்களிற் சிலர் உன்னிடத்து அன்பு மிகுதலால் உன் அருள் அடைந்தனர். தீய நாற்றம் உள்ள [பிணம் போன்ற] உடம்பில் அகப்பட்டு எல்லையின்றி வெறுப்பினால் அடியேன் முதிராநின்றேன், கடுமையான உள்ளம் உடைய அடியேனின் கொடிய வினைகளைத் தொலைத்து உன் அருட்கடல் என்பால் பெருகிவர, எல்லாம் உடைய பெருமானே! அடியேனின் மனம் உன் அருளில் இடையறாது உருக அருள் செய்வாயாக.

பெருமானே! உன் மெய்யடியார் எல்லாரும் உன் திருவரு ளாகிய அரிய பெரிய அமுதக் கடலில் புகுந்து நிறைந்திருக்க அடியேன் அறியாமை நிறைந்த உடம்பாகிய இதனைச் சுமந்தே இளைத்தேன், எம்மை உடையானே! மருட்சி நிறைந்த மனத்தினை உடைய பெரும் பித்தன் ஒருவன் வருகிறான் என்று இவ் வுலகில் என்னைப் பார்த்தோர் அஞ்சா வண்ணம், எல்லாம் உடையவ னே! உன்னிடத்து உண்மை யன்பை நான் பெறவேண்டும்; அருள்புரிவாயாக!

4 வேண்டும் வேண்டும் மெய்யடியார்
உள்ளே விரும்பி எனை அருளாய்
ஆண்டாய் அடியேன் இடர்களைந்த
அமுதே அருமா மணிமுத்தே!
தூண்டா விளக்கின் சுடர்அனையாய்!
தொண்ட னேற்கும் உண்டாம்கொல்
வேண்டாது ஒன்றும் வேண்டாது
மிக்க அன்பே மேவுதலே!

5. மேவும் உன்றன் அடியாருள்
விரும்பி யானும் மெய்ம்மமையே
காவிசேரும் கயற்கண்ணாள்
பங்கா! உன்றன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ?
பரமா னந்தப் பழங்கடல்சேர்ந்து
ஆவி யாக்கை யான்எனது என்
றியாதும் இன்றி அறுதலே

6. அறவே பெற்றார் நின்அன்பர்
அந்தம் இன்றி அகம்நெகவும
புறமே கிடந்து புலைநாயேன்
புலம்பு கின்றேன் உடையானே·
பெறவே வேண்டும் மெய்யன்பு
பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா
மாளா இன்ப மாகடலே!

7. கடலே அனைய ஆனந்தம்
கண்டார் எல்லாம் கவர்ந்துண்ண
இடரே பெருக்கி ஏசற்றுஇங்கு
இருத்தல் அழகோ அடி நாயேன்
உடையாய்! நீயே அருளுதிஎன்று
உணர்த்தாது ஒழிந்தே கழிந்தொ ழிந்தேன்
சுடர்ஆர் அருளால் இருள்நீங்கச்
சோதீ! இனித்தான் துணியாயே!

8. துணியா உருகா அருள்பெருகத்
தோன்றும் தொண்ட ரிடைப்புகுந்து
திணியார் மூங்கில் சிந்தையேன்
சிவனே! நின்று தேய்கின்றேன்
அணியார் அடியார் உனக்குள்ளே
அன்பும் தாராய் அருள் அளியத்
தணியாது ஒல்லை வந்தருளித்
தளிர்ப்பொற் பாதம் தாராயே!

அரிய பெருமை பொருந்திய மணியாகிய முத்தே! தூண்ட வேண்டாத விளக்கின் ஒளிச்சுடர் போல்வாய்! உன்னையே பலகாலும் விரும்புகிற மெய்யடியார் நடுவில் மெய்யன்பு இல்லாத அடியேனை உன் பேரருள் காரணமாக விரும்பி ஆட்கொண்டாய். அடியேனின் துன்பத்தை ஒழித்த அமிழ்தமே! விரும்பப்படாததாகிய ஒரு பொருளையும் விரும்பாமல் மிக்க அன்பையே பெறுதல், தொழும்பனாகிய எனக்கும் உண்டாகுமா?

கருங்குவளை மலரின் தன்மையுடன் சேல்போன்ற கண்களை உடைய உமையம்மையை ஒரு கூறாக உடைய பெருமானே! விரும்பி அடையும் உன் அடியார்கள் நடுவுள் இருக்க விரும்பி அடியேனும் உண்மையாகவே உன் திருவருளால் பழையதாகிய மேலாம் இன்பக்கடலை அடைந்து உயிர் உடம்புகளை யான் எனது என்று வரும் பற்றுகள் எதுவும் இன்றி அற்றொழிதல் பாவியாகிய அடியேற்கும் உண்டாகுமோ? அருள்வாயாக.

உன் மெய்யன்பர்கள் எல்லாம் குறைவறப் பேரின்பம் பெற்றவராக முடிவில்லாமல் உள்ளம் உருகா நிற்கவும், புலைத் தன்மை உள்ள நாயினேன் புறத்தே கிடந்து புலம்பி நிற்கிறேன். எல்லாம் உடையவனே! நிலை பெயராததும் ஒழியாததும் மறப்பு இல்லாததும் நினைப்பு இல்லாததும் அளவில்லாததும் தொலையாததும் ஆகிய பேரின்பப் பெருங்கடலாக விளங்குபவனே! மெய்யன்பை அடியேன் பெறுதலே வேண்டி நிற்கிறேன். அருள்வாயாக.

கடல் போலும் பேரின்பத்தைக் கண்ட உன் அடியார் எல்லாரும் அவ்வின்பத்தைக் கவர்ந்து உண்ணவும் அடிமையாகிய நாயினேன், துன்பத்தையே பெருக்கிக் கொண்டு இளைத்து இவ்வுலகில் இருத்தல் அழகாமோ? எல்லாம் உடையவனே! நீயே அருள் செய்வை என்று துணிந்து உரையாதிருந்து போக்கிவிட்டேன். ஒளி வடிவனே! இனியேனும் அருள் மயமான அரிய ஒளியினால் என் அறியாமை இருள் ஒழியுமாறு அறுத்தெறிவாயாக.

பேரின்ப வடிவப் பெருமானே! நீயே யாவும் என்று துணிந்து மனம் உருகி உன் திருவருள் பெருகும்படி தோன்றா நிற்கும் தொண்டரிடத்துப் புகுந்து, வலிய கல் மூங்கில் போன்ற மனத்தினை உடையேன் நின்று தேய்கின்றேன். அழகு பொருந்திய அடியார் உன்னிடத்தில் வைத்த அன்பையும் [அடியேன் உன்னிடம் வைத்தற்கு] அருள் புரிவாய். அருள் கனிய, தளிர் போலும் அழகிய திருவடிகளை அடியேற்குத் தந்தருள்வாயாக.

9. தாரா அருள்ஒன்று இன்றியே
தந்தாய் என்றுன் தமர்எல்லாம்
ஆரா நின்றார் அடியேனும்
அயலார் போல அயர்வேனோ?
சீரார் அருளால் சிந்தனையைத்
திருத்தி ஆண்ட சிவலோகா!
பேரா னந்தம் பேராமை
வைக்க வேண்டும் பெருமானே!

10. மான்ஓர் பங்கா! வந்திப்பார்
மதுரக் கனியே! மனம்நெகா
நான் ஓர் தோளாச் சுரை ஒத்தால்
நம்பி! இனித்தான் வாழ்ந்தாயே!
ஊனே புகுந்த உனை உணர்ந்தே
உருகிப் பெருகும் உள்ளத்தைக்
கோனே! அருளும் காலம்தான்
கொடியேற்கு என்றோ கூடுவதோ?

11. கூடிக் கூடி உன் அடியார்
குனிப்பார் சிரிப்பார் களிப்பாராய்
வாடி வாடி வழியற்றேன்
வற்றல் மரம்போல் நிற்பேனோ?
ஊடி ஊடி உடையாயொடு
கலந்துள் உருகிப்பெருகி நெக்கு
ஆடி ஆடி ஆனந்தம்
அதுவே ஆக அருள் கலந்தே.

திருச்சிற்றம்பலம்

## முப்பத்துமூன்று

# குழைத்த பத்து

இத் திருப்பதிகம் ஆசிரிய விருத்தம் பத்து உடையதாக முடி முதல் தொடையில் அமைந்து 'குழைத்தாய்' என்று தொடங்கிக் 'குழைத்தாயே' என்று மண்டிலமாக முடிகிறது. திருப்பெருந் துறையில் அருளப் பெற்றது. 'அன்றே எனது உடல் பொருள் ஆவி எல்லாமும் என்னை ஆட்கொண்ட போதே ஏற்றுக் கொண் டாய் அல்லவா? எனக்கு என்ன துன்பம் உளது? எனக்கு நன்றே செய்வாய் பிழை செய்வாய். அதற்கு நாயகன் நான் அல்லன்' என்று குழைந்து கூறுகிறார் அடிகள்.

எம் பெருமானே! தர வேண்டிய அருள் என்று எதுவும் எஞ்சாது குறைவறத் தமக்குத் தந்தருளினை என்று உன் அடியார் எல்லாரும் துய்த்து மகிழ்கின்றனர். அடியேனும் அயலர் போல [அருள் கிடைக்கப் பெறாது] தளர்வேனோ? சீர் ஆர்ந்த உன் திருவருளால் என் உள்ளத்தைச் செம்மைப் படுத்தி ஆண்டருளின பேரின்ப வுலகின் தலைவனே! பேரின்பம் நிலைபெயராமல் என்னிடம் வைத்தருளல் வேண்டும். அருள் வாயாக.

மான் விழி போலும் விழிகளையுடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவனே! வழிபடுவார்க்குத் தீங் கனியாக இனிப்பவனே! மனம் நெகிழாத அடியேன் தோண்டப்படாத சுரை போன்று இருந்தால், சிறந்தோனே! இதனால் நீ வாழ்ந்தனையோ? அடியேனின் உடம்பினுள் புகுந்த உன்னை உணர்ந்து உருகிப் பெருகக் கூடிய உள்ளத்தை, அரசே! நீ அருள் செய்யும் காலம் கொடியவனாகிய எனக்கு எப்போது உண்டாகும்?

உன் மெய்யடியார்கள் சேர்ந்து சேர்ந்து ஆனந்தக் கூத்தாடுவார்கள், சிரித்துக் களிப்பார்கள் ஆக இருக்க, வழியற்றவனாகிய அடியேன் வாட்டம் மிக அடைந்து வற்றல் மரம்போல் நிற்பேனோ? உடையவனாகிய உன்னுடன் மாறுபட்டு மாறுபட்டுக் கூடிச் சேர்ந்து மனம் உருகி அன்பு பெருகி நெகிழ்ந்து கூத்தாடி இன்ப மயமே ஆகும்படி, கூடி அருள் புரிவாயாக!

○

"ஆத்தும நிவேதனம் அல்லது நேயத்தோடு ஒன்றல்" இப் பதிகத்தின் உட்கிடை என்ப.

"இழைத்தேன்இவ் ஆக்கைபொறுத்து இனிக்கணமும் பொறுக்கிலேன் ஏழையேனைக், குழைப்பது ஏன்? பிழை பொறுத்து ஆள் எனஇரங்கிக் கூறுதலே குழைத்த பத்தாம்" என்று திருவாசக உண்மை, இதன் மையக் கருத்தைச் சுட்டிக் காட்டும்.

○

திருச்சிற்றம்பலம்

1, குழைத்தால் பண்டைக் கொடுவினைநோய்
காவாய் உடையாய்! கொடுவினையேன்
உழைத்தால் உறுதி உண்டோதான்?
உமையாள் கணவா! எனை ஆள்வாய்!
பிழைத்தால் பொறுக்க வேண்டாவோ?
பிறைசேர் சடையாய் முறையோஎன்று
அழைத்தால் அருளாது ஒழிவதே
அம்மா னே!உன் அடியேற்கே?

2. அடியேன் அல்லல் எல்லாமுன்
அகல ஆண்டாய் என்றிருந்தேன்
கொடியேர் இடையாள் கூறா!எம்
கோவே! ஆவா! என்றருளிச்
செடிசேர் உடலைச் சிதையாதது
எத்துக்கு எங்கள் சிவலோகா!
உடையாய்! கூவிப் பணிகொள்ளாது
ஒறுத்தால் ஒன்றும் போதுமே?

3. ஒன்றும் போதா நாயேனை
உய்யக் கொண்ட நின்கருணை
இன்றே இன்றிப் போய்த்தோதான்?
ஏழை பங்கா! எம்கோவே!
குன்றே அனைய குற்றங்கள்
குணமாம் என்றே நீ கொண்டால்
என்தான் கெட்டது இரங்கிடாய்
எண்தோள் முக்கண் எம்மானே!

4. மானேர் நோக்கி மணவாளா!
மன்னே நின்சீர் மறப்பித்துஇவ்
ஊனே புகஎன் தனைநூக்கி
உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனால் அடியேன் அறியாமை
அறிந்து நீயே அருள்செய்து
கோனே! கூவிக் கொள்ளும்நாள்
என்றென்று உன்னைக் கூறுவதே?

பழமையான கொடிய வினைகளும் அவற்றின் விளைவான நோய்களும் எளியேனை வாட்டினால் என்னைக் காவாமல் இருக்கிறாய், இறைவா! கொடிய வினைகளையுடையேன் துன்பத்திற் கிடந்து வருந்தினால் உனக்கு நன்மை உளதோ? உமையம்மையின் கணவனே! அடியேனை ஆளக்கூடவை. அடியேன் பிழை செய்தால் நீ பொறுத்தருளல் வேண்டாவோ? பிறை சேர்ந்த சடையை உடையவனே! என் தந்தையே! முறையோ என்று அழைத்தால் உன் அடியேனுக்கு அருள் செய்யாது ஒழிவதோ? உனக்கு அது தகுதியாகுமோ?

அடியேனது துன்பம் எல்லாம் முன்னமே நீங்கும்படி ஆட்கொண்டாய் என்று இருந்தேன். பூங்கொடி போலும் அழகிய இடையை உடைய உமையம்மையின் பங்கனே! எம் இறைவா! 'ஐயோ!' என்று இரங்கியருளிக் குற்றம் சேர்ந்த உடலை அழிக்காதிருப்பது எதற்காக? எல்லாம் உடையவனே! எங்கள் சிவவுலகின் தலைவனே! அடியேனை அழைத்துப் பணி கொள்ளாமல் தண்டித்தால் அத் தண்டனையே அமையுமோ?

ஒன்றுக்கும் பற்றாத நாய் போன்ற சிறியேனைக் கடைத்தேறும்படி முன்னமே ஆட்கொண்ட உன் அருளானது இப்பொழுது இவ்வாறு போய்விட்டதோ? உமையம்மையைப் பாகமாக உடையவனே! எம் இறைவனே! மலை போன்ற குற்றங்களையும் குணங்களாம் என்று நீ திருவுளம் பற்றுவையாயின் என்ன கெடுதி வந்துவிடப் போகிறது? எட்டுத் தோள்களும் மூன்று கண்களும் உடைய எம் தந்தையே! இரங்கியருள்வாயாக.

மானின் விழிபோலும் விழியை உடைய உமையம்மையின் மணாளனே! நிலையானவனே! உன் சிறப்பினை அடியேன் மறக்கச் செய்து இவ் வுடம்பின் கண்ணே புகுமாறு என்னைத் தள்ளிவிட்டு அதிலே கிடந்து துன்புறுமாறு செய்துவிட்டாய்; அடியேனது அறிவின்மையை அறிந்து நீயே அருள் புரிந்து, இறைவனே! என்னை அழைக்கும் காலம் எக்காலமோ? என்று உன்னிடம் முறையிடுவது தான் எனக்கு முறையா? அருள்வாயாக.

5. கூறும் நாவே முதலாகக்
கூறும் கரணம் எல்லாம்நீ
தேறும் வகைநீ திகைப்பும்நீ
தீமை நன்மை முழுதும்நீ
வேறுஓர் பரிவுஇங்கு ஒன்றில்லை
மெய்ம்மை உன்னை விரித்துரைக்கில்
தேறும் வகைஎன்? சிவலோகா!
திகைத்தால் தேற்ற வேண்டாவோ?

6. வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றோ?

7. அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய்! என்னை ஆட்
கொண்ட போதே கொண்டிலையோ?
இன்றோர் இடையூறு எனக்குண்டோ?
எண்தோள் முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே?

8. நாயிற் கடையாம் நாயேனை
நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே
வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான்?
என்ன தோஇங்கு அதிகாரம்?
காயத்து இடுவாய் உன்னுடைய
கழற்கீழ் வைப்பாய்; கண்ணுதலே!

*பேசுதற்கான கருவியாகிய நா முதலாகச் சொல்லப்படும் கருவிகள் எல்லாம் நீயே. தெளியும் வகைகளும் நீயே. திகைப் பினை உண்டாக்குவோனும் நீயே, தீமை நன்மைகள் எல்லாமும் நீயே, மற்றொரு தன்மை இவ்விடம் சிறிதும் இல்லை மெய்ம் மையே வடிவான உன்னை விரித்துச் சொன்னால் தெளிவு பெறும் வகை யாது? உளது? சிவப்பேரின்ப உலகின் தலைவனே! இவ்வா றாகி, அடியேன் திகைத்தால் நீ தெளிவிக்க வேண்டாவா?*

*[நீ முற்றறிவன் ஆகையால்] அடியேம் விரும்பற்கு உரியது எது என அறிபவன் நீ; உளது? விரும்பியதை முழுதும் தருபவன் நீ உன்னைக் காண விரும்பும் அயனுக்கும் திருமாலுக்கும் அரியவன் நீ, விரும்பி அடியேனை ஆட்கொண்டாய். விரும்பி எதனை அருள் செய்தனையோ அதனையே அடியேனும் விரும்பின் அல்லது வேண்டும் பொருள் ஒன்று இருக்கிறது என்றால் அதுவும் உன் விருப்பமே அல்லவா?*

*அருள்நிறை குன்றம் போல்பவனே! அடியேனை ஆட் கொண்ட அந்தக் காலத்திலேயே என் உயிரும் உடம்பும் பொருள் களும் ஆகிய எல்லாவற்றையும் ஏற்றுக் கொண்டனை, அல்லை யோ? இப்பொழுது அடியேனுக்கு ஒரு துன்பமும் உளதோ? எட்டுத் தோள்களும் மூன்று கண்களும் உடைய எந்தையே! நன்மையே செய்யக் கடவை, தீமையே செய்யக் கடவை. இதற்குத் தலைவன் இவ் எளியவனா? [இல்லை நீ எனக்கு நன்மை செய் யினும் தீமை செய்யினும் நீ உகக்கும் எதுவும் எளியேற்கு அருட் பாலதே].*

*நெற்றிக் கண்ணையுடைய எம்பெருமானே! நாய்ப் பிறப் பினும் கடைப்பட்ட நாயினேனை விரும்பி நீயே ஆட்கொண் டருளினை. மாறிமாறித் தோன்றும் பிறவிகள் உன் வசம் தானே வைத்திருத்தலால் அவற்றின் தோற்றம் ஒடுக்கம் பற்றி ஆராயக் கடவேன் நான் தானோ? இவ்விடத்து நடக்கும் அதிகாரம் என்னது தானோ? பலவகையான உடம்புகளுள் அடியேனை இருத்தக் கடவை அல்லது உன் திருவடிக் கீழ் வைக்கக் கடவை. எங்ஙனமாயினும் எளியேற்கு ஏற்புடைத்தே!*

9. கண்ணார் நுதலாய் கழல் இணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணாது இரவும் பகலும் நான்
அவையே எண்ணும் அதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா! எண்ணக் கடவேனோ!
அடிமை சால அழகுடைத்தே!

10. அழகே புரிந்திட்டடி நாயேன்
அரற்று கின்றேன் உடையானே!
திகழா நின்ற திருமேனி
காட்டி என்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதம் எனக்குப்
புராண! நீதந்து அருளாதே
குழகா! கோல மறையோனே!
கோனே! என்னைக் குழைத்தாயே.

திருச்சிற்றம்பலம்

## முப்பத்து நான்கு

## உயிருண்ணிப் பத்து

கலிவிருத்தம் பத்து அடங்கிய இத் திருப்பதிகம் திருப்பெருந் துறையில் அருளப் பெற்றது.

''சிவானந்தம் மேலிடுதல்; அதாவது நேயம் மேலிடுதல்'' இதன் உட்கிடை என்ப. சிவப்பேரின்பமானது உயிரை வெள்ளமாக அகப்படுத்துதல், தான் என்பது அற்றுச் சிவப்பேரின்ப வடிவாகுதல் என்பது இதன் பொருளாகும்.

திருச்சிற்றம்பலம்

1. பைந்நாப்பட அரவேரல்கு
லுமைபாகம்அது ஆய்என்
மெய்ந்நாள்தொறும் பிரியாவினைக்
கேடா! விடைப் பாகா!
செந்நாவலர் பரசும்புகழ்த்
திருப்பெருந் துறைஉறைவாய்!
எந்நாள்களித்து எந்நாள்இறு
மாக்கேன்இனி யானே?

தந்தையே! கண் பொருந்திய நெற்றியை உடைய பெருமானே! கண்கள் களிப்பு மிகுமாறு உன் திருவடித் துணையைக் கண்டு கொண்டேனாய் இரவினும் பகலினும் அவற்றையே நினைப்பதல்லது மண்ணுலகத்தில் உடம்பை நீக்கும் வகையையும் வந்து உன் திருவடிகளில் சேரும் வகையையும் நினைக்கக் கடவேனோ, அப்படியாயின் எளியேனின் அடிமைத் திறம் மிகவும் அழகுடைத்தே! [அழகுடையது அன்று]

எல்லாம் உடைய பெருமானே! என்றும் இளமை வடிவினனே! அழகலாதவற்றை விரும்பிச் செய்துவிட்டுத் தாழ்ந்த நாய் போன்ற அடியேன் கதறுகின்றேன். ஒளிவிளங்கும் உனது திருமேனிக் காட்சி தந்து எளியேனை ஆட் கொண்டாய். தொன்மையானவனே! நீ பேரின்பம் தந்தருளாமல், எல்லாவற்றையும் தன் அழகிய வடிவினுள் வளைத்து மறைத்து வைத்திருப்போனே, இது உனக்கும் புகழாமோ? அரசே! என்னை வாட்டினையே!

○

''தழைத்துவளர் பேரின்பம்தான்ஆகி உயிர்தோன்றாத் தன்மை யாய்த்துன்பு ஒழித்துநிறை வைப்பெறுதல் உயிருண்ணிப் பத்தாயிங்கு உரைத்த தாமே'' என்பது திருவாசக உண்மையான் வரும் செய்தியாகும். இறையருளில் உயிர் அடங்கிப் பேரின்ப மயமாகி நிற்றலாகிய நிலையைப் பெறும் அனுபவம் தெரிவித்தல் இப் பதிகப் பொருள் என்பது இதன் கருத்து.

நிலைபெற்ற திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் திருவடிகளை அணிந்து கொண்டேன். அவற்றை விட்டு அடியேன் போக மாட்டேன். இறைவனையும் பிரிந்து போக வீடேன். புகழ் பொருள் போல்வன எவையும் வேண்டேன். என்று சிவானந்தம் மேலிட்டுப் பேசுகிறார் அடிகள். ○

செம்மை மிக்க நாவன்மை உடைய புலவர்கள் போற்றும் புகழையுடைய திருப்பெருந் துறையில் உறையும் பெருமானே! பசிய நாவினையுடைய பாம்பின் படம் போலும் அழகிய அடிவயிற்றையுடைய உமையம்மையின் பங்கை உடையவனாக எழுந்தருளி வந்து, என் உடம்பினின்றும் நாள் தோறும் பிரியாது பயன் ஊட்டும் வினைகளை அழிப்பவனே! காளை ஊர்தியனே! அடியேன் இனி எந்நாள் உன் திருவடி கண்டு களிப்புற்று எந்நாள் இறுமாந்திருப்பேனோ?

2. நான்ஆர்? அடி அணைவான் ஒரு
நாய்க்குத் தவிசு இட்டிங்கு
ஊன் ஆர்உடல் புகுந்தான்உயிர்
கலந்தான்உளம் பிரியான்
தேன் ஆர்சடை முடியான்மன்னு
திருப்பெருந்துறை உறைவான்
வானோர்களும் அறியாததோர்
வளம்ஈந்தனன் எனக்கே.

3. எனைநான் என்பது அறியேன்பகல்
இரவாவதும் அறியேன்
மனவாசகம் கடந்தான்எனை
மதோன்மத்தன் ஆக்கிச்
சினமால்விடை உடையான்மன்னு
திருப்பெருந்துறை உறையும்
பனவன் எனைச் செய்தபடிறு
அறியேன் பரஞ்சுடரே!

4. வினைக்கேடரும் உளரோபிறர்
சொல்லீர்?வியன் உலகில்
எனைத்தான் புகுந்து ஆண்டான்எனது
என்பின்புரை உருக்கி
பினைத்தான்புகுந்து எல்லேபெருந்
துறையில்உறை பெம்மான்
மனத்தான்கண்ணின் அகத்தான்மறு
மாற்றத்திடை யானே.

5. பற்றுஆங்கு அவை அற்றீர்பற்றும்
பற்றாங்குஅது பற்றி
நற்றாம்கதி அடைவோம்எனில்
கெடுவீர்; ஓடி வம்மின்
தெற்று ஆர்சடை முடியான்மன்னு
திருப்பெருந்துறை இறைசீர்
கற்றாங்குஅவன் கழல்பேணின
ரொடும்கூடுமின் கலந்தே.

தேன் பொருந்திய கொன்றை மலர் சூடிய சடை முடி உடையவனும் நிலையுதல் உள்ள திருப்பெருந்துறையில் உறை வானும் ஆகிய சிவபெருமான், அடியேன் யாவன்? (ஓர் உரிமையும் இல்லாதேன் ஆயினும்) தன் திருவடியை அடையும் பொருட்டு ஒரு நாய் போன்ற சிறுமையுடைய எனக்கு ஓர் இருக்கை அளித்து இவ்வுலகில் ஊன் செறிந்த என் உடம்பிற் புகுந்து உள்ளத் தினின்றும் நீங்காதவனாக உயிரிற் கலந்தான்; விண்ணவரும் அறிந்திராத ஒப்பற்ற திருவருட்பேற்றை அடியேற்கு அளித்தான்.

அடியேன் என்னை நான் (ஒரு பொருள்) என்பதனை உணர்ந்திலேன். பகல் இரவுகள் ஆவனவும் உணர்ந்திலேன், உள்ளமும் உரையும் (உடம்பும்) கடந்தவனும், சினமுள்ள பெரிய திருமால் ஆகிய விடையை ஊர்தியாக உடையவனும் நிலை பெற்ற திருப்பெருந்துறைக் கண் வீற்றிருக்கும் வேதியனும் மே லான ஒளிப் பிழம்பாக இருப்பவனும் ஆகிய சிவபெருமான் அடியேனைப் பெரும் பித்தனாக்கிச் செய்துவிட்ட வஞ்சனையை அறிந்திலேன்.

திருப்பெருந்துறையில் என்றும் விளங்கி நிற்கும் பெருமான், தானே கருணையினால் வலிதின் வந்து ஆட்கோண்டான்; பிறகும் புகுந்து எளியேனின் எலும்பின் உள் துளைகளை உருக்கி என் மனத்தில் உள்ளான், கண்ணில் உள்ளான், மற்றும் சொல்லிலும் உள்ளான். எவ்வளவு வியக்கத்தக்கது இது! ஆதலால் பரந்த உலகில் இவனைப்போல வினையை ஒழிப்பவர் வேறு எவரும் உளரோ? சொல்லீர்!

அகப்பற்று புறப்பற்று என இருவகையினவாகிய உலகியல் பற்றுக்களாகிய அவற்றை ஒழித்தீர்களாக - பற்றவேண்டிய பற்றாகிய இறைப்பற்றாம் அதனைப் பற்றி நன்மையாகிய கதி யை அடைவோம் என்று நீங்கள் எண்ணினால், பயனின்றிக் கெடுவீர்களாகிய நீங்கள், ஓடி வாருங்கள். பின்னிக் கிடக்கும் சடைமுடியை உடையவன், நிலைபெற்ற திருப்பெருந்துறை இறைவன் ஆகிய சிவபெருமானின் புகழைக் கற்று அவன் திரு வடியை விரும்பிப் புகல் அடைந்த அடியவர்களோடும் ஒன்று கூடுங்கள்.

6. கடலின்திரை அதுபோல்வரு
கலக்க மலம் அறுத்துஎன்
உடலும் எனது உயிரும்புகுந்து
ஒழியாவணம் நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய
திருப்பெருந்துறை உறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள்
பரன்தான் செய்தபடியே.

7. வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம்
வேண்டேன்மண்ணும் விண்ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம்
வேண்டார்தமை நாளும்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு
திருப்பெருந்துறை இறைதாள்
பூண்டேன்புறம் போகேன்இனிப்
புறம்போகல்ஒட் டேனே.

8. கோல்தேன்எனக்கு என்கோ!குரை
கடல்வாய்அமுது என்கோ!குரை
ஆற்றேன்எங்கள் அரனே!அரு
மருந்தே!எனது அரசே!
சேற்றார் வயல் புடைசூழ்தரு
திருப்பெருந் துறைஉறையும்
நீற்றார்தரு திருமேனிநின்
மலனே!உனை யானே!

9. எச்சம் அறி வேன்நான் எனக்கு
இருக்கின்றதை அறியேன்
அச்சோ!எங்கள் அரனே!அரு
மருந்தேஎனது அமுதே!
செச்சைமலர் புரைமேனியன்
திருப்பெருந் துறைஉறைவான்!
நிச்சம்என் நெஞ்சின்மன்னி
யான்ஆகி நின்றானே!

10. வான்பாவிய உலகத்தவர்
தவமேசெய அவமே
ஊன்பாவிய உடலைச் சுமந்து
அடவிமரம் ஆனேன்
தேன்பாய்மலர்க் கொன்றைமன்னு
திருப்பெருந்துறை உறைவாய்!
நான்பாவியன் ஆனால்உனை
நல்காய் எனல் ஆமே!

திருச்சிற்றம்பலம்

எம்பெருமான், கடலின்கண் எழும் அலைகள் போல ஒன்றன் பின் ஒன்றாக வருகின்ற மனக் கலக்கத்தையும் மாசினையும் மாற்றி எளியேனின் உடம்பினுள்ளும் உயிரின் கண்ணும் புகுந்து நீக்கமற நிறைந்தான். ஒளிர்கின்ற கதிர்களை உடைய பிறையை அணிந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் பரந்த சடையாகிய முடியினை உடைய எங்கள் மேலாம் இறைவன் செய்த சூழ்ச்சி இருந்தவாறு என்னே!

அடியேன் புகழை விரும்பேன், பொருளை விரும்பேன், பிறப்பு இறப்புகளையும் விரும்பேன். சிவபெருமானாகிய செம்பொருளை விரும்பாதவரை எந்நாளும் போய்த் தொடேன். நிலைபேறாகிய திருப்பெருந்துறையிலுள்ள இறைவனது திருவடிகளைத் தலைமேல் அணிந்து கொண்டேன். இனித் திருவடிகளை விட்டுப் புறத்தே செல்லேன், அங்ஙனம் புறத்தே போகத் திருவடிகளையும் விடேன், இசையேன்.

சேற்றினை உடைய வயல்கள் சுற்றிச் சூழ்ந்திருக்கப் பெற்ற திருப்பெருந்துறையில் என்றும் வீற்றிருக்கும், திருவெண்ணீற்றால் நிறைந்திருக்கிற திருமேனியை உடைய, இயல்பாக மாசிலாத பெருமானே! பாவங்களை அழிப்பவனே! எங்கள் அரசனே! அடியேன் உன்னைக் கொம்புத்தேன் என்பேனா! கடலிற் கிடைத்த அமுதம் என்பேனோ! பேரின்ப இனிமையைப் பொறுக்ககில்லேன்

எங்கள் பாசங்களை அழிப்பவனே! கிடைத்தற்கு அரிய சாவா மருந்தே! என் அமுதே! வெட்சி மலர் போன்ற திருமேனி உடையவனாகத் திருப்பெருந்துறைக் கண் என்றும் தங்கியருளும் பெருமானே! என்நெஞ்சில் எக்காலத்தும் நிலைபெற்றுயானாகி வேறற நின்று விட்டவனே! எளியேன் எஞ்சிய பிறவற்றை எல்லாம் அறிந்திருக்கிறேன்; எனக்குக் கிடைத்திருப்பதை அறிகிலேன்! எத்தகைய இரங்கற் பால செய்தி இது!

வானிற் பொருந்திய தேவருலகினர் உன்னருள்பெறத் தவத்தைச் செய்து கொண்டிருக்க, அடியேன் வீணே ஊன் நிறைந்த உடலைச் சுமந்து காட்டுமரம் போல் பயனற்றவன் ஆயினேன். தேன் பெருகும் மலர்களை உடைய கொன்றை மரங்கள் உள்ள நிலைத்திருக்கிற திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! அடியேன் பாவியேன் ஆயினும் உன்னை அடியேற்கு அருள்வாயாக என்று வேண்டிக்கொளல் ஏற்புடையதாகுமா?

## முப்பத்தைந்து

# அச்சப் பத்து

சிவப்பேரின்ப அனுபவத்தில் அழுந்திய அடிகள், பெருமானிடத்து அன்பும் தோய்வும் இல்லாதவரைக் காண அஞ்சுதல் பற்றிய ஆசிரிய விருத்தம் பத்துக்கொண்ட இத் திருப்பதிகம் தில்லையில் அருளப் பெற்றதாகும். ''ஆனந்தம் உறுதல் : அதாவது நேயத்திலே ஒன்றுபட்டுச் சிக்கென அழுந்தினமை'' இதன் உட்கிடை என்பது பழைய குறிப்பு. ''தரையில் வளர்வினை முழுதும் வரினும் அஞ்சேன் சிவசமயத் தவம் சாராதார் அருகின்வரக் காண்கில் மனம் அஞ்சும் என இகழ்ந்துரைத்தல் அச்சப் பத்தாம்'' என்பது திருவாசக உண்மை தரும் மையக் கருத்தாகும். ''கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே'' என்பது ஒவ்வொரு திருப்பாடலிலும் முடிப்பாக உள்ளது.

திருச்சிற்றம்பலம்

1. புற்றில்வாள் அரவும் அஞ்சேன்
பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடைஎம் அண்ணல்
கண்ணுதல் பாகம் நண்ணி
மற்றுமோர் தெய்வம் தன்னை
உண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால்
அம்ம நாம் அஞ்சு மாறே.

2. வெருவரேன் வேட்கை வந்தால்
வினைக்கடல் கொளினும் அஞ்சேன்
இருவரால் மாறு காணா
எம்பிரான் தம்பி ரானாம்
திருவுரு அன்றி மற்றோர்
தேவர்எத் தேவர் என்ன
அருவரா தவரைக் கண்டால்
அம்ம நான் அஞ்சு மாறே.

3. வன்புலால் வேலும் அஞ்சேன்
வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
என்பெலாம் உருக நோக்கி
அம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை ஏத்தி
இனிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டால்
அம்மநான் அஞ்சு மாறே.

"புற்றில் வாள் அரவும் அஞ்சேன்" என்பது முதலாக அகத்தும் புறத்தும் ஆக அஞ்சத் தகுவனவற்றை நிரல்படுத்தி அவற்றுக்கெல்லாம் தாம் அஞ்சமாட்டேம் என்று கூறும் அடிகள், "மற்றோர் தேவர் எத் தேவர் என்ன அருவராதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே" என்று கூறுகிறார்; பெருமானின் திருவடிகளைப் போற்றித் தம் தலைமேல் அணியாரைக் கண்டால் அஞ்சுவோம்" எனவும் பேசுகிறார்.

ட

புற்றில் இடம் கொண்டுள்ள ஒளியுள்ள பாம்பையும் அஞ்சேன்; பொய்யர்களுடைய மெய் போன்ற கற்பனைகளை அஞ்சேன், திரண்ட நீண்ட சடையை உடைய எம் பெருமான், நெற்றியில் கண்ணையுடைய இறைவனாகிய சிவபெருமானின் திருவடியை அடைந்து, பிறிதாகிய ஒரு தெய்வம் உண்டென்று நினைந்து எம் பெருமானின் புகழைக் கல்லாதவரைக் கண்டால் யாம் அஞ்சும் வகை என்னென்போம்!

ஐம்புல ஆசைகள் என்னிடம் தோன்றினும் அதற்கு அஞ்சமாட்டேன்; இருவினைகளாகிய கடல் என்னைக் கவரினும் அஞ்சேன்; மால் அயன் ஆகிய இருவரும் வேறுபட்டு எம் பெருமானாகிய, எல்லார்க்கும் தலைவனாம் இறைவனது எழில் வடிவை அல்லாது அவ்வாறு வேறு ஒரு தேவர் என்ன தேவர் என்று அருவருப்புக் கொள்ளாதவரைக் கண்டால் நாம் அஞ்சும் வகை என்னென்போம்.

வலியதும் புலால் தோய்ந்ததுமான வேலுக்கு அஞ்சேன். வளையை அணிந்த கையினை உடையாரது கடைக் கண்களுக்கு அஞ்சேன். அன்பர் தம் எலும்புகள் எல்லாம் உருகும்படி அருள் நோக்கம் தந்து அம்பலத்தில் ஆடுகின்ற என் துளைபடா முழு மாணிக்கம் போன்ற பெருமானைப் போற்றி அவனது இனிய அருளைத் துய்க்க மாட்டாத அன்பில்லாதவர்களைக் கண்டால் அது நாம் அஞ்சும் வகையாகும்.

4. கிளியனார் கிளவி அஞ்சேன்
அவர்கிறி முறுவல் அஞ்சேன்
வெளிய நீ றாடு மேனி
வேதியன் பாதம் நண்ணித்
துளியுலாங் கண்ண ராகித்
தொழுதழு துள்ளம் நெக்கிங்கு
அளியிலா தவரைக் கண்டால்
அம்ம நாம் அஞ்சு மாறே.

5. பிணிஎலாம் வரினும் அஞ்சேன்
பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி னான்தன்
தொழும்பரோடு அழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்தும் காணாச்
சேவடி பரவி வெண்ணீறு
அணிகிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

6. வாள்உலாம் எரியும் அஞ்சேன்
வரைபுரண் டிடினும் அஞ்சேன்
தோள்உலாம் நீற்றன் ஏற்றன்
சொற்பதம் கடந்த அப்பன்
தாளதா மரைகள் ஏத்தித்
தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

7. தகைவிலாப் பழியும் அஞ்சேன்
சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந்து எரிகை வீசும்
பொலிந்தஅம் பலத்துள் ஆடும்
முகைநகைக் கொன்றை மாலை
முன்னவன் பாதம் ஏத்தி
அகம் நெகா தவரை கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

8. தறிசெறி களிறும் அஞ்சேன்
தழல்விழி உழுவை அஞ்சேன்
வெறிகமழ் சடையன் அப்பன்
விண்ணவர் நண்ண மாட்டாச்
செறிதரு கழல்கள் ஏத்திச்
சிறந்தினிது இருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

கிளி போன்ற பெண்களின் கொஞ்சும் சொற்களுக்கு அஞ்சேன்; அவர்களின் மாயமான முறுவலுக்கு அஞ்சேன்; வெள்ளிய நீறு அணிந்த மேனியை உடைய வேதப் பொருளானவனின் திருவடியை அடைந்து நீர்த்துளிகள் சிந்துகிற கண்கள் உடையராகி வணங்கி அழுது நெகிழும் மனக் குழைவு இல்லாதவர்களைக் கண்டால் அது நாம் அஞ்சும் வகையாகும்.

நோய்கள் எல்லாமும் வந்தாலும் அஞ்சேன்; பிறப்பு இறப்பு ஆகியவற்றுக்கு அஞ்சிடேன்; பிறைத் திங்களை அணிந்தவன் தன் தொண்டர்களோடு இறையன்பில் அழுந்தி, அந்தத் திருமால் வலிய நிலத்தைத் தோண்டிச் சென்றும் காண முடியாத செவ்விய அடிகளை வழிபட்டு, வெண்ணீறு அணியாதவர்களைக் கண்டால் நாம் அஞ்சுகிறோம்.

ஒளி வீசும் நெருப்பையும் அஞ்சேன். மலை புரண்டாலும் அஞ்சேன், தோளில் திகழும் திருநீறு உடையவன், காளை ஊர்தியன், சொல்நிலை கடந்த தந்தை ஆகிய பெருமானின் திருவடிகளான தாமரைகளைப் போற்றிப் பெருமை பொருந்திய அம் மலர்களைத் தலையில் அணிந்து நைந்து அடிமையாகி விடாதாரைக் காண அது நாம் அஞ்சும் தன்மையாகும்.

தடுத்தற்கு அரிய பழிகள் வந்தாலும் அஞ்ச மாட்டேன் சாவதற்கு அடியேன் முன்னமே அஞ்சியதில்லை, புகை கொண்ட அனல் மழு உடைய கையினை வீசி அழகிய அம்பலத்திலே கூத்துச் செய்தும் மொட்டு விரியும் கொன்றை மாலையை அணிந்தும் உள்ள முன்னவனின் அடிகளை வணங்கி உள்ளம் உருகாதவரைக் காணின் நாம் அஞ்சுகிறோம்.

தறியிற் கட்டப்படும் யானைக்கு அஞ்சுவதில்லை. நெருப்புப் போன்ற கண்களை உடைய புலிக்கும் அஞ்சிடேன். மணம் வீசும் சடையை உடையவனும் நம் தந்தையுமாகிய சிவபெருமானின், தேவரும் அடைய முடியாத நெருங்கிய திருவடிகளைப் போற்றிச் சிறப்புற்று இனிதாக இருக்க முடியாத, அறிவில்லாதாரைக்கண்டால் நாம் அது அஞ்சும் வகையாகும்.

9. மஞ்சுஉலாம் உருமும் அஞ்சேன்
மன்னரோடு உறவும் அஞ்சேன்
நஞ்சமே அமுதம் ஆக்கும்
நம்பிரான் எம்பி ரானாய்ச்
செஞ்செவே ஆண்டு கொண்டான்
திருமுண்டம் தீண்ட மாட்டாது
அஞ்சுவார் அவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

10. கோள்நிலா வாளி அஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீள்நிலா அணியி னானை
நினைந் துளநைந்து உருகி நெக்கு
வாள்நிலாம் கண்கள் சோர
வாழ்த்திநின்று ஏத்த மாட்டா
ஆண்அலா தவரைக் கண்டால்
அம்ம நாம் அஞ்சு மாறே.

திருச்சிற்றம்பலம்

## முப்பத்தாறு

# திருப் பாண்டிப் பதிகம்

திருப்பெருந்துறையில் அடிகள் அருளிய இத் திருப்பதிகம் பத்துக்கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டுள்ளது. பெருமான் பாண்டிப் பிரான் ஆகப், பரிமேல் அழகனாக, வந்து அருளிய கோலத்தைப் பரவுதல் இதன் கருத்தாக உள்ளது.

''சிவானந்த விளைவு அதாவது சுகமேலீடு'' இதன் உட்கிடை என்று கூறப்படுகிறது.

திருச்சிற்றம்பலம்

1. பருவரை மங்கைதன் பங்கரைப்
பாண்டியற்கு ஆரமுதாம்
ஒருவரை ஒன்றுமி லாதவரைக்
கழற்போ துஇறைஞ்சித்
தெரிவர நின்றுருக் கிப்பரி
மேற்கொண்ட சேவகனார்
ஒருவரை அன்றி உருவறி
யாது என்தன் உள்ளம் அதே.

மேகத்திடை ஓடும் இடிக்கும் அஞ்சமாட்டேன். மன்னரோடு பழகும் தீப் போன்ற உறவுக்கும் அஞ்ச மாட்டேன். நஞ்சத்தை அமுதம் ஆக்கும் நம் பெருமான் எனக்குத் தனியுரிமையான தலைவனாக மிகச் செம்மையாக ஆட்கொண்டான்; சிவபெருமானது திருவை-நீற்றை - நெற்றியில் பூசிக் கொள்ளாது அஞ்சுபவர்களைக் கண்டால் நாம் அஞ்சும் வகையை என்னென்று சொல்லுவோம்!

உயிரைப் பறிக்கும் கொலை இயல்பு தங்கிய நிலை பெற்ற அம்புக்கு அஞ்சமாட்டேன். கூற்றுவனின் கோபத்துக்கு அஞ்ச மாட்டேன். நீண்ட பிறையை அணியும் இறைவனை நினைந்து மனம் நைந்து உருகி நெகிழ்ந்து ஒளி உலவும் கண்கள் நீர் சிந்த வாழ்த்துப் புகன்று வணங்க மாட்டா ஆண்மையற்றவர்களைக் கண்டால் நாம் அஞ்சும் வகையை என்னென்போம்!

○

"புரவியின்மேல் பாண்டியன் முன் வரும்பதத்தை யாம் பெறும் அற் புதம்போல் யாரும் விரவுமின்கள் என்று அடியார்க்கு உறுதி சொலல் திருப்பாண்டி விருத்தம் ஆமே" என்கிறது திருவாசக உண்மை.

இறைவனைப் பாண்டியனார், பாண்டிப் பிரான், தென்னவன் என்றும் பேரின்ப நிலையைச் பாண்டிப் பெரும்பதம் என்றும் அடிகள் கூறுவது ஒரு தனித் தன்மையதாக உள்ளது.

"பாண்டியனார் ஓர் இன்ப வெள்ளம் உருக்கொண்டு தொண்டரை உள்ளம் கொண்டார் பேரின்ப வெள்ளத்துள் பெய்கழலே சென்று பேணுமின்" என்பதும் "மூல பண்டாரம் வழங்குகிறான் வந்து முந்துமினே" என்பதும் அனைவரையும் சிவானந்த விளைவு பெற ஆற்றுப் படுத்துவதாக உள்ளது.

○

பெரியதாகிய இமயமலையின் மன்னவன் பெற்ற மகளாகிய உமையம்மையைப் பாகமாக உடையவரும் பாண்டிய மன்னனுக்கு அடைதற்கு அரிய அமிர்தம் ஆகிய ஒப்பற்றவரும், பெயர் வடிவு குணம் முதலிய எதுவும் இல்லாதவரும், தம் திருவடித் தாமரைகளை அடியேன் வணங்க என் கண்களுக்குப் புலப்பட வந்து நின்று மனத்தை உருக்கிக் குதிரைமேல் எழுந்தருளிய வீரரும் ஆகிய தனிப் பெரும் சிவபெருமானை அன்றி வேறு எவருடைய உருவத்தையும் அடியேன் மனமானது அறியமாட்டாது.

2. சதுரை மறந்து அறி மால் கொள்வர்
சார்ந்தவர் சாற்றிச் சொன்னோம்
கதிரை மறைத்தன்ன சோதி
கழுக்கடை கைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்து கூடிடு
மேல்குடிகேடு கண்டீர்
மதுரையர் மன்னன் மறுபிறப்பு
ஓட மறித்திடுமே.

3. நீர் இன்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சம் கொண்டீர்
பார்இன்ப வெள்ளம் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனார்
ஓர் இன்ப வெள்ளத்து உருக்கொண்டு
தொண்டரை உள்ளம் கொண்டார்
பேரின்ப வெள்ளத்துள் பெய்கழ
லேசென்று பேணுமினே.

4. செறியும் பிறவிக்கு நல்லவர்
செல்லன் மின்தென்னன் நன்னாட்டு
இறைவன் கிளர்கின்ற காலம்இக்
காலம்எக் காலத் துள்ளும்
அறிவொண் கதிர்வாள் உறைகழித்து
ஆனந்த மாக்கடவி
எறியும் பிறப்பை எதிர்ந்தார்
புரவி இருநிலத்தே.

5. காலம் உண் டாகவே காதல்செய்து
உய்ம்மின் கருதரிய
ஞாலம் உண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலம் உண் டான்எங்கள் பாண்டிப்
பிரான்தன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான் வந்து முந்துமினே.

6. ஈண்டிய மாயா இருள்கெட
எப்பொரு ளும் விளங்கத்
தூண்டிய சோதியை மீனவ
னும் சொல்ல வல்லனல்லன்;
வேண்டிய போதே விலக்கிலை
வாய்தல் விரும்புமின்தாள்
பாண்டிய னாரருள் செய்கின்ற
முத்திப் பரிசு இதுவே.

சிவபரம்பொருளை அடைந்தவர்கள் தம் திறமையைமறந்து ஞானமையல் கொள்வர். இதனை உறுதியாகச் சொன்னோம். கதிரவனின் ஒளியை மறைத்தாற் போன்ற பேரொளிப் பிழம்பு ஆகிய பெருமான் தம் கையில் சூலம் ஏந்திப் பிடித்துக் கொண்டு குதிரை மேல் எழுந்தருளி வந்து நம்மைக் கூடுமாயின் நம் பிறவிப் பிணி அழியும், மதுரையர்க்கு மன்னனாகிய அப் பெருமான், நம் பிறவி தொடர்வதைத் தடுக்கும்.

நீவிர் இன்பக் கடலுள் நீந்தி முழுகுகின்ற மனத்தை உடையராயின், உலகம் எல்லாவற்றையும் இன்பக் கடலானது கவர்ந்து கொள்ளுமாறு பாண்டிப்பிரானார் [இறைவன்] ஒப் பற்ற ஆனந்த வெள்ளமே உருவாகக் கொண்டு அடியாரது உள்ளங் கவர்ந்து கொண்டார். பேரின்பப் பெருக்கிற்குப் புணையாக அவரது கழல் அணிந்த திருவடியையே சென்று பற்றிப் போற்றுங் கள்.

பாண்டியனது நல்ல நாட்டின் கண் இறைவனானவன் விளங்குகின்ற காலம் இக்காலமே ஆதலால், எக் காலத்திலும் ஞான ஒளியாகிய கதிர்களை உடைய வாளை உறையினின்றும் எடுத்து இன்பம் என்னும் குதிரையைச் செலுத்திப் பிறவியாகிய எதிர்ந்தாரைப் பெரிய நிலத்தில் புரளுமாறு வெட்டும். ஆகலின் நல்லோர், அடர்ந்து வரும் பிறவிகட்குச் செல்லற்க.

காலம் இருக்கும் பொழுதே மிகுதியாகப் பயன் கிடைக் கும் படி இறைவனிடம் இடைவிடா அன்பு செய்து கடைத் தேறுங்கள், நினைத்தற்கு அரிய பெருமை உள்ள உலகம் உண்ட திருமாலும் பிரமனும் பிற தேவர்களும் நெருங்க முடியாத கொடிய நஞ்சினை உண்டவனாகிய எங்கள் பாண்டிப் பெரு மானாம் சிவபிரான் தன் மெய்யடியார்களுக்கு மூல நிதிக் குவை யாகிய பேரின்பச் செல்வத்தை அள்ளிக் கொடுக்கிறான். முந்த வாருங்கள்!

நெருங்கிய மாயையாகிய இருள் அழியவும் எப்பொருளும் விளங்கவும் குதிரை செலுத்தி வந்த ஒளியைப் பாண்டியனும் (மன்னனும்) அறிந்து சொல்ல வல்லவன் அல்லனா யிருந்தான். நீங்கள் இறைவன் திருவடியை விரும்புவீராக. விரும்பிய பொழுதே அது வாய்வது உறுதி; விலக்குக் கிடையாது. பாண்டிப் பிரா னாகிய சிவபெருமான் அருள் செய்கின்ற பேரின்பப் பரிசு இதுவேயாம்.

7. மாய வனப்பரி மேற்கொண்டு
மற்றவர் கைக்கொளலும்
போயறும் இப்பிறப் பென்னும்
பகைகள் புகுந்தவருக்கு
ஆய அரும்பெரும் சீருடைத்
தன் அருளே அருளும்
சேய நெடுங்கொடைத் தென்னவன்
சேவடி சேர்மின்களே.

8. அழிவின்றி நின்றதோர் ஆனந்த
வெள்ளத் திடை அழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்
கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத்து ஆண்டவன்
பாண்டிப் பெரும்பதமே
முழுதுல கும்தரு வான்கொடை
யேசென்று முந்துமினே.

9. விரவிய தீவினை மேலைப்
பிறப்புமுந் நீர்கடக்கப்
பரவிய அன்பரை என்புருக்
கும்பரம் பாண்டியனார்
புரவியின் மேல்வரப் புந்திகொ
ளப்பட்ட பூங்கொடியார்
மரவியல் மேற்கொண்டு தம்மையும்
தாம்அறி யார்மறந்தே.

10. கூற்றைவென் றாங்குஐவர் கோக்களை
யும்வென் றிருந்து அழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியும்
தானுமோர் மீனவன்பால்
ஏற்று வந்து ஆருயிர் உண்ட
திறல்ஒற்றைச் சேவகனே
தோற்றமி லாதவர் சேவடி
சிக்கெனச் சேர்மின்களே.

திருச்சிற்றம்பலம்

செம்மை பொருந்திய சிறந்த கொடைகள் புரியப் பாண்டிப் பிரான், ஆகிய சிவபெருமான் மாயமாகிய அழகிய குதிரை மேல் ஏறி மற்றவர்களைத் தன் வயமாக்கி விடவும் அவர்கட்கு இப் பிறப்புக்குக் காரணமான பகைகள் சென்றொழிந்து விடும். அவன் திருவடி புகுந்தார்க்கு உண்டாகிய கிடைத்ததற்கு அரிய பெருஞ்சிறப்புடைத்தான தன் அருளையே அருளுவான், ஆகலின் அவனது செவ்விய திருவடிகளை அடைவீர்களாக.

அழிவில்லாமல் நிலைத்ததாக உள்ள பேரின்பப் பெருக்கில் அழுந்துமாறு செய்து, நீக்கம் இலாத தன் பேரருளைக் காட்டி வலிய வினைகளைக் களைந்து தொன்று தொட்டு வரும் மாசு களாம் பற்றுகளை அறுத்து ஆண்டருளிய பெருமான் சிவ பெரும் பதமாகிய பேரின்ப உலகம் முழுமையையும் உங்கட்குக் கொடை யாகத் தருவான், அவன் தரும் அந்த வீட்டுலகப் பரிசினைப் பெறுதற்கு விரைந்து முன் செல்வீர்களாக,

தீவினை கலந்த முந்திய பிறவிக் கடலைக் கடத்தற்கு வழிபட்ட மெய்யன்பரை அன்பு மிகுதியால் எலும்பு உருகுமாறு செய்கின்ற மேலான பாண்டிப் பிரானாகிய சிவபெருமான் குதிரை மேல் ஏறிவரலும் அது கண்ட உணர்வு கவரப்பட்ட பூங்கொடி போன்ற மகளிர் மரத்தின் தன்மை உடையராகி, மறந்து, தம்மையும் தாம் அறியாராயினர்.

காலனை வென்று அவ்வாறே ஐம்புலன்கள் ஆகிய அரசர் களையும் வென்று பெருமை மிக்க தேவியாகிய உமையம்மையும் தானுமாக அழகுடன் வீற்றிருந்த சிவபெருமான் ஒரு பாண்டிய னிடம் இரந்து வந்து அவனது அரிய உயிரைத் தன் மயமாக்கிக் கொண்ட ஆற்றல் மிக்க தனிச் சிறப்புடைய வீரன் ஆவான் தெளிவு பெறாதவர்களே, அவனது திருவடியை உறுதியாகச் சென்று சேருங்கள்.

## முப்பத் தேழு

# பிடித்த பத்து

திருவாசகம் ஓதுவார் நாடொறும் ஓதும் திருப்பதிகங்களுள் இதுவும் ஒன்று. ஆசிரிய விருத்தங்கள் பத்து அடங்கியுள்ள இது சீகாழிப்பதியில் அருளப் பெற்றது. திருவருள் இன்பத்தில் கலந்து பெருமானை இறுகப் பற்றிக் கொண்டவராக "உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்து அருளுவது இனியே?" என்ற முடிவு முழங்க ஒவ்வொரு திருப்பாட்டும் இனிமை ததும்பப் பாடியுள்ளார் அடிகள். "முத்திக் கலப்பு உரைத்தல்; அதாவது மற்றும் உள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின் சுகத்தைச் சொல்லியது" என்பது இப் பதிகத்தின் உட்கிடை என்ப.

திருச்சிற்றம்பலம்

1. உம்பர்கட்கு அரசே! ஒழிவற நிறைந்த
யோகமே! ஊத்தையேன் தனக்கு
வம்பெனப் பழுத்துஎன் குடிமுழுது ஆண்ட
வாழ்வற வாழ்வித்த மருந்தே!
செம்பொருள் துணிவே! சீருடைக் கழலே!
செல்வமே! சிவபெரு மானே!
எம்பொருட்டு உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?

2. விடைவிடாது உகந்த விண்ணவர் கோவே!
வினையனேன் உடையமெய்ப் பொருளே!
முடைவிடாது அடியேன் மூத்துஅற மண்ணாய்
முழுப் புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணம் காத்துஎனை ஆண்ட
கடவுளே, கருணை மா கடலே!
இடைவிடாது உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?

3. அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே!
அன்பினில் விளைந்த ஆரமுதே!
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே! சிவபெரு மானே!
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?

"யோகமே, மருந்தே, செல்வமே, சிவபெருமானே. கடவுளே, கருணை மாகடலே, அம்மையே, அப்பா, ஒப்பிலா மணியே, அன்பினில் விளைந்த, ஆரமுதே, சுடரே கனியே, விளக்கே, சித்தனே" என்பன முதலாகப் பெருமானை விளித்துரைப்பன மிகவும் இனிமை கொழிப்பன. பால் நினைந்து ஊட்டும் தாயினும் அவன்சாலவும்பரிவினனாகத் தம்ஊனினைஉருக்கிஉள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தம் தந்ததை உள்ளிஉள்ளி மகிழ்கிறார் அடிகள் "மிக்க பிற வித்துயர் எலாம் ஒழித்து. விபுத்துவம் இங்கு அளித்தலாலே சிக்கறச் சிக்கெனப் பிடித்தேன் நின்னை என்று துணிவு செப்பல் பிடித்த பத்தாம்" என்பது இதற்குத் திருவாசக உண்மை தரும் மையக்கருத்தாகும். ○

மேல் உலகத்தவர்க்குத் தலைவனே! எங்கும் நீங்குதலின்றி நிறைந்திருக்கும் சிவ யோக இன்பமே! அழுக்கு மனம் உடைய எனக்கு 'இது புதுமை' என்று என்று கூறுமாறு அருள் கனிந்து என் குடி முழுதும் ஆண்டு, பிழைவாழ்வு நீங்க உயர் வாழ்வு தந்த அமுதமே! மறைகள் சுட்டும் செம்மையான பொருளின் முடிவாக இருப்போனே! வீடு பேறாம் சிறப்பை அளிக்க வல்ல திருவடி உடையவனே! பேரறிவாம் செல்வமே! சிவபெருமானே! அடியேங்கள் உய்தல் வேண்டி உன்னை உறுதியாகப் பிடித்துக் கொண்டேன். இனி நீ வேறு எங்கே எழுந்தருள முடியும்?

அறத்தின் வடிவாம் எருதினை விடுதலின்றி ஊர்தியாக விரும்பிக் கொண்ட வானவர் கோமானே! தீவினை உடைய அடியேனை அடிமையாக உடைய உண்மைப் பொருளே! அடியேன், நாற்றம் நீங்காத முழுக்கப் புழுக்களாக இருக்கும் உடம்பிற் கிடந்து மூப்பு எய்தி வெறும் மண்ணாகிக் கீழ்ப்பட்டுப் போகாமல் என்னைக் காப்பாற்றி ஆண்டு கொண்ட கடவுளே; அருட்பெருங் கடலே! உன்னை இடையறாது உறுதியாகப் பிடித்துக் கொண்டேன். நீ இனி எங்கே செல்ல முடியும்?

அடியேங்களின் தாயே! தந்தையே! ஒப்பற்ற மாணிக்க மணியே! அன்பாகிய கடலில் விளைந்த அருமையான அமுதமே! நிலையில்லாதவற்றைப் பெரிதாக்கிக் கொண்டு அதனால் பொழுதை வறிதே போக்கும் புழுக்களின் இருப்பிடமாம் இழிதகையனாகிய எனக்குச் செம்பொருள் ஆகிய சிவநிலை தந்த செல்வமே, சிவபெருமானே! இப்பிறப்பிலேயே உன்னைத் திட்பமுறப் பிடித்துக் கொண்டேன். என்னை விட்டு நீ எங்கே எழுந்தருளல் இனி இயலும்?

4 அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே!
பெருந்திறல் அருந்தவர்க்கு அரசே!
பொருளுடைக் கலையே! புகழ்ச்சியைக் கடந்த
போகமே! யோகத்தின் பொலிவே!
தெருளிடத்து அடியார் சிந்தையுள் புகுந்த
செல்வமே! சிவபெருமானே!
இருளிடத்து உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?

5 ஒப்பு உனக்கு இல்லா ஒருவனே! அடியேன்
உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே!
மெய்ப்பதம் அறியா வீறிலியேற்கு
விழுமியது அளித்ததோர் அன்பே!
செப்புதற்கு அரிய செழுஞ்சுடர் மூர்த்தி!
செல்வமே! சிவபெரு மானே!
எய்ப்பு இடத்து உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே!

6. அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்டு
அளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவேர் அறுத்து என் குடிமுழுது ஆண்ட
பிஞ்ஞகா! பெரியஎம் பொருளே!
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே! சிவபெரு மானே!
இறவிலே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?

7. பாசவேர் அறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமாறு அடியனேற்கு அருளிப்
பூசனை உகந்துஎன் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே!
தேசுடை விளக்கே! செழுஞ்சுடர் மூர்த்தி!
செல்வமே சிவபெரு மானே!
ஈசனே! உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே!

அருள் பொதிந்த சுடர் ஒளியே! நன்கு கனிந்த ஒரு தனிக் கனியே! பெரிய ஆற்றலும் அரிய தவமும் வாய்ந்தோர்க்குத் தலைவனே! மெய்ப் பொருள் அடங்கிய கலையே! புகழ்ந்து பேசுதற்கு அப்பாற்பட்ட உயர் போகமே! யோகத்தால் வரும் உள் நிறை அழகே! தெளிவு பெற்ற அடியாரின் உள்ளத்துள் புகுந்து உறையும் செல்வமே! சிவபெருமானே! மயக்கத்தின் இடமான இவ்வுலகில் உன்னை நன்கு பற்றிக் கொண்டேன். என்னை விட்டு நீ இனி எங்கே எழுந்தருளல் முடியும்?

தனக்கு நிகர் எக்காலத்தும் இல்லாத தனிப்பெரும் பொருளே! அடியேனது உள்ளத்துள் சுடர் வீசிக் கொண்டிருக்கும் ஒளியே! இறைமைப் பண்பை அறிய முடியாத சிறப்பில்லாதவன் ஆகிய எளியேனுக்கு மேலாம் நிலைமையைத் தந்த ஒப்பற்ற அன்பு உடையவனே! சொல்லுதற்கு முடியாத செழிப்பு உள்ள சுடர் வடிவனே! செல்வமே! சிவபெருமானே! எய்த்துவிட்ட போது உன்னை அடியேன் இறுகப் பற்றிக் கொண்டு விட்டேன். நீ இனி எங்கே எழுந்தருளல் முடியும்?

யாதும் ஓர் ஆதரவும் இல்லாதவனாகிய என் மனத்தைக் கோயிலாகக் கொண்டு ஆண்டருளி, அளவிலாப் பேரின்பம் அளித்து என் பிறவியின் வேரைக் களைந்து என் குடி முழுவதையும் காத்தருளின, தலைக் கோலம் உடையோனே! பெரிய யாவினும் பெரிய எம் மெய்ப் பொருளே! வெளிப்பட யான் காணுமாறு விளங்கி காட்சியே! அடியேனுடைய செல்வமே! சிவபெருமானே! முடிவாக உன்னை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டேன். இனி நீ எங்கெழுந்து செல்லுவை?

பற்றுக்களின் வேரை அறித்தெறிய வல்ல பழம் பொருளாகிய தன்னைப் பற்றிக் கொள்ளுமாறு அடியவனாகிய எனக்கு அருளி, என் வழிபாட்டினை விரும்பிக் கொண்டு என் உள்ளத்துள் புகுந்து தன் பொலிவுடைய திருவடிகளின் காட்சியைத் தந்தருளிய மெய்ப்பொருளே! ஒளிவிளக்கே! வளமிக்க சுடர்வடிவே! செல்வமே! சிவபெருமானே! எல்லாம் உடையானே! உன்னை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டேன். நீ இனி எங்கெழுந்து அருளுதல் கூடும்?

8. அத்தனே! அண்டர் அண்டமாய் நின்ற
ஆதியே! யாதும்ஈ றில்லாச்
சித்தனே! பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே! சிவபெரு மானே!
பித்தனே! எல்லா உயிருமாய்த் தழைத்து
பிழைத்தவை அல்லவையாய் நிற்கும்
எத்தனே! உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?

9. பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்து நீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே! சிவபெரு மானே!
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே!

10. புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்துஎன்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட
ஈசனே! மாசிலா மணியே!
துன்பமே பிறப்பே இறப்பொடு மயக்காம்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ!
இன்பமே! உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்;
எங்கெழுந் தருளுவது இனியே?

திருச்சிற்றம்பலம்

## முப்பத்தெட்டு

## திருவேசறவு

பத்து கொச்சகக் கலிப்பாக்கள் அடங்கிய இத் திருப்பதிகம் திருப்பெருந்துறையில் அருளப் பெற்றதாகும் பெருமான் தனக்குத் தண்ணருள் புரிந்து ஆட்கொண்டமையை நினைந்து தனிமையால் ஏங்குகிறார் அடிகள். ஏசறவு என்பது இரங்குதல் என்னும் பொருளது. முயன்று அலுத்துச் சலித்தலை ஏசறுதல் குறிப்பது உண்டு.

எல்லா உயிர்க்கும் தந்தையே! உயிர்களின் ஆதாரமான அண்டமாக நின்ற முதற் பொருளே! முடிவு என்பதே சிறிதும் அடையாத அறிவுருவே! அன்பர்கள் உறுதியாகப் பிடித்துக் கொண்ட செல்வமே! சிவபெருமானே! அளவு மிகுந்த அன்புடைய வனே! எல்லா உயிர்களுமாகப் பெருகிப் பின்பு நீங்கி அவை அல்லையுமாகி நிற்கும் விரகனே (தந்திரக்காரனே)! உன்னை அடியேன் உறுதியாகப் பற்றிக் கொண்டேன். இனி நீ எங்கு எழுந்தருளக் கூடும்?

பால் கொடுக்கும் நேரத்தை முன்னதாக நினைந்து அதனை ஊட்டும் தாயைவிட நெகிழ்ந்த அன்பு கொண்டு, பாவியாகிய எனது உடம்பை உருகுமாறு செய்து உள்ளத்தின் ஒளி பெருக வைத்து அழிவிலா இன்மாகிய தேனைப் பொழிந்து, விட்டுப் பிரியாமல் சுற்றிச் சுற்றித் தொடர்ந்து திரிந்த செல்வமே! சிவ பெருமானே! அடியேன் உன்னைத் தொடர்ந்து உறுதியாகப் பற்றிக்கொண்டேன். இனி நீ எங்கு எழுந்தருளல் கூடும்?

இழிந்ததான புலால் உடம்பின் உள்துளைகள் எல்லாம் உருக, அந்த உடம்பைப் பொன்னால் ஆன பெரிய கோயிலாகக் கருதி அதனுள் புகுந்து அருளி, என் எலும்புகள் யாவும் உருகச் செய்து எளிவந்தவனாகி ஆண்ட அருமை உடையவனே! குற்றம் இல்லா மாணிக்க மணியே! பிறப்பு இறப்பு துன்பம் மயக்கு ஆகிய பிணிப்புகள் எல்லாவற்றையும் களைந்தெறிந்த நல்ல ஒளியே! இன்பமே! உன்னை உறுதியாகப் பிடித்துக் கொண்டேன். இனி எங்கெழுந்தருளுவாய்?

○

"சுட்டறிவு ஒழித்தல்; என்பது தன் செயல் அற நிற்றல்" என்பது இதன் உட்கிடை என்ப. "தக்க பரியாய் நரியை ஆக்குதல் போல் எனைப் பெரிதாய்த் தாக்கித் தாள்கீழ் அக்கணம் வைத் தனையே என்று இரங்கல் திரு வேசறவு என்று இயம்ப லாமே" என்று திருவாசக உண்மை இதன் உட்பொருள் கூறும்.

'இறைவன் தம்மை வலிய ஈர்த்து ஈர்த்து என்பு உருக்கிக் கன்னல் தருசுவை தந்தமை'யை வியக்கிறார் அடிகள். "நானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன், தானே வந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்கு அருள் செய்தான் தித்திக்கும் சிவபெருமான்" என்று உவந்து நினைந்து இரங்குகிறார் அவர்.

○

திருச்சிற்றம்பலம்

1. இரும்புதரு மனத்தேனை
ஈர்த்துஈர்த்துஎன் என்பு உருக்கிக்
கரும்புதரு சுவைஎனக்குக்
காட்டினைஉன் கழல் இணைகள்
ஒருங்குதிரை உலவுசடை
உடையானே! நரிகள் எல்லாம்
பெருங்குதிரை ஆக்கியவாறு
அன்றேஉன் பேரருளே!

2. பண் ஆர்ந்த மொழி மங்கை
பங்கா! நின் ஆளானார்க்கு
உண் ஆர்ந்த ஆரமுதே!
உடையானே! அடியேனை
மண் ஆர்ந்த பிறப்பறுத்திட்டு
ஆள்வாய்! நீவா என்னக்
கண் ஆர உய்ந்தவாறு
அன்றேஉன் கழல் கண்டே.

3. ஆதம் இலி யான் பிறப்பு
இறப் பென்னும் அருநரகில
ஆர்தமரும் இன்றியே
அழுந்துவேற்கு 'ஆ!ஆ!' என்று
ஓதம்மலி நஞ்சுஉண்ட
உடையானே! அடியேற்குஉன்
பாதமலர் காட்டியவாறு
அன்றே எம் பரம்பரனே!

4. பச்சைத் தால் அரவு ஆட்டீ!
படர்சடையாய்! பாதமலர்
உச்சத்தார் பெருமானே!
அடியேனை உய்யக்கொண்டு
எச்சத்துஆர் சிறுதெய்வம்
ஏத்தாதே அச்சோ என்
சித்தத்தாறு உய்ந்தவாறு
அன்றே உன் திறம் நினைந்தே,

5. கற்றறியேன் கலைஞானம்
கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம்
வாக்கு இயலால் வார்கழல்வந்து
உற்றிறு மாந்து இருந்தேன்எம்
பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்குஇடுமாறு
அன்றேநின் பொன்னருளே.

இரும்பு போன்ற மனம் உடைய அடியேனை இழுத்து இழுத்து என் எலும்பு உருகச் செய்து கரும்பு போன்ற சுவை உடைய உன் திருவடிக் காட்சிப் பேற்றை எளியேற்குத் தந்தனை. அலைகள் ஒன்று திரண்டு உலவும் கங்கையைச் சடையில் உடையவனே! நரிகளை எல்லாம் பெருமையான குதிரைகள் ஆக்கிய வகைமை நின்பேரருள் திறம் அல்லவா?

இசையின்பம் நிறைந்த சொல் பேசும் உமையம்மையைப் பாகமாக உடையவனே! உனக்கு ஆட்பட்டோர்க்கு உண்ணுதற்கு இனிமை மிக்க நிறை அமுதமாக இருப்போனே! ஈசனே? அடியவனாகிய எளியேனது மண்ணுலகிற் பொருந்திய பிறப்பினை அடியோடு களைந்து ஆள்பவனே! நீ அடியேனை 'வா!' என்று அழைத்தருள யான் உன் அடிகளைக் கண்ணாரக் கண்டு அல்லவா எனக்கு உய்யு நிலை உண்டானது!

[பற்றுக்கோடாகிய] ஆதரவு இல்லாதவன் அடியேன், பிறப்பு இறப்பு என்னும் மீளமுடியா நரகத்தில் கிடந்து உற்ற உறவினர் ஒருவரும் இன்றி அழுந்துகின்ற அடியேற்கு 'ஆகா!', என்று இரங்கி, கடலிற் பொங்கி எழுந்த நஞ்சினை உண்ட எம் உடையானே! அடியேற்கு உன் திருவடி மலர்களைக் காட்டிய தன்மை, எம் மேலான இறைவனே! வியப்புக்கு உரியதல்லவா?

பசுமையான நாக்கினை உடைய பாம்பை ஆடச் செய்பவனே! விரிந்த சடையை உடையவனே! உன் திருவடித் தாமரைகளைத் தம் தலைமேற் சூடிய அடியார்களின் தலைவனே! குறைபாடுகள் உள்ள சிறு தெய்வங்களை வழிபடாமல் உன் திறனை நினைந்திருந்தமையால் அந்த நினைப்பின் வண்ணம் உய்ந்த தன்மை சிறப்பு அல்லவா?

சிவ மெய்யறிவு நூல்களை அடியேன் ஓதி உணரவில்லை; உன் திருவருளின் பொருட்டுக் கசிந்து உருக மாட்டேன். இருப்பினும் உன்னை அல்லாது வேறு தெய்வத்தை அறிந்திலேன் யான். உன் அருள் மொழியின் இயல்பினால் உன் நீண்ட கழல்களை அடைந்து இறுமாந்து இருந்தேன் எம் பெருமானே! அடியேற்கு நின் பொன்னான திருவருள் வாய்த்தது. அது நாய்க்குப் பொன்னால் ஆகிய இருக்கை இடுவது போல்வது அல்லவா? இஃது என்ன புதுமை!

6. பஞ்சுஆய அடிமடவார்
கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சுஆய துயர்கூர
நடுங்குவேன் நின்அருளால்
உய்ஞ்சேன்எம் பெருமானே
உடையானே அடியேனை
அஞ்சேல் என்று ஆண்டவாறு
அன்றேஅம் பலத்துஅமுதே?

7. என்பாலைப் பிறப்பறுத்திங்கு
இமையவர்க்கும் அறிய ஒண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந்
துறைஉறையும் சிவபெருமான்
அன்பால் நீ அகம்நெகவே
புகுந்தருளி ஆட்கொண்ட
தென்பாலே நோக்கியவாறு
அன்றேஎம் பெருமானே!

8. மூத்தானே! மூவாத
முதலானே! முடிவில்லா
ஓத்தானே! பொருளானே!
உண்மையுமாய் இன்மையுமாய்
பூத்தானே! புகுந்திங்குப்
புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தே நீ ஆண்டவாறு
அன்றே எம் பெருமானே!

9. மருவினிய மலர்ப்பாதம்
மனத்தில் வளர்ந்து உள்ளுருகத்
தெருவுதொறும் மிக அலறிச்
சிவபெருமான் என்றேத்திப்
பருகிய நின் பரங்கருணைத்
தடங்கடலிற் படிவாமாறு
அருள் எனக்கிங்கு இடைமருதே
இடங்கொண்ட அம்மானே!

10, நானேயோ தவம்செய்தேன்?
"சிவாயநம" எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமுமாய்த்
தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்து எனது உள்ளம்
புகுந்து அடியேற்கு அருள்செய்தான்
ஊன் ஆரும் உயிர் வாழ்க்கை
ஒறுத்து அன்றே வெறுத்திடவே.

திருச்சிற்றம்பலம்

பஞ்சு போன்ற மெல்லிய அடிகளை உடைய பெண்டிரின் கடைக்கண் பார்வையால் இடருக்கு உள்ளாகி, நஞ்சு போன்ற துன்பம் மிகுதலால் நடுங்குகின்ற அடியேன், நின் அருளால் பிழைத்துக் கொண்டேன். எம் பெருமானே! உடையவனே, அம் பலத்தில் திகழும் அமுதே! 'அஞ்சாதே' என்று அடியேனை ஆட் கொண்ட வகைமை எவ்வளவு மகிழ்ச்சிக்கு உரியது!

அடியேனிடத்து உளதாகிய பிறவிக் கேட்டினை இங்குக் களைந்து தேவர்களுக்கும் அறிய முடியாத, தென்திசையில் உள்ள திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே! நீ என்பால் கொண்ட அன்பு காரணமாக என் உள்ளம் நெகிழ அதன் உள்ளே புகுந்து ஆட்கொண்டமை நீ அடியேனை அருளுடன் நோக்கிய வகையால் அல்லவா?

காலத்தை எல்லாம் முன்னே உள்ளவனே! மூத்தவனாக இருந்தும் மூப்பு இல்லாத முதற் பொருளே! முடிவில்லாத மறை நூலாக உள்ளவனே! அதன் உட்பொருளானவனே! உண்மை யாகவும் இன்மையாகவும் தோன்றி நிற்போனே! இவ் உலகியலில் புரண்டு கொண்டிருக்கின்ற அடியேனை அருள் காரணமாக, எம் பெருமானே! அந் நிலையினின்றும் விலக்கி நீ அருள் புரிந்து ஆண்ட தன்மை எத்தகையது!

பொருந்துதற்கு இனிமையான மலர் போன்ற திருவடிகள் மனத்துள் உயர்ந்து அமைந்து உள்ளம் உருக, தெருக்கள் தோறும் மிகவும் அலறிக் கொண்டு, 'சிவபெருமானே' என்று போற்றி உரைத்து உள் அருள் பருகவும், அந்த நின் பேரருளா கிய அகன்ற கடலில் படிகின்ற நிலையினை அடியேற்கு இங்கு அளிப்பாயாக, திருவிடை மருதூரில் இடம் கொண்டு எழுந் தருளியுள்ள எம் இறைவனே!

அடியேன்தானோ தவம் செய்தனன்? 'சிவாய நம்' என்ற ஐந்தெழுத்து மந்திரத்தை உரைக்கும் பேற்றினைப் பெற்றேன். தேன் ஆகவும் இனிய அமுதமாகவும் இனிக்கின்ற சிவபெருமான் தானாக எளிவந்து எழுந்தருளி எளியேனின் உள்ளத்துள் புகுந்து உடம்போடு பொருந்திய உயிர் வாழ்வைக் கடிந்து யான் வெறுத்திட அடியேனுக்கு அருள் செய்தனன் அல்லவா?

○

## முப்பத்தொன்பது

# திருப் புலம்பல்

பெருமானின் திருவடியையே தனக்குப் பற்றுக்கோடாகப் பற்றிப் புலம்புதலை உரைக்கும் கொச்சகக் கலிப்பாக்கள் மூன்று கொண்ட திருப்பாடற் பகுதியான இது திருவாரூரில் அருளப் பெற்றது. உன் பூங்கழல்கள் அல்லாது வேறு எவற்றையும் சிறிதும் புகழேன், உன்னை அல்லாது துணை வேறு அறியேன், 'உற்றார் ஊர் பேர் கற்றார் என்பவெல்லாம் வேண்டா, கற்றதும் போதும்; கற்றாவின் மனம் போலக்கசிந்துருகுதலையே வேண்டுவேன் என்று

திருச்சிற்றம்பலம்

1. பூங்கமலத்து அயனொடு மால்
அறியாத நெறியானே!
கோங்கலர்சேர் குவிமுலையாள்
கூறா! வெண் ணீறாடீ!
ஓங்குஎயில் சூழ் திருவாரூர்
உடையோனே! அடியேன் நின்
பூங்கழல்கள் அவையல்லாது
எவையாதும் புகழேனே!

2. சடையானே! தழல்ஆடி!
தயங்குமூ விலைச்சூலப்
படையானே! பரஞ்சோதீ!
பசுபதீ! மழவெள்ளை
விடையானே! விரிபொழில் சூழ்
பெருந்துறையாய்! அடியேன்நான்
உடையானே! உனையல்லாது
உறுதுணைமற்று அறியேனே!

3. உற்றாரை யான் வேண்டேன்
ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன்
கற்பனவும் இனிஅமையும்
குற்றாலத்து அமர்ந்துறையும்
கூத்தா! உன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக்
கசிந்துருக வேண்டுவனே!

திருச்சிற்றம்பலம்

அடிகள் இதில் விளம்புகிறார். சிவப் பேரின்பம் பெற்ற ஆன்மா பிரிவினில் புலம்பித் தன் பற்றுறுதியை இயம்புவதாக இப் பதிகம் உள்ளது. ''சிவானந்த முதிர்வு அதாவது சிவானந்தம் பெற இச்சை'' என்பது இதன் உட்கிடை என்பர். ''கரைந்துருகும் பேரன்புக் கழல் இணைக்குக் கற்றாவின் மனம் போல் என்றும், திருந்தும் வகை எனக்கு அருள் எனக் கேட்ட திருப்புலம்பல்'' என்று திருவாசக உண்மை இதன் கருத்தைச் சுருக்கிக் கூறுகிறது.

○

அழகிய தாமரை மலரை இடமாக உடைய பிரமனுடன் திருமாலும் அறியாத உயர்நெறியினனே! கோங்கு அரும்பு போல் குவிந்த தனங்களை உடைய உமையம்மையின் பங்கனே! திருவெண்ணீறு முழுக்கப் பூசப் பெற்றவனே! உயர்ந்த மதில்கள் சூழ்ந்த திருவாரூரை இடமாக உடையவனே! அடியேன் உன் பொலிவுடைய திருவடிகளாகிய அவற்றை யன்றி வேறு எவற்றையும் சிறிதும் புகழமாட்டேன்.

சடையுடையவனே! தழல் ஏந்தி ஆடுவோனே! விளங்குகின்ற மூன்று இலை போலும் வடிவினதாகிய சூலப் படையினை உடையவனே! மேலாம் ஒளியுருவே! ஆன்மாக்களின் தலைவனே! இளைய வெள்ளிய காளை ஊர்தியை உடையவனே! எல்லாம் உடையவனே! அடியனாகிய யான் உன்னையன்றி உறுதித் துணை வேறு ஒருவரை அறிகிலேன்.

திருக்குற்றாலத்தில் விரும்பி எழுந்தருளியுள்ள கூத்தப் பெருமானே! அடியேன் யான் உறவினரை விரும்பேன்; ஊரை விரும்பேன்; பேரை விரும்பேன்; கற்றவரை வேண்டுதல் இலேன், கற்க வேண்டுவனவும் இனிப் போதும். உன் ஒலிக்கின்ற வீர கண்டை அணிந்த திருவடியை அடையும் பொருட்டே, கன்றை உடைய ஆவின் மனத்தைப் போல மனம் கசிந்து உருகுவதையே அடியேன் வேண்டுகிறேன்.

○

## நாற்பது

# குலாப் பத்து

கொச்சகக் கலிப்பாக்கள் பத்துக் கொண்ட, இப் பதிகம் குலாவுகின்ற தன்மைத்தாகித் தில்லையில் அருளப் பெற்றது. ''அனுபவம் இடையீடு படாமை; அதாவது தன் செயல் அற நிற்றல்'' இதன், உட்கிடை என்று கூறினர். தில்லை அம்பலவனின் திருவடிகளில் மகிழ்ந்து இடையறாத இன்பம் நுகர்தலின் பேரானந்தக் கனிவினை இப் பதிகம் தெரிவிக்கிறது.

''விரும்புசிவா னந்தவெள்ளம் விழைந்ததில்லை நாயகனை
மிகக் கொண்டாடி
நிரம்புமனக் களிமிகுத்த இறுமாப்பே குலாப்பத்தாய்
நிகழ்த்தலாமே''

திருச்சிற்றம்பலம்

1\. ஓடும் கவந்தியுமே
உறவுஎன்றிட்டு உள்கசிந்து
தேடும் பொருளும்
சிவன்கழலே எனத்தெளிந்து
கூடும் உயிரும்
குமண்டையிடக் குனித்துஅடியேன்
ஆடும் குலாத்தில்லை
ஆண்டானைக் கொண்டன்றே.

2\. துடிஏர் இடுகுஇடைத்
தூமொழியார் தோள்நசையால்
செடிஏறு தீமைகள்
எத்தனையும் செய்திடினும்
முடியேன்; பிறவேன்;
எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை
ஆண்டானைக் கொண்டன்றே.

3\. என்புஉள் ளுருக்கி இருவினையை ஈடழித்துத்
துன்பம் களைந்து துவந்துவங்கள் தூய்மை செய்து
முன்புள்ள வற்றை முழுதழிய உள்புகுந்த
அன்பின் குலாத் தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

என்று கூறும் திருவாசக உண்மை, இறைவனைக் கொண்டாடி மனக்களிப்பு மிகுதலால் உண்டாகும் இறுமாப்பு இதில் பேசப் படுகிறது என்று கூறுகிறது. கொண்டாட்டத்தின் எதிரொலி யாக ஒவ்வொரு பாடலும் "குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே" என்று முடிகிறது. 'விளங்கும் தில்லை ஆண்ட வனைக் கொண்டேன் அன்றே' என்றாவது "தில்லை ஆண்ட வனைக் குலாக் கொண்டேன் அன்றே" என்றாவது பொருள் கொள்ளலாம். "தேடும் பொருளும் சிவன் கழலே எனத் தெளிந்து உள் கசிந்து உடம்பும் உயிரும் கூத்தாட, ஆடும் தில்லை ஆண் டானைக் குலாக் கொண்டேன்" என்று முதற்பாட்டு இயம்பு கிறது. ○

அடியனேன், ஐயம் ஏற்கும் திருவோடும் கோவணமும் உறவென்று துணிந்து உள்ளம் நெகிழ்ந்து, தேடுதற்கு உரிய பொருள்தானும் சிவபெருமானின் திருவடியே என்று தெளிவுற்று உடலும் உயிரும் இன்பம் மிகக் கூத்தாட, வளைந்து கூத்தாடு கின்ற விளங்கும் தில்லை ஆண்டானை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

அடியேனைத் தன் திருவடிகளில் இணையச் செய்த விளங்கும் தில்லை ஆண்டானை விடாது இனிது பற்றிக் கொண்டேன், ஆதலால் உடுக்கை போலும் அழகான சுருங்கிய இடையையும் தூய சொல்லையும் உடைய மாதரது தோள்களின் மீதுள்ள விருப்பத்தால் குற்றம் மிகுவதற்கான தீமைகள் எத்தனை யாயினும் செய்தாலும் யான் இறக்க மாட்டேன்; பிறக்க மாட்டேன்.

அடியேனின் எலும்புகளை உள்ளுருகச் செய்து இருவினை களின் வலிமையை அழித்து, துன்பங்களை அகற்றி மாறுபட்ட இரண்டு இரண்டான நிலைகளைப் போக்கித் துப்புரவு ஆக்கி இனிவரக் கடவனவாயுள்ள துன்பங்கள் முழுதும் அழிக்கும்படி என் மனத்தின் கண்ணே புகுந்த அன்பினையுடைய விளங்கும் தில்லை ஆண்டானை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

4. குறியும் நெறியும்
குணமும் இல்லாக் குழாங்கள்தமைப்
பிறியும் மனத்தால்
பிறிவு அரிய பெற்றியனை
செறியும் கருத்தில்
உருத்து அமுதாம் சிவபதத்தை
அறியும் குலாத்தில்லை
ஆண்டானைக் கொண்டன்றே.

5. பேரும் குணமும் பிணிப்புறும்இப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசுஅறுத்துத் தொண்டர்எல்லாம்
சேரும் வகையால் சிவன்கருணைத் தேன்பருகி
ஆரும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

6. கொம்பில் அரும்பாய்க் குவிமலராய்க் காய்ஆகி
வம்புபழுத்து உடலம் மாண்டுஇங்ஙன் போகாமே
நம்பும்என் சிந்தை நணுகும்வண்ணம் நான்அணுகும்
அம்பொன் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே·

7. மதிக்கும் திறல் உடைய வல்லரக்கன் தோள்நெரிய
மிதிக்கும் திருவடி என்தலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்கு
அதிர்க்கும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே

8. இடக்கும் கருமுருட்டு ஏனப்பின் கானகத்தே
நடக்கும் திருவடி என் தலைமேல் நட்டமையால்
கடக்கும் திறல் ஐவர் கண்டகர்தம் வல் ஆட்டை
அடக்கும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

9. பாழ்ச்செய் விளாவிப்
பயன்இலியாய்க் கிடப்பேற்குக்
கீழ்ச்செய் தவத்தால்
கிழியீடு பட்டுத்
தாட்செய்ய தாமரைச்
சைவனுக்குஎன் புன்தலையால்
ஆட்செய் குலாத்தில்லை
ஆண்டானைக் கண்டன்றே.

அடையாளமும் வழியும் குணச்சார்பும் இல்லாராய், பாசக் கூட்டங்களை விட்டு நீங்குகின்ற மனத்தினராய் உள்ள அன்பர் தன்னை விட்டுப் பிரிதற்கு அரிய தன்மை உடையவனே, அன்பரது பொருந்திய கருத்தில் திருவுருக் கொண்டு தோன்றி அமுதம் போல் இனிக்கின்ற பேரின்பமாகிய சிவபதமாக இருக்கின்றவனை எல்லாவற்றையும் அறிகின்ற விளங்கும் தில்லை ஆண்டானை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

பெயர்களாலும் குணங்களாலும் கட்டுவிக்கப்படும் இந்தப் பிறவியைத் தூர்ந்து ஒழியும் வண்ணம் பற்றறுத்துத் தொண்டர் எல்லாரும் கூடும் வகையில் சிவபெருமானது திருவருளாகிய தேனைப் பருகி விளங்கும் நிறைவுடைய தில்லையிலுள்ள இறைவனை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

மரக்கிளையில் அரும்பாகத் தோன்றிக் குவிந்த மலராகி வீணே பழுத்து உடம்பு அழிந்து இங்ஙனம் பயனற்றுப் போகாமல் உறுதியோடு இருக்கும் அடியேனின் உள்ளத்தில் பெருமான் பொருந்துமாறு, யான் நெருங்கும் அழகிய பொன் போல் உயர்ந்து விளங்கும் தில்லையிலுள்ள ஆண்டானை விடாது இனிது பற்றிக்கொண்டேன்.

எல்லாரும் மதித்தற்கு உரிய வலிமை அமைந்த வலிய அரக்கனாகிய இராவணனது தோள்கள் நெரிந்து போகுமாறு மதிக்கின்ற திருவடியானது என் தலை மேல் வீற்றிருக்க, மிகுகின்ற பசுபாசங்கள் ஆகிய உயிரின் தன் நினைவு கட்டுகள் என்பன சிறிதும் இல்லோம் என்று களிப்படைந்து இவ்விடத்து அடியேன் ஆரவாரிக்கும், விளங்கும் தில்லையிலுள்ள ஆண்டானை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

நிலத்தைத் தோண்டும் இயல்புள்ள கரிய முருட்டுத் தன்மை உள்ள பன்றியின் பின்னே காட்டில் [அருச்சுனன் பொருட்டு] நடக்கின்ற திருவடியை என் தலைமேல் நாட்டியமையால் யாவரையும் வெல்லுதற்கு உரிய வலிமை அமைந்த ஐம்பொறிகளாகிய முன் போலத் துன்பம் செய்பவருடைய வலிய ஆட்டத்தை அடக்குகின்ற விளங்கும் தில்லை ஆண்டானை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

பாழ்நிலத்தை உழுது பயன் கிடைக்கப் பெறாமல் கிடக்கும் இயல்புடைய அடியேனுடைய முன்னைப் பிறவிகளில் செய்த தவப்பயனால் நிதிப்பொதி கிடைக்கப் பெற்றாற் போன்று சிவந்த தாமரை மலர் போன்ற திருவடிகளை உடைய சைவனாகிய பெருமானுக்கு என் இழிவான தலையினால் அடிமை செய்தற்கு இடமாகிய விளங்கும் தில்லையிலுள்ள ஆண்டவனை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

10, கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்கு
இம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டன்றே.

திருச்சிற்றம்பலம்

## நாற்பத்தொன்று

# அற்புதப்பத்து

ஆசிரிய விருத்தம் பத்து அடங்கிய இத் திருப்பதிகம் திருப்பெருந்துறையில் அருளப்பெற்றது. பெருமானின் திருவருட் பேற்றுக்கு ஒரு வகையிலும் தகுதியில்லாத தமக்குத் திருவருள் தந்து ஆட்கொண்ட அற்புதத்தை விளம்புகிறது இது. ஆகவே, 'அற்புதம் விளம்பேனே' 'அற்புதம் அறியேனே' என்று திருப்பாடல் ஒவ்வொன்றும் வியப்புடன் முடிகின்றது,

'வினைகளுக்கு ஈடாக வந்து பொருந்தும் பிறப்பு இறப்புகளைப் பற்றி எண்ணாமல் பொய்களே சொல்லிச் சிற்றின்பத்திலே கலங்கிக் கிடப்பேனை திருவடிச் சிலம்புகள் ஒலிக்கத் திருவரு

திருச்சிற்றம்பலம்

1. மைய லாய்இந்த மண்ணிடை வாழ்வெனும்
ஆழியுள் அகப்பட்டுத்
தைய லார்எனும் சுழித்தலைப் பட்டுநான்
தலைதடு மாறாமே
பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன்
பொன்னடி இணைகாட்டி
மெய்ய னாய்வெளி காட்டிமுன் நின்றதோர்
அற்புதம் விளம்பேனே!

2. ஏய்ந்த மாமலர் இட்டுமுட் டாததோர்
இயல்பொடும் வணங்காதே
சாந்த மார்முலைத் தையல்நல் லாரொடும்
தலைதடு மாறாகிப்
போந்து யான்துயர் புகாவனம் அருள்செய்து
பொற்கழல் இணைகாட்டி
வேந்த னாய்வெளி யேஎன்முன் நின்றதோர்
அற்புதம் விளம்பேனே!

திரட்சியும் வரிகளும் கொண்ட தனங்களை உடைய பூங் கொம்பு போன்ற உமையம்மையினை ஒரு பாகத்தே கொண்ட பெருமானுக்குச் செம்மையாகிய மனத்தினால் திருத்தொண்டுகள் செய்கின்றவனாகிய அடியேனுக்கு இப் பிறவி தரும் இன்ப துன்ப மாம் வினைப்பயன்கள் இவ்வளவும் இவ்விடத்து ஒழிக்கின்ற, மேலுலக இன்பம் விளங்கும் தில்லை ஆண்டவனை விடாது இனிது பற்றிக் கொண்டேன்.

○

ளோடும் கூடி அருந்துணைவனாகி ஆட்கொண்டு அருள்செய்த அற்புதத்தை விளம்ப முடியவில்லையே!' என்று கூறும் நாலாம் திருப்பாட்டு பதிகக் கருத்தைத் தெரிவிக்கிறது. "அனுபவம் ஆற்றாமை; அதாவது சிவானுபவம் முற்றுதல் பொறாமல் விம்முதல்" இதன் உட்கிடை என்ப.

"மாயவுருக் கொண்டுஉளத்தை மயக்கும்மின்னார்
கண்வலையுள் மயங்குவேற்குஇங்கு
ஆயும்அறிவு அளித்துஆளல் அதிசயம்என்று உரைத்தல்
அற்புதப்பத்தாகும்"

என்பது திருவாசக உண்மை கூறும் கருத்து.

அதிசயம் அற்புதம் இரண்டும் வியப்புத்தாம் எனினும் அற்புதம் என்பது வியந்து வெளியிட முடியாத, இதுகாறும் அறிந்திரா ஆனந்த அனுபவம் என்பர். அதிசயம் என்பது வெளியிடற்கு இயல்வது.

○

நில்லாதவற்றை நிலை எனக் கருதும் மயக்க உணர்ச்சி யால் இந்த நிலவுலக வாழ்க்கை என்னும் கடலினுள் அகப்பட்டு மாதரார் என்னும் நீர்ச் சுழலில் சிக்கி நான் அறிவுத் தடுமாற்றம் அடையாமல், நிலையில்லாதவற்றின் மேல் வைக்கும் பற்றினை எல்லாம் விட்டொழிக்கத் திருவருள் செய்து தன் பொன்போலும் அழகிய திருவடி இரண்டையும் காட்டி உண்மைப் பொருள் ஆகி ஞானப் பரவெளியைக் காண்பித்து அடியேன் முன் இறைவன் நின்றதாகிய ஒப்பற்ற வியப்பினை யான் சொல்ல அறியேன்.

பொருத்தமான சிறந்த பூக்களைத் தூவித் தவறாத ஒரு முறையோடு வணங்காமல் சந்தனம் பூசிய தனங்களை உடைய அழகிய மங்கையரோடு அறிவுத் தடுமாற்றம் அடைந்து அடியேன் துன்பத்திற் புகாத வகை வந்து திருவருள் புரிந்து அழகிய திருவடிகள் இரண்டும் காட்டித் தலைவனாக வெளிப்பட அடி யேன் முன் நின்றதாகிய ஒரு வியப்பினைச் சொல்ல அறியேன்.

3\. நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து
நான்எனது எனும்மாயம்
கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக்
கழறியே திரிவேனைப்
பிடித்து முன்நின்றுஅப் பெருமறை தேடிய
அரும்பொருள் அடியேனை
அடித்து அடித்துஅக் காரமும் தீற்றிய
அற்புதம் அறியேனே!

4\. பொருந்தும் இப்பிறப்பு இறப்பிவை நினையாது
பொய்களே புகன்றுபோய்க்
கருங்குழ லினார் கண்களால் ஏறுண்டு
கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத்
திருவொடும் அகலாதே
அருந்து ணைவனாய் ஆண்டுகொண்டு அருளிய
அற்புதம் அறியேனே!

5 மாடும் சுற்றமும் மற்றுள போகமும்
மங்கையர் தம்மோடும்
கூடி அங்குள குணங்களால் ஏறுண்டு
குலாவியே திரிவேனை
வீடு தந்து என்றன் வெந்தொழில் வீட்டிய
மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்து என் அகம் புகுந்து ஆண்டதோர்
அற்புதம் அறியேனே!

6\. வணங்கும் இப்பிறப்பு இறப்பிவை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைத்து வாயிதழ்ப் பெருவெள்ளத்து அழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனை
குணங்களும் குறிக ளும்இலாக் குணக்கடல்
கோமளத் தொடும்கூடி
அணைத்து வந்தெனை ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே!

மண்ணுலகில் நடிப்பதாகிய செயலைச் செய்து பொய்யைப் பலவாக்கி யான், எனது என்னும் பற்றாகிய மாயப்பாம்பு கடித்த வாயிலிருந்து முன்வினையாகிய நஞ்சு மிகுதலால் புலம்பித் திரி கின்ற அடியேனைப் பிடித்து முன்னே நின்று அந்தப் பெரு வேதங் கள் தேடிக் காண முடியா அரிய பொருளாகிய இறைவன் அடி யேனை அடித்து அடித்துச் சருக்கரைக் கட்டியை முன்னே ஊட்டிய வியப்பினைச் சொல்ல அறியேன்.

மீண்டும் மீண்டும் வரும் பிறப்பு இறப்புக்களாகிய இவற் றை நீக்கும் வழியினைச் சிந்திக்காமல் பொய்களையே சொல்லிக் கொண்டுபோய்க் கரிய கூந்தலையுடைய மாதர்களின் கண்களால் தாக்கப்பட்டுக் கலங்கியே கிடக்கின்ற அடியேனைத் திருத்தமாக இலங்கும் செய்ய திருவடியில் அணியப்பட்ட சிலம்புகளாகிய அவை ஒலிக்க, உமையம்மையோடும் கூடி நீங்காமல் அடியேனுக்கு அரிய துணைவனாகி ஆண்டுகொண்டருளிய வியப்பினைச் சொல்ல அறிகிலேன்.

செல்வமும் உறவும் மற்றுமுள்ள போகங்களோடும் மங்கை யரோடும் கூடி அவற்றிள்ள குணங்களால் தாக்குண்டு களித்துப் பாராட்டியே அலைவேனாகிய அடியேனை என் தீய வினைகள் அழியும் வண்ணம் மெல்லிய தாமரை போன்ற திருவடிகளைக் காட்டி என் நெஞ்சிற் புகுந்து என்னை ஆட்டுவித்து வீட்டின் பம் தந்து ஆண்டருளினதாகிய ஒரு வியப்பினைச் சொல்ல அறியேன்.

யாவரும் தாழ்தற்கு உரிய இந்தப் பிறப்பு இறப்புக்களாகிய இவற்றை நீக்கும் வழியை நினைக்காமல் மாதர்களோடும் கூடி அவர்களது வாயிதழ் ஆகிய பெருங்கடலில் முழுகிப் பித்தனாய்த் திரிகின்ற அடியேனை முக்குணத் தொடர்பான குணங்களும் அடையாளங்களும் இல்லாத அருட்பண்புக் கடலாக விளங்கும் இறைவன், இளமை அழகு உருவாகிய உமையம்மையோடும் கூடி வந்து ஆண்டு கொண்டு அருளிய வியத்தகு செயலைச் சொல்ல அறியேன்.

7. இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
இயல்பொடுஅஞ் செழுத்துஓதி
தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாதுநான்
தடமுலை யார்தங்கள்
மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை
மலரடி யிணைகாட்டி
அப்பன் என்னைவந்து ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே!

8. ஊசல் ஆட்டும்இவ் உடல்உயிர் ஆயின
இருவினை அறுத்துஎன்னை
ஓசை யால்உணர் வார்க்கு உணர்வு அரியவன்
உணர்வுதந்து ஒளியாக்கிப்
பாசம் ஆனவை பற்றறுத்து உயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்துஅடி யார்அடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே!

9. பொச்சை யானஇப் பிறவியில் கிடந்து நான்
புழுத்தலை நாய்போல
இச்சை ஆயின ஏழையர்க்கே செய்தங்கு
இணங்கியே திரிவேனை
இச்ச கத்து அரி அயனும் எட் டாததன்
விரைமலர்க் கழல் காட்டி
அச்சன் என்னையும் ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே!

10. செறியும் இப்பிறப்பு இறப்பிவை நினையாது
செறிகுழ லார்செய்யும்
கிறியும் கீழ்மையும் கெண்டையங் கண்களும்
உன்னியே கிடப்பேனை
இறைவன் எம்பிரான் எல்லையில் லாததன்
இணைமலர்க் கழல் காட்டி
அறிவு தந்துஎனை ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே!

திருச்சிற்றம்பலம்

இந்தப் பிறவியில் பொருத்தமான மலர்களைப் பறித்து முறைப்படி 'நமச்சிவாய' என்ற ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதிப் பிழைபடாது பொன் அடிகளில் இடாமல் அடியேன் பெரிய தனங்களை உடைய மங்கையரது கருமை நிறம் விளங்கும் கண்களால் தாக்கப்பட்டு வறிதே கிடக்கின்ற அடியேனை என் தந்தையாகிய சிவபெருமான் தன் தாமரை மலர் போலும் திரு வடியிணையைக் காட்டி வந்து ஆட்கொண்டருளிய வியப்பினைச் சொல்ல அறியேன்.

இந்த உடலையும் உயிரையும் ஊஞ்சல் போல் ஆட்டுகின்ற அடியேன்தன் நல்வினை தீவினை ஆகியவற்றை அறுத்து ஓசை யாக முழங்கும் மறை நூல்களைக் கொண்டு அறியப் புகுவார்க்கு உணர்தல் அருமையான சிவபெருமான் அடியேனுக்கு அறிவைக் கொடுத்து ஒளியை ஊட்டிக் கட்டுக்களின் தொடர்பைக் களைந்து உயர்வாகிய தன் மேலாம் பெருங்கருணையினால் என் அவாவை அறுத்துத் தன் அடியார்களின் அடிகளில் சேர்த்த வியப்பைச் சொல்ல அறியேன்.

காடாக மயங்குமாறு கிடக்கும் இந்தப் பிறவியிற் கிடந்து நான், புழுக்கள் பற்றிக் கொண்டதோடு அலைகின்ற நாயினைப் போல விருப்பப் பட்டவற்றை மாதருக்கே செய்து அவ்வாறே அவரொடு கூடியே திரிகின்ற சிறியேனை என் தந்தையாகிய சிவ பெருமான் இவ்வுலகில் மாலும் அயனும் காண மாட்டாத தன் மணமலர் போலும் திருவடிகளைக் காட்டி என்னையும் ஆண்டு கொண்டருளின வியப்பினைச் சொல்ல அறியேன்.

மேலும் மேலும் நெருக்குகின்ற இப் பிறப்பு இறப்புக்கள் என்ற இவற்றை நீக்கும் வழியை நினையாமல் அடர்ந்த கூந்தலையு டையமங்கையர்செய்யும் பொய்யான செயலையும்தாழ்மையையும் மீன் போன்ற கண்களையும் சிந்தித்தே கிடக்கின்ற சிறியேனை எல்லார் தமக்கும் இறைவன் எமக்குச் சிறப்புரிமையான சிவ பெருமான் எல்லையில்லாத பெருமை உடைய தன் மலர்போலும் திருவடி யிரண்டையும் காட்டி மெய்யுணர்வைக் கொடுத்து அடி யேனை ஆட்கொண்டருளிய வியப்பினைச்சொல்லுதல் அறியேன்.

○

நாற்பத்திரண்டு

## சென்னிப் பத்து

பத்து ஆசிரிய விருத்தங்களால் அமைந்தது இத் திருப் பதிகம். திருப்பெருந்துறையில் அருளப் பெற்றது. ஒவ்வொரு திருப்பாட்டின் முடிவிலும் 'சென்னி மன்னி' என்ற சொற்றொடர் வந்து, சுடருமே திகழுமே விளங்குமே மலருமே என்று இனிதாக நிறைவு பெறுகின்றது. தம் தலைமேல் இறைவன் திருவடி பொலியும் பேரின்ப அனுபவத்தின் வெளிப்பாடாக விளங்குகிறது இப் பதிகம்.

திருச்சிற்றம்பலம்

1. தேவ தேவன்மெய்ச் சேவகன்
தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொணா
முதலாய ஆனந்த மூர்த்தியான்
யாவராயினும் அன்பரன்றி
அறியொ ணாமலர்க் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கண்நம்
சென்னி மன்னிச் சுடருமே.

2. அட்ட மூர்த்தி அழகன் இன்னமுது
ஆய ஆனந்த வெள்ளத்தான்
சிட்டன் மெய்ச்சிவ லோக நாயகன்
தென்பெ ருந்துறைச் சேவகன்
மட்டு வார்குழல்மங்கை யாளையோர்
பாகம் வைத்த அழகன்தன்
வட்ட மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னி மலருமே.

3. நங்கை மீர்எனை நோக்கு மின்நங்கள்
நாதன் நம்பணி கொண்டவன்
தெங்கு சோலைகள் சூழ்பெ ருந்துறை
மேய சேவகன் நாயகன்
மங்கை மார்கையில் வளையும் கொண்டுஎம்
உயிரும் கொண்டுஎம் பணிகொள்வான்
பொங்கு மாமலர்ச் சேவ டிக்கண்நம்
செனின் மன்னிப் பொலியுமே.

"தூயஅருள் குருபதத்தைச் சூட்டுதற்குப் பெற்றஉயிர்
சுகத்தை நோக்கிச்
சேயமலர்ப் பதத்துஅருமை அடியரொடும் வியந்
துரைத்தல் சென்னிப் பத்தே"

என்பது திருவாசக உண்மை. தாம்அடைந்த திருவடி இன்பத்தை அடியவர்களிடம் உரைப்பது என்பது இதன் பொருள்.

"சிவவிளைவு அதாவது சீவனுக்கு நிச்சயப் படுத்தல்" என்பது இதன் மையக் கருத்து என்ப. சிவம் விளைந்தது என் தலைமேல் திருவடியாக மலர்ந்தது; அஃது உங்கட்கும் வாய்க்கும் என்று சீவனுக்கு உறுதிப்படுத்தியதாம் என்பது அதன்பொருள். பத்தர்காள் இங்கே வாருங்கள்; பாசம் தீரப் பணியுங்கள் மணம் நிறைந்த சேவடிகள் நம் தலைமேல் நிலைபெற்று விளங்கும் என்று அழைப்பு விடுக்கிறார் அடிகள். 'காயத்துள் அமுது ஊற ஊற நீ, கண்டுகொள்' என்று காட்டினார் இறைவன் என்கிறார்.

O

தேவர்களுக்குள் அதி தேவன், உண்மையான வீரனாக இருப்பவன், தென் பெருந்துறையில் எழுந்தருளிய தலைவன், மூன்று கடவுளராகிய அயன் மால் உருத்திரன் ஆகியோராலும் அறிய முடியாதவன், முதல் பொருள் ஆக உள்ள பேரின்ப வடிவினன், மெய்யன்பர்கள் அன்றி மற்று யாவராலும் அறிதற்கு இயலாத மலரின் ஒளி போன்ற ஒளியினன், ஆகிய சிவபெருமானின் தூய பெரிய மலர் போன்ற சிவந்த அடிகளில் நம் தலை படிந்து நிலைத்து விளங்கும்.

நிலம் நீர் நெருப்பு காற்று விண் கதிரோன் திங்கள் இயமானன் என்ற எட்டின் வடிவானவன், எழில் மிக்கவன், இனிய அமுதம் ஆம் பேரின்ப வெள்ளமாக இனிப்பவன், மேலானவன், அழிவிலாச் சிவ உலகின் தலைவன், இனிய திருப் பெருந்துறையில் வீற்றிருக்கும் மழவன், தேன் பொருந்திய கூந்தல் உடைய உமையம்மையை இடப் பாகத்தே வைத்த வனப்பினன், ஆகிய சிவபெருமானின் தாமரைப் பெருமலர் போன்ற செய்ய திருவடிகளில் நம் தலை நிலைத்து விளங்கும்.

பெண்களே, என்னைப் பாருங்கள். நம் இறைவன் நம்மைப் பணி கொண்டவன், தென்னை மரச் சோலை சூழ்ந்த திருப் பெருந் துறையில் எழுந்தருளியிருக்கும் வீரன், தலைவன், மங்கையர்தம் கைவளையல்களைக் கொண்டு எம் உயிரும் கொண்டு எம்மைப் பணி கொள்வான் ஆகிய சிவபெருமானின் விளங்கும் தாமரை மலர் போன்ற திருவடிகளில் நம் தலை பொருந்தி விளங்கும்.

4. பத்தர் சூழப் பராபரன்
பாரில் வந்துபார்ப் பான்எனச்
சித்தர் சூழச் சிவபிரான்
தில்லை மூதூர் நடஞ்செய்வான்
எத்த னாகிவந் தில்புகுந்தெமை
ஆளும் கொண்டெம் பணிகொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக் கண்நம்
சென்னி மன்னி மலருமே.

5. மாய வாழ்க்கையை மெய்யென்று எண்ணி
மதித்திடா வகை நல்கினான்
வேய தோள்உமை பங்கன் எங்கள்
திருப்பெ ருந்துறை மேவினான்
காயத் துள்அமுது ஊற ஊற நீ
கண்டு கொள்' என்று காட்டிய
சேய மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே.

6. சித்த மேபுகுந்து எம்மை ஆட்கொண்டு
தீவி னைகெடுத்து உய்யலாம்
பத்தி தந்ததுன் பொற்க ழற்கணே
பன்மலர் கொய்து சேர்த்தலும்
முத்தி தந்திந்த மூவுல குக்கும்
அப்பு றத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவ டிக்கண் நம்
சென்னி மன்னி மலருமே.

7. பிறவி என்னும்இக் கடலை நீந்தத்தன்
பேர ருள்தந் தருளினான்
அறவை என்றடி யார்கள் தங்கள்
அருட்கு ழாம்புக விட்டுநல்
உறவு செய்தெனை உய்யக் கொண்ட
பிரான்தன் உண்மைப் பெருக்கமாம்
திறமை காட்டிய சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே.

மெய்யன்பர்கள் சூழ்ந்திருக்க, மிக மேலான இறைவன் புவியில்வந்து தில்லையாகிய தொன்மையானஊரினில் நடம்புரிந்து கொண்டிருப்பவன், தந்திரம் உள்ளவனாக வந்து எம் இல்லில் புகுந்து எம்மை ஆட்கொண்டு தொண்டும் கொள்பவன் ஆகிய சிவபெருமானின் பெருமை பொருந்திய மலர் போன்ற திருவடிகளிலே நம் தலை தங்கி விளங்கும்.

நிலையற்றதாகிய இவ் வாழ்க்கையை நிலையானது என்று நினைந்து அதைப் பெரிது என மதித்திராத வகையை அடியேற்கு அளித்தவன், மூங்கில் போன்ற தோளுடைய உமையவளின் பங்கினன், எங்கள் திருப்பெருந் துறையில் விரும்பி எழுந்தருளியவன் ஆகிய சிவபெருமான், உடம்பினுள் அமுது ஊற ஊற அதை நீ பார்த்துக் கொள்க என்று காட்டியருளிய சிவந்த பெரிய தாமரை போன்ற செய்ய திருவடிகளில் நம் தலை நிலைபெற்று விளங்கும்.

அடியேங்களின் உள்ளத்துள் புகுந்து ஆட்கொண்டு, தீவினைகளை அழித்துக் கடைத்தேறும் வகை அன்பைக் கொடுத்து உனது பொன் போன்ற திருவடிகளில் பல மலர்கள் பறித்துச் சூட்டவும் வீட்டினைத் தந்ததுடன் இந்த மூன்றாகிய உலகங்கட்கும் அப்புறத்து அடியேமைக் கொண்டு சேர்த்துவிடும் தந்தையாகிய சிவபெருமானின் பெரிய தாமரை போன்ற சிவந்த திருவடிகளில் நம் தலை நிலையாக இருந்து விளங்கும்.

பிறவியாகிய இந்தக் கடலை நீந்துதற்குத் தன் பேரருளைப் புணையாகத் தந்து அருள் புரிந்தவன், அடியேனை, 'இவன் யாரும் அற்றவன்' என்று பரிந்து அடியார்களின் அருள் கூட்டத்துள் புகுமாறு செய்து அவர்கள் எனக்கு உறவாகியிருக்கச் செய்து யான் பிழைக்குமாறு செய்த தலைவன் ஆகிய சிவபெருமான் தன் உண்மையான மிக்க திறமையைக் காட்டிய சேவடிகளில் நம் தலை பொருந்தி விளங்கும்.

8. புழுவி னால்பொதிந் திடுகு ரம்பையில்
பொய்த னைஒழி வித்திடும்
எழில்கொள் சோதிஎம் ஈசன் எம்பிரான்
என்னுடை யப்பன் என்றுஎன்று
தொழுத கையினர் ஆகித் தூமலர்
கண்கள் நீர்மல்கும் தொண்டர்க்கு
வழுவி லாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னி மலருமே.

9. வம்ப னாய்த்திரி வேனை "வா" என்று
வல்வி னைப்பகை மாய்த்திடும்
உம்பரான் உலகு ஊட றுத்தப்
புறத்த னாய்நின்று எம்பிரான்
அன்ப ரானவர்க்கு அருளி மெய்யடி
யார்கட்கு இன்பம் தழைத்திடும்
செம்பொன் மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே.

10. முத்தனை முதற் சோதியை முக்கண்
அப்பனை முதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோக னைத்திரு
நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காள் இங்கே வம்மின் நீருங்கள்
பாசம் தீரப் பணிமினோ
சித்தம் ஆர்தரும் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே

திருச்சிற்றம்பலம்

## நாற்பத்து மூன்று
## திருவார்த்தை

ஆசிரிய விருத்தங்கள் பத்து இத் திருப்பாடற் பகுதியில் உள்ளன. இது திருப்பெருந்துறையில் அருளப் பெற்றது. "அறம் பெருகும் பெருந்துறையில் தமைஆண்ட செயல் முதலா அரன்சீ ராட்டின் திறம் அறிவார் எம்பிரா னாவர்என உரைத்தல் திரு வார்த்தை ஆகும்" என்பது திருவாசக உண்மை. "அறிவித்து

புழுக்கள் அடங்கியிருக்கும் இந்த உடம்பின் பொய்யான வாழ்க்கையை நீக்கி விடும் பேரழகு கொண்ட ஒளிப் பிழம்பு வடிவானவன், எம்மை உடையவன், எம் பெருமான், என் தந்தை என்று இவ்வாறு கூப்பிய கையினர் ஆகி, தூய மலர் போன்ற கண்களில் நீர் பெருகப் பெற்ற அடியார்களுக்குத் தவறாத நன்மை செய்யும் மலர்த் திருவடிக் கண் நம் தலை நிலைத்து விளங்கும்.

பயனற்றவனாக அலைந்து கொண்டிருந்த எளியேனை 'வருக!' என்று அழைத்து வன்மையான வினைகள் ஆகிய பகையை அழித்திடும் மேலாக உள்ள உலகங்களை எல்லாம் கடந்து அப்பால் மிசு மேலாக உள்ள தலைவன் ஆகிய சிவ பெருமான் அன்புடையர் ஆனவர்கட்கு அருள்புரிந்து இன்பம் பெருகச் செய்யும் சிவந்த பொன் போன்ற தாமரைத் திருவடிக் கண் நம் தலை நிலை பெற்று விளங்கும்

விடுதலையே இயல்பாக உடையவனை, முதன்மையான ஒளிப் பிழம்பை, மூன்று கண்கள் உடைய எம் தந்தையை, மூல வித்துப் போன்றவனை, அறிவுரு வானவனை சிவ உலகத்தின் தலைவனை சிவபெருமானை அவன் திருப்பெயர்கள் பாடி அலைகின்ற மெய்யன்பர்களே! இங்கே வாருங்கள்! உங்கள் கட்டுகள் ஒழிய வணங்குங்கள். உள்ளமெலாம் நிலைத்திருக்கும் அப்பெருமானின் செய்ய திருவடிகளில் நம் தலை நிலைபெற்று விளங்கும்.

○

அன்புறுதல்; அதாவது உன்னால் அறியப் படாதது யான் உரைக்க நீயும் அறிந்து கொள்'' என்பது இதன் மையக் கருத்து என்ப. உன் தலைவர் யார் என்ற வினாவுக்கு விடையிறுப்பது போலப் பத்துப் பாடலும் முடிவில் ''எம்பிரான் ஆவாரே'' என்று நிறைவடைகிறது.

அன்புடையார் யாவராயினும் திருவருள் அடையப்பெறுவர் என்று கூறும் பழங்கதைக் கூறுகளும் இதில் வந்துள்ளன. திருவிடை மருதூரில் ஒரு பெண்ணுக்குக் கருணை காட்டியமை, வலை வீசியமை, வேட்டுவ உருவம் கொண்டமை, வண்டோதரிக்கு அருளியமை, பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்தமை போல்வன அவை. இறைவனின் திருவருளை, திருமொழிகளை, அறிபவரே எம் தலைவர் என்று பாடல் தோறும் வலியுறுத்தப்படுகிறது,

○

திருச்சிற்றம்பலம்

1. மாதுஇவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கரு ணையடியார்
குலாவும் நீதிகுணம் ஆயநல்கும்
போதுஅலர் சோலைப் பெருந்துறைஎம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்து
ஆதிப் பிரமம் வெளிப்படுத்த
அருள்அறி வார்எம்பி ரானாவாரே!

2 மால் அயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்களுள் செய்தஈசன்
ஞாலம் அதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலம்திகழும்
கோலம் மணிஅணி மாடம்நீடு
குலாவும் இடவை மடநல்லாட்குச்
சீலம் மிகக்கரு ணைய ளிக்கும்
திறம் அறி வார்எம்பி ரான்ஆவாரே!

3. அணிமுடி ஆதி அமரர் கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து, படவதுஏறிப்,
பாரொடு விண்ணும் பரவிஏத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறைஎம்
பேரரு ளாளன்பெண் பாலுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறி வார்எம்பி ரான்ஆவாரே!

4. வேடுரு வாகி மயேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதனைத்
தேட இருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆடல் அமர்ந்த பரிமாஏறி
ஐயன் பெருந்துறை ஆதிஅந்நாள்
ஏடர் களைஎங்கும் ஆண்டுகொண்ட
இயல்பு அறி வர்எம்பி ரானாவாரே!

உமையம்மை அமர்ந்திருக்கும் இடப்பாகத்தை உடையவன், மறைகள் உரைக்கும் வாசகமாக விளங்குபவன், அழகிய நெஞ்சத் தாமரையில் பொருந்தியுள்ள ஒளி உருவினன் குற்றமற்ற மேலோன் அருள் வள்ளல், மெய்யடியார் கொண்டாடும் நீதியையும் குணத்தையும் கொடுத்தருளும்-அரும்புகள் மலர்கின்ற சோலை சூழ்ந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளிய எம் புண்ணிய மூர்த்தி ஆகிய சிவபெருமான் மண்ணுலகிற்கு வந்திறங்கி எல்லா வற்றுக்கும் முதன்மையாகிய பிரமம் எனப்படும் செம்பொருள் தானே என்று வெளிப்படுத்திய பேரருள் செய்கையை அறிய வல்லார் எமக்குத் தலைவராவார்.

திருமாலும் பிரமனும் தேவர் கோமானாகிய இந்திரனும் வந்து பணிய அவர்களுக்கு அருள்புரிந்த இறைவன் நிலவுலகிற்கு வந்திறங்கி மெய்யுணரும் நல்ல நெறிகளைக் காட்டியருளி அழகிய மணிகளால் புனையப் பெற்ற மாடங்கள் மிகுதியும் விளங்கு கின்ற திருவிடை மருதூரில் ஒரு மங்கை நல்லாளாகிய அடிய வளுக்குப் பண்பு சிறக்குமாறு அருள் செய்த தன்மையினை அறியக் கூடியவர் எமக்குத் தலைவராவார்.

அழகிய சடைமுடியை உடைய முதல்வனாகிய தேவர் பிரான், பேரின்பக் கூத்து நிகழ்த்துபவன், ஆறுவகைச் சமயங் கள் வழிபடும்வகை செய்து, நிலவுலகமும் போற்றிப் புகழ, பிற விப் பிணி ஒழிய அருள் நல்கும் திருப்பெருந்துறையில் எழுந் தருளியுள்ள, எம், மிக்க அருள் உடையவன், வலை ஞர் மகளாகத் திருவவதாரம் செய்த உமையம்மையாரை விரும்பிப் படகினில் ஏறி அழகிய வலை கொண்டு அதனை வீசிச் சிறந்த மீன் பிடிக் கின்ற வகையை அறிபவர் எமக்குப் பிரான் ஆவர்.

வேட்டுவ உருவம் தாங்கி மயேந்திர மலையின்கண், குறை கள் மிக உடைய தேவர்கள் வந்து தன்னிடம் இரத்தற்குத்தேட அங்கு அமர்ந்திருந்த சிவபெருமான், அடியோங்கள் கடைத்தேறு வதைக் கருதி வெற்றி பொருந்திய குதிரையின்மேல் ஏறி வந்த தலைவனும் திருப்பெருந்துறை அமர்ந்த முதல்வனும் ஆகிய பெருமான், அந்தக் காலத்தில் தோழமை பூண்ட அடியார்களை எவ்விடத்தும் ஆண்டு கொண்டு அருளிய வகையை அறியக் கூடியவர் எமக்குத் தலைவர் ஆவர்.

5. வந்துஇமை யோர்கள் வணங்கிஏத்த
மாக்கரு ணைக்கட லாய், அடியார்
பந்தனை விண்டுஅற நல்கும் எங்கள்
பரமன் பெருந்துறை ஆதிஅந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்தன்று
ஓங்கு மதிலிலங் கைஅதனில்
பந்தனை மெல்விர லாட்குஅருளும்
பரிசுஅறி வார்எம் பிரானாவாரே

6. வேவத் திரிபுரம் செற்ற வில்லி
வேடுவன் ஆய்க்கடி நாய்கள்சூழ
ஏவல் செயல்செய்யும் தேவர்முன்னே
எம்பெரு மான்தான் இயங்குகாட்டில்
ஏவுண்ட பன்றிக்கு இரங்கிஈசன்
எந்தை பெருந்துறை ஆதிஅன்று
கேவலம் கேழல்ஆய்ப் பால்கொடுத்த
கிடப்புஅறி வார்எம்பி ரானாவரே!

7. நாதம் உடையதோர் நற்கமலப்
போதினில் நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவிஏத்த
ஒளிவளர் சோதிஎம் ஈசன்மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறைஎம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதம் கெடுத்தருள் செய்பெருமை
அறியவல் லாரெம்பி ரானாவாரே!

8. பூஅலர் கொன்றையம் மாலைமார்பன்
போர்உகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாள்உமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புகழ் எங்கள்ஈசன்
இருங்கடல் வாணற்குத் தீயில்தோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறி வார்எம்பி ரானாவாரே!

வானவர்கள் வந்து வழிபட்டுப் போற்றிசெய அவர்கட்குப் பெரிய அருட்கடலாகி அடியார்களின் பாசப்பிணிப்புகள் அறுந்து ஒழிய அருள்புரியும் எங்கள் மேலோன் ‘பெருந்துறையில் எழுந் தருளிய முதல்வன்’ அந்த நாளில் மேன்மேல் எழுந்து வீசும் அலைகளை உடைய கடலைக் கடந்து உயர்ந்த மதில்கள் சூழ்ந்த இலங்கையில் பந்தணைந்த மெல் விரலை யுடைய் வண்டோதரிக்கு அருளும் தன்மையை அறிபவர் எமக்குப் பிரான் ஆவார்.

முப்புரமும் வேகுமாறு அழித்த வில்லை உடையவன், வெடன் ஆகி வேட்டை நாய்கள் சூழ்ந்து வர ஏவல் தொழில் சேய்யும் தொண்டர்களுக்கு எதிரில் எம்பெருமான் தான் சென்று வரும் காட்டில் அம்பு தைத்த பன்றிக்கு இரக்கம் கொண்டு, இறைவன் எம் தந்தை திருப்பெருந்துறை முதல்வன் அந்நாளில் தனிமையான பன்றி ஆகிப் பால் ஊட்டின உள்ளக்கிடக்கையை அறியவல்லவர்கள் எமக்குத் தலைவர்கள் ஆவார்கள்.

வண்டின் ஒலியை உடைய ஒப்பற்ற நல்ல தாமரை மலர் களில் பொருந்திய நல்ல நெற்றியினை உடைய கலைமகள் திருமகள் ஆகியோர் வாழ்த்தி வணங்கி மலர்கள் தூவிப்போற்ற ஒளிவளராநின்ற பிழம்பானவன் எம்மை உடையான், அரும்புகள் மலரும் சோலை சூழ்ந்த நிலைபெற்ற திருப்பெருந்துறையில் உள்ள எம் அறவடிவினன், நிலவுலகில் வந்து காட்சி கொடுத்து வேறாம் தன்மை கெடுத்து இரண்டற்ற நிலையைக் கொடுத்து அருள்செய்யும் பெருமையை அறியவல்லவர் எம் தலைவர் ஆவார்.

பூவிரியும் அழகிய கொன்றை மலர் மாலை அணிந்த மார் பினனும் போர் செய்ய வல்ல நகங்களை உடைய வலிய புலியைக் கொன்ற வீரனும் மாதுநல்லாள் ஆகிய உமையம் மையைப் பாகமாக உடையவனும் வளம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருப் பெருந்துறை அமர்ந்த இறைவனும் குற்றமற்ற பெரும் புகழ் உடையவனுமாகிய எங்கள் ஆண்டவன், பெரிய கடலுக்கு அரசனாக வாழும் வருணனுக்கு நெருப்பில் தோன்றிய சித்திரப் பாவை போன்ற மங்கையரை விரும்பி மணம் புரியும் திருவுருவத்தை அறிபவர் எம் தலைவராவார்.

9. தூவெள்ளை நீறணி எம்பெருமான்
சோதி மயேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்த ஈசன்
தென்னன் பெருந்துறை ஆளிஅன்று
காதல் பெருகக் கருணை காட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதம் கெடுத்து என்னை ஆண்டருளும்
கிடப்பு அறி வார்எம்பி ரானாவாரே!

10. அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்
அடியார்க்கு அமுதன் அவனிவந்த
எங்கள் பிரான்இரும் பாசம்தீர
இகபரம் ஆயதோர் இன்பம்எய்தச்
சங்கம் கவர்ந்தவண் சாத்தினோடும்
சதுரன் பெருந்துறை ஆளிஅன்று
மங்கையர் மல்கும் மதுரைசேர்ந்த
வகையறி வார்எம்பி ரானாவாரே!

திருச்சிற்றம்பலம்

## நாற்பத்து நான்கு

## எண்ணப் பதிகம்

ஆசிரிய விருத்தங்கள் ஆறு கொண்ட இப் பதிகம் தில்லையில் அருளப்பெற்றதாகும். பிறப்பு ஒழிய, பத்திமை உண்டாக அடியார் தொகை நடுவே, ஓர் உருவான இறைவன் தன் திருவருள் காட்டி தம்மை உய்யக் கொண்டருள வேண்டும் என்று அடிகள் இதில் வேண்டுகிறார். பெரியோன் ஒருவன் 'கண்டு கொள்' என்று இறைவன் கழல்களைக் காட்டிப் பிரியேன் என்று பலகாலும் சொன்னான் என்று தெரிவிக்கும் அடிகள் ''இனிப் பிரிந்தாற்றேன்'' என்று அழுந்த உரைக்கிறார்.

திருச்சிற்றம்பலம்

1. பார்உரு வாய பிறப்பற வேண்டும்
பத்தி மையும்பெற வேண்டும்
சீர்உரு வாய சிவபெரு மானே!
செங்கமல மலர்போல்
ஆர்உரு வாயஎன் ஆரமுதே! உன்
அடியவர் தொகை நடுவே
ஓர்உரு வாயநின் திருவருள் காட்டி
என்னையும் உய்யக் கொண்டருளே!

தூய வெண்ணிறமுள்ள திருநீற்றை அணிந்த எம்பெருமானும் ஒளிப்பிழம்பாக இருப்பவனும் மகேந்திரமலைக்குத் தலைவனும் தேவர்கள் வணங்கும் திருவடிகளை வைத்த ஆண்டவனும் தென்னாடு உடையவனும் திருப்பெருந்துறை ஆள்பவனும் ஆகிய பெருமான் அந்நாளில், அடியேனுக்கு அவனிடம் அன்பு பெருகுமாறு அருள்புரிந்து தன் திருவடிகளைக் காட்டியருளி, அடியேனின் உள்ளம் நெகிழ்ந்து உருகும்படி துன்பங்களை அழித்து ஆட்கொண்டருளும் திருவுள்ளக் கிடக்கையை அறிய வல்லவர் எமக்குப் பிரான் ஆவர்.

எங்கள், அழகிய அருட்கண்கள் உடைய பெருமானும், வானவர்க்கு இறைவனும், மெய்யடியார்க்கு அமுதம் போன்றவனும் மண்ணுலகிற்கு வந்த ஆண்டவனும் வல்லமையாளனும் திருப்பெருந்துறையை ஆள்பவனும் ஆகிய சிவபெருமான், பெரிய பிணிப்புகள் தீரவும் இம்மை மறுமைகளுக்கு ஆவதோர் பேரின்பம் அடையவும், சங்கவளையல்கள் எடுத்துக்கொண்டு வளவிய தலைப் பாகையுடன், மாதர் நிறைந்த மதுரையை அடைந்த வகையை அறியவல்லவர் எம் தலைவர் ஆவார்.

○

''திறம் வளரும் மலர்ப்பொழில் சூழ்ந்து ஓங்குதிருத் தில்லை மன்றுள் நிமலனாமத் திறம்பெருகும் இன்பம் அருள் என்றல் எண்ணப் பத்து'' என்கிறது திருவாசக உண்மை. இறைவன் திருப்பெயரை ஓதுவதால் உண்டாகும் இன்பத்தை வேண்டிக் கொள்ளுதல் இப் பதிகக் கருத்து என்கிறது அது.

''ஒழியா இன்பத்து உவகை; என்பது தேகம் முதலிய ஆசை அறுத்தல்'' இதன் மையக் கருத்து என்னும் பழைய குறிப்பு. இன்பம் இடையறாது உண்டாகவும் அதில் திளைக்கவும் திருவருள் வேண்டும்; தடைகள் நீங்க வேண்டும் என்பது அதன் கருத்தாகும்.

○

நிலவுலகத்தில் பற்பலவாகிய உருவங்களோடு பிறக்கின்ற பிறவித் தொடர் ஒழிய வேண்டும்; அதற்கு உன்னிடத்தில் உள்ளன்பு அடைய வேண்டும். சிறப்பே உருவாகிய சிவபெருமானே! செந்தாமரை மலர் போன்ற நிறைந்த திருமேனி கொண்ட என் கிடைத்தற்கு அரிய அமுதமே! உன் திருவடியார் கூட்டத்தின் நடுவே ஒப்பற்ற உருவமாகிய நின் திருவருளைக் காட்டி அடியேனையும் உய்யக் கொண்டருள வேண்டும்.

2. உரியேன் அல்லேன் உனக்குஅடிமை
உனைப் பிரிந்து இங்கு ஒருபொழுதும்
தரியேன் நாயேன் இன்னது என்று
அறியேன்; சங்கரா! கருணையினால்
பெரியோன் ஒருவன் 'கண்டுகொள்' என்றுஉன்
பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றென்று அருளிய அருளும்
பொய்யோ? எங்கள் பெருமானே!

3. என்பே உருகநின்னருள் அளித்துஉன்
இணைமலர் அடிகாட்டி
முன்பே என்னை ஆண்டு கொண்ட
முனிவா! மூவர் முழுமுதலே!
இன்பே அருளி எனைஉருக்கி
உயிர்உண் கின்ற எம்மானே!
நண்பே! அருளாய் என்னுயிர்
நாதா! நின்அருள் நாணாமே!

4. பத்தில னேனும் பணிந்தில னேனும்உன்
உயர்ந்தபைங் கழல்காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
பிறப்பறுப் பாய்எம் பெருமானே!
முத்துஅனை யானே! மணிஅனை யானே!
முதல்வனே! 'முறையோ?' என்று
எத்தனை யானும் யான்தொடர்ந்துன்னை
இனிப்பிரிந்து ஆற்றேனே!

5. காணும்அ துஒழிந்தேன் நின்திருப்பாதம்;
கண்டுகண் களிகூரப்
பேணும்அ துஒழிந்தேன்; பிதற்றும்அ தொழிந்தேன்;
பின்னைஎம் பெருமானே!
தாணுவே! அழிந்தேன்; நின்நினைந் துருகும்
தன்மைஎன் புன்மைகளால்
காணும்அ துஒழிந்தேன்நீ இனிவரினும்
காணவும் நாணுவனே!

நன்மையே வடிவானவனே! அடியேன் உனக்கு அடியனாக இருக்க உரியவன் அல்லேன்; அவ்வாறிருந்தும் உன்னைப் பிரிந்து ஒரு சிறு பொழுதும் பொறுத்திரேன்; நாய் போன்ற சிறியேன் அதன் காரணம் இன்னது என்றும் அறிகிலேன். பெரியோன் ஒருவன் திருப்பெருந்துறையில் கருணை காரணமாக அடியேனிடம் "கண்டு கொள்வாயாக!" என்று உன் கழல் செறிந்த திருவடிகளைக் காட்டியும், "உன்னைப் பிரியேன்" என்று பலகாற் சொல்லியும் அருளிய அருள் தானும் பொய்யோ, எங்கள் இறைவனே!

எலும்புகள் எல்லாம் உருகும் வண்ணம் உன் திருவருள் தந்து உன் இரண்டு திருவடி மலர்கள் காட்டி எளியேனை உரியதான காலத்திற்கு முன்பே ஆண்டு கொண்டருளின முனிவனே! மும்மூர்த்திகளுக்கும் முதலாக உள்ள முழுமுதற் பொருளே! பேரின்பமே அளித்து அடியேனை உருகச் செய்து என் உயிரைத் தன்வயம் ஆக்கிக் கொள்கிற எம் பெரியோனே! என் உயிர்த் தலைவா! நண்பனே! உரியன் அல்லாதானுக்கு அருள் செய்ய நாணாமல் உன் திருவருளை அளிப்பாயாக.

அடியனேன் உன்பால் உள்ளன்பு இல்லாதவன் ஆயினும் வணங்கிலன் ஆயினும் உன் மேலான பசிய திருவடியைக் காணும் பொருட்டு அளவற்ற விருப்புடையன் இவன் ஆயினும் பிதற்றிலன் ஆயினும் சிறியேனின் பிறப்பினை அறுத்தருள்வாய் எம் பெருமானே! "முத்துப்போல் திருநீறு பொலியும் மாணிக்கம் போன்ற செம்மேனிப் பெருமானே! தலைவனே! முறையோ?" என்று அடியேன் உன்னை எவ்வளவாயினும் தொடர்ந்திருப்பன்; இனிப் பிரிந்து இருக்க இயலாதேன்;

என் இறைவனே! உன் திருவடியைக் காண்பதாகிய செயலை ஒழிந்தேன்; என் கண்கள் களிப்பு மிகும்படி கண்டு போற்றுவதை ஒழிந்தேன்; பிதற்றுகின்ற செயலும் தவிர்ந்தேன். மேலும் எம் சிவபெருமானே! எக்காலத்தும் நிலை பெற்றிருப்போனே! அடியேன், தொலைந்தேன்; உன்னை நினைந்து மெய்யன்பர் உருகும் தன்மையையும் என் தாழ்ந்த இயல்புகளால் அடையப் பெறாது அழிந்தேன் நீ இனி வந்தாலும் உன்னைக் காணவும் பேதையேன் நாணுவன்.

6. பால்திரு நீற்றுஎம் பரமனைப்
பரங்கருணை யொடும்எதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க்கு அருட்டுறை யளிக்கும்
சோதியை நீதியிலேன்
போற்றிஎன் அமுதே எனநினைந் தேத்திப்
புகழ்ந்துஅழைத் தலறிஎன் உள்ளே
ஆற்றுவ னாக உடையவனேஎனை
ஆம்! என்று அருளாயே.

திருச்சிற்றம்பலம்

## நாற்பத்தைந்து
## யாத்திரைப் பத்து

ஆசிரிய விருத்தம் பத்து உள்ள இத் திருப்பதிகம் முடிமுதல் தொடையால் அமைந்தது. தில்லையில் அருளப்பெற்றது. சிவானுபவம் மிகுதியும் எய்திய அடிகள் தாம் மட்டுமன்றி மற்றையோரும் பேரின்பப் பேரமுதம் உண்ண வேண்டும் என்பதால் வாருங்கள் என்று அழைக்கிறார். "காலம் வந்தது, பொய் உலகை விட்டு இறைவன் கழல் புகவே உடன் வாருங்கள்"

திருச்சிற்றம்பலம்

1. பூவார் சென்னி மன்னன்எம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவாது உள்ளம் கலந்து உணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆ ஆ என்னப் பட்டு அன்பால்
ஆட்பட் டீர்வந்து ஒருப்படுமின்
போவோம் காலம் வந்ததுகாண்
போய்விட்டு உடையான் கழல்புகவே.

2 புகவே வேண்டா புலன்களில் நீர்
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கதெல்லாம்
வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே அனைய நமை ஆண்ட
தகவே உடையான் தனைச்சாரத்
தளராது இருப்பார் தாந்தாமே.

வெண்ணிறத் திருநீற்றை அணிந்த எம்மேலோன் ஆகிய உன்னை மேலாம் திருவருள் வடிவத்தோடு எதிரில் காட்சி தந்து, மெய்யடியவர்க்கு அருள்வழியைக் கொடுக்கின்ற ஒளிப்பிழம்பாக உள்ள உன்னை நீதியில்லாதவனாகிய அடியேன் வணங்கி 'என் அமுதமே!' என்று நினைந்து போற்றிப் புகழ்ந்துரைத்து அழைத்து அலறி என் உள்ளம் தணிவேனாகும்படி, எல்லாம் உடையவனே! அடியேனை 'ஐயோ! ஆவதாக!' என்று இரங்கி அருள்புரிவாயாக.

○

என்பதாக அவரது அழைப்பு அமைகிறது. "சிவபுரத்துச் சென்று அடியார் முன் நெஞ்சம் உருகி நிற்போம்" என்கிறார் அவர். ஆனந்தப் பெருக்கை அனுபவிக்க ஆர் பெறுவார் அந்தோ, அந்தோ, அந்தோ, என்று அவர்க்குப் பரவசம் விஞ்சுகிறது. "பொல்லாத பவத்தைவிட்டுச் சிவன் கழற்கீழ்ப் புகுங்காலம் புணர்ந்தது எற்கு இங்கு, எல்லோரும் வாரும் எனக்கருணையில் அழைத்திடல் யாத்திரைப் பத்தாகும்" என்கிறது திருவாசக உண்மை. 'அனுபவ அதீதம் உரைத்தது' என்பது இதன் மையப் பொருளெனப் பழங் குறிப்பு தெரிவிக்கும்.

○

கொன்றை மலர் அணிந்த முடியுடைய மன்னவனும் பாம்பு அணிந்த, எங்கள், சிறந்தவனும் ஆகிய சிவபெருமான் அடியோமை, இடையறாது நெஞ்சிற் புகுந்து அறிவிற் கலந்து உருக்குகின்ற கடல் போன்ற கருணையின் காரணம் ஆக ஐயோ என்று இரக்கப்பட்டு, அன்பினால் ஆட்கொள்ளப்பட்டவர்களே! நம்மை எல்லாம் உடையவனான பெருமானின் திருவடியிற் சேரக் காலம் வந்தது. போய்ச் சேருவோம் ஒருமைப்பட்டு வாருங்கள்.

மெய்யன்பர்க்கு விளக்கம் உண்டாகுமாறு நிலவுலகில் எழுந்தருளி நாய் போலும் சிறுமையுடைய எளியோமை ஆட்கொண்ட திருவருட் பெருங்குணம் உடைய பெருமானை அடையும் பொருட்டுத் தளராது இருப்போர் தாம், தாமாக விளங்குவர். ஆகவே நீங்கள் புலன்களில் வழியே செல்ல வேண்டா; புயங்கக் கூத்தினை ஆடவல்ல பெருமானின் தாமரை மலர் போன்ற திருவடிகளை எண்ணுங்கள். மற்ற எவற்றையும் கருத வேண்டா; அவை யாவும் அகன்றொழிய விட்டு விடுங்கள்.

3. தாமே தமக்குச் சுற்றமும்
தாமே தமக்கு விதிவகையும்;
யாம்ஆர்? எமதுஆர்? பாசம்ஆர்?
என்ன மாயம்? இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன் தன் குறிப்பே குறிக்கொண்டு
போமாறு அமைமின் பொய்நீக்கிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே.

4. அடியார் ஆனீர் எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்
கடிசேர் அடியே வந்தடைந்து
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பை;
செடிசேர் உடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன் தன்
பூவார் கழற்கே புகவிடுமே

5. விடுமின் வெகுளி வேட்கைநோய்
மிகவே காலம் இனியில்லை
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோடு
உடன்போ வதற்கே ஒருப்படுமின்!
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவது அடையாமே
புடைபட்டு உருகிப் போற்றுவோம்
புயங்கன் ஆள்வான் புகழ்களையே.

6. புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்டு
இகழ்மின் எல்லா அல்லலையும்,
இனிஓர் இடையூறு அடையாமே,
திகழும் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்தாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே.

தாம் தாமாக இருப்போர் தமக்குத் தாமே சுற்றமும் விதிக்கூறும் ஆக விளங்குவர். நாம் யார்? நம் உடையது என்பது. யாது? கட்டு எது? இவை எல்லாம் என்ன மாயங்கள்! இவை விட்டு ஒழிய நம் மன்னனாம் பெருமானின் பழஅடியாரொடும் அவன் திருவுளக் கருத்தையே உறுதியாகத் துணிந்து நிலையாத வைற்றை விடுத்துப் புயங்கப் பெருமானும் நம்மை ஆள்வானும் ஆகிய சிவபெருமானின் பொன் போன்ற திருவடிக்குப் போகும் வண்ணம் ஒருப்படுங்கள்.

இறைவன் திருவடித் தொண்டர் ஆயினீர் யாவரும் உலகப் பற்றில் அகப்பட்டு விளையாடுவதை ஒதுக்கித் தள்ளுங்கள். மணம் தங்கிய திருவடியையே வந்தடைந்து இறைவனது திருவுளக் குறிப்பையே உறுதியாகக் கொண்டிருங்கள். அங்ஙனம் செய்தீ ராயின் குற்றங்கள் சேர்தற்கு இடனான உடம்பை அப்பால் செல்லுமாறு நீக்கிப் பேரின்ப உலகத்திலே நம்மை வைக்கும் பொருட்டு, திருவெண்ணீறு பூசப்பட்ட மேனியுடைய புயங்கக் கூத்தனாகிய சிவபெருமான் தன் பூப்போன்ற அருமையான திருவடிக் கண்ணே புகச் செய்வான்.

பிறவிப் பிணிக்குக் காரணமான கோபம் தீரா ஆசை மயக்கம் ஆகியவற்றை விட்டொழியுங்கள். போக்குவதற்குக் காலம் இனியும் கூடுதலாக இல்லை. நம்மை உடைய பெருமானின் திருவடிக்கீழ் பெருமையுள்ள அடியார் கூட்டத்தோடு சேர்ந்து செல்ல ஒருமைப்படுங்கள். பேரின்ப உலகின் அழகு மிக்க கதவு அடையாதவாறு நாம் சென்று சேர்வோம். அருகில் நெருங்க இருந்து மனம் உருகிப் புயங்கக் கூத்தனும் நம்மை ஆள்வோனும் ஆகிய பெருமானின் திருப்புகழை எல்லாம் போற்றிப் பாடு வோம்.

புயங்கக் கூத்தனின் திருவடிகளையே போற்றுங்கள்; வணங் குங்கள். பூச் சாத்துங்கள். நிலையா உலகின் அல்லல்கள் எல்லாவற்றையும் வெறுத்து உதறுங்கள். இனியும் நமக்கு இடை யூறு ஒன்றும் சேராமல், விளங்கும் சிறப்பு மிக்க சிவவுலகம் சென்று சிவபெருமான் திருவடிகளைத் தொழுது தொண்டில் உறைத்து நிற்கும் மெய்யடியாரின் எதிரே சென்று உள்ளம் உருகி நிற்போம்.

7. நிற்பார் நிற்கநில் லாவுலகில்
நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாம் திருமேனிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாம் தாழாதே
நிற்கும் பரிசே ஒருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தால்
பெறுதற்கு அரியன் பெருமானே.

8. பெருமான் பேரா னந்தத்துப்
பிரியா திருக்கப் பெற்றீர்கள்
அருமால் உற்றுப் பின்னைநீர்
அம்மா! அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவம்
திறந்த போதே சிவபுரத்துத்
திருமால் அறியாத் திருப்புயங்கன்
திருத்தாள் சென்று சேர்வோமே.

9. சேரக் கருதிச் சிந்தனையைத்
திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள்
பங்கன் புயங்கன் அருளமுதம்
ஆரப் பருகி ஆராத
ஆர்வம் கூற அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன் கழற்கே
பொய்யிற் கிடந்து புரளாதே.

10. புரள்வார் தொழுவார் புகழ்வாராய்
இன்றே வந்துஆள் ஆகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார்?
மதியுள் கலங்கி மயங்குவீர்;
தெருள்வீர் ஆகில் இதுசெய்ம்மின்
சிலலோ கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகல்இடத்தே
அந்தோ! அந்தோ! அந்தோவே!

திருச்சிற்றம்பலம்

நிலையுதல் இல்லா உலக வாழ்வில் மயங்கி நிற்பார் நிற்பாராக. இனி நாம் நிற்க மாட்டோம். பொன்னின் தன்மைக்கு நிகராகும் திருமேனி உடைய புயங்கப் பெருமான் ஆகிய நம்மை ஆளும் வள்ளலின் பொன் போன்ற திருவடிக்கே செல்வோம். நிற்பீர் யாவரும் காலம் தாழ்த்தாமல் நிற்கும் வண்ணம் ஒன்று சேருங்கள். காலங் கடந்த பின் நின்று வருந்தினால் பெருமான், அவன் பெறுதற்கு அரியனாவான்.

இறைவனது பெருமையான இன்பத்தில் பிரியாமல் இருக்கப் பெற்றவர்களே! பிறகு நீர் அரிய மயக்கம் அடைந்து அம்மா! என்று மனம் குமைந்து கதறாமல் பேரின்ப உலகாகிய சிவ புரத்தில் அழகிய சிறந்த மாணிக்கம் பதித்த திருக்கதவு திறந் திருக்கும் போதே அடியவராகிய நாம் திருமாலும் அறிந்திராத் திருப்புயங்கனின் திருவடியைச் சென்றடைவோம்.

பேரின்ப உலகை அடையக் கருதி உங்கள் எண்ணத்தைச் செவ்வையாக அதிலே வைத்து இடைவிடாமல் எண்ணுங்கள் போரில் திகழும் வேல் போன்ற கண்களை உடைய உமையம் மையை ஒரு கூற்றில் உடையவனும் புயங்கக் கூத்தனும் ஆகிய சிவபெருமானின் திருவருளாகிய அமுதத்தை நிரம்பப் பருகித் தணியாத அன்பு மிக இன்பத்தில் மூழ்குவீர்கள். நிலையாமை யிற் கிடந்து புரளாமல் சிவபெருமானின் திருவடிகளுக்கே சென்று சேர விரும்புவீர்களாக.

இறைவனிடம் அன்பு மேலிட்டு அதனால் புரள்வாரும் தொழுவாரும் புகழ்வாருமாக இப்பொழுதே வந்து ஆட்படாத வர்களே, பிறகு மயங்குவீர். உம்மை மதிப்பார் யாவர்? அறிவினும் கலக்கமுற்று மயங்குவோரே தெளிவடைய விரும்புவீராகில் ஆட் படுதல் செய்யுங்கள். இல்லையேல் சிவவுலகின் தலைவனும் திருப் புயங்கனும் ஆகிய சிவபெருமானின் அருளை அகன்ற உலகின் கண் பெறவல்லார் யாவர்? ஐயோ ஐயோ ஐய்யோ! [புரண்டு தொழுது புகழ்ந்து இறையருளைப் பெறுவார் உலகில் எவரும் இல்லையே என்பதாம்]

○

## நாற்பத்தாறு

# திருப்படை யெழுச்சி

கலி விருத்தம் இரண்டு கொண்ட இப் பாடற் பகுதி தில்லையில் அருளப்பட்டதாகும். ஞானவாள், நாதப்பறை, மானமா ஏறு, நீற்றுக்கவசம், என்று உருவக முறையில் அல்லற் படைகளை எதிர்த்து நடத்தும் ஆன்மிகப் படையெழுச்சியை இது பேசுகிறது. அரசாட்சி முறையில் இறையாட்சி பேசப்படுகிறது. தொண்டர் பத்தர் யோகியர் சித்தர் என்ற நால்வகை நிலையினர் பற்றிய நுண்மையான பகுப்பு விளக்கம் இதில் இயல்பாக இடம் பெற்றுள்ளது. பேரின்ப உலகைக் கைப்பற்றச் செல்லும் நால்வகைப் படைகள் போர்க் கோலம் பூண்டு செல்லும் ஏற்பாடு அழகாக வகுக்கப்பட்டுள்ளது.

திருச்சிற்றம்பலம்

1. ஞானவாள் ஏந்தும் ஐயர்
நாதப் பறையறைமின்
மானமா ஏறும் ஐயர்
மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம்
அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம்
மாயப்படை வாராமே.

2. தொண்டர்காள் தூசிசெல்வீர்
பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்திறல் யோகிகளே
பேரணி உந்தீர்கள்
திண்திறல் சித்தர்களே!
கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நாடு ஆள்வோம்நாம்
அல்லல்படை வாராமே.

திருச்சிற்றம்பலம்

''அல்லாத துர்க்குண மாயப் படைகள் விளையாமல் அருள்வாள் ஏந்தி நல்லோர்கள் யாரும் எம்மோடு எய்தும் எனப் படையெழுச்சி நவில்தல் ஆகும்'' என்பது திருவாசக உண்மை. ''பிரபஞ்சப் போர்; அதாவது மலவிளைவு அற்றது'' என்பது இதன் உட்கிடை என்ப. பிரபஞ்சத்தோடு நடத்தும் போருக்கான படையெழுச்சியால் மலத்தின் தாக்கம் வலியிழந்து அஃது அற்று ஒழியும் என்பதாம். ○

அறியாமையை வீசி எறியும் மெய்யறிவாகிய வாளை ஏந்தும் நம் தலைவனின் நாதப் பறையை அறையுங்கள். பெருமை யாகிய குதிரை மீது ஏறுகின்ற தலைவர்க்கு மதியாகிற வெண் குடையைக் கவியுங்கள். நன்மையாகும் திருவெண்ணீறு ஆகிய கவசத்தினை நன்கு போர்த்துக் கொள்ளுங்கள். மாயமாகிய படைகள் வந்து நம்மை நலியாமல் பரவெளியாகிய முத்தி ஊரைக் கைப்பற்றுவோம்.

தொண்டர்களே! நீங்கள் முன்னணிப் படையாகச் செல் லுங்கள். மெய்யன்பர்களே! நீங்கள் சூழச் செல்லுங்கள். ஒட்ப மான வலிமையுள்ள யோகிகளே! நீங்கள் பெரும்படை வகுப்பைச் செலுத்துங்கள். வலிமையும் திறமையும் மிக்க சித்தர்களே! நீங்கள் பின்னணிப் படையாகச் செல்லுங்கள். இங்ஙனம் செய் வீர்களாயின் துன்பம் ஆகிய படைகள் வந்து நலியாமல் நாம் வானவர் நாட்டினை ஆள்வோமாக. ○

## நாற்பத்தேழு

# திருவெண்பா

பதினொரு வெண்பாக்களால்ஆன இத்திருப்பாடல் மாலை, யாப்பின் பெயரால் பெயர் பெற்றுள்ளது. திருவருள் மேன்மையை உணர்த்துவதாகலின் திருவெண்பா எனப்படுகின்றது. திருப்பெருந்துறையில் அருளப்பெற்றது.

'தேன் உந்து செந்தீ', ஆனந்தமால் ஏற்றும் அத்தன்', 'பெருந்துறையில் மேய பெருங் கருணையாளன்' என்றெல்லாம் இறைவனை இயம்பும் அடிகள், மூவர்க்கும் மேலாம் அருளுடையாளன் யாவர்க்கும் கீழாம் அடியாராம் தம்மை யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்ததைக் கொண்டாடுகிறார்.

'இன்பம் பெருக்கி இருள்அகற்றி, துன்பத்தொடர்வு அறுத்து இறைவன் தன்னுடையசிந்தையை உவந்து ஊராகக்கொண்டான்' என்று அடிகள் கூறுவது அவரது ஆன்மீகத் தன்வரலாறாகும் என்று அறிஞர் சுட்டிக் காட்டுவர். நூல் முழுதும் அவரது 'தம்

திருச்சிற்றம்பலம்

1. வெய்ய வினைஇரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகாது என்செய்கேன்?—செய்ய
திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ
மருவாது இருந்தேன் மனத்து.

2. ஆர்க்கோ? அரற்றுகோ? ஆடுகோ? பாடுகோ?
பார்க்கோ? பரம்பரனே! என் செய்கேன்? - தீர்ப்புஅரிய
ஆனந்த மால்ஏற்றும் அத்தன் பெருந்துறையான்
தான்என்பார் ஆர்ஒருவர் தாழ்ந்து.

3. செய்த பிழைஅறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையின் உயிர்ப்புஅறியேன்—வையத்து
இருந்துஉறையுள் வேல்மடுத்து என் சிந்தனைக்கே
கோத்தான்
பெருந்துறையின் மேய பிரான்

4. முன்னை வினைஇரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன் — தென்னன்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து.

வரலாறு' தான் என்றாலும் இப்பாடல் மிகத் தெளிவாக, உள்ளங்கை நெல்லிக்கனியாக, அவர் தம் வரலாற்றை விளம்புகிறது.

"அணைந்தோர் தன்மை அதாவது பரிசவேதி" என்பது இதன் உட்கிடை என்ப. தொட்டதைப் பொன்னாக்குவது பரிசவேதி. அவ்வாறே சிந்தையைத் தொட்டுச் சிவமே ஆக்கிய திருவருள் இயல்பை இது தெரிவிக்கிறது.

"தொந்தமா மலமொறுத்துச் சுசம் பெருக்கிப் பெருந்துறை வாழ்சோதி என்றன், சிந்தனையே ஊராகக் கொண்டிருந்தார் என்றுரைத்தல் திருவெண்பாவாம்" என்பது திருவாசக உண்மை.

○

செவ்விய திருப்பெருந்துறையில் எழுந்தருளிய தேன்போலும் இனிமையை அடியவர் உள்ளத்தில் செலுத்தும் செஞ்சுடர் ஆகிய சிவபெருமானை உள்ளத்தில் அணைத்துக் கொள்ளாதிருந்தேன். அதனால் வெம்மையைத் தருகிற இருவினைகளும் எரிந்து சாம்பலாக, உடல் உருகி, பொய்யான பற்றுக்களும் நீறாக ஒழியவில்லை. இதற்கு எளியேன் என் செய்யக் கடவேன்?

விடுதற்கு அரிய சிவானந்தக் களிப்பினை மிகுவிக்கின்ற எம் தந்தை திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள பெருமான் தான் என்று கூறுவார் ஒருவர் யாவர்? அவரை எளியேன் தாழ்ந்து ஆரவாரம் செய்வேனோ, கதறுவேனோ ,ஆடுவேனோ, பாடுவேனோ, நோக்குவேனோ! இறைவா. என்செய்யக் கடவேன்!

திருப்பெருந்துறையில் விரும்பி வீற்றிருக்கும் பெருமான், அடியேன் செய்த பிழைகள் அறிகிலன், அவன் தன் செய்ய திருவடிகளைக் கைகுவித்து வணங்கிக் கடைத்தேறும் வகையின் செயலற்று நிற்கும் நிலையை அறிந்திலன் ஆயினும் இவ்வுலகத்தில் தங்கி உறையினுள் இருந்த ஞானமாகிய வேலினை என் உள்ளத்துள் அழுத்திக் கோத்து அருள்புரிந்தான். அவன் கருணைத் திறம் இருந்தவாறு இது!

பின்னே உண்டாகக் கூடிய பிறவியை அறுக்கிற பெரியோனும் தென்னவனும் திருப்பெருந்துறையை உடையவனும் பேரருளாளனும் இனிவரக் கடவதான துன்பத்தை ஒழிக்க மருந்தாக இருப்பவனும் ஆகிய சிவபெருமான், அடியேன் முன் செய்த வினை இரண்டனையும் அடியோடு களைந்தெறிந்து எளியேன் எதிரே காட்சி தந்தருளினான். அவன் கருணைத் திறம் இருந்தவாறு என்னே!

5. அறையோ அறிவார்க்கு அனைத்துலகும் ஈன்ற
மறையோனும் மாலும் அறியா — இறையோன்
பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையும் என்நெஞ்சத்து இன்று

6. பித்து என்னை ஏற்றும் பிறப்பறுக்கும் பேச்சுஅரிதாம்
மத்தமே ஆக்கும்வந்து என்மனத்தை — அத்தன்
பெருந்துறையான் ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்து இறவாப் பேரின்பம் வந்து.

7. வாரா வழிஅருளி வந்தெனக்கு மாறுஇன்றி
ஆரா அமுதாய் அமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி

8. யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்கும கீழாம் அடியேனை — யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றுஅறியேன் செய்யும் வகை.

9 மூவரும் முப்பத்து மூவரும் மற்றுஒழிந்த
தேவரும் காணாச் சிவபெருமான் — மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே இன்ப மிகும்.

10 இருந்தென்னை ஆண்டான் இணைஅடியே சிந்தித்து
இருந்திரந்து கொள்நஞ்சே! — தருங்காண்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
மருந்துஉருவாய் என்மனத்தே வந்து.

எல்லா உலகங்களையும் படைத்த வேதியனாகிய பிரமனும் திருமாலும் அறியாது மேலாக விளங்கும் இறையவன், திருப் பெருந்துறையில் எழுந்தருளியவன் ஆகிய சிவபெருமான் நீங் காது இன்று எளியேனின் உள்ளத்துள் தங்கி வாழ்கிறான். அறியப் புகுவார்க்கு இது சொல்லுதல் அளவினதோ?

எம் தந்தையும் திருப்பெருந்துறையை உடையவனும் அடிமை கொண்டு மிக்க அருள் காரணமாகக் கண்ணோட்டம் செய்யும் மருந்தாயிருப்பவனும் ஆகிய சிவபெருமான் என் உள்ளத்தே எழுந்தருளி அடியேனைச் சிவஞானப் பித்தேறப் பண்ணுவன், பிறவியை அறுப்பான், வந்து அடியேனைப் பேசு தற்கும் இயலாத பெருங்களிப்பினை உண்டாக்குவன், அவன் அருளும் பேரின்ப நிலையை என்னென்பது!

சிறப்பு மிக்க, தெற்கே உளதாகிய திருப்பெருந்துறையை உடைய பெருமான், அடியேனின் உள்ளத்தில் தங்கிய ஒப்பற்ற வன் ஆகிய சிவபரம்பொருள் பெருக்கும் அறிவொளியானது அடியேன் இனிப் பிறவிக்கு வாராத நெறியை அருளிச்செய்து வந்து அடியேனுக்கு மாறாத தன்மையுடன் தெவிட்டாத அமுத மாக இனித்தது.

எனக்குச் சிறப்புரிமையான பெருமானே! எல்லார்க்கும் மேன்மையான, அளவில்லாத சிறப்புடையவனாகிய நீ எல்லார்க் கும் கீழ் ஆகிய அடியேனை எவ்வெவரும் அடைந்தறியாத இன்பத்துள் வைத்தருளினை. அத்தகைய பெருமானாகிய உனக்கு அடியேன் கைம்மாறு செய்யும் வகை யாது என்று அறிகிலேன்.

மால் அயன் உருத்திரன் ஆசிய மும்மூர்த்திகளும் முப்பத்து மூன்று தேவரும் அவர்கள் அல்லாத ஏனைய தேவரும் காணாத சிவபிரான் குதிரை மீது அமர்ந்து மண்ணகத்தே வந்து தங்கின நெடியவீரக்கழல் அணிந்த,திருவடிகளை வணங்க உடம்பினுள்ளே பேரின்பம் மிகுதியாகும்.

திருப்பெருந்துறையில் எழுந்தருளின பேரருள் வடிவாகிய சிவபெருமான் என் நெஞ்சத்தில் அமுத வடிவாக வந்து இருந்து அடியேனை ஆண்டருளினன். அவனது திருவடித் துணையையே எண்ணித் தியானித்து நெஞ்சமே வேண்டியதை இரந்து கொள்க. எல்லாம் அவன் தந்தருள்வான்,

11. இன்பம் பெருக்கி இருள்அகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வறுத்துச் சோதியாய் - அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து.

திருச்சிற்றம்பலம்

## நாற்பத்தெட்டு
# பண்டாய நான்மறை

'பண்டாய நான்மறை' என்று தொடங்குகிறது, இப்பகுதியின் முதல் வெண்பா அதுவே இதற்குத் தலைப்பாக அமைந்துள்ளது. ஏழு வெண்பாக்கள் முடி முதல் தொடையில் இதில் உள்ளன. திருப்பெருந்துறையில் இஃது அருளப்பெற்றது.

கோகழிக் கோமாற்குக் கைம்மாறு உண்டோ? பெருமானை வாழ்த்துவாரின் பிறவிக்காடு கெடும்; கருவிகள் யாவும் பேரின்ப மயமாகும்; இறைவன் மாமருந்து; அவனை வாயாரப் பேசுவதே அடையும் வழி என்கிறார் அடிகள்.

திருச்சிற்றம்பலம்

1. பண்டாய நான்மறையும் பால்அணுகா; மால் அயனும்
கண்டாரும் இல்லை; கடையேனைத் — தொண்டாகக்
கொண்டருளுங் கோகழிஎன் கோமாற்கு நெஞ்சமே!
உண்டோ, கைம்மாறு உரை!

2. உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்
வெள்ளம் தரும், பரியின் மேல்வந்த - வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவும் கெடும், பிறவிக் காடு.

3. காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டில் பரிப்பாகன் நல்வினையை - வீட்டி
அருளும் பெருந்துறையான் அம்கமல பாதம்
மருளும் கெடநெஞ்சே! வாழ்த்து.

மேன்மை பொருந்திய திருப்பெருந்துறையை உடைய சிவ பெருமான் ஒளிப்பிழம்பாகக் காட்சி தந்து அடியேனின் அறியாமை இருளை விலக்கித் துன்பத்தின் பற்றினை அறுத்து எந்நாளும் தன்னிடத்துச் செய்ய வேண்டிய அன்பை எனக்கு அமைய வைத்துப் பேரின்பத்தைப் பெருகுமாறு செய்து, என் உள்ளமே தன் சிவபுரமாக உவந்து கொண்டனன்.

○

'எந்தை திருப் பெருந்துறையை ஏத்துநம ரேவாழ்வுற்றிடர்சோ
பாச பந்தம்அறுத் திடுவர் எனப் பண்டாய நான்மறையும்
பகர்ந்ததாமே' என்று திருவாசக உண்மை கூறும்.

'அனுபவத்துக்கு ஐயம் இன்மை உரைத்தல்' என்பது இதன் மையக் கருத்து என்பது பழைய குறிப்பு. இறைவன் தன்னை ஆட்கொண்டதை உலகுக்கு அறியக் கூறுதல் இதன் கருத்தாக உள்ளது.

பழையனவாகிய நான்கு மறைகளும் பெருமானாகிய அவன் பக்கல் அணுக இயலா; திருமால் அயன் ஆகியோரும் அவனைக் கண்டனர் இல்லை. அவ்வாறிருக்க, கடைப்பட்டவன் ஆகிய சிறியேனைத் தன் தொண்டுக்கு உரியவனாகக் கொண்டருளும், கோகழியினை ஆண்ட என் தலைவனாகிய சிவபெருமானுக்கு அடியேன் செய்தற்கு உரிய கைம்மாறும் உள்ளதா? நெஞ்சமே! கூறுவாயாக.

நம்மிடம் உள்ள ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று அழுக்கும் அழியுமாறு சிந்தும் பெருமையுள்ள இன்பத்தேன் பெருக்கை அருள்கின்ற, பரிமேல் ஏறி வந்த வள்ளல் ஆகிய பெருமான், பொருந்தியிருக்கிற திருப்பெருந்துறையை வாழ்த்து வீர்களாக. அவ்வாறு வாழ்த்தலும் பிறவியாகிய காடு வேரோடும் அழியும்.

காட்டில் வேடனாகவும், கடலில் வலைவீசுவோனாகவும் பாண்டிய நாட்டில் குதிரைப் பாகனாவும் தோன்றியருளி நம் வினைத் தொகுதியைத் தொலைத்து அருள்புரிகின்ற, திருப்பெருந் துறையை உடையவனும் ஆகிய சிவபெருமானின் அழகிய தாமரை மலர் போன்ற திருவடிகளை, நெஞ்சமே! மயக்கமாகிய அறியாமையும் அழியும் வண்ணம் வாழ்த்துவாயாக.

4. வாழ்ந்தார்கள் ஆவாரும் வல்வினையை மாய்ப்பாரும்
தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாரும் — சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி ஏத்தும் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி ஏத்தும் நமர்.

5. நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போய்அகல
எண்ணி எழு!கோ கழிக்கு அரசை — பண்ணின்
மொழியா ளோடுஉத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண்

6 காணும் கரணங்கள் எல்லாம் பேரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக் — காணும்
பெரியானை நெஞ்சே! பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு.

7. பேசும் பொருளுக்கு இலக்கிதமாய்ப் பேச்சிறந்த
மாசின் மணியின் மணிவார்த்தை — பேசிப்
பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தின் அடி என்மனத்தே வைத்து.

திருச்சிற்றம்பலம்

## நாற்பத்தொன்பது

# திருப்படையாட்சி

அடியார்கள், அன்பர்கள், யோகிகள், மெய்யறிவாளர்கள், ஆகிய படைகளை இறைவன் ஆட்சி புரியும் தன்மை கூறுவது திருப் படையாட்சியாகும். ஆசிரிய விருத்தம் 'எட்டு அமையப் பெற்ற இப்பாடற் பகுதி தில்லையில் அருளப் பெற்றது. [இறைவன்] வந்து வெளிப்படும் ஆயிடிலே, என்னுள் புகுந்திடிலே, எதிர்ப்படும் ஆயிடிலே, எழுந்தருளப் பெறிலே, என்று எட்டுத் திருப்பாட்டுக்களிலும் முடியுமாறு அமையப் பெற்ற இது இவ்வுலக இன்பதுன்பங்கள் மறையப்பெற்று வீடுபேற்று இன்பங்கள் எய்தப்பெற்ற நிலையைச் சித்திரிக்கிறது.

ஈற்றடி தவிர ஏனைய அடிகள் யாவும் ஒவ்வொரு திருப் பாடலிலும் ஆகாதே, ஆகாதே, என்ற ஓர் இறுதிச் சீரால் முடி

தேவர்கள் சூழ்ந்துபோய் வணங்கித் துதிக்கின்ற மேன்மை பொருந்திய பெருந்துறையை நன்றாக வணங்கிப் போற்றுகின்ற மெய்யன்பர்கள், உண்மையில் வாழ்ந்தோராவர். வலிய வினைகளைக் கெடுப்போராவர்; உலகம் தாழ்ந்து போற்றத் தகுவோரும் ஆவர்.

நம் துன்பங்கள் அகன்று ஒழியத் திருப் பெருந்துறை அடைந்து கோகழிக்கு உரிய தலைவனானவனை எண்ணுதற்கு உள்ளத்துள் எழுச்சி கொள்வாயாக, அவ்வாறே, பண் போலும் மொழிகளை உடைய உமையம்மையோடு திருவுத்தர கோச மங்கைக்கண் நிலைத்து, நீங்காத இருந்து வரும் தந்தையாகிய சிவபெருமானைக் கண்டு வணங்குவாயாக.

அறிதற்கு உரிய கருவிகள் யாவும் பேரின்ப மயமாம் என்று போற்றும் அடியார்கள் தம் பிறவி நீங்கக் கண்டு வணங்குகின்ற பெருமானை, திருப்பெருந் துறையினின்றும் எப்பொழுதும் அகலாதிருப்பவனாகிய இறைவனை, நெஞ்சமே! வாயாரப் புகழ்ந்து பேசுவாயாக.

சாவா மருந்தாக விளங்கும் சிவபெருமானது திருவடியை என் மனத்தில் பதித்து, பேசும் பொருளுக்கெல்லாம் குறியாகவும் இனிதாகவும் இருக்கின்ற, சொற்களுக்கு அப்பாற்பட்ட ஆசானாகிய மாசிலா மாணிக்க மணியின் அழகிய சொற்களைப் பேசிப் பேசி, திருப்பெருந்துறை அப்பனே! என்று இயம்பி என் பிறவியை ஒழித்தேன்,

○

கின்றன. ஆகும் என்பது அதன் பொருளாக உள்ளது. ''வாகு திருப்பெருந்துறையார் எழுந்தருளப் பெறில் எல்லா வளங்கள் முற்றும், ஆகும் எமக்கு அல்லாதது ஆகாது என்று இயம்பல் படையாட்சியாகும்'' என்று திருவாசக உண்மை தெரிவிக்கிறது. ''இறைவன் திருவருட்கு இலக்கு ஆகின் எந்தத் தடையும் உயிரை அணுகாது. எல்லாம் சிவமயம் ஆகும்'' என்பது இதன் கருத்தாக உள்ளது. ''சீவ உபாதி ஒழிதல், கிரியா சூனியம்'' என்கிறது பழைய, திருவாசக உட்குறிப்பு. உயிர் இறைவனை அடைதற்காம் தடைகள் விலகுதல், செயலற்ற நிலை என்பது அதன் பொருள்.

திருச்சிற்றம்பலம்

1. கண்கள் இரண்டும் அவன்கழல் கண்டு
களிப்பன; ஆகாதே?
காரிகை யார்கள்தம் வாழ்வில்என் வாழ்வு
கடைப்படும்; ஆகாதே?
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடும்; ஆகாதே?
மால்அறி யாமலர்ப் பாதம் இரண்டும் வணங்குதும்;
ஆகாதே?
பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடும்;
ஆகாதே?
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள்
பாடுதும்; ஆகாதே?
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படும்;
ஆகாதே?
மீன்வலை வீசிய காவலன் வந்து வெளிப்படும்
ஆயிடிலே!

2. ஒன்றினோடு ஒன்றும் ஓர் ஐந்தினோடு ஐந்தும்
உயிர்ப்பன, ஆகாதே?
உன்னடி யாரடி யாரடி யோம்என உய்ந்தன,
ஆகாதே?
கன்றை நினைந்தெழு தாய்என வந்த கணக்கதும்,
ஆகாதே
காரணம் ஆகும்அ னாதி குணங்கள் கருத்துறும்,
ஆகாதே?
நன்றுஇது தீதுஎன வந்த நடுக்கம் நடந்தன, ஆகாதே?
நாமுமே லாம்அடி யாருடனேசெல நண்ணுதும்,
ஆகாதே?
என்றும்என் அன்பு நிறைந்த பராஅமுது
எய்துவது ஆகாதே?
ஏறுடை யான்எனை ஆளுடை நாயகன்
என்னுள் புகுந்திடிலே!

*மீன் பிடிக்க வலையை வீசிய கேவேடன் ஆகிய சிவபெருமான் வந்து நமக்கு வெளிப்படையாகக் காட்சி தருவானாயின், அடியேனின் கண்கள் இரண்டும் அவனது திருவடிகளைக் கண்டு களித்தல் செய்யாவோ? செய்யும். மாதர்களின் வாழ்வோடு கூடிய என் வாழ்வு முடிவடையும்; அவ்வாறு ஆகாதோ? ஆகும். நிலவுலகில் வந்துமாறிமாறிப் பிறந்து இறக்கும் திருமாலும் அறிந்திரா மலர் அனைய துணைத் திருவடிகளை வணங்குவோம். அஃது இயலுமா? இயலும். பண்களோடு மிகுதியாகக் களிப்புத் தரும் பாடலோடு ஆடல் பயில்வது ஆகுமோ? ஆகும். நல்ல பாண்டிய நாட்டை உடையபெருமானின் படைச்செயல்களைப் பாடுவோம், அஃது ஆகுமோ? ஆகும். விண்ணுலகத்தவரும் மகிழ்ச்சி மிகுதற்கான ஒரு மாற்றம் [தாழ்ந்ததை மேலானது ஆக்கும் இரசவாதம்] வெளிப்படும் என்பது நிகழுமோ? நிகழும்.*

*எருதினை ஊர்தியாக உடையவனும் எளியேனை ஆட்கொண்டருளும் தலைவனும் ஆகிய சிவபெருமான் என்னுள் புகுந்துவிடில் உடலொடு உயிரும் ஐம்பொறிகளோடு ஐம்புலனும் பிழைத்திருத்தல் ஆகாதோ? ஆகும். உன் அடியாரின் அடியார்க்கு அடியோம் என்று கடைத்தேறல் ஆகாதோ? ஆகும். கன்றை நினைந்து அன்புடன் எழுகின்ற தாய் என்று சொல்லுமாறு வந்து தோன்றும் இறையருளும் நடக்காதோ? நடக்கும். எல்லாவற்றிற்கும் காரணமாகிய தோற்றமும் முடிவும் இல்லாத இறைவனது பண்புகள் உள்ளத்தில் சூழ்ந்திருக்கும் என்பது ஆகாதோ? ஆகும். நன்மை இது தீமை இது என வந்த அச்சங்கள் சென்றன என்பது ஆகாதோ? ஆகும். அடியார்களாகிய நாமும் முன்னைப் பழ அடியாருடன் செல்ல நெருங்குவதும் ஆகாதோ? ஆகும். எக்காலத்தும் அடியேனின் அன்புநிறைந்த மேலாம் அமுது அடியேனிடம் வந்து எய்துவது ஆகுமோ? ஆகும்.*

3. பந்தவி காரகுணங்கள் பறிந்து மறிந்திடும், ஆகாதே?
பாவனை ஆயக ருத்தினில்வந்தபராவமுது, ஆகாதே!
அந்தமி லாத அகண்டமும் நம்முள் அகப்படும், ஆகாதே,
ஆதி முதற்பரம் ஆய பரஞ்சுடர் அண்ணுவது, ஆகாதே!
செந்துவர் வாய்மட வார்இடர் ஆனவை சிந்திடும், ஆகாதே?
சேலன கண்கள் அவன்திரு மேனி திளைப்பன, ஆகாதே?
இந்திர ஞால இடர்ப்பிற வித்துயர் ஏகுவது, ஆகாதே?
என்னுடை நாயக னாகிய ஈசன் எதிர்ப்படும் ஆயிடிலே;

4. என்அணி ஆர்முலை ஆகம் அளைந்துடன் இன்புறும்; ஆகாதே?
எல்லையில்மாக்கரு ணைக்கடல் இன்றினிது ஆடுதும்; ஆகாதே!
நன்மணி நாதம் முழங்கிஎன் உள்ளுற நண்ணுவது; ஆகாதே?
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும் நண்ணுவது; ஆகாதே?
மன்னிய அன்பரில் எண்ணி முந்துற வைகுவது; ஆகாதே?
மாமறை யும்அறி யாமலர்ப் பாதம் வணங்குதும்; ஆகாதே?
இன்னியல் செங்கழு நீர்மலர் என்தலை எய்துவது; ஆகாதே?
என்னை உடைப்பெரு மான்அருள் ஈசன் எழுந்தருளப் பெறிலே!

5. மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்குஅறும்; ஆகாதே?
வானவ ரும்அறி யாமலர்ப் பாதம் வணங்குதும்; ஆகாதே?
கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த கணக்கறும்; ஆகாதே?
காதல் செயும்அடி யார்மனம் இன்றுக ளித்திடும்; ஆகாதே?
பெண்ணலி ஆண்என நாம்என வந்த பிணக்கறும்; ஆகாதே?
பேரறி யாத அனேக பவங்கள் பிழைத்தன; ஆகாதே?
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை எய்துவது; ஆகாதே?
என்னை உடைப்பெரு மான்அருள் ஈசன் எழுந்தருளப் பெறிலே!

அடியேனுடைய தலைவன் எல்லாம் உடையவனாகிய சிவபெருமான் என் எதிரில் வந்து காட்சி தரும் |ஆகில் பாசத் தொடர்பினால் தோன்றும் பல வேற்றுமையான குணங்கள் வேரோடு களைந்தெறியப்பட்டு ஒழிந்திடும் என்பது ஆகாதோ? ஆகும். உள்ளுணர்வு பொருந்திய உள்ளத்தில் தோன்றும் மேலாம் அமுதமும் ஆகாதோ? ஆகும். முடிவற்ற பரவெளியும் நம் உள்ளத்தில் அடங்கும் என்பது நடவாதோ? நடக்கும். மேலான முதற் பரம் பொருள் ஒப்பற்ற ஒளியாக நம்மை அணுகுவதும் ஆகாதோ? ஆகும். சிவந்த பவளம் போன்ற வாயினை உடைய பெண்டிரால் வரும் இடர்கள் யாவும் ஒழிந்து போகும் என்பது ஆகாதோ? ஆகும். அடியார்களின் மீன் போன்ற கண்கள் நயன தீட்சையால் அவன் திருமேனி அழகில் ஈடுபட்டுக் களித்தல் ஆகாதோ! ஆகும். மாயையின் செயலான இந்திர சாலம் போன்ற இடர்கள் மலிந்த பிறவித்துயர் விலகுவது ஆகாதோ? ஆகும்.

என்னை ஆளாக உடைய இறைவன் அருள் மிக்க இறைவன் எழுந்தருளப் பெற்றால் என் அணிபுனைந்த மார்பு அவனது திருமேனியில் படிந்து ஒத்து இன்பத்தை அடையும். அது ஆகாதோ? ஆகும். எல்லையற்ற பெரிய திருவருட் கடலில் இப்பொழுது இனிதாக முழுகுவதும் ஆகாதோ? ஆகும். இனிய மணிஓசை போன்ற உள்ஒலி முழக்கம் எனக்குள்ளே பொருந்துவதும் ஆகாதோ? ஆகும். தலைவனாகிய பெருமான் பூசும் அழகிய திருநீற்றினை நாளும் பூசுவது ஆகாதோ? ஆகும். நிலையான மெய்யன்பரில் என் தொண்டு முற்பட்டிருத்தல் ஆகாதோ? ஆகும். பெரிய வேதங்களும் அறியாத் திருவடி மலர்களைப் பணிவது ஆகாதோ? ஆகும். அவன் அணியும் இனிய தன்மையான செங்கழுநீர் மலர்கள் என் தலைமேல் பொருந்துவது ஆகாதோ? ஆகும்.

என்னை ஆளாக உடைய தலைவன்; எல்லாம் உடைய இறைவன் ஆகிய சிவபெருமான் எழுந்தருளப் பெற்றால் இந்த நிலவுலகில் மாயையை உண்மை எனக் கொண்டு பிரித்த தெளிவில்லாத தீயன எல்லாம் ஒழியும் என்பது ஆகாதோ? ஆகும். அமரர்களும் அறிந்திராத் தாமரை மலர் போன்ற அவன் திருவடிகளை வணங்குவோம், அது ஆகாதே? ஆகும். கணக்கில்லாத காலம் எல்லாம் தொடர்ந்து வந்து கலக்கம் ஒழியும் என்பது ஆகாதோ? ஆகும். அன்பு காட்டும் திருவடியார் மனம் இன்று மகிழ்ச்சி கொள்ளும், அது ஆகாதோ? ஆகும். பெண், அல்லாதது, ஆண் என்றும் நாம் என்றும் வந்த மாறுபாடுகள் அறும், ஆகாதோ? ஆகும். பெயரளவு கூட அறிந்திராத பலவாய பிறப்புக்களையும் தப்பித்துக் கொண்டது? ஆகாதோ? ஆகும், கனைக் கற்ற சித்திகள் வந்து அடியேனை அடையும், ஆகாதோ? ஆகும்.

6. பொன்இய லும்திரு மேனிவெண் ணீறுபொலிந்திடும்; ஆகாதே?
பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடும்; ஆகாதே?
மின்இயல் நுண்ணிடை யார்கள் கருத்து வெளிப்படும்; ஆகாதே?
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுந்திடும்; ஆகாதே?
தன்அடி யார்அடி என்தலை மீது தழைப்பன; ஆகாதோ?
தான்அடி யோம்உட னேஉய வந்து தலைப்படும்; ஆகாதே?
இன்னியம் எங்கும் நிறைந்துஇனி தாக இயம்பிடும்; ஆகாதே?
என்னைமுன் ஆளுடை ஈசன் என்அத்தன் எழுந்தருளப் பெறிலே!

7. சொல் இய லாதுஎழு தூமணி ஓசை சுவைதரும்; ஆகாதே?
துண்என என்உளம் மன்னிய சோதி தொடர்ந் தெழும்; ஆகாதே?
பல்லியல்பு ஆய பரப்பற வந்த பராபரம்; ஆகாதே?
பண்டறி யாத பரானு பவங்கள் பரந்தெழும். ஆகாதே?
வில்லியல் நன்னுத லார்மயல் இன்று விளைந்திடும்; ஆகாதே?
விண்ணவ ரும்அறி யாத விழுப்பொருள் இப்பொருள்; ஆகாதே?
எல்லையி லாதன எண்குணம் ஆனவை எய்திடும்; ஆகாதே?
இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தருளப் பெறிலே.

8. சங்கு திரண்டு முரன்றுஎழும் ஓசைதழைப்பன; ஆகாதே?
சாதி விடாத குணங்கள்நம் மோடுசலித்திடும்; ஆகாதே?
அங்கிது நன்றிது நன்றெனும் மாயை அடங்கிடும் ஆகாதே?
ஆசைஎ லாம்அடி யார்அடியோம் எனும் அத்தனை; ஆகாதே?

என்னை முன்னே ஆட்கொள்ளும் உடையவனாகிய இறைவன் என் தந்தை ஆகிய சிவபெருமான் எழுந்தருளப் பெற்றால், பொன் போல் விளங்குகிற திருமேனியில் திரு வெண்ணீறு விளங்குதல் ஆகாதோ! ஆகும். பெருந்தவத்தினராய அடியார்களின் கைகள் குவிந்து பூமாரி பொழியும்; ஆகாதோ? ஆகும். மின் போன்ற இடையை உடைய மாதர்கள் மேல் கொண்ட விருப்பம் வெளிச் சென்று விடும்; ஆகாதோ! ஆகும். உள்ளத்துள் வீணை ஒலித்து எழும் ஓசை போன்ற இனிய தெய்விக ஒலிகள் எழுந்து இன்பம் மிகுதியாகத் தரும், ஆகாதோ? ஆகும். இறைவனின் திருத்தொண்டரின் அடிகள் அடியேனின் தலைமேல் செழிப்பாகத் திகழும் ஆகாதோ? ஆகும். இறைவன், தன் அடியவர்களாகிய எங்களோடும் யாங்கள் உய்யும்படி கலக்கும்; ஆகாதோ? ஆகும். இனிய இசைக் கருவிகள் எங்கும் நிறைந்து இனிமை உண்டாக ஒலிக்கும், அஃது ஆகாதோ? ஆகும்.

திங்களைத் திருமுடிமணியாக அணிந்த சிவபெருமான் அடியேங்களை ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளப் பெற்றால், சொல்லுக்கு அடங்காது எழுவதாகிய தூய மணியின் தெய்விக ஓசையான சிலம்பொலி சுவை பயக்கும்; ஆகாதோ? ஆகும். என் உள்ளத்தில் நிலைபெற்றிருந்த ஞானப் பேரொளியானது திடீரென்று தொடர்ந்து எழுச்சி கொள்ளும். ஆகாதோ? ஆகும். பலவகையான மனவிரிவு ஒழிய வந்த மேலான மேன்மை— ஆகாதோ? ஆகும். முன்பு அறிந்திரா மேலான அனுபவங்கள் நிறைந்து எழும், ஆகாதோ? ஆகும். வில் போன்ற நல்ல நெற்றியை உடைய மாதரார் மேல் கொண்ட மையல் இன்று முடிந்திடும். ஆகாதோ? ஆகும். தேவரும் அறியா மேலான பொருள் இப் பேரின்பப் பொருள்—ஆகாதோ? ஆகும். இப்பொருளின் எல்லையில்லாதனவாகிய எட்டுக் குணம் ஆனவை [தன்வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கையாகவே கட்டுகளினின்றும் நீங்கியமை, முற்றுமுணர்தல், இயற்கை உணர்வினனாதல், பேரருள் உடைமை, அழிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை,] வந்துசேரும்; ஆகாதோ? ஆகும்.

முடிவு அறியப் பெறாத பெரிய மறைப் பொருளான இறைவன் அடியேனை ஆட்கொள்ள என்முன் எழுந்தருளப் பெற்றால் சங்குகளின் கூட்டம் முழங்கி எழுகின்ற ஓசையானது மிகும். அஃது ஆகாதோ? ஆகும். சாதியோடு கூடவே வந்த குணங்கள் நம்மோடு வெறுத்து ஒழிந்துவிடும். அஃது ஆகாதோ?

செங்கயல் ஒண்கண்மடந்தையர் சிந்தை திளைப்பன; ஆகாதே?
சீர்அடி யார்கள் சிவானுபவங்கள் தெரிந்திடும்; ஆகாதே?
எங்கும் நிறைந்துஅமு தூறு பரஞ்சுடர் எய்துவது; ஆகாதே?
ஈறுஅறி யாமறை யோன்எனை ஆள எழுந்தருளப் பெறிலே?

திருச்சிற்றம்பலம்

## ஐம்பது

# ஆனந்த மாலை

ஆசிரிய விருத்தங்கள் ஏழு அடங்கிய இத் திருப்பாட்டு வரிசை ஆனந்த மாலையாகத் தில்லையில் அருளப் பெற்றது. மின்னல் போன்ற உன் திருவடித் தாமரைகளை இடைவிடாது எண்ணி அடைந்தவர்கள் உலக அல்லல்களைக் கடந்தார்கள். அடியேன் உன்னைக் கூடுவது என்றோ? பழைய அடியார்களோடும் கூடாது இங்கு நோய்க்கு விருந்தாக இருக்கிறேன்; வீடு பேற்றைத் தரும் தன் திருக்காட்சி தந்த ஆண்டவனைக் கூடுவது என்றோ? எல்லாம் பட்டு விட்டேன்; யான் உனக்கு வேண்

திருச்சிற்றம்பலம்

1. மின்ஏர் அனைய பூங்கழல்கள்
அடைந்தார் கடந்தார் வியனுலகம்;
பொன்நேர் அனைய மலர்கொண்டு
போற்றா நின்றார் அமரர் எல்லாம்;
கல்நேர் அனைய மனக் கடையாய்க்
கழிப்புண்டு அவலக் கடல் வீழ்ந்த
என்நேர் அனையேன் இனி உன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே!

2. என்னால் அறியாப் பதந்தந்தாய்
யான்அது அறியா தேகெட்டேன்
உன்னால் ஒன்றும் குறைவில்லை
உடையாய்! அடிமைக்கு ஆர் என்பேன்
பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடும்கூடாது
என்நா யகமே! பிற்பட்டுஇங்கு
இருந்தேன் நோய்க்கு விருந்தாயே.

ஆகும். அவ்விடத்தே அது நன்மை இது நன்மை என்று கருதும் மயக்க உணர்வினால் வரும் இருவினையும் அடங்கிவிடும்; ஆகாதோ? ஆகும். மெய்யடியார்க்கு அடியோம் என்ற அளவே ஆசை எல்லாம்; ஆகாதோ? ஆகும். செங்கயல் போலும் ஒளியுள்ள கண்களை உடைய மாதர் சிந்தை மகிழ்வன; ஆகாதோ ஆகும். சிறப்பான அடியார்களுக்குக் கிடைக்கும் பேரின்ப சிவானுபவங்கள் எமக்கும் புலனாகும். ஆகாதோ? ஆகும். எவ்விடத்தும் நிறைந்து அமுது ஊறுகின்ற பேரொளியானது அடியேனிடம் பொருந்துவது ஆகாதோ? ஆகும்.

○

டாவேோ? திகைத்தேன், செய்வது அறியேன் என்று அடிகள் செயலற்ற இடையறா சிவானுபவப் பேற்றை இறைவன் பால் விரும்புகிறார்.

''சிவானுபவ விருப்பம்; சிவானந்த மேலீட்டால் கிரியா சக்தி அழிவுரைத்தல்'' இத் திருப்பாட்டின் உட்கிடை என்ப. ''மோகம் மிகும் அடியாரொடும் கூட விரும்பிய ஆனந்த மொழி'' என்று திருவாசக உண்மை இதன் மையக் கருத்தை எடுத்தியம்புகிறது.

○

பெருமானே! மின்னல் போன்ற ஒளியும் அழகும் உடைய பொலிவுள்ள உன் திருவடிகளை அடைந்தார் பரந்த உலகின் அல்லல்களைக் கடந்தவர் ஆவர். தேவர்கள் யாவரும் பொன் நிகர்த்த மலர்கள் கொண்டு தூவி வணங்குகின்றார்கள். கல்லுக்கு ஒப்பு என்னும் மனத்தினால் கடைப்பட்டவன் என அறிஞர்களால் தள்ளப்பட்டுத் துன்பமாகிய கடலில் விழுந்து இழிதகைமையில் யானே எனக்கு நிகராக உள்ள அடியேன் இனி உன்னை அடையும் வகையை இயம்பியருள்க.

இறைவா! எளியேனால் உணரப்படாத சிவபதத்தைக் கொடுத்தாய். அடியேன் அதனை அறிந்து கொள்ளாமலே கெட்டழிந்தேன். உன்னால் ஒரு குறையும் இல்லை. எல்லாம் உடையவனே! அடியேனுக்குப் பற்றுக்கோடாக யாவர் உளர் என்பேன். பலநாளும் உன்னை வணங்கிப் போற்றுகிற பழ அடியாருடன் சேராமல், என் தலைவனே! சிறியேன் பின்னிடைந்து பிணிக்கு விருந்தாகி இவ்வுலகில் இருந்து வருகிறேன்.

3. சீலம் இன்றி நோன்பின்றிச்
செறிவே இன்றி அறிவின்றிச்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலும் காட்டி வழிகாட்டி
வாரா உலக நெறிஏறக்
கோலம் காட்டி ஆண்டானைக்
கொடியேன் என்றோ கருதுவதே?

4. கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடி லாதாய்! பழிகொண்டாய்;
படுவேன் படுவ தெல்லாம் நான்
பட்டாற் பின்னைப் பயனென்னே?
கொடுமா நரகத்து அழுந்தாமே
காத்தாட் கொள்ளும் குருமணியே!
நடுவாய் நில்லாது ஒழிந்தக்கால்
நன்றே? எங்கள் நாயகமே.

5. தாயாய் முலையைத் தருவோனே!
தாராது ஒழிந்தால் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ?
நம்பி! இனித்தான் நல்குதியே
தாயே என்றுன் தாள் அடைந்தேன்
தயாநீ என்பால் இல்லையே
நாயேன் அடிமை உடனாக
ஆண்டாய் நான்தான் வேண்டாவோ!

6. கோவே! அருள வேண்டாதோ?
கொடியேன் கெடவே அமையுமே
ஆவா! என்னா விடில் என்னை
அஞ்சேல் என்பார் யாரோதான்?
சாவார் எல்லாம் என்னளவோ?
தக்க வாறுஅன்று என்னாரோ?
தேவே! தில்லை நடமாடீ!
திகைத்தேன் இனித்தான் தேற்றாயே!

7. நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞாலம் எல்லாம் நிகழ்வித்தும்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்சது ஏற்றும் பெருந்துறையாய்!
அரிய பொருளே! அவிநாசி
யப்பா! பாண்டி வெள்ளமே!
தெரிய அரிய பரஞ்சோதீ!
செய்வது ஒன்றும் அறியேனே!

திருச்சிற்றம்பலம்

நல்லொழுக்கம் இல்லாமலும் தவம் இல்லாமலும் அடக்கமே இல்லாமலும் மெய்யறிவு இல்லாமலும் தோற்பாவைக் கூத்தாட்டைப் போலச் சுழன்று வீழ்ந்து கிடக்கின்ற எளியேனை, என்னிடம் தெளிவின்மையாகிய மயக்கத்தை உண்டாக்கி அதனின்று விடுபடும் வழியையும் காட்டி, மீட்டு வாராப் பேரின்ப உலகத்தை எளியேன் பெறத் தனது திருக்கோலத்தைக் காட்டி ஆட்கொண்டருளினவனை இக்கொடியவன் கூடுவதுஎக்காலமோ?

கெடுதற்கு உரிய அடியேன் கெடும் வண்ணம் கெட்டுப் போகின்றேன். தீதிலாதோன் ஆகிய பழியை ஏற்றுக் கொண்டாய். படக்கடமைப்பட்ட யான் படவேண்டியதை எல்லாம் பட்டால் பிறகு உனக்குப் பயன் என்னவோ? கொடிய பெரிய நரகத்தில் எளியேன் கிடந்து அழுந்தாமல் தடுத்து ஆட்கொள்ளுகிற நிற மிக்க மாணிக்கமணியே! எங்கள் இறைவனே! நீ நடுவுநிலைமையில் நில்லாது தவிர்ந்தால் அது உனக்கு அழகாகுமோ? கூறுக.

தாயாகி உயிர்கட்கெல்லாம் பால் ஊட்டுவோனே! எளியேற்கு அவ்வாறு ஊட்டாதொழிந்தால் சவலைப்பிள்ளையாகி நாய் போன்ற சிறுமையுடையேன் மடிவேனோ? சிறந்தோனே! இனியாகிலும் அருள் செய்வாய். தாயே என்று உன் திருவடியை அடைந்தேன். என்னிடத்து நீ இரக்கம் உள்ளவனாக இருக்கவில்லையே; நாய் போன்ற எளியேனது அடிமைத்திறமும் கூடவே நிகழும்படி ஆண்டருளினை. அடிமைத் திறமன்றி உனக்கு அடியேன் வேண்டாவோ!

இறைவனே! அடியேனுக்குத் திருவருள் புரிய வேண்டாவோ? கொடியனேன் கெட்டொழிதலே உனக்கு ஏற்குமா? 'ஆ! ஆ!' என்று நீ இரங்காவிடில் அடியேனை 'அஞ்சாதே!' என்று கூறுவார் யாவரோ தாம்? பிறவிப் பயன் அடையாமல் சாவோர் எல்லோரும் என்னைப் போன்றவரோ? எளியேனைக் கைவிடுதல் உனக்குத் தகுதி ஆகாது என்று ஒருவரும் சொல்ல மாட்டாரோ? தேவனே! திருத் தில்லைக் கண் நடனம் ஆடுவோனே! மயங்கினேன், இனியாயினும் தெளிவிப்பாயாக.

நரிகளைக் குதிரைகளாக விரைவான வாகனங்களாகப் பண்ணி உலகம் எல்லாம் அறியுமாறு செய்து பெரியதாகிய, பாண்டிய மன்னன் ஊராகிய மதுரைப் பதி முழுதும் பித்தேறச் செய்த, திருப்பெருந்துறை உடையவனே! மிக அரிய உயர் பொருளே! அவிநாசித்திருத்தலத்தில் உள்ள அப்பனே! பாண்டிய

## ஐம்பத்தொன்று

# அச்சோப் பதிகம்

**அச்சோவே** என்ற வியப்பு இடைச்சொல்லை இறுதிச் சீராகக் கொண்டு ஆர்பெறுவார் அச்சோவே? ஆர் பெறுவார் அச்சோவே? என்ற வகைமையில் ஒவ்வொரு கலிவிருத்தமும் முடியுமாறு அமைந்த ஒன்பது திருப்பாடல்கள் இதில் உள்ளன. **தில்லையில்** அருளப்பட்டது இது.

"ஈசர், போக சுகம் எனக்கு அளித்தார் ஆர் பெறுவார் எனும். அருமை புகல்தல் - அச்சோ' என்று இப்பதிகக் கருத்தைத் **திருவாசக உண்மை** விளம்பும்.

" சித்தமலம் அறுவித்துச் சிவம்ஆக்கி எனைஆண்ட

திருச்சிற்றம்பலம்

1. முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவம்ஆக்கி எனைஆண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே!

2. நெறியல்லா நெறிதன்னை
நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே
திருவருளே சேரும்வண்ணம்
குறிஒன்றும் இல்லாத
கூத்தன்தன் கூத்தைஎனக்கு
அறியும்வண்ணம் அருளியவாறு
ஆர்பெறுவார் அச்சோவே.

3. பொய்யெல்லாம் மெய்என்று
புணர்முலையார் போகத்தே
மையல் உறக் கடவேனை
மாளாமே காத்தருளித்
தையல்இடம் கொண்டபிரான்
தன்கழலே சேரும்வண்ணம்
ஐயன் எனக்கு அருளியவாறு
ஆர்பெறுவார் அச்சோவே.

னாக வந்த அருள் வெள்ளமே! தெரிவதற்கு அரிதாகிய பேரொளிப் பிழம்பே! உய்யும் பொருட்டு அடியேன் செய்யத் தக்க செயல் சிறிதும் அறியேனே!

○

அத்தன்-எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே'' எனவரும் முதற்பாடல் அடிகள் திருப்பதிகக் கருத்தை முதலிலேயே தெளிவுபடுத்துகின்றன. அவ்வாறே இறைவன் தன்கூத்தை அறியும் வண்ணம் செய்து, தூநெறி சேர்வித்து ஓங்காரத்து உட்பொருளை உணர்த்தி, நாய்க்குச் சிவிகை ஏற்றம் தந்தாற் போல் தமக்கு மேன்மைகள் அளித்ததை வியந்து மகிழ்கிறார் அடிகள். ''அனுபவ வழி அறியாமை; அதாவது அனுபவத்து அதிசயம்'' இதன் உட்கிடை என்பர்.

○

நிலையான வீடுபேற்றுக்கு உரிய வழியினை அறியாத அறிவில்லாத் தீயகுணங்கள் உடைய கீழ்மக்களோடும் விடாது பற்றிப் பழகுவேனை, இறைவனிடத்து மாறாத அன்புநெறியைக் கற்பித்து, தொன்றுதொட்டுப் பிறவிக்குக் காரணமாகத் தொடர்ந்து வரும் விரிந்து வகைப்பட்ட பழைய வினைகள் யாவும் அழியும் வண்ணம் உள்ளத்தில் பதிந்து ஆன்மாவைப் பற்றி வரும் மாசுகளை அறுத்துச் சிவமயமாகச் செய்து அடியேனை ஆட்கொண்டருளிய தந்தையாகிய சிவபெருமான் எனக்குத் திருவருள் செய்த தன்மையை யாவர் தாம் பெறக் கூடும்! அச்சோ

நல்ல நெறியல்லாத, பிழைநெறியை நல்ல நெறியாக நினைகின்ற அடியேனைச் சிறுமை தரும் நெறிகளில் சேராமல் திருவருள் நெறியே சேரும்வகை, [உரு, பெயர் முதலிய] அடையாளம் எதுவும் இல்லாத கூத்தப் பெருமானின் திருவிளையாட்டை எனக்குத் திருவருளால் உணர்த்திய பேற்றைப் பெறவல்லார் யாவருளர்! அச்சோ!

நிலையாதவற்றை நிலையானவை என்று துணிந்து நெருங்கிய தனங்களை உடைய பெண்டிர் அனுபவத்தில் மயங்கிமருண்டு கிடக்கக் கடவேனைப் பிறவிப் பயன் பெறாது இறந்து போகாமல் காத்தருள் செய்து உமையம்மையை இடப்பாகத்திற் கொண்ட சிவபெருமான் தன் திருவடியே சேரும் வகை எம் தலைவன் அடியேனுக்கு அருளிய பேறு எவர் பெறவல்லார்? அச்சோவே!

4. மண்ணதனில் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணம்இலா அன்பருளி எனைஆண்டிட்டு என்னை யும்தன்
சுண்ண வெண்ணீறு அணிவித்துத் தூநெறியே சேரும் வண்ணம்
அண்ணல் எனக்கு அருளியவாா் ஆர்பெறுவார் அச்சோவே!

5. பஞ்சு ஆய அடிமடவார்
கடைக் கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சு ஆய துயர் கூர
நிற்பேன் உன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேன் நான் உடையானே
அடியேனை வருக என்று
அஞ்சேல் என்று அருளியவாறு
ஆர்பெறுவார்? அச்சோவே!

6. வெந்துவிழும் உடற்பிறவி
மெய் என்று வினைபெருக்கிக்
கொந்துகுழல் கோல்வளையார்
குவிமுலைமேல் விழுவேனை
பந்தம் அறுத்து எனைஆண்டு
பரிசறஎன் துரிசும் அறுத்து
அந்தம் எனக்கு அருளிய ஆறு
ஆர்பெறுவார் அச்சோவே!

7. தையலார் மையலிலே தாழ்ந்துவிடக் கடவேனைத்
பையலவே கொடுபோந்து பாசம்எனும் தாழ்உருவி
உய்யுநெறி காட்டுவித்திட்டு ஓங்காரத்து உட்பொருளை
ஐயன்எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார்? அச்சோவே!

8. சாதல்பிறப்பு என்னும் தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக்கு அணியிழையார் கலவியிலே கழிவேனை
மாது ஒருகூறு உடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதி எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார்? அச்சோவே!

9. செம்மைநலம் அறியாத சிதடரொடும் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மை எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே!

திருச்சிற்றம்பலம்

இந் நிலவுலகில் பிறப்பெடுத்து நலம் குன்றி மடிந்து விழக் கடவேனாகிய அடியேனை நினைத்தற்கு இயலாத அன்பினை அருளி என்னை ஆண்டுகொண்டு அடியேனையும் தனது பொடி உருவாகிய திருவெண்ணீற்றை அணியச் செய்து தெய்வநெறியாகிய தூயவழியையே அடையும் வண்ணம் பெரியோனாகிய சிவ பெருமான் எனக்கு அருளிய பெருமையைப் பெறவல்லார் யாவர்? அச்சோ!

செம்பஞ்சுக் குழம்பால் அழகு ஊட்டப்பட்ட பாதங்களை உடைய மாதரது கடைக்கண்களால் துன்பப்பட்டு, உள்ளத்தினை வருத்தும் துயரம் மிகுமாறு நிற்பேனாகிய எளியேன் உன் அருள் கிடைக்கப் பெற்றேன், அடியேன் பிழைத்தேன். உடையவனாகிய சிவபெருமானே! அடியேனை வா என்று அழைத்து அஞ்ச வேண்டா என்று நீ அருள் புரிந்த வகையிலான பேற்றைப் பெறுவார் யாவரே? அச்சோ!

எரிந்து போகும் இந்த உடம்போடு கூடிய பிறப்பை நிலையானது என்று எண்ணி, தீவினைகளைப் பெருகப் பண்ணி, பூங்கொத்துகளை அணிந்த கூந்தலையும் திரண்ட வளையல்களையும் உடைய மாதரது குவிந்த தனங்கள் மீது விழுகின்ற என்னைப் பிறவிக் கட்டினை அறுத்து எளியேனை ஆண்டருளி என் இயற்கைத் தன்மை இற்று ஒழிய என் குற்றத்தையும் அறுத்தெறிந்து முடிவான பொருளை அடியேற்கு அருளிய வகையினைப் பெற வல்லார் யாவர்? அச்சோ!

மாதர் மயக்கத்திலே தாழ்ந்து விழக் கடவேன் ஆகிய அடியேனைச் சிறுகச் சிறுகச் கொண்டுவந்து நிலையற்றவற்றில் வைத்த மாறா விருப்பு என்ற தாழினை உருவிக் கடைத்தேறும் வழியைக் காட்டுவித்து 'ஓம்' என்ற மறை ஒலியின் நுண் பொருளைத் தலைவன் ஆகிய பெருமான் அடியேற்கு அருள் செய்த பேற்றைப் பெற வல்லார் யாவர்?அச்சோவே!

இறப்பு பிறப்பு இறப்பு பிறப்பு என்று வளையமிட்டு வருகின்ற பெரிய சுழியில் சிக்கித் தடுமாற்றம் அடைந்து நிலையற்றவற்றின் மேல் பற்று மிகுந்து அணிகள் புனைந்த மாதரது புணர்ச்சியிலே விழுந்து ஒழிவேனை, உமையம்மையைத் திருமேனியில் ஒரு கூறாகவுடைய அண்ணல் அழகிய சிவபெருமான் தன்

திருவடிகளே அடியேன் அடையும் வண்ணம் முழுமுதற்பொருளாகிய அவன் அருள்செய்த பேற்றினை வேறு யாவர் பெறுவார்? அச்சோ!

சிவப்பேரின்பம் ஆகிய நன்மை அறியாத கீழ்மக்களோடு கூடித் திரிகின்ற சிறியேனை, பிறவிக்குக் காரணம் ஆகிய மூன்று குற்றங்களையும் அறும்படி செய்து, எல்லாவற்றுக்கும் முதற்பொருளாக உள்ள தலைவனாம் பெருமான் எளிய எம்மையும் ஒரு பொருளாகச் செய்து நாயைப் பல்லக்கில் ஏறப் பண்ணின அழகை அடியேற்கு அருளிய தன்மையை யாவரே பெறுவார்? அச்சோ!

## திருவாசக இனிமை

வான் கலந்த மாணிக்க
வாசக! நின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால்
நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலந்து பால் கலந்து
செழுங் கனித்தீஞ் சுவை கலந்து
ஊன் கலந்து உயிர் கலந்து
உவட்டாமல் இனிப்பதுவே

— இராமலிங்க சுவாமிகள்

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

# திருவாசகம்

## உள்ளம் கொள்ளை கொள்ளுதல்

திருவாசகத்தின் பாடல்கள் உள்நோக்கும் தன்மையன. திருவாசகத்தின் நாடக மேடை ஒவ்வொரு தனிமனிதனின் இதயமாகும். இக்காரணத்தால்தான் கடந்த பதினெட்டு நூற்றாண்டுகளாகத் தமிழ் மக்களின் மனத்தைக் கொள்ளை கொண்டு அவர்களுடைய வாழ்க்கையை ஆக்கிரமித்து நன்னெறியில் உய்த்து வந்திருக்கின்றன, திருவாசகப் பாடல்கள்.

— கோ. வன்மீக நாதன்

☐

There are indeed but few poems in any language that can surpass Thiruvachakam or 'the holy word' of Manickavachagar, in profundity of thought, in earnestness of feeling or in the child like trust, in which the struggling human soul, with its burdens of intellectual and moral puzzles, finally finds shelter.

— Prof. P. Sundaram Pillai

☐

'One touch of nature makes the whole world kin' and no one can read the sage's verses without profound emotion. Scarcely ever has the longing of the human soul for purity and divine fellowship found worthier expression.

— Rev. G U. Pope

தெளிவுரை; இரா. இராசகோபாலன்

ஆரார் புத்தகம்